கமலமாமுனிவர் அருளிய

# ரேகை சாஸ்திரம்

மூலமும் விருத்தியுரையும்.



அ. இரங்கசாமி முதலியார் ஸன்ஸ்
பூமகள்விலாச அச்சுக்கூடம்
ரிஜிஸ்டர் காபிரைட்] 1939 [விலை ரூபா ௩-௮-௦
24, தாண்டவராயப்பிள்ளை வீதி, சென்னை.

உ

கணபதி துணை

சாமுத்திரிகா லட்சணம் என்னும்

# கமலமாமுனிவர் இரேகைசாஸ்திரம்

மூலமும்-விருத்தியுரையும்

இது

M. மார்க்கலிங்க சோதிடர் குமாரர்

காவேரிப்பாக்கம்

K. M. தெய்வசிகாமணி சோதிடரால்

விருத்தியுரை எழுதியது.

அ. முத்துவடிவேல் முதலியாரால்

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை

1939

இதன் விலை]  [ரூபா 3-0-0

# அட்டவணை





அட்டவணை முற்றிற்று.



# ரிஜிஸ்டர் காபிரைட்



இதனால் சகலருக்குந் தெரிவிப்பது யாதெனில்:—இந்நூலாகிய "சாமுத்திரிகா லட்சணம் என்னும் கமலமாமுனிவர் இரேகைசாஸ் திரத்திற்கு" ம-ா-ா-ஸ்ரீ, K. M. தெய்வசிகாமணி சோதிடர் அவர்க ளியற்றிய விருத்தியுரையை அடியிற் கையொப்பமிட்டுள்ள யான் மேற்படியாரிடம் சர்வசுதந்தரமும் பெற்று அச்சிட்டு கெவர்ன் மெண்ட் சட்டப்படி (ரிஜிஸ்டர் காபிரைட்) செய்திருப்பதால் இந்நூலை என் அனுமதியின்றி எவரும் அச்சிடக்கூடாது என்பதை தெரி வித்துக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,

அ. முத்துவடிவேல் முதலியார்.

நெ-24, தாண்டவராயப்பிள்ளை வீதி, சென்னை.

# முகவுரை



ஸ்ரீ சர்வேஸ்வரனால் ஆக்கப்பட்ட உலகமாந்தர்கள் உணர்ந்து ஓதுதற்கு அரிய வேதங்கள் நான்கினுக்கும் உப அங்கங்களாயுள்ள வேதங்கள் ஆறினுள், நேத்திராங்கமாய் மிளிர்ந்திலங்கும் சோதிடசாஸ்திர மென்பது பலவகை யுடையதென்பதில் சந்தேகமில்லை. எப்படியெனில்? கணிதஸ்கந்தத்தால் உலகவியல்பையும், ஜாதகஸ்கந்தத்தால் மக்களியல்பையும், சங்கிதாஸ்கந்தத் தால் ஆருடாதி விஷயமும் கூறுநிற்கும் என முன்னோர் கூறியுள்ளனர்.

இம்மூன்றினுள் ஜாதகஸ்கந்தத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்யும்போது, மேற்படி ஜாதகஸ்கந்தத்தில் காலம் (அல்லது) நேரம் என்பதையே முதன் மையாய் வைத்து கூறியுள்ளனர். இதனை, மேற்சொன்ன நான்கு வேதங் களும் நேத்திரம், நாசி, வாக்கு, செவி, கரம், பாதம் என்னும் ஆறு அங்கங்கள் என்றும், நேத்திரம் என்பது சோதிடம் என்றும், நாசி என்பது சிக்ஷை என்றும், வாக்கு என்பது வியாகரணம் என்றும், செவி என்பது நிருத்தம் என்றும், கரம் என்பது கற்பமென்றும், பாதம் என்பது சந்தோ சோபிதம் என்றும் கூறினர். மேற்சொன்ன ஆறு அங்கங்களிலும் மிகச் சிரேட்டமானது நேத்திரமானதால், நேத்திரமாகிய சோதிடமே முக்கிய மெனவும், உலகமாந்தர்கள் சோதிடத்தை யறிந்தே தீரவேண்டுமென்றும், சோதிடத்தை யறிந்து கொள்ளாதாரும், சோதிடசாஸ்திர விதியறிந்து நடக்காதாரும் குருடருக்கொப்பாவார் எனவுங் கூறியுள்ளதை வாசகர்கள் அறிந்திருப்பார் என்பதிற் சந்தேகமில்லை.

ஆயினும், இங்குகூறிய சோதிடத்தை பிற்காலத்தோர் பற்பல முறையாய் கூறியுள்ளனர். எப்படியெனில்? காலநேரம் என்பதையே முக்கியமாய் கூறியுள்ளார், இதனை, **சிவஞானசித்தியார்** சிறப்பித்துக் கூறியதாவது, கலாதத்துவம், நியதிதத்துவம், காலதத்துவம் என்னும் மூன்றினுள் காலதத்துவமானது உலகினையாக்கலும், காத்தலும், அழித்த லும், காலவரை செய்தலும், கன்மத்தை வரையறுத்தலும் உடையதாகும் என்னும் கருத்தை உள்ளமைத்து,

“மாயையிற் காலமோடு நியதிபின் கலாதிதோன்றும்
ஆயவக்கால மூன்று யாக்கியு மளித்தும்போக்கி
காயமோ டுலகுக்கெல்லாம் காலசங்கை யினைப்பண்ணி
நாயக ஞணையாலே நடந்திடு முலகமெல்லாம்”

என்று கூறினர். ‘அருவினை யுலகமெல்லாம் படைத்தறிந் தழிக்குங்காலம்’ எனக்கூறிய **காஞ்சிபுராணமும்** இதை சம்மதிக்கின்றன.

“ஞாலமே ஞாலமெலாம் விளங்கவைத்த
நாயகமே கற்பமுத னவிலாநின்ற
காலமே காலமெலாங் கடந்தஞானக்
கதியேமெய்க் கதியளிக்கும் கடவுளேசிற்
கோலமே குணமேயுட் குறியேகோலங்
குணங்குறிகள் கடந்துநின்ற குருவேயன்பர்
சீலமே மாறிலா மனத்திற்கண்ட
செம்பொருளே யும்பர்பதஞ் செழிக்குந்தேவே”

என **திருவருட்பிரகாச வள்ளலார்** தமது மகாதேவமாலையுள் கூறியிருப்பது வியக்கத்தக்கதேயாகும். ஆனதால் காலம் என்பது பிராணன் - விநாடி- நாழிகை - முகூர்த்தம் - சாமம் - பகல் - இரவு - வாரம் - பக்ஷம் - மாதம்-அய

னம் - ருது - வருடம் - யுகம் - மகாயுகம் - தேவயுகம் - கற்பம் எனப் பலபேத மாய் இறப்பு - நிகழ்வு - எதிர்வு என மூன்றுவகையால் பிரபஞ்சத்தின் தோற்றமும், நிலையும், இறுதியும் தன்கண் நிகழும் எனக் கூறவேண்டுவ தாகிறது.

இவ்வாறு தத்தமது காலநேரத்தை அறியாமல் எவ்வித காரணகாரியங் களையும் செய்யலாகாதெனவும், உத்தம காலத்தை அறியாது தீயகாலங் களில் ஆரம்பம் செய்து பயனடையாது துன்பப்பட்ட அநங்கராஜன் அமலன் மீது பூங்கணை தொடுத்ததும், தக்கன் வேள்வி ஆரம்பித்த காலமும், சூர பதுமன் உயுத்தத்திற்குப் புறப்பட்ட காலமும், வாலி சுக்கிரீவ யுத்த ஆரம்ப காலமும், இராவணன் புதல்வனை இந்திரஜித்து என்னும் மேகவருணன் நிகும்பலையாகம் செய்த காலமும், மாளவமாமுனிவர் பாண்டவ வீரர்கள் இறந்துபோகவேண்டும் என்னும் விருப்பமுடன் மாரண ஓமம் செய்த காலமும், அரவக்கொடியோனை சுயோதனன் ஜலஸ்தம்பனம் செய்த காலமும், சுபகால நேரமல்லாததால் பயனடையாமற் போயினவென்று புராணங்களில் கூறியுள்ளன. இவ்வாறு நல்வேளை, தீயவேளை என்பதை அறியாது செய்வதால் இயற்றுவோனும், ஏவுவோனும் பயனடையார் எனக் கூறவேண்டுவதாகிறது.

இவை ஒருபுறமிருக்க நம் நூலாசிரியரான கமலமாமுனிவர் சகல சாஸ்திர பண்டிதராயும், சகல கலைக்ஞானங்களையும்அறிந்தவராயும், முக்கால நிகழ்ச்சியையும் தெரிந்தவராயும், முனிவர் கூட்டங்களில் ஒருவராயுமிருந் தாலும், தத்தமது வாழ்நாளின் விஷயங்கள் தத்தமதிடமே இருந்துள் ளனவென்றும், அவற்றையே முன்னதாய் அறியவேண்டும் என்னும் நிச்சய முடையவரும், அவ்வவர்கள் பிறந்தகாலலக்ஷணத்தால் சரீரம் தோன்றும். ஆத லால் காலத்தை அறியாவிடினும் தமது சரீரலக்ஷணத்தையேனும் அறிந்தே தீரவேண்டும் என்னும் நிச்சயமுடையவரும் ஆவர். ஆனதால், அவ்வவர்கள் தலை யெழுத்தென்னும் வருகாலவிதி அவ்வவர்களது கையிலேயே இருந்துள்ளன. ஆதலால் தலையோட்டை காண்பவர் பிரம்மதேவர் என்றாலும் கையேட்டில் உள்ள விஷயத்தால் நன்மை தீமையைக் காணலாம் என்னும் தீர்மானத்தை யுடையவர். இதனாலேயே தாம் கூறிய இந்த சாஸ்திரத்தில் நூற்செய்த காரணம் என்ன என்பதை விளக்குகையில்,

"கேளடா தலையோட்டின் மூட்டைப் பார்த்து
கேவலமாம் தலையெழுத் தீதென்பர் மாந்தர்
தாளடா தமதுகையில் எழுத் தமைந்தால்
தவறில்லை சாமளையின் கடாக்ஷத் தாலே"

எனக் கூறியுள்ளனர். என்னவெனில்? அவ்வவர்களது தலையெழுத்து என்பது அவரவர்களது கையிலேயே உள்ளன என்பது இவரது கருத் தாகும்.

இக்கருத்தானது பொய்யன்று. எப்படியெனில்? உலகிலுள்ள மானி டர்கள் தாம் சுகமாயிருக்கவேண்டும் என்னும் கருத்துகொள்வாரேயன்றி, தாம் துன்பத்தால் கஷ்டப்பட இஷ்டப்படுவதில்லை. ஆனதால், ஒவ்வொருவரும் தான் சுகித்திருக்கப் பிரியங்கொண்டவராய், தான் எவ்வித காரண காரியங் களை ஆரம்பிக்கினும், அவ்வவர்களுடைய தலையெழுத்தின் போலவே நடக் கிறதென்பதைப் பிரத்தியக்ஷமாய்க் காண்கிறோம். ஆனதால், கணிதசாஸ் திரத்தை இலேசாயறிய முடியாதாயினும், மேற்கூறிய கையெழுத்தை சுலபமாய் அறியலாம் என்பதே இந்நூலாசிரியரின் முக்கிய கருத்தாகும்.

இதுவன்றி, இந்நூலாசிரியராகிய கமலமாமுனிவருக்கு உபதேச குருவானவர் கலசத்தில் பிறந்த கும்பமுனியாகிய அகத்தியராயினும், மேற்படி அகத்தியமாமுனிவருக்குக் குலகுரு ஸ்ரீசண்முகக்கடவுளே எனக் கூற இடமுண்டாகிறது. எதனாலெனில்? தாம் கூறிய இந்நூலின் காப்புச் செய்யுளில் 2-ஆம் விருத்தம் நான்காம் அடியில்,

"வாளடா சிவசுப்ர மண்யர்தானே
மலயமுற்ற குருமுனிக்கா யுபதேசித்தார்
ஆளடா அதிற்சிறிதே தெரிந்தமட்டும்
அவனியோர்க் குரைத்திட்டே னதிகாப்பே"

எனக் கூறியதால், இந்நூலாசிரியரான கமலமாமுனிவருக்கு அகத்தியர் கூறினார் என்றும், மேற்படி அகத்தியருக்கு ஸ்ரீசுப்ரமண்யக்கடவுள் கூறினாரென்றும், மேற்படி அகத்தியரிடம் கேட்ட விஷயங்களில் தம்மனத்துள் பதிந்த சில விஷயங்களையே இங்கு கூறுகிறேன் எனக் கூறியுள்ளனர்.

இவ்வாறாகிய பல விருத்தாந்தங்களை நோக்குமிடத்து ஆதியில் உள்ளது கணிதஸ்கந்தமென்றும், மேற்படி கணிதஸ்கந்தத்திலிருந்து சில விஷயங்களை புரட்டிச் சேர்த்தெடுத்தது ஜாதகஸ்கந்தமெனவும், மேற்படி ஜாதகஸ்கந்தத்தினுள் தோன்றிய ஒரு சிறுபாகமே சாமுத்திரிகாலக்ஷண சாஸ்திரமென்றும், இதற்குப்பின் தோன்றியதே சங்கிதாஸ்கந்தமென்னும் (பிரச்சனம்) ஆரூடவிஷயம் எனவுங்கூற இடமுண்டாகிறது.

இந்நூலாசிரியர் கருத்திற்கு இன்னொரு காரணமும் கூறவேண்டியதாகிறது. என்னவெனில்? மானிடராய்ப்பிறந்த நாம் நம்வாழ்நாட்களின் சுகங்களுக்காக வேண்டி, மனக்கோட்டை கட்டினாலும் கடைசியில் அவை மணற்கோட்டையாகவே முடிகின்றன. ஏனெனில்? இவையே ஊழ்வினையின் பயன் எனக் கூறவேண்டுவதாகிறதாயினும், மேற்படி ஊழ்வினையின் வருவினையை அறியும்பொருட்டு நம்முன்னோர் ஆக்கிவைத்த பற்பல சாஸ்திரங்களுள் இந்த சாமுத்திரிகாலக்ஷண சாஸ்திரமும் ஒன்றாகும். இவை இக்காலத்தில் தோன்றியதன்று. நம்முலகில் தமிழ்தோன்றிய நாளிலேயே இந்த சாஸ்திரமும் தோன்றியுள்ளன என்றுங் கூறலாம். எவ்வாறெனில்? அகத்தியர் தோன்றிய காலமெப்போது? அகத்தியர் தமது சிஷ்யர்களுக்கு உபதேசித்த காலமெப்போது? எனயோசிக்குமிடத்து அகத்தியராலேயே தமிழ் தோன்றினவென்றும், அவரால் உபதேசம் பெற்றவரும், தமிழ் மொழியிலேயே உபதேசம் கேட்டனரென்றுங் கூற இடமுண்டாகிறது. இதனாலேயே, இவ்வஸ்தரேகையும் ஆதிகாலத்திலேயே தமிழ்மொழியில் உண்டாயினதென்றும் கூற இடமுண்டாகிறது.

இச்சாஸ்திரத்தை சிவபிரான் தமது பத்தினியாகிய மயேஸ்வரிக்கு உபதேசித்ததாயும், மேற்படி உமாதேவியார் விஷ்ணுமுதல் பிரம்மன்வரையிலுமுள்ள ரிஷிக்கூட்டங்களுக்கும், முனிவர் கூட்டங்களுக்கும் சொல்லவும், அவர்கள் மிகுந்த பயபக்தியுடன் கேட்டிருந்ததாயும், இந்நூலின் இடைஇடையே கூறியுள்ளதை அறியலாம்.

இதுவன்றி, இந்நூலின் இடையிடையே தோன்றும் விஷயங்களைக் காணுமிடத்து, இவை சாமுத்திரிகாலக்ஷண சாஸ்திரம் என்றாலும், இரேகை சாஸ்திரம் எனப்பெயர் கொண்டுள்ளன வாதலாலும், இதனுள், ஆயுள் ரேகை செல்லும் விவரத்தையும், அதிர்ஷ்டரேகையின் இலக்ஷணத்தையும், விவாகரேகையினது சந்தேகங்களை நிவர்த்திசெய்யும் மார்க்கங்களையும், ஆரோக்கியரேகை, இரவிமேடு, சுக்கிரமேடு, செவ்வாய்மேடு என்னும் அந்த

ரங்கரேகைகளின் இலக்ஷணலக்ஷணங்களையும் எவரும் எளிதில் அறியும் வண்ணமாய் வரைந்துள்ளன. இதுவன்றி, வட்டம் - தீவு-சுழி - புள்ளிகள் இவற்றினது இலக்ஷணங்களையும் தெளிவாய் விளக்கியுள்ளன. ஆனதால், இந்நூலானது இவ்வுலகோர்க்கு வெகுவாய் பயன்படும் என்னும் கருத்தை யொட்டியே யானும் இந்நூலினுக்கு ஓர் உரையெழுதி வெளியிடுவோமாயின் உரை எழுதியவர்க்கும், இதனை அச்சிட்டு வெளியிட்டோர்க்கும் பேருபகாரமும், பிரசித்தியும் உண்டாகும் என்னும் துணிபுகொண்டவனாகி, எம்மிடம் கிடைத்த சில செய்யுளுக்கே உரையெழுதி யுள்ளேன்.

இவை இவ்வாறிருக்க ஏட்டுப்பிரதியால் சிதறுண்டு கிடந்த இவ்வரிய நூலை தமது கையிற் சிக்கியவளவில் அச்சிட்டு உலக பரோபகாரமாய் வெளியிட்டவரும், திருமயிலை அல்லமாப்பிரபுமடம் குழந்தையானந்தசுவாமிகளது சிஷியவர்க்கத்துள் ஒருவராகிய பிட்சைப்பாக்கம் கணிதாதிய சாஸ்திர பண்டிதரும், வடஆற்காடு ஜில்லா வேலூர் தாலுக்கா விருத்தம்பட்டு என்னும் கிராமத்திற் பிறந்து, சுமார் 45-வருடங்களுக்குமுன் பரனுலகெய்தினவருமான மார்க்கலிங்க நாயனார் அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைச் செலுத்த கடமைப்பட்டவனாவேன். மற்றும் இந்நூலில் 7-வது காண்டம் 89-ஆம் செய்யுளில்,

"உருதியாய் இந்தநல்ல சாஸ்திரம்தான்
உத்தம்மாய் பனிரண்டா யிரமும்சொன்னேன்
திருதியாய் சாஸ்திரத்தை அதன்பின்மைந்தா
தேருகின்ற ஆயிரத்தி நூறும்சொன்னேன்
பருதியாய் சாஸ்திரத்தை அதன்பின்மைந்தா
பண்பாகச் சொல்லிவிட்டேன் மைந்தாகேளு
நிருதியாய் சாஸ்திரத்தின் நிலமைஎல்லாம்
நிகழ்த்தினேன் உள்ளமட்டும் நீதிதானே"

என்று விஷ்ணுமுதல் பிரம்மன்வரையிலு முள்ளோர்க்கு இந்நூலை உபதேசித்த உமாதேவியார் கூறியுள்ளனர். எப்படியெனில்? இந்த சாமுத்திரிகா லக்ஷணமென்னும் சாஸ்திரமானது 12-ஆயிரம் செய்யுட்களாய் ஈசன் எனக்கு உபதேசித்தார். யான் அதனுள் இருக்கும் முக்கிய விஷயங்களைச் சேர்த்துத் திரட்டி ஆயிரத்துநூறு செய்யுட்களாய் உங்களுக்கு உபதேசித்தேன் என்று கூறியுள்ளார்.

எம்மிடம் கிடைத்த இப்பழைய நூல் சுமார் 60-வருடங்களுக்குமுன் அச்சிட்டதாயினும் அதிலுள்ள செய்யுட்கள் 639 செய்யுட்களே உள்ளன. எம்மிடம் கிடைத்தவரையில் திருப்தியுடையவனாய் எமது ஆசிரியர் காவேரிப்பாக்கம் மார்க்கலிங்க சோதிடரவர்களின் உதவியால் என் சிற்றறிவிற் கெட்டியவரையில் உரையெழுதியுள்ளேன். ஆகலால் இதனை வாசிக்கும் நல்லறிவாளர்கள் இந்நூலில் எவ்வித குற்றமிருக்கினும் அதனைத் திருத்தி வாசித்து ஆசீர்வதிப்பதுடன் இந்நூலிலுள்ள 639-செய்யுள்போக மற்றைய செய்யுட்கள் ஏட்டுப்பிரதியாகவோ அச்சுப்பிரதியாகவோ முழுக்கோர்வை வைத்திருக்கும் மகானுக்கள் எம்மிடம் அனுப்பி உதவிசெய்தால் உலக பரோபகாரமாய் இருப்பதுடன் அடுத்த பதிப்பில் அதனையும் சேர்த்து உரையெழுதி அச்சிட்டு வெளியிடுவோம்.

காவேரிப்பாக்கம்
1-7-39

இங்ஙனம்
K. M. தெய்வசிகாமணி சோதிடர்.

# நூல் வரலாறு



சகல ஜீவர்களுக்கும் காரணபூதராய் சகல பக்தகோடிகளும் பதம் பெறுமாறு, ஸ்ரீநப்பின்னைப் பிராட்டியாருடன் எழுந்தருளியிராநின்ற பரம தயாளுவான ஸ்ரீரங்கநாதன் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிராநின்ற, ஸ்ரீரங்கக்ஷேத்திரத்திற்கு அப்பால் சுமார் ஐந்துகாதவழி தூரத்திலேயுள்ளதும், தென்மொழி வளர்த்திய குறுமுனியான அகத்தியரின் வாஸஸ்தலமாயுள்ள பொதிகைமலையின் தென்மேற்கில், சுமார் பதின்காதவழிதூரத்திலுள்ள ஓர் சிற்றூரில் வேளாள குலத்தில், சைவமரபில் ஜனித்தவரும், மேற்படி கிராம மேட்டுக்குடியாளருமான சிவராமப் பிள்ளை யென்பவரின் அருந்தவப் புதல்வரும், எந்நாளாயினும் பரமபுருஷரான சர்வேஸ்வரனை யடைந்தாலொழிய, நாம் கடைத்தேறோம் என்னும் நிச்சய மனத்தினையுடையவரும், "எண்ணுமெழுத்தும் கண்ணெனத்தகும்" என்னும் ஔவைப்பிராட்டியார் வாக்கையும், "சப்தமும் சோதிடமும் எழுத்து" என்னும் நாலடியார் வாக்கையும், "எண்ணென்பவேனைய வெழுத்தென்ப விவ்விரண்டுங் கண்ணென்பவாழுமுயிற்கு" என்னும் வள்ளுவர் வாக்கையும், முன்னரே யறிந்து உலகரகஸ்யங்களை மாந்தர்கள் முன்னரே யறிந்தவர் ஒழிய மற்றையோர் தன்வாழ் நாளில் சிந்தியாதிருக்க இயலாதெனத் தீர்மானித்து, உலகமாக்கள் உய்யும் வழியைத் தம்மாலியன்றவரையில் நாம் கூறுவோம் என்னும் நல்லெண்ணமுடையவருமான, நம் புலவரும் முனிவருமான கமலமாமுனிவரின் சிறப்பை நம்மாலெடுத்துரைக்க முடியாதாயினும் எம்மாலறிந்தவரையில் இங்கு கூறுவாம். இம்மகாமுனிவர் தான் பிறந்தது சிற்றூராயினும் இளம் பருவந் தொட்டே தன் ஊரின்கண் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிராநின்ற ஸ்ரீ அகிலாண்டவல்லி என்னும் அம்பாள் ஆலயத்தின் அர்ச்சகரான பிராம்மணரிடம் கல்வி கற்றுவந்தவர். மேலும் தமதாசிரியர் அகிலாண்டவல்லிக்குத் தொண்டுசெய்யும் தொண்டரானதால் தமது சிஷ்யரான இம்மகா முனிவருக்கு, ஸ்ரீசர்வேஸ்வரியின் பிரபாவங்களை அடிக்கடி கூறுவது வழக்கம்.

ஓர்நாள் தாம் வாசிக்கும் தமிழ்ப்பாடத்தில் இரண்டாம்பாடலில் சரஸ்வதிதேவி ஸ்துதியை வாசிக்கும்படி நேர்ந்தது. அச்சமயம் மேற்படி ஆசிரியரான பிராமணர் மேற்படி பாடலின் அருத்தத்தை விளக்கும்போது, ஓ எனது சிஷ்யனே! உலகம் யாவும் வியாபித்துள்ளவள் சத்திதேவி, உலகத்தோர்க்கு சகலவித்தையையும் கொடுப்பவள் சரஸ்வதி, உலகத்தவர்கள் கல்வியையும் சக்தியையும் அடைந்தாலும் அவர்கள் எவ்வித தீங்கும் வரவொட்டாமல், முன்னணியாயிருந்து காப்பவள் கமலாசனி என்னும் மேற்படி வாணியே என்றனர். இதைக்கேட்டதும் நம்முனிவர் பிரான் மெய்மறந்து சற்றுநேர மிருந்து, பின்பு தமது ஆசிரியரை நோக்கி, ஓ எனது ஐயனே! தாங்கள் உரைத்த மொழியால் சகல வித்தையையும் கொடுப்பவளும், சகலசுகங்களுக்கும் தீங்குவரவொட்டாமல் அறிவையும் கொடுத்து ஆதரிப்பவளுமானவள் சரஸ்வதிதேவியே எனத்தோற்றுகிறது. ஆனதால் அவள் எங்ஙன முள்ளவள்? என வினவினர். மேற்படி பிராமணரும், "வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள்" என்றனர். அன்று தொட்டு, இவரது மனம் வெள்ளைக் கமலத்தின்மீது வீற்றிருக்கும் சரஸ்வதிதேவியினது உருவத்தின்மீதே சென்றன. தமதாசிரியர் பூஜைசெய்யும் அகிலாண்டவல்லியையும், தாம் காணும் ஒவ்வொரு கோயிலின் விக்கிரகத்தையும் தான் தனது கண்ணால் காணும் எல்லாப்பொருளையும், மேற்படி கமலாசனி

என்னும் சாஸ்வதியின் உருவமாகவே துதிப்பதும், எந்நேரமும் கமலாசனி கமலாசனி என்றுரைப்பதுவுமாகவே யிருந்தனர். இதனாலேயே இவருக்குக் கமலன் எனக் காரணப்பெயருண்டானதாய்க் கூறப்படுகிறது.

இவ்வாறு கமலாசனி என்னும் சாஸ்வதிதேவியை ஒருநிமிடமேனும் மறவாதவராகியும், தமது ஆசிரியரான பிராம்மணரிடம் மிக்க பக்திபூர்வகத்துடன் வயது 18-வரையில் கல்வி பயின்றுவந்தவராயினும் மேற்படி 18-ஆம் வயதிலேயே உலகம் உய்யும்வண்ணம் ஒளிக்கொளியாய் நிறைந்திலகும் எல்லாம்வல்ல இறைவன் என்னும் கடவுளான குமரனைப்பயின்ற குவலயம்பூத்த அமரர்க்கதிபன் ஆக்கிய வேதமான சிட்சை-கற்பம்-வியாகரணம்-நிருத்தம்-சந்தோபிசிதம்-ஜோதிடம் என்னும் ஆறுவேதாந்தத்தையும் உடையதே வேதாந்தமென்றும், மேற்படி வேதாந்த மொழியை உத்தம சுரவேறுபாட்டால் ஒழுங்காய் உச்சரிக்கும் ஒழுங்கை அறிவிப்பது சிட்சை என்றும், ஆதிபகவனுல் ஏற்படுத்தப்பட்ட உத்தமகருமங்களை யனுஷ்டிக்கத் தகுந்த காலநேரங்களையும் அறிவிக்கத் தகுந்ததே கற்பமென்றும், வேதத்திற் கூறியுள்ள அக்ஷர ரகஸ்யங்களையும், சொற்பொருளாதி இலக்கணங்களையும் அறிவிப்பது வியாகரணம் என்றும், வேதாந்த வாக்கியப்பொருளை நிச்சயித்துக் கூறுவது நிருத்தமென்றும், வேதங்களில் சொல்லியுள்ள காயத்திரியாதி சந்தத்தையும் அவ்வவற்றிற் கமைந்துள்ள அக்ஷரங்கள் இம்மட்டேயாகும் என வரையறுத்துக் கூறுவதே சந்தோபிசிதம் என்றும், வேதமுறையால் விதித்துள்ள கருமங்களைச் செய்யத் தகுந்த உத்தமகாலத்தை யறிவிப்பது சோதிடமென்றும் தெளிந்தனர்.

ஆயினும் மேற்படி 18-ஆம் வயதில் இவர் மனத்துள் ஓர் குறைதோன்றியது. அது என்னவெனில்? தாம் கற்றவையனைத்தையும் அனுபவத்திற்குக் கொண்டு வந்தாலொழிய இதனது உண்மை விளங்குமோ? விளங்காது. ஆனதால் இதனை யறிய வேண்டுமென்றால் குருவுபதேசம் வேண்டுமே? இவ்வளவு சாஸ்திர ரகஸ்யங்களையும் அறிந்தவர் யார்? எனப் பலநாள் ஆலோசிக்கலானார்.

ஓர்நாள் மகா முனிவர்கள் வாசஸ்தலம் எது? மகாமுனிவர்களுள் சகல சாஸ்திரமும் கற்றறிந்தவர் யார்? தெய்வ அருள் பெற்றவர் யார்? அபயமென்றவரை ஆதரிக்கத் தகுந்த உத்தமபுருஷன் யார்? என ஆலோசிக்கும்போது அநேக முனிவர்கள் வாசம் செய்யத் தகுந்தது பொதிகைமலை என்றும், சத்திய சச்சிதானந்த தேஜோன்மயமாய் விளங்கிய ஸ்ரீ சுப்ரமண்யக்கடவுளின் அனுக்கிரகம் பெற்றவர் அகத்தியரே என்றும் தீர்மானிக்கலானார். பின்பு மேற்படி மகாமுனிவரான அகத்தியரைச் சேவித்தே தான் கொண்ட சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொள்ள வேண்டுமென்னும் துணிபுடையவராய் மேற்படி பொதிகைமலைச் சென்று அங்குள்ள அனேக ரிஷிக்கூட்டங்களையும் முனிவர்களையும் சேவித்தபின்பு, தம்மனத்துள் குருவென நினைத்துவந்த அகத்தியரையும் மிக்க பக்திவிஸ்வாசத்துடன் சேவித்து தன் மனக்குறையைக் கூறலானார்.

மேற்படி மகாமுனிவரான அகத்தியரும், இந்நூலாசிரியரான கமலனைக்கண்டு, இவரது ரூபம், குணம், குறி இவற்றை உற்றுநோக்கி, இவன் மகாபுருஷனேயாகுமென நினைத்து, ஓ எனது அன்பிற்குரிய சிஷ்யனே! உனது மனக்குறையை நீக்க என்னால் இயலாதாயினும், ஸ்ரீ சர்வேஸ்வரனால் எமக்குப் போதிக்கப்பட்ட சிலவிஷயங்களுள் எம்மால் அறிந்தவரையில் உமக்குக் கூறுவேன். ஆயினும், இங்கு எம்மிடம் உள்ள சிஷ்யர்களுட

னிருந்து, அவர்கள் செய்யும் தெய்வத்திருப்பணிக்கும், இங்குள்ள ஆஸ்ரமத்திற்கு வேண்டிய சகல கைங்கரியங்களுக்கும் நீரும் உடனிருந்து, ஒருவர்க்கொருவர் எவ்விதத்திலும் மாறுபாடின்றி, சிலநாள் செய்து வருவாயேயாமானல், முருகன் கிருபையால் உன் மனத்துள் தோன்றிய குறை அகலும்வண்ணம் கடாக்ஷிப்பார் என்பதில் ஐயமில்லை என்றனர்.

இவ்வார்த்தையைக் கேட்ட கமலன் உள்ளம்பூரித்து, ஆசிரியர் வார்த்தையை சிரமேற்கொண்டவராய், அன்றுதொட்டு ஆசிரியர் குறிப்பறிந்து ஆசிரியர் தமக்கு ஆக்ஞை செய்யாமுன்பே தான் செய்து முடித்தலும், தன்னுடனிருக்கும் மற்றுமனேக சிஷ்யர்களது மனம் நோகாவண்ணம் நடந்துகொண்டும், ஸ்ரீ கமலாசனியை மறவாமலும், தமது ஆசிரியரான அகத்தியரையும் கமலாசனியென்றே நினைத்து, தனக்கு வரப்போகும் நன்னாள் என்னுளோ என எதிர்பார்த்திருந்தனர்.

ஓர்நாள் தமிழ்மொழி யாவும் ஆய்ந்துணர்ந்தவரும், அனேக சிஷ்யர்களையுடையவரும், சிவசுப்ரமண்யக்கடவுளின் ஆப்தசிஷ்யரான அகத்தியர் தமது மாணுக்கர்களை நோக்கி, ஓ வேதபுரஸ்காரான செல்வர்காள்! நீங்கள் வேதாங்கத்தை உண்மையென நினைத்து நாட்கழிக்கும் தூல்யர்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆனதால், யான் சொல்லும் விஷயங்களைக் கவனமாய் கேட்பீர்களாக. என்னவெனில்: எவரும் வியப்படையத்தகுந்த இஞ்ஞாலத்தே ஸ்ரீ சர்வேஸ்வரனுல் உண்டாக்கிய அரிய பல புராணங்களும், இதிகாசங்களும் அகன்று நின்று,ஆத்மாக்களின் ஆன்மரக்ஷகத்திற்கு ஏதுவாய் துணைபுரிந்தாலும், அதன் உண்மைரகஸ்யங்களை வினைநீங்கிய வேதமுனிவர்களே அறியத்தகும். அவர்களே அதனை விளக்க இயலும். இப்படிப்பட்ட அரிய நூலினையும் பின் நூலாக்கி மூன்நூலாகும் வேதங்கள் நான்கு. அவையாவன:—இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பனவாம். இந்த நான்கு வேதங்களுக்கு முதல் வேதமானது மேலேசொல்லிய இருக்கு என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில்? பின்கூறிய யசுர், சாமம், அதர்வணம் என்னும் மூன்று வேதங்களிலும் கூறியுள்ள கருமங்களை உத்தம காலங்களிலேயே செய்து முடிக்கவேண்டும். மேற்படி உத்தமகாலங்களை செவ்வையாய் ஆராய்ந்து கூறத்தகுந்ததே இருக்கு எனப்படும். மற்றும், மேற்சொன்ன நான்கு வேதங்களுக்கும் அங்கங்கள் ஆறு. அவற்றுள், நேத்திரமாய் விளங்குவது சோதிடம். மேற்படி, சோதிடம் என்பது மூன்று பிரிவினையுடையதாகும். அவையாவன:—கணிதஸ்கந்தம், ஜாதகஸ்கந்தம், சம்மிதாஸ்கந்தம் என்பனவாம். இம்மூன்றும் உலகவியல், மக்களியல் என்னும் இரண்டையும் அறிய ஏதுவானதாகும்.

இதுநிற்க மானிடலக்ஷணம், மிருகவிலக்ஷணம் என்பன இரண்டுண்டு. அவையாவன சாமுத்திரிகா லக்ஷணம் எனப் பெயர் பெற்றதாகும். மேற்படி சாமுத்திரிகாலக்ஷணம் என்பது வெகு அந்தரங்க சாஸ்திரமாகும். இவை சர்வேஸ்வரனுல் சத்திதேவிக்குக் கூறியதாகும். மேற்படி சத்திதேவியின் மூலமாகவே பிரம்மன் விஷ்ணு முதலியோரும், வசிட்டர் விஸ்வாமித்திரர் முதலிய மஹாரிஷிகளும், யானும் கேட்டறிந்தோம். ஆயினும், உலகமாதாவாகிய உத்தமியாள் எங்களிடம் கூறியதாவது என்னவெனில்? இவ்வருமை வாய்ந்தநூலை எவரொருவர் பிறர் அறியாவண்ணம் மறைத்துவைத்து அந்தரங்க பக்தியுடன் பூசித்து வருகிருர்களோ அவர்கள் முத்திபெறுவர் என்றும், எப்படிப்பட்டவர்க்கு இந்நூலினது ரகஸ்யங்களைக் கூறவேண்டுமெனில் சத்தியம்-தயை-அடக்கம் - அன்பு - ஈகை - சாந்தம்-தெய்வபக்தி முதலியன உடையவர்களுக்கே இந்நூலினது ரகஸ்யங்களை உரைக்கவேண்டும் எனவும்,

அப்படிப்பட்டவர்களுக்கு உரைக்கின் அதனால் மோக்ஷம் கிடைக்குமெனவுங் கூறியதோடு, நீச்சன் - முன்கோபி - அஞசாரன் - மதுபானி - அங்கப் பழுதினன்-காமி-விதண்டாவாதன் முதலிய துற்குணதுற்செய்கை முதலியன உடையவனுக்கு உரைக்கில் பாழ்நரகம் சித்திப்பதுடன் தனது ஏழு ஜென்மங்களிலும் பாபியாய்ப் போவன் எனச் சாபமிட்டிருக்கின்றாள். ஆனதால், ஓ எனது சிஷ்யர்களே! உங்களிடம் மேலேசொன்ன நற்குணங்கள் யாவும் அமைந்துள்ளன. ஆதலால், இதனை உங்களுக்குக் கூறுவேன் கேட்பீர்களாக என்று கூறுவாராயினர்.

இவ்வாறு தமது சிஷ்யர்களுக்கு இந்த சாமுத்திரிகாலக்ஷண சாஸ்திரங்களை ஒருங்கே கூறிவந்தாராயினும் நம் மகானுகிய கமலரோ மேற்படி அகத்தியர் கூறும் மொழி யாவும் தமது உபாசனுதேவியான கமலாசனியே கூறி வருவதாய் நினைத்தும், தமது ஆசிரியரையும் மேற்படி கமலாசனி என்றே நினைத்துத் துதித்தும் கேட்டுவந்தார். இதனுலேயே இவருக்குக் **கமலமாமுனிவர்** என மேற்படி அகத்தியரால் காரணப்பெயராய்க் கூறி அழைக்கப்பட்டதெனச் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

இவ்வாறு மகாமுனிவரான அகத்தியரால் உபதேசிக்கப்பெற்ற இந்த நூலின் மகத்துவத்தை அறிந்த கமலமாமுனிவர் தமது ஆசிரியரை வணங்கி, ஓ எனது ஐயனே! நீர் கூறிவந்த இந்த சாஸ்திரத்தின் மகிமையை என் சொல்வேன். இவை மானிடர்களுக்கு வருவினையை அறியும் கண்ணுடியன்றோ. ஆனதால், இதனை உலகிலுள்ள உத்தமர்கள் அறிவார்களாயின் மாந்தர்களின் வருவினையை அவ்வவர்களுக்கு முன்னதாயுரைத்து மாந்தரின் பின்நாளை நன்னுளாக்கி, அவர்கள் எவ்விதத்தாலும் துன்புறாது இன்பமாய் வாழ அருள்செய்வாரன்றோ. ஆனதால், இதனை உலகோர் அறியும்வண்ணம் அருள்செய்யவேண்டும் என்றுவேண்ட, அகத்தியரும் இவரது அன்பையும், அடக்கத்தையும் கண்டு உள்ளம்பூரித்து, ஓ எனது சிஷ்யனே! இங்குள்ள அனேகருள் இந்த சாஸ்திரத்தின் மகிமையை அறிந்தவன் நீர் ஒருவனே. ஆயினும், இதனது பெருமையையும் இதற்கு ஏற்பட்டுள்ள சாபத்தையும் முன்னமே கூறியுள்ளேன். ஆனதால், இதனை அம்பாள் ஆக்கினைப்படி நல்வழியில் நடத்துவாயாக. இதனை மீறிச் செய்வாயேயாயின், அம்பாளின் ஆக்கினைப்படி அவளிட்ட சாபம் பலிக்கும். ஆனதால் இச்சத்தியத்தை மறவாதே என விடை கொடுத்தனர்.

பின்னர், இந்நூலாசிரியரான மகாமுனிவர் தாம் தமது குருவிடம் கேட்ட 12-ஆயிரம் செய்யுளினது விஷயங்களையும் அவற்றினுள்ளிருந்து சேர்த்துத் திரட்டிய 1100-பாடல்களையும் தென்மொழியால் நம்மனோர்க்கு பயன்படும்வண்ணமாய் உரைத்துப்போனதாக சாஸ்திரங்களில் கூறியுள்ளன. மற்றும் இவரது வாழ்நாளில், தான் அகத்தியரிடம் உபதேசம் கேட்டதின் பின் துல்லிய ஞானமுடையவராய் எந்நாளினும் தமது குலதெய்வமாகிய சத்திதேவியைக் கனவிலும் மறவாதவராய், அனேக தலங்களுக்குச் சென்றும், அனேக சாஸ்திரங்களை ஆங்காங்குள்ள உத்தமர்களுக்கு உபதேசித்தும், தனது அந்தியநாளில் அருணகிரியென்னும் அண்ணுமலையின்கண் எழுந்தருளியிராநின்ற உண்ணுமுலையென்னும் உத்தமியை பலநாள் சேவித்திருந்து அவள் ஆசிபெற்றவர் என இவரது சரித்திரத்தால் கூறப்படுகின்றனவாதலால், இம்மகாமுனிவரை யாமும் நமது மனத்துள் துதித்துப் போற்றியும் இவரது நூலை வாசித்தும் மகிழ்ச்சி பெறுவோமாக. சுபம்.

---

படம் நெ-1.

குறுவிரல்

பவித்திரவிரல்

நடுவிரல்

ஆள்காட்டிவிரல்

பெருவிரல்



உள்ளங்கையில் இருக்கப்பட்ட இரேகைகள்

உ

முருகக்கடவுள் துணை

சாமுத்திரிகா லட்சணம் என்னும்

# கமலமாமுனிவர்

# இரேகை சாஸ்திரம்

(மூலமும்-விருத்தியுரையும்)

## முதற் காண்டம்

### காப்பு

ஆதியெனும் பராபரத்தின் பாதங்காப்பு
அன்பான மனோன்மணியாள் பாதங்காப்பு
சோதியெனும் பஞ்சகர்த்தாள் பாதங்காப்பு
சொற்பெரிய கரிமுகனுங் கந்தன்காப்பு
நீதியெனு மூலகுரு முதலாயுள்ள
நிகழ்த்தரிய மாமுனிவர் பாதங்காப்பு
வாதியெனும் பெரியோர்கள் பாதங்காப்பாக
வழுத்துகிறே னிரேகையுட மார்க்கங்கேளே.

(இதன்பொருள்) அண்டாண்ட சராசரங்களுக்கும் முதற்பொருளா யுள்ள பராபர வஸ்துவின் கிருபாநோக்கமாகிய அறியப்படாத ஏகவஸ்துவின் அன்னைத் தொழுதும் எல்லா ஜீவர்களின் ஜீவசத்தாகிய அம்பிகையைக் கும்பிட்டும் எல்லோருள்ளத்திலும் இருந்து நடனம்செய்யும் பஞ்ச கர்த்தாக்களுடைய திருப்பாதகமலங்களைத் தொழுதும், சொல்வதற்கரிய யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளையும், ஸ்ரீசுப்ரமண்யக்கடவுளினது பாததாமரைகளைத் தொழுதும், நீதிமார்க்கத்தையுடைய முதற்குருவாகிய அகத்தியர் முதல் மற்றுமுள்ள மகாபெருமைவாய்ந்த மகாமுனிவர்களினது திருப்பாதங்களைச் சேவித்தும், வாதி என்னும் பெயர்பெற்ற சித்தர்களுடைய பாததாமரைகளைப் பலதரம் தொழுது இரேகைசாஸ்திரம் என்னும் இந்நூலை விவரமாயுரைப்பேன் கேட்பாயாக என்றவாறு.

(விருத்தியுரை) 'கமலமாமுனிவர்' என்பவர் மகாமுனிவர்கள் பலருள் ஒருவர். மேற்படி முனிவர் இந்நூலினுக்குமுன் ஆசிரியர் அகத்தியரைப் போன்று அம்பாள் உபாசியாயினும் மேற்படி அம்பாளுக்கு முன்னவரான ஸ்ரீசிவசொரூபமாகிய ஈசனை முதலில் தொழுதபின் தனது உபாசனாதேவியாகிய அம்பிகையைத் தொழுதார் எனக் கூறவேண்டுவதாகிறது.

மற்றும் மேற்படி செய்யுளின் இரண்டாம் அடியில் 'அன்பான மனோன் மணியாள்' என்றதால் சகல ஜீவர்களும் அன்பு கொண்டாடத் தகுந்த பராசக்தி யெனவும், இந்நூலைக் கூறப்புகுந்த ஸ்ரீகமலமாமுனிவர் அன் புடன் கொண்டாடத்தகுந்த தேவி என்றும் உள்ளுரைகூற இடமுண்டா கிறது. பஞ்சகர்த்தாக்கள் என்பவர் பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மயே சுரன், கணபதி என்னும் ஐவர்களெனக் கூறுதலாலும், இவர்களே பிரிதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களுக்கு அதிகாரிகள் எனக் கூறுதலாலும், மேற்படி பஞ்சகர்த்தாக்களின் ஆக்கினையிலேயே பிரபஞ்சம் நிலைபெற்றிருக்கின்றன வென்னும் சுருதி யிருப்பதாலும் மேற்படி பஞ்சகர்த்தாக்களை வணங்கினர் எனவுங் கூறலாம்.

'சொற்பெரிய கரிமுகனுங் கந்தன்' என்றதால், சொல்வதற்கரிய விநாயகரும், அவருக்கிளையோரான ஸ்ரீஷண்முகனும் என்று பொருள் கொள்ளவேண்டியதாகிறது. ஏனெனில், மேற்படி இருவர்களின் நற்குணம் செய்கை முதலியனவற்றை மேற்சொன்ன தேவர் மூவர்களாலேயே கூற முடியவில்லை யென்றால் என் நாவால் சொல்லத்தரமாமோ என்னும் கருத் தைக் கொண்டு 'சொற்பெரிய' என்றனர் போலும். முனிவர்கள் பலர். அவருள் மிகச்சிரேஷ்டர் வசிஷ்டர், விஸ்வாமித்திரர், ஆங்கிரசு, ஜனகர் முதல் மற்றும் பலர். இவர்களில் வசிஷ்டர், விஸ்வாமித்திரர் என்னும் இரு வரும் பல சோதிட சாஸ்திரங்களைச் செய்து, அதை சித்தர் முனிவர் முதலியோர் வாசித்திருப்பதாலும், அவ்வாறான நூற்களுள் ஒன்றே ரேகை சாஸ்திரமானதாலும், இங்கு கூறப்புகுவதும் இரேகை சாஸ்திரமே யாத லாலும், மேற்படி ரிஷிகள் முனிவர்கள் சித்தர்கள் முதலியோரைத் தொழு தார் எனக் கூறவேண்டுவதாகிறது. மற்றும் இந்நூலை மேற்படி கமலமா முனிவர் கூறிய காரணம் பின்வரும் செய்யுளால் அறிக. 1

## நூல்செய்த காரணம்

கேளடா தலையோட்டின் முட்டைப்பார்த்து
    கேவலமாய்த் தலையெழுத் தீதென்பர்மாந்தர்
தாளடா தமதுகையி லெழுத்தமைந்தால்
    தவறில்லை சாமளையின் கடாக்ஷத்தாலே
வாளடா சிவசுப்பிர மண்யர்தானே
    மலயமுற்ற குருமுனிக்காய் வழுத்தினார்பார்
ஆளடா வதிற்சிறிதே தெரிந்தமட்டும்
    அவனியோர்க் குரைத்திட்டே னுதிகாப்பே.

(இ-ள்) அவரவர்கள் தங்கள் தலைவிதி யென்னும் வருவினையை நினைந்து சிந்திக்கும்போது மிக்க கேவலத்துடன் இதுவும் என் தலைவிதி என்று மானிடர்கள் கூறுவது வழக்கம். ஆதலால், அவரவர்கள் கரங்களாகிய கையில் நல்வினையாகிய நல்ல எழுத்து அமைந்திருக்குமே யாமானால் அவர்களுக்கு ஸ்ரீபகவதியின் கிருபையால் எவ்வித குறைவுமுண்டாகா தென்று ஸ்ரீசுப்ரமண்யக்கடவுளானவர் ஸ்ரீ அகத்தியமாமுனிவருக்கு உப

தேசித்துள்ளார். ஆனதால், மேற்படி அகத்தியருக்குக் கூறியதில் சிறிதளவு யான்கேட்ட அளவில் எனது குலதெய்வமாகிய பராசத்தியின் பாதத்தைத் தொழுது எனக்குத்தெரிந்த அளவில் கூறுகிறேன் எ-று.

(வி-ரை) இச் செய்யுளால் இந்த அஸ்தரேகை யென்னும் நூல் ஸ்ரீசண்முகக்கடவுளால் அகத்தியருக்கு உபதேசிக்கப்பட்டதென்றும், மேற்படி அகத்தியரால் இந்நூலாசிரியரான கமலமாமுனிவருக்கு உபதேசிக்கப்பட்டதென்றும் கூறயிடமுண்டாகிறது. இதுவன்றி எல்லா ஜனங்களும் தனக்குத் துன்பமுண்டாகிய காலத்து 'இது என் தலைவிதி' என்று கூறுவது சகஜமாதலால், தன் தலையிலுள்ள விதியை பிரம்மனுலன்றி மற்றவராலறிய முடியாதாயினும் அவரவர்கள் கையெழுத்தால் எளிதிலறியலாம் -என்னும் சூக்ஷமத்தையே உபதேசிக்கப்போவதாய்க் கூறவேண்டியதாகிறது. இதன் விவரங்களைக் கீழ்வரும் 5-ஆம் செய்யுளால் அறிக. 2

## உபாசனு தேவதையின் துதி

ஆதியெனும் பராபரத்தின் பொருளே தாயே
அம்பிகையே பராசத்தி கவுரியம்பாள்
சோதியெனும் மனோன்மணியே உமையேமுக்கண்
துலங்குகின்ற உத்தமியே சுயம்பாய்நின்ற
நீதியெனும் பரஞ்சுடரே நீலிசூலி
நீனிலத்தில் நின்னையல்லாற் றெய்வமுண்டோ
வாழியெனும் வாலைபர மேஸ்வரியேநீல
வர்ணவிழிப் பெண்ணரசாம் வஞ்சிநீயே.

(இ-ள்) எல்லா வஸ்துவிற்கும் முதற்பொருளாயுள்ள பராபர வஸ்துவிற்கு முதற்பொருளாயுள்ள எனது அம்மணி, அம்பிகா, பராசத்தி, கௌரி என்னும் திருநாமம் சூட்டி சோதிமயமாகிய பிரகாசம் அமைந்த மனோன்மணியே மூன்று கண்களைப்படைத்தும், சுயஞ்சோதி பிரகாசமாய் எங்கும் நிறைந்தவளும், தனக்கொருவரும் நிகரில்லையென மதிக்கத்தகுந்த உத்தமி நீதிமார்க்கததை என்றும் மறவாத பரஞ்சோதியும், வைராக்கியமும், சூலாயுதமும் பிடித்த என்தாயே உன்னை யல்லால் நான் தொழுவதற்கு வேறு தெய்வமுண்டோ? ஓ வாதியாகிய சகல சித்தர்களும் தொழத்தகுந்த அழகும், பெண்களுக்கெல்லாம் அரசாயும் வீற்றிருநின்ற பரமேஸ்வரியும் நீயே. 3

வஞ்சியெனுங் கொஞ்சுகிளி வாலைத்தாயே
மாதாவே யாதிசத்தி வடுகிமாரி
அஞ்சினேன் நின்பாத பதுமத்திற்கே
ஆரணியே பூரணியே யபிராமித்தாயே
நெஞ்சிலே நின்பாதம் நினைத்தேனம்மா
நேரிழையே யாரமிர்தே நினதுபாதம்
பஞ்சைகள்போல் ரிஷிகளெல்லா மஞ்சலிப்பார்
பத்தினியே யுத்தமியே யகங்கூர்வாயே.

(இ-ள்) எவரும் மெச்சத்தகுந்த வடிவினையும் கிளிக்கொப்பாகிய அழகையும் உடைய வாலைத்தேவியே! உலகத்திற்கெல்லாம் தாயாகின்ற பராசத்தியே! வடிவாம்பா! மாரித்தாயே! ஆரணி பூரணி அபிராமித்தாயே! உமது திருப்பாதங்களைக் கண்டு அஞ்சலிசெய்து எங்கள் நெஞ்சின்கண் எந்நாளும் இடைவிடாது உன்னைத் தோத்திரம் செய்தும் பணிந்திராநின்ற பஞ்சைகளும் உமது மைந்தர்களுமாகிய ரிஷிகள் பணிந்து நிற்கின்றோம். ஆனதால், ஓ அமிர்தத்துக் கொப்பாகியவளே! எங்களைக் காத்து ரக்ஷிப்பது உமது கடமையாகும் எ-று.

(வி-ரை) உலகமாதாவாகிய ஸ்ரீசத்திதேவியை மஹரிஷிகள் யாவரும் மேற்சொன்னவாறு துதித்து அஞ்சலியஸ்தர்களாய் ஓ என்தாயே! உலகரகஸ்யமாகிய சோதிட சாஸ்திரங்கள் பலவற்றுள் ஒன்றாகிய இரேகை சாஸ்திரத்தை அடியார்களுக்கு உபதேசித்தருளல் வேண்டும் என்று வணங்கும் ரிஷிகளைப்பார்த்து உமாதேவியானவள் கீழ்க்கண்டவாறு இரேகையினது விவரங்களை உபதேசிக்கிறாள். இதனாலும் இங்குகூறும் இரேகை சாஸ்திரத்தைச் சகலமுனிவர் தேவர் முதலியோர்களும் ஸ்ரீவாலைத்தேவியினிடமே கேட்டுத் தெரிந்துகொண்டனர் எனக் கூறவேண்டுவ தாகிறது. மற்றும் விவரங்களை இந்நூலின் ஏழாம்காண்டம் முதல் பாக்கக் காணலாம். 4

## இரேகை விவரம்

அகமான சுண்டுவிர லாம்பல்ரேகை
  ஆறுவரை மூன்றுவரை யமர்ந்துநிற்கும்
சகமான நுனிகளெல்லாங் குவண்டைபாண்டில்
  தனிப்பெறவே சுழிகளுடைச் சார்பதாகும்
மகமான புள்ளடிகண் மால்யிங்தென்னும்
  மருத்துவமா முக்கோண வட்டக்கீற்றும்
பகமான கார்க்கோடன் பகைவன்ரேகை
  பற்றியதா னேர்க்கீறு படர்ச்சிமாலே.

(இ-ள்) அவரவர்கள் அஸ்தங்களிலுள்ள விரல்கள் 5-ன் உள் சுண்டு விரலில் காணப்படுவது ஆம்பல்ரேகை எனப்படும். அவை எதுவெனில்? மேற்படி சுண்டுவிரலில் கணுக்கணுவாய் பார்க்குமிடத்து ஆறு கோடுகளாகவும், மூன்று கணுக்களாகவும் நிற்கும். மற்றும் மேற்படி சுண்டுவிரலின் நுனியில் வண்டுகளின் * இரக்கைபோல் தனித்தனி சுழிகளுடையதாய் நிற்கும். இதற்குள் புள்ளிபோன்று இருப்பதுமுண்டு. அவையே புதரேகை சந்திரரேகை எனப்படும். மேற்படி புள்ளிகளானது முக்கோணவடிவமுள்ளதாகும். மேற்சொன்ன சுண்டுவிரலிலேயே கார்க்கோடப் பகைவன் ரேகை என்பதும் உண்டு. முன்சொன்ன புதன் ரேகைக்கீழ் நிற்கும் ரேகையாகும்.

(வி-ரை) மேற்கூறிய செய்யுளால் அந்தந்த இரேகையினது விவரத்தையும் அவை எந்தெந்த இடத்தில் காணும் என்பதையும் கூறினார். மற்றும் பற்பல இரேகைகளின் விவரங்களையும் கீழ்வரும் செய்யுளால் விளக்கியுள்ளன.

---

* இரக்கைபோன்று என்பது வில்போன்று பல கீற்றுகள் உடையதாகும்.

மாலையென்ற கபாலவிந்து மணிகன்ரேகை
மகத்தான மால்விரலில் வட்டம்போலாம்
ஆலையென்ற விடக்கரத்தில் வலக்கரத்தில்
அணிவிரலிற் புள்ளடிக ளெட்டேயாகும்
காலையென்ற சங்கனுடையப் பந்தனங்கள்
தனித்திருக்குந் திருவைவென்ற ரேகைதானும்
வாலையென்ற வணிக்கண்டம் புள்ளடிகளென்ன
வாயுவிந்து மூன்றுண்டு சுழிதானென்றே.

(இ-ள்) ஓ முனிவர்களே! அவ்வவர்களது தலைவிதி என்று சொல்லத் தகுந்த இரேகைகள் பலவற்றுள் மணிகன்ரேகை என்பது ஒன்றாகும். மேற்படி மணிகன்ரேகை என்பது மால்விரல் என்று சொல்லும் நடுவிரலில் வட்டம்போன்று ஓர் இரேகை யிருப்பதுடன் வலக்கரம் இடக்கரம் என்னும் இவ்விரண்டு அஸ்தத்திலும் உள்ள அணிவிரல் என்னும் மோதிரவிரலில் எட்டு சிறிய புள்ளிகளும் அமைந்திருக்கும். மற்றும் சங்கபந்தனரேகை யென்பது அணிக்கண்டம் என்னும் மேற்படி மோதிரவிரலில் மூன்று புள்ளிகள் உண்டாகியிருக்கும். இதற்கு வாயுவிந்துரேகை என்றும் கூறுவர்.

(வி-ரை) இச்செய்யுளால் இரண்டுரேகையின் விவரங்களைக் கூறினார். எப்படியெனில், மணிகனரேகை என்பது இருகரத்திலும் உள்ள மோதிர விரலில் 8-புள்ளிகளும், நடுவிரல் வட்டம்போன்றிருப்பது. 'வாயு விந்து ரேகை' என்பது மேற்படி சுண்டுவிரலில் 2-புள்ளிகளாய் இருப்பதுமாகும். 6

ஒன்றான கார்க்கோடன் கவுதனமுங்கெண்டை
உயரவந்த ரேகையது நான்குண்டாகும்
நன்றானபேர்சுண்டன் வைவந்தனிரெண்டு
நாகரேஷ்டன்ரேகை கீற்று நான்கு
வன்றானவாள்பரிதி கடோற்கன் ரேகை
வாள்போன்று விரலெல்லா மேறிநிற்கும்
கன்றான பசுரேகை விடக்கண்ரெண்டு
கைநடுவே சதுர்கோணங் கலக்குமாலே.

(இ-ள்) ஓ முனிவர்களே! கார்கோடரேகை, கவுதனரேகை, கெண்டை ரேகை என்னும் மூன்றும் நான்குகீற்று ரேகைகளாக உயர்ந்து வளர்ந்து காணும். பேர்சுண்டரேகை, வைவிந்தரேகை என்னுமிவையிரண்டும் இரண்டு கீற்றுரேகைகளாய் உயர்ந்து வளர்ந்து செல்லும். நாகரேஷ்டரேகை என்பது நான்குகீற்று ரேகைகளாய் அமைந்திருக்கும். வாள்பரிதிரேகை, கடோர்க்கரேகை யென்னுமிரண்டும் எல்லா விரல்களிலும் வாள்போன்று ஏறிச்செல்லும் தன்மையுடையதாகும். பசுரேகை, இடக்கண்ரேகை என்னும் இரண்டும் உள்ளங்கையின் நடுப்பாகத்திலுண்டாகி நாற்கோண வடிவமாய் வளர்ந்து மால்விரல் என்னும் நடுவிரலிற்போய் கலக்கும் என்றும் அறிவராக எ-று. 7

மாலையென்ற மால்விரலிற் சம்பாரி
மயேந்திரம்போ லேறிநிற்கு நேர்கீறுகக்
காலையென்ற கோசரங்க ளாறிரண்டு
கண்டித்த கார்க்கோடன் குறுக்கேகோணம்
வாலையென்ற சுயங்கிருதி காப்பிலியின்பேர்
வால்போலச் சிறுகீறு யைந்துண்டாகும்
தலையென்ற வட்டகெஜ மெட்டுரேகை
தாளந்தத்தின் மேலே குய்யம்ரெண்டே.

(இ-ள்) சம்பாாறிரேகை என்பது மயேந்திரம் போன்று உயரமாயும், ஒரேகீற்று ரேகையாயும் வளர்ந்து சென்று நடுவிரலை யடையும். கோசர ரேகை என்பது 12 கீற்று ரேகைவடிவமாய் அமைந்திருக்கும். கார்க்கோடன் ரேகை என்பது அஸ்தத்தின் குருக்குபக்கமாய் கோணவடிவமாய் அமைந்து செல்லும். காப்பிலீரேகை என்பது வால்போன்று 5-சிறுசிறு ரேகைகளாய் அமைந்திருக்கும். வட்டகெஜமெட்டுரேகை என்பது அஸ்தக்குய்யம் என்னும் உள்ளங்கையின் கீழ்புறம் இரண்டுரேகைகளாய் அமைந்திருக்கும். 8

ரெண்டான ரேணுகைதா னுன்குமூன்று
ரேகைசிறு கீறதுதா னிரம்பவுண்டு
உண்டான குறுவரைகள் புள்ளடிகளென்ன
உண்டதுதான் கணக்கில்லை தள்ளிப்போடு
வன்றானகேசரியு மயேந்திரந்தொட்டு
வலக்கீறு யுள்ளவெல்லாங் கணக்கேயாகும்
நன்றான நான்முகனுக் குமையாள்சொன்ன
நான்மறைக ளொக்குமது நாட்டக்கேளே.

(இ-ள்) ரேணுகைரேகை என்பது உயர்ந்த கீற்றுரேகைகள் ஏழும், சிறுசிறு ரேகைகள் அமோகமாய் வளர்ந்திருப்பதுடன் ஒவ்வொரு விரல்களி லும் அனேக புள்ளிகளும் காணப்படும். ஆதலால், அதை கவனிக்க வேண் டுவதில்லை. கேசரிரேகை யென்பது மயேந்திரமாகிய நடுவிரலின் அடிப் பாகத்திலிருந்து எத்தனை கீற்று ரேகைகள் உள்ளனவோ அவை யாவுமாகும். ஓ மானிடர்களே! பிரம்மதேவனுக்கு உமையவள் கூறி இந்த ரேகை சாஸ் திரத்தை நான்கு வேதங்களும் ஒப்பியுள்ளன வாதலால் இன்னும் சொல்லு வேன் கேட்பாயாக எ-று. 9

நாட்டுகின்ற சுழிகளெட்டு மன்னரேகை
நலமான மயேந்திரந்தான் பனிரெண்டப்பா
கூட்டுகின்ற கிரீடியெட்டு தலைவனுக்கு
குறித்துரைப்பேன் மைவிந்த மாறதாகும்
வாட்டுகின்ற சக்கரமுங் குலிசரேகை
வாள்குடோரி சங்குசக்கிரங் குலிசமாமே
தாட்டுகின்ற பால்பசரி சடவன்சாடி
தகிகண்டி சிகண்டியெனும் ரேகைதானே.

(இ-ள்) ஓ மானிடர்களே! அன்னரேகை என்பது எட்டுபுள்ளிகளாயும், மயேந்திரரேகை என்பது 12-புள்ளிகளாயும், கிரீடிரேகை என்பது 8-புள்ளி வடிவமாயும், தலைவன்ரேகை என்பது நான்குபுள்ளிகளாயும், மைவிந்தரேகை என்பது ஆறுபுள்ளிகளாயும் அமைந்திருக்கும். இதனை சக்கரரேகை, குலிசரேகை, குடோரிரேகை, சங்குசக்கரக்குலிசரேகை, பால்ரேகை, பசரிரேகை, சடவன்ரேகை, சாடிரேகை, தசிசண்டிரேகை, சிகண்டிரேகை என்றும் கூறுவர் எ-று. 10

ரேகையெனுந் தாமரையின் குலிசஞ்சங்கு
　　நிகழ்ந்தவகை யாறுண்டு மூன்றுகோணம்
தாகவிடல் கார்க்கோடன் சமாலிசூலி
　　சார்பதத்தன் காப்பிலியன் சடாரிவீண்டன்
தோகைவிடன் மயிற்சாய லேழுபுள்ளி
　　தோள்விடலி நால்வரைகள் குறுக்கேயாகும்
ஆகவிட லெட்டிரண்டு முக்கவரின்ரேகை
　　ஆய்ந்துசொன்ன ரேகையி னறிவைப்பாரே.

(இ-ள்) ஒ மானிடர்களே! தாமரைக்குலிச சங்குரேகை என்பது ஆறு கீற்றுரேகைகளால் முக்கோணவடிவமாய் அமைந்திருப்பதாகும். மற்றும் கார்க்கோடன்ரேகை, சமாலிரேகை, சூலிரேகை, சார்பதத்தன்ரேகை, காப்பிலிரேகை, சடாரிரேகை, வீண்டன்ரேகை, தோகைவிடரேகை, மயில் ரேகை என்னும் இவையெல்லாம் ஏழு புள்ளிகளாய் அமைந்திருப்பதாகும். தோள்விடலிரேகை என்பது நான்குவிரல் கணுக்களிலும் குறுக்கு பக்கமாய் காணுவதாகும். முக்கவர்ரேகை என்பது 10 புள்ளி வடிவமாய் நிற்கும். இவை யாவும் சூக்ஷமாய் கூறியபடியால் இதனின்று வெகுவாய் ஆராய்ந்தறிந்து கொள்ளுவாயாக எ-று. 11

**மயேந்திரரேகையின் பலன்**

பாரென்ற மயேந்திரந்தான் மூன்றுண்டானால்
　　பக்குவமா மவன்றிசையைப் பண்பாய்ச்சொல்வேன்
நேரென்ற வவன்பிறவி யாறுகெர்ப்பம்
　　நிகழ்த்துமவ னவமாசம் பிறவியாகும்
கூரென்ற சிறுகுடியிற் பிறந்தமைந்தன்
　　குறிப்பாக மாலையிட்டுப் பிறந்தானப்பா
சாரென்ற குழவிபிதா வீட்டிலேதான்
　　சண்டையிட்டு மேற்கிலவன் போயிருப்பான்தானே.

(இ-ள்) இப்பூமியின்கண் உண்டாயுள்ள மானிடர்களது அஸ்தம் என்னும் கையில் 3-மயேந்திர ரேகை உண்டாயிருக்குமேயாயின் அவனது யோக முதலியவற்றை உண்மையாய் உரைப்பேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகன் 6-வது பிறவியாகும். மற்றும் இவன் தாய் கருப்பத்தில் 9-மாதங்களே இருந்து பிறந்தவனெனவும், மற்றும் இவன் பிறந்த இல்லமானது சிறுவீடென்றும் தான் ஜனித்த காலத்தில் மாலை என்னும் அடையாளத்துடன் பிறந்தவன் எனவும், இந்த ஜாதகனுடைய பிதா என்னும் தந்தையானவன் தனது சுற்றத்தாருடன் சண்டையிட்டு மேற்கு திசை சென்றிருப்பான் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) மயேந்திர ரேகை என்பது தனது உள்ளங்கையிலுள்ள ஆயுள் ரேகைக்கும், தனரேகைக்கும் மத்தியில் கன்னக்கோல் போன்று இருப்பதாகும். இதற்கு மகரரேகை என்று மற்றொரு பெயரும் உண்டு. உதாரணமாய் இந்த மயேந்திர ரேகை உண்டானவர்கள் தன் பிதா இல்லத்தைவிட்டு வெளிதேசம் அல்லது கிராமங்களில் சென்று வாழ்வான் என்பது பொதுவிதியாதலாலும், இந்த ரேகையானது தனரேகை அல்லது குடும்ப ரேகைக்கு இடையிலேயே உண்டாகுமாதலால் இந்த ஜாதகனின் பிதாவே வெளியூர் சென்று ஜீவிப்பானெனக் கூறுவாராயினர்.

பிறவி ஆறு என்றனர். ஏனெனில்? முன்சொல்லிய குடும்பரேகையானது ஆயுள்ரேகைக்கு இடையில் உண்டாவது என முன்பே கூறியுள்ளன. அவ்வாறு குடும்ப ரேகைக்கு இடையிலேயே இந்த மயேந்திர ரேகை அல்லது மகரரேகை உண்டாகும். இந்த ரேகையானது கன்னக்கோல் போன்று ஆறு முருக்குடையதாகும். ஆதலால் பிறவி ஆறு என்றனர்.

நிகழ்த்துமவ னவமாசம் பிறவியாகும் என்றதால் மேல்நாட்டவராலும், நம் நாட்டவராலும் கர்ப்போற்பத்தி சோதனையின்படி கருதரித்த 240-ஆம் நாள்முதல் பின் அறுபது நாட்களுக்குள் எந்த நாளிலேனும் ஜனனமாகலாம் என வரையறுத்துக் கூறியுள்ளனர். இந்த ரேகையானது ஆயுள்ரேகைக்கு இடையிலிருப்பதாலும், இச்செய்யுளுக்கு இடையே இவனது ஆயுளையும் கூறப்போவதாலும், 9-மாதம் கெற்பத்தில் பிறந்தவனது ஆயுளைப் பின்வரும் செய்யுளாலறிந்து கொள்ளவேண்டும் என்னும் சூக்ஷும கருத்தை யொட்டியே இங்கு 9-ஆம் மாதத்தில் பிறந்தவன் எனக் கூறிவிடுத்தனர். 'குறிப்பாக மாலையிட்டுப் பிறந்தானப்பா' என்றது பிரசவ கால அடையாளத்தைக் குறித்ததாகும். இதனை கணிதசாஸ்திர வாயிலாய் இன்னும் விபரிசையாயும், விவரமாயும் கூறமுடியும். இங்கு மாலையிட்டுப் பிறந்தோன் என்பதை பிறந்த காலத்தில் ஓர் அடையாளத்துடன் பிறந்தான் என்று பொதுவாகவே கூறவேண்டும். 'மாலை' என்பது பிறந்த சிசுவின் கழுத்தில் தோன்றுதல். இந்த மாலை என்பதை கணிதசாஸ்திரங்களில் சனி-செவ்வாய்-இராகு-கேது இவர்களைக்கொண்டு கூறுவர். ஆனதால் இந்த மயேந்திர ரேகையும், ஆயுள்ரேகையாகிய சனிரேகையின் இடையில் இருப்பதால், மேற்படி சனியுடைய சேர்க்கை பலத்தால் கூறினாரென்றே கருத இடமாகும். இவ்வாறான விஷயங்களை மிக்க ஆராய்ச்சியுடன் கூறுவது நலம். இந்த ஜாதகனது பொது லக்ஷணங்களினது விவரம் கீழ்வரும் செய்யுளாலறிக.

12

இருக்கவே யிவன்பிறந்த நாலாமாண்டில்
இல்லமதிற் றீவிழுந்து வறுமைபட்டான்
பருக்கவே தாய்தந்தை மனிதர்மக்கள்
பக்குவமா யூர்வலிசை யோடுவார்கள்

## படம் நெ-2.


மயேந்திரரேகை


சுவர்ன சம்பாரி ரேகை


கிரீடிரேகை


வேதரேகை


திரிகோணரேகை


விஷ்கம்பரேகை


சூலரேகை


குடோரிகண்ட ரேகை


குலிசரேகை


வாள்ரேகை


காப்பிலிரேகை


மகரரேகை


பாஞ்சாலிரேகை


சுக்கிரரேகை


கீத்துரேகை


ஆயுள்ரேகை


கோவுரேகை


தனரேகை

வித்யாரேகை


பஞ்சவர்னமாளிகைரேகை


கடகரேகை


குடைரேகை


தான்னியரேகை


புஷ்பரேகை


அன்னரேகை


ஸ்தம்பரேகை


கோபுரரேகை


செடிரேகை


கூபரேகை

திருக்கவே பிதாவினிட யோகந்தன்னைத்
திரட்பரிசு பொருள்பணங்கள் தேடுவான்பார்
தருக்கவே தாய்மாம னுடன்தைப்பெண்கள்
தன்பிறவிப் பெண்குழந்தைச் சாவதாமே.

(இ-ள்) மேலேகூறிய மயேந்திர ரேகையுடன் ஜனித்த ஜாதகன், தான் ஜனித்த நான்காம் வயதில் தான் வாழத்தகுந்த இல்லத்தில் தீப்பட்டு அதனால் மகா கஷ்டங்களை அடைந்தான் எனவும், மற்றும் மேற்படி நான்காம் ஆண்டிலேயே தனது தாய்-தந்தை-சுற்றத்தார் முதலியவர்கள் தனது சுயக்ஷேத்திரத்தைவிட்டு அன்னியதேசம்போக நேரும். பிற்காலம் தன் பிதாவினுடைய யோகமாகிய செல்வத்தை இவன் மிக்க சிரமத்துடன் அடைவானெனவும், முன்சொல்லிய 4-ஆம் வயதிற்குப்பின் இந்த ஜாதகனின் தாய்-அம்மான்-உடன்பிறந்த சகோதரர்கள் சிற்றன்னை முதலியவர்கள் மரணமாவார்கள் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) மயேந்திர ரேகை என்பது ஆயுள்ரேகைக்கும் தனரேகைக்கும் இடையிலுள்ளதென முன்பே கூறியுள்ளேன். இவை ஆயுள்ரேகைக்கும், தனரேகை என்னும் குடும்பரேகைக்கும் இடையில் உள்ளதாயினும் இவ்விரண்டு ரேகையையும் கத்தரித்தாப்போலவே காணப்படும். ஆதலால் தனது குடும்பத்தவரான தாய்-தந்தை-மாமன்-உடன்பிறந்தோர் முதலியோருக்கு தோஷத்தை உண்டுபண்ணும் என்னும் கருத்தையொட்டி,

"தருக்கவே தாய்மாம னுடன்தைப் பெண்கள்
தன்பிறவி பெண்குழந்தை சாவ தாமே"

என்றனர். தனரேகையினது இடையில் கலந்திருப்பதால் தன் பிதாவைப் பற்றிய விஷயங்களைக் கூறுவதினும், தனது தந்தையினது செல்வத்தையடைவான் என்னும் காரணத்தையும் கூறியுள்ளார். இனி பின்வரும் பலன்களைக் கூறுவார்.

13

ஆகுமடா இவனுக்கு வயதோர்பத்தில்
அரிதான மாரிவந்து தயங்கினன்பார்
வாகுமடா பதினாறி லவன்தோஷங்கள்
வந்துதான் தீருமடா வகையதாக
ஏகுமடா பதினெட்டாம் வயதின்மைந்தன்
இயலாக குடோரிகெண்ட நீராலுந்தான்
தோகையெனுஞ் சப்தமமுமிரண்டில் மைந்தன்
சொற்பெரிய மாதாவு மிறப்பாளென்னே.

(இ-ள்) மற்றும் இந்த மயேந்திர ரேகையையுடைய ஜாதகன் ஜனித்த பத்தாம் வயதில் எவரும் பயங்கொள்ளத்தகுந்த மாரிதோஷம் என்னும் வைசூரி வார்தையால் சிலகஷ்டங்களை யடைவான் எனவும், இதுவுமன்றி தான் ஜனித்த பதினாறுவது வயதில் நவக்கிரகதோஷத்தால் கஷ்டமுண்டாகி நீங்குமெனவும், தான் ஜனித்த பதினெட்டாம் வயதில் வாகனங்களாலும்

ஜலத்தாலும் பிரபலகெண்ட முண்டாகி அவை நீங்குமெனவும், இந்த ஜாதகன் ஜனித்த 9-ஆம் வயதில் இவனது அரியதாயாகிய மாதாவானவள் இறந்துபோவாள் எனவும் கூறுக எ-று.

(வி-ரை) 'மாரிவந்து தயங்கினனென்பார்' என்றது தன் வயது 10-க்குப் பின் வரும் வைசூரி வாதையால் மிகுந்த சிரமப்படுவான் என்பது கருத்து. வைசூரியைக் கொடுக்கத்தகுந்த கிரகங்கள் இராகு கேது வென்பது சாஸ்திர சம்மதம். இராகு கேதுக்களுக்கு அஸ்தரேகை நூற்களில் இன்ன இட மென்று கூறாது சனிமேட்டையே கூறியிருத்தலாலும், மேற்படி சனிரேகை யாகிய ஆயுள்ரேகையில் மேற்சொன்ன மயேந்திரரேகையானது கலப்பதா லும், இந்த ஜாதகனுக்கு வைசூரி வாதையுண்டு எனக்கூற இடமுண்டாயின. மற்றும் 9-ஆம் வயதில் தாய் மரணம் என்றது பிறந்த காலத்தில் தனது அஸ்தத்திலுண்டாகிய மயேந்திரரேகையானது சுமார் 9-ஆம் வருடத்தி லேயே தனரேகையாகிய குடும்பரேகையை அடையும். ஆதலால், மேற்படி 9-ஆம் வயதில் தன் குடும்பத்திற்கு ஆதாரவாயிருக்கும் தாயைக்கொல்லும் என்னும் உட்கருத்துகொண்டு இவ்வாறு கூறினர் எனக்கொள்க. 18-ஆம் வயதில் சில கண்டாதிகண்டங்களைக் கூறியதும், மேற்படி ரேகையானது ஆயுள்ரேகையைப் பிடிக்கும் காலமானதால் அவ்வாறு கூறினர் எனக் கொள்க. 14

என்னவே யிவனுக்கு யோகவாழ்க்கை
இடராக வந்ததென்றே யியம்புவாய்நீ
சொன்னதோ ரிருபத்தோ ராண்டிலேதான்
சுகமாக வேள்வியது முடியுமப்பா
கண்ணியதோர் யோகமதாற் பணமும்வீடும்
காசினியிலாச்சுதடா கனமாய்த்தானே
உன்னியதோ ரிவனுக்கு வயதோமைந்தா
உகந்துநான் சொல்லிவிட்டே னெழுபதாமே.

(இ-ள்) மற்றும் பின்வரும் யோக பாவங்களைக் கூறுமிடத்து தன் வாலிப வயதின் பிற்காலங்களில் தனது போக சுகங்கள் பல இடையூறு உண்டாகுமென்றே கூறவேண்டும். மற்றும் தான் ஜனித்த 26-ஆம் ஆண்டில் தனது வாழ்க்கைத் துணைவியாகிய மனையாள் வந்தடைவாள். (அவையாவன சுபசோபனாதிகள் முடியும்) எனவும், மேலேசொன்ன தனது மனையாளாகிய பெண்ணால் பல யோகங்களும், பணம்-வீடு முதலி யனவும் மிக்க பெருமைபடத்தகுந்த விதமாய் நடக்கும். மற்றும் இவனது ஆயுள் விவரங்களைக் கூறுமிடத்து தான் ஜனித்ததுமுதல் 70-வருஷங்கள் வரையில் ஜீவித்திருப்பானெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் இந்த ஜாதகனின் யோகமானது பொது வாய்ச் சில இடையூறுகளுக்கு இடங் கொடுக்குமென்றே கூறினர். ஏனெனில்? இந்த ரேகையானது தனரேகையைக் குறுக்கிட்டு அப்பால்

செல்லுமாதலால் மேற்படி தனரேகையைக் குறுக்கிடும் காலம் தனது யோகம் முதலியவைகளுக்குச் சில இடையூறுண்டாகுமென்றும், அதன் பின்பே இவனுக்கு சுபசோபனாதிகள் நடக்குமென்றும், இந்த ரேகை யானது தனரேகையைத் தாண்டி அப்பால் செல்லுங்காலம் இந்த ஜாதகனின் மனைவியால் பொன்-பொருள்-பூஷணம் முதலியன அனேகமாய்ச் சேரு மென்றுங் கூறியுள்ளார். மற்றும் வயது விஷயமானது மேற்படி ரேகை யானது ஆயுள் ரேகையில் வந்து கலப்பதால் வயது தீர்க்கம் எனக் கூறிய தாகும். இனி மற்றுமுள்ள ரேகைகளின் விவரங்களைக் கூறுவார். 15

சுசீவர்னன் சம்பாரி இரேகைகளின் பலன்

ஆமெனவே சுசிவர்னன் சம்பாரி
ஆறுவரை யிருக்குமெனி லவன்பலன்கேள்
தாமெனவே முப்பத்தாறுண்டுக்குள்ளே
தலைமகன்று னிறந்திடுவான் வியாதியாலே
போமெனவே பதினெட்டாம் வயதின்மைந்தா
பொல்லாத ராஜபகை யுண்டுகண்டாய்
வேமெனவே பதினாறும் வயதின்மைந்தா
வீட்டினிலே யனல்வீழு மெனச்சொல்வாயே.

(இ-ள்) அவரவர்கள் தங்கள் தங்களது அஸ்தங்களில் சுசிவர்னசம்பாரி என்னும் ரேகையானது ஆறுகோடுகளாக அமர்ந்திருக்குமேயாயின் அந்த ஜாதகனது பொதுப்பலனைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில், அவன் ஜனித்த வயது 36-க்குள் அவனது பிதாவானவன் இறந்துபோவான். அதிலும், அவன் மகாகொடிய வியாதியால் மரிப்பான் எனவும், மற்றும் தன் வயது 18-ல் அரசர்களால் பொல்லாத பகையுண்டாகு மெனவும், முன்பு கூறிய 16-ஆம் வயதில் தனது இல்லத்தில் தீபிடிக்குமெனவுங் கூறுக எ-று.

(வி-ரை) மேற்கூறிய சுசிவர்ன சம்பாரிரேகை என்பது ஆறுகோடுகளை யுடையது. அவை விசேஷமாய் தனது உள்ளங்கையில் தன் கட்டைவிர லுக்குக் கீழ்பாகத்தில் இருப்பதாகும். இந்த கோடுகள் ஆறுகோடுகளாய் அமைந்திருப்பதால் அதற்கு அலகுரேகை யென்றும் பெயராகும். மேலே சொன்ன ரேகையிருக்கும் இடத்திற்கு சூரியமேடு என்று பெயராதலால் மேற்படி சூரியன் பிதுருகாரகன் என்னும் பெயரிருப்பதாலும், இந்த ஜாத கன் ஜனித்த 36-ஆம் ஆண்டில் பிதா மரிப்பான் எனவும், மேற்படி இரேகை யானது வளர்ந்து குடும்பரேகையைப் பிடிக்க சுமார் பதினாறு வருஷங்க ளாகுமாதலாலும், மேற்படி ரேகையானது சூரியமேட்டிலிருந்து ஆரம்பித்துச் செல்வதாலும், மேற்படி சூரியனுடைய குணத்தைக்கொண்டு பதினாறும் வயதில் தனது வீட்டில் தீப்பற்றி எரியும் எனவும், மேற்படி தனரேகைக்கு மத்தியில் இந்த ரேகை பிடிக்க 18-வருஷங்கள் செல்லும். ஆதலால், அக்காலம் ராஜபகையுண்டாகு மெனவுங் கூறினார். மற்றுமுள்ள விவரங் களைப் பின்வரும் செய்யுளால் அறிக. 16

சொல்லவே யின்னமொரு சுருதிமைந்தா
சொற்சூத்திர மின்னமுமொன் றுண்டுகேளாய்
நல்லவே யிவன்பிறந்த நாலாமாண்டில்
நன்மாரி கண்டமொன்று வந்ததப்பா
அல்லவே யிவன்பிறந்த ஆறுமாண்டில்
அடைவாகப் பிதாவுந்தான் றனமெடுத்தான்
ஒல்லையிலா நாய்கடிக்கு மாடுபாயும்
ஓதமுள்ள ரோகமிவ னுடலிலாச்சே.

(இ-ள்) மேலேசொன்ன சுசிவர்னன் சம்பராரி இரேகை தனது அஸ்தத்திலிருக்கப் பிறந்தவனுக்கு உண்டாகிய பலாபலன்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இவன் ஜனித்த நான்காவது ஆண்டில் மாரிபீடை என்னும் வைசூரியால் கெண்டமுண்டாகும். அதுவன்றி இவன் பிறந்த ஆறுவது வருடத்தில் இவனது பிதாவுக்கு அளவிறந்த செல்வம் முதலியன உண்டாகும். மற்றும் மேலேசொன்ன ஆறுவது ஆண்டில் இந்த ஜாதகனை நாய் கடிக்கும் எனவும், மாடு முதலிய வாகனங்களால் கெண்டமுண்டாகும் எனவும், எந்நாளும் துன்பத்தைத் தரத்தகுந்த ரோகம் இவனது உடலில் உண்டாகும் எனவும் கூறுக எ-று.

(வி-ரை) மேலேசொன்ன சுசிவர்ன சம்பராரி ரேகை என்பது கட்டைவிரலின்கீழ் உள்ளங்கையில் இருப்பதென முன்பே கூறியுள்ளேன். மற்றும் அவை சூரிய மேட்டிலிருந்து தொடர்ந்து செல்லுமெனவும் கூறியுள்ளேன். இவ்வாறு தொடர்ந்து செல்லும் ரேகையானது நான்காம் ஆண்டுள் ஆயுள் ரேகையை வந்தடையும். ஆதலால் அக்காலம் கெண்டமுண்டாகுமெனவுங் கூறியுள்ளார். அவை எவ்வாறான கெண்டமெனின் வைசூரி முதலியவற்றாலெனவும் கூறினார். ஏனெனில்? சூரியனிடமிருந்து செல்லும் ரேகையானது சனிமேட்டை வந்தடையும்போது மேலேசொன்ன வைசூரி முதலிய பீடைகள் உண்டாகுமென கணித சாஸ்திரத்திலும் கூறியதாலென்க. இதுவன்றி இவன் பிதாவுக்கு மேற்கூறிய ஆறும் ஆண்டில் தனம் கிடைக்கும் என்றது அக்காலம் சூரியரேகை சனியுடன் சம்பந்தப்படுவதாலென்க. ரோகம் உண்டாகும் என்றது பொதுவாய் ரோகம் உடையவன் என்றும் கூறயிடமுண்டு.

ஆச்சப்பா நாற்பத்தாறுண்டுக்குள்ளே
அருள்பெருகும் புதுமனைதா னெடுப்பான்பாரு
வாச்சப்பா வோர்பெண்ணாற் பணமுங்காசும்
வந்துமே கூடுமென்று வகையாய்க்கூறு
பேச்சப்பா வன்பத்தா றுண்டிலேதான்
பிரியமாய்ப் பூமியது வாங்குவான்பார்
காச்சப்பா மயேந்திரமுந் தானுண்டானால்
கண்டதொருபிள்ளைகளோ ராறுண்டாமே.

(இ-ள்) இதுவுமன்றி இந்த ஜாதகன் ஜனித்த 46-வயதுக்குள் பெருமை பெற்ற புதுமனையொன்று கட்டுவதோடு நூதனமாகிய ஓர் பெண்ணால் பணம்

காசு முதலியவை கூடுமெனவும் திண்ணமாய்க் கூறுவதோடு தான் ஜனித்த 56-வது ஆண்டில் தான் தனது சுயார்ச்சிதமாய் பூமி முதலியன வாங்குவான் எனவும், மேலே சொன்ன இரேகையுடன் மயேந்திரரேகையும் உண்டாகி இருக்குமேயாமானால் இந்த ஜாதகனுக்குப் புத்திரவர்க்கங்கள் ஆறு உண்டாகுமெனவுங் கூறுக எ-று.

(வி-ரை) 'மயேந்திரரேகை' என்பது ஆயுள் ரேகையாகிய சனிமேட்டிற்கும் தனரேகைக்கும் மத்தியிலுள்ள தென்றும் இங்கு கூறும் சுசிவர்னன் சம்பாரிரேகை என்பது கட்டைவிரலின் கீழிருப்பதென்றும் கூறியுள்ளேன். இச்செய்யுளில் "மயேந்திரமுந் தானுண்டானால் கண்டதொரு பிள்ளைகளோராறுண்டாமே" என்றதால் மேற்கூறிய சுசிவர்ன சம்பாரிரேகையுடன் மயேந்திரரேகையும் கலக்குமாயின் பிள்ளைகள் ஆறு என்றதே இச்செய்யுளின் முக்கிய கருத்தாகும். இதுவன்றி, இந்த செய்யுளின்படி மேற்கூறிய இரண்டுரேகைகளும் ஓரிடத்தில் கலக்குமேயாயின் அந்த ஜாதகனுக்கு ராஜயோகமுண்டென்றும், பூரண ஆயுளையுடைய புத்திரர்கள் அனேகரைப் பெறுவார் எனவும், நாற்கால் ஜீவன்களை அதிகமாய் உடையவன் எனவும் கூறுவதும் நூற்கள் அநேகம் பெண்களால் பணமும் காசும் சேரும் என்றது தனது மனைவியால் பொருள் முதலியன உண்டாகும் என்பதே இச்செய்யுளின் முக்கியகருத்தாகும். இங்குகூறிய புத்திரர் மூலவிஷயங்களைப் பின்வரும் செய்யுளால் விளக்குவார். 18

உண்டான பிள்ளைகளி லாணோநான்காம்
உற்பாதபெண்பிள்ளை யிரண்டுண்டாகும்
நன்றாகக் குழவியைந்தே நிலைக்குமப்பா
நயமாகக் கருணையுண்டாய் நடந்துகொள்வார்
குன்றாம லிவன்பிறந்த ஆதிவாரம்
குற்றமில்லா விரேவதி யிரண்டாங்காலாம்
மன்றான மேடமே காதசியிற்றானே
வரிசையாய்ப் பிறந்ததிவன் வண்மைகூறே.

(இ-ள்) முன்சொல்லிய புத்திரவர்க்கங்கள் 6-ல் ஆண்பிறவி-4, பெண்பிறவி-2 எனவுங் கூறுவதோடு மேற்சொன்ன ஆண்பெண் 6-க்குள் 5-பிறவிகளே நிலைக்குமெனவும், மேற்படி புத்திரவர்க்கங்களே மிக்க செல்வமுடையதாயும், ஆயுளுடையதாயும், கருணையுடையதாயும் நடக்குமெனவும் கூறுக, மற்றும் இந்த ஜாதகன் ஜனித்த வாரமானது ஆதிவாரமென்னும் ஞாயிற்றுக்கிழமை எனவும், இரேவதி நக்ஷத்திரம் இரண்டாம்பாதம் எனவும் இராசிகளில் மேடராசி என்றும், ஏகாதசி கூடிய சுபதினத்தில் பிறந்தானெனவுந் திண்ணமாய்க் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவன் ஜனித்த வாரம்-நக்ஷத்திரம்-திதி-ராசி முதலியவற்றைக் கூறியுள்ளார். ஏனெனில்? சூரியமேட்டில் இருந்து செல்லும் ரேகை ஆதலாலும், ஆயுள் ரேகையைக் கடந்து சென்று தனரேகையை அடைவதாலும் கூறினர் எனக்கொள்க. மற்றும் புத்திர

வகைகளை ஜனிப்பது ஆறு என்றும் 4-ஆண்களும், 2-பெண்களும் உண்டாயினும் நிலைத்திருப்பது 5-எனவும் கூறிமுடித்தார். மேற்படி 5-ல் ஆண் பெண் எவ்வளவு என்று கூறவில்லையாதலால் நாம் நமது ஆலோசனைக்குத் தக்கபடி புத்திர புத்திரி வர்க்கங்களைக் கூறவேண்டுவதே முக்கியமாகும். இவை ஆண் கிரகரேகை 2-ஐக் கடந்து பெண் ரேகையாகிய சுக்கிரன் மேடென்னும் தனரேகையைக் கடந்து செல்லும் தன்மையையுடையதாதலால் ஆண்-4, பெண்-1, நிலைத்திருக்குமென்றும் நிலைகூற இடமுண்டாகும். மற்றும் இவனது யோகத்தையும் ஆயுள் விவரத்தையும் பின்வரும் செய்யுளால் அறிக. 19

கூறுவே மோரறுபத் தைந்தாமாண்டில்
குற்றமுண்டு வியாதியாற் கண்டமுண்டு
பேறுன பெண்ணாலே வந்தசாபம்
பிரதிஷ்டை யீசனுக்குப் பேணிச்செய்தால்
தீருமே பிணிதீர்ந்த பின்னோரைந்தில்
தீர்க்கமாய்ப் பிணியின்றி யிருந்துமைந்தா
ஆரவே குழவிகட்கு விவாகஞ் செய்து
அன்னவனும் வாழ்ந்திருப்ப னளவாய்கூறே.

(இ-ள்) மற்றும் இந்த ஜாதகன் ஜனித்த 21-வது ஆண்டில் குற்றத்தைத் தாத்தகுந்த வியாதியால் கஷ்டமுண்டாகும் எனவும், அவை எக்காரணத்தால் எனில்? பெருமையைப்பெற்ற பெண் ஒருவளால் வந்த சாபம் எனவும், அவை நீங்க சிவாலயத்தை பிரதக்ஷணம் செய்து அபிஷேகாதிகள் முதலியன நடத்திவைத்தால் தனக்குண்டாகிய பிணியாவும் நீங்குமெனவும், தன் வயது 26-க்குப் பின் சகல தேகசுகங்களுடன் இருப்பானெனவும், அதன்பின் தனது புத்திரவர்க்கத்தவர் முதலியவர்களுக்கு விவாகம் செய்வித்து சகல சௌக்கியங்களுடன் வாழ்ந்திருப்பானெனவுங் கூறுக எ-று.

(வி - ரை) "ஓரறுபத்தைந்தாம் ஆண்டு" என்று கூறினமையால் 6+10+5=21 எனக் கூறலாயிற்று. மேற்கூறிய 21-ஆம் ஆண்டில் தீமையைத் தாத்தக்க வியாதியுண்டு என்று கூறினதால் இங்கு கூறும் சுசிவர்ன சம்பாரிரேகை என்பது தன் வயது 21-ல் ஆயுள் ரேகையைக் கடந்து செல்லும். ஆதலால், அக்காலம் கெண்டாதி கெண்டங்களைக் கூறப்பட்டது. அவை ஓர் பெண்ணால் வந்ததாதலால் அந்த தோஷம்நீங்க ஈசனுக்குப் பிரதிட்டைசெய்தும், அபிஷேகாதிகள் முதலியன நடத்தியுமிருக்க அவனுக்குண்டாகிய நோய் முதலியன நீங்கி பூரண ஆயுளுடன் இருப்பதோடு பிற்கால வாழ்வில் களத்திரபுத்திர சுபசோபனாதிகளும் நடக்குமென்பது சாஸ்திரக் கருத்து.

மற்றும் இந்த ரேகையினது வித்தியாசங்களைப் பின்வரும் பல ரேகைகளின் வித்தியாச பல பாவகங்களால் நன்கு அறிய ஏதுவாகும். இந்த ரேகைக்குப் பலபெயர்கள் பலர் கூறிவருவதால் இதனது வித்தியாசங்களை வெகு சூக்ஷமமாய் அறிந்துகொள்ளுதல் வேண்டும். 20

### மயேந்திரரேகை நான்கின் பலன்

கூறவே மயேந்திரந்தா னுண்டானால்
குணமாக வதன்பலனைக் கூறக்கேளாய்
நேரவே யிவன்பிறந்த யோகவாழ்க்கை
நிச்சயமாய்ச் சொல்வதற்கு நிலைமைமைந்தா
காரவே யிவன்றனக்குக் காதன்மைந்தர்
கண்டிதமாய்ப் பதினோர்பே ராவாரப்பா
பார்தனிலே மைந்தர்களி லிவனேமைந்தன்
பக்குவங்கே ளிரேவதியின் முதற்காலன்றே.

(இ-ள்) முன்கூறிய மயேந்திரரேகை என்பது நான்காக உண்டாகுமேயானால் அந்த ஜாதகனின் பலாபலன்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகனின் பிறவி-யோகம்-சுகம் முதலியனவற்றை நிச்சயமாய்க் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகனுக்கு மிக்க காதலுடன் பிறந்த புத்திரபுத்திரிகள் மொத்தம் 11-பேர் ஆகும். இந்த ஜாதகனே மிக்க சிரேஷ்ட புத்திரனாகும். மற்றும் இந்த ஜாதகன் இரேவதியின் முதற்காலில் பிறந்தவனெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) மயேந்திரரேகை என்பது அவரவர்களின் உள்ளங்கையிலுள்ள ஆயுள்ரேகைக்கும் தனரேகைக்கும் மத்தியில் கன்னக்கோல் போனிருப்பதென முன்கூறிய 21-ஆம் செய்யுளின் விருத்தியில் கூறியுள்ளேன். இங்கு மேற்படி மயேந்திர ரேகையானது கன்னக்கோல்போன்று நான்கு ரேகைகளா யிருப்பதால் யோக முதலியவற்றைக் கூறுவாராயினர். எப்படியெனில்? இவனுக்கு பிறந்த பிறவி 11-என்னும் அவற்றுள் இவனே ஆண் எனவுங் கூறினார். ஏனெனில்? தனரேகை என்பதையே குடும்பரேகை என்றும் கூறுதலால் மேற்படி மயேந்திர ரேகையானது நான்காய் குடும்ப ரேகையில் கலக்கும். ஆதலால் தன் உடன்பிறந்த குடும்பம் 11-என்னும் கருத்துகொண்டும் மேற்படி ரேகையானது மேற்சொன்ன இரு ரேகைகளுக்கும் மத்தியில் தனித்திருந்து பிற்காலத்தில் வளர்ந்து மேற்சொல்லிய தனரேகையை அடையுமாதலால் இந்த ஜாதகனே சிரேட்டன் என்றும் ஆண் என்றும் கூற இடமுண்டாயினவென்றுங் கருத்தாகும். 21

காலென்ற விவன்பிறவி யிருமனைக்குள்
கருணைசேர் கீழ்வாசன் மேல்வாசலாகும்
நாலென்ற கதிரவனு ருதயந்தன்னில்
நலமாகப் பூமியைத்தான் பார்த்துவந்தான்
பாலென்ற விவன்பிதாவுக் கிவனேமைந்தன்
பக்குவமா யிவனுக்குப்பாலனென்றே
ஓலென்ற விவன்றனக்கு மக்கண்மூன்றும்
உதவியில்லை பிஞ்சிற்போ யுதவுமொன்றே.

(இ-ள்) மற்றும் இந்த ஜாதகன் பிறந்த மனையானது இரண்டுமனை ஒன்று சேர்ந்தாப்போ லிருக்குமெனவும், இவன் ஜனித்த வீட்டின் முன்பின் வாயி

வானது கிழக்கு மேற்காய் அமர்ந்திருக்கு மெனவும், மற்றும் இந்த ஜாதகன் ஜனித்த நேரமானது சூரியோதயத்தில் தலை முன்னுகப் பிறந்தான் எனவும், இந்த ஜாதகனே இவன் பிதாவுக்கு பூரண ஆயுளுடையவனுய் நீடித்திருப்பவனென்றும், இந்த ஜாதகனுக்கும் புத்திரவகை ஒன்றே எனவும், இந்த ஜாதகனுக்கு மொத்த புத்திரர்கள்-3 என்ருலும், 2-குழவிகள் பிறந்த சில நாளைக்குள் இறந்துபோ மெனவும், ஒன்றே நீடித்து நிலைக்குமெனவுங் கூறுக எ-று.

(வி-ரை) 'இருமனைக்குள்' என்றது இந்த ஜாதகன் ஜனனமான மனையுடன் மற்றுமொரு கட்டடமும் தொகுத்து கட்டப்பட்டிருக்குமெனவும் கூற வேண்டும். 'நலமாக பூமியைத் தான்பார்த்து வந்தான்' என்றதால் சிசுக்கள் ஜனன மாகும்போது சில தலை முன்னதாயும், சில கால் முன்னதாயும், சில தலைகால் என்னும் இரண்டும் பூமியைப் பார்த்து ஜனிப்பதுண்டு. இதனை கணித சாஸ்திரத்தில் சிரோதயம், பிண்டோதயம், சிரபிருட்டோதயம் என்று கிரக ஆராய்ச்சியைக்கொண்டு கூறுவதுண்டு. அவ்வாறே இரேகை மூலமாய் ஆராய்ச்சி செய்கையில் சிரம் முன்னதாய் பூமியிலுதித்தன என்று பிரசவ அடையாளம் கூறப்பட்டன. மற்றும் புத்திரர் 11-ல் இந்த ஜாதகனே நிலைப்பான் என்பதும்,இந்த ஜாதகனுக்குப் பிறக்கும் ஆண்குழவிகள் 3 ல் ஒருவனே நிலைத்திருப்பான் என்பதும் கவனிக்கத்தக்கது. இதனை பின் வரும் செய்யுளால் அறிக.

22

ஒன்றுன கார்த்திகையிற் கெற்பமானுல்
ஓகோகோ வாறுநாள் கெற்பமாகி
உண்டான விவன்பிறந்த மனையிற்றுனும்
உறுதியுள்ள செல்வனுமா யுயர்ச்சியுண்டாம்
கொண்டான விவன்பிறந்த வேழாமாண்டு
குடிமனையும் வீடேகக் கூறலாகும்
நன்றுன பதின்மூன்றின் மாரியோகம்
நலமுள்ள வுடற்பிறவி நாதனுமே.

(இ-ள்) இவன் தனது தாய் கருப்பத் துதிக்கையில் கார்த்திகை நக்ஷத்திரமாகும். மற்றும் பிண்ட பையை அடைய ஆறு நாட்களாயினவென்றும், இந்த ஜாதகன் எந்த மனையிற் பிறந்தானே அந்த மனையில் மிக்க செல்வமுடையவனுகியும், பிரபல முடையவனுகியும், வாழ்வானுயினும், இவன் பிறந்த ஏழாம் வயதில் தான் குடியாயிருந்த மனையும், மற்றுமுள்ளவைகளும் தன்கைவிட்டேகும். ஆனுலும் தன் வயது 13-ல் மாரி என்னும் மழைக் கொப்பாகிய பிரபல யோகமுடையவனுயும், மேற்படி 13-ஆம் வயதில் தன் உடன்பிறந்தவர்களுக்கெல்லாம் மிக்க சிரேட்டனுய் வாழ்வான் எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் உட்கருத்தாவது என்னவெனில்? இவன் கருதரித்த காலம் கார்த்திகை யானதாலும், 6-நாட்களுக்குப் பின்பே கருப் பையில் உதித்து வளர்ந்ததாலும், இவனுக்கு உண்டாகிய பிறவி எல்லோரையும் தன் வயது 13-க்கு நாசம் செய்வித்து தானே அக்குடும்பத்தில் மிக

சிரேட்டமுள்ளவனும், யோகமுடையவனும் வாழ்வதோடு தன் வயது 7-ல் தன்சுய இல்லத்தையும் பாழாக்குவான் என்றும் 13-ஆம் வயதிலிருந்தே இவனுக்கு பூரணயோகம் என்றும் கூறலாம். இவை எதனாலெனில்? கற்போர்ப்பத்தியின் காலம் கார்த்திகையானதாலென்க. மற்றும் ஞானசர நூலில் கார்த்திகையில் ஜனனம் என்பதை இடைகலை-பிங்கலை-சுழிமுனை என்னும் மூன்றில் சுழிமுனையில் சுவாசம் செல்லுகையில் ஜனனமானான் என்றும் கூறுவர். மாரியோகம் என்றது அவனுக்கு உண்டாகும் யோகம் மாரிபோன்று அளவிட முடியாததாயிருக்குமென்பது கருத்தாகும். 23

நாமென்ற விவனுக்குப்பொன்னினாரம்
நலமாகக் கையிருப்புத் தரிப்பனாகும்
வேமென்றெ மூன்றிடத்திற் குடியிருப்பான்
வெகுமுதல்களிவன் கையிலிருக்கும்பாராய்
வாமென்ற வாலைசக்கரத்தின் பூசை
வரிசையாய் நடத்துவன்காண் மனதுவந்து
ஆமென்ற விவன்கரும மறக்கையாகும்
அப்பனே வேள்வியதோ ரேழிலாச்சே.

(இ-ள்) இந்த ஜாதகனின் வாழ் நாட்களில் பொன்னாரம் முதலிய பூஷணவகைகளை யுடையவனும், அளவிரந்த ரொக்கஸ்திதி யுடையவனும், ஆவதோடு தன் வாழ்வில் மூன்று இடங்களில் குடியிருப்பவனும், அளவிட முடியாத ரொக்க பூஸ்திதி முதலியவற்றை யுடையவனும் ஆவானென்றும், மகா பராசத்தியாகிய வாலைத்தேவியினுடைய பூஜையை இடைவிடாது செய்து வருவானெனவும், இவனுக்கு வேண்டிய காரியாகாரியங்கள் யாவும் தாமதமாகவே நடக்குமென்றும், எல்லா கருமங்களும் கலியாண முதலியவைகளும் தனது ஏழாம் வயதிலேயே நடந்தனவென்றுங் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் இவனது யோக முதலியவற்றை மிகப் பெருமையாய் கூறி முடித்து 3-இடங்களில் குடியிருக்கத் தகுந்தவன் என்றனர். அவை தனது சுய இல்லமா? அல்லது அன்னியர் இல்லமா? என்பதைக் கூறவில்லை. ஆதலால், நமது ஆராய்ச்சிக்குத் தகுந்தபடியே அதனை கூறுவது அவசியமாகும். முன்கூறிய 23-ஆம் செய்யுளில் இவன் பிறந்த 7-ஆம் ஆண்டில் இவனது பிதுர் மனை பாழாய்போகும் என்று கூறியதையும் கவனிக்கத் தகுந்தது. மற்றும் விவாகம் ஏழாம் வயதிலென்றும் கூறியதால் இந்த ஜாதகனுக்கு துன்பம் விரயம் முதலிய பல கஷ்ட நஷ்டங்களும் மூற்காலத்தி லென்றும், பிற்காலத்தில் பூரண சுகத்துடன் இருப்பவனென்றும் கூற இடமுண்டாகும். வாலைபூஜை செய்வான் என்றதால், மேற்படி தேவியினிடம் பக்தியுடனிருப்பான் என்றும் உரைகொள்வது நலம்.

ஆச்சுதடா கெண்டாந்திர நாளுண்டாகும்
அப்பனேபதினேழு நீறிற்கெண்டம்
போச்சுதடா விருபத்தெட் டாண்டிலேதான்
பொல்லாத கிரகமென்ற ராகுதோஷம்

வாச்சுதடா ரோகமுந்தா னிவன்றனக்கு
வண்மையாய் வந்ததென்று வகையாய்க்கூறு
பாச்சுதடா பரதனிட மைந்தனுனை
பழுகிமலே வேலவனுற் பலியாதன்றே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்குத் தனது ஆயுள் முடிவுக்குள் நான்கு கெண்டங்கள் உண்டாகும். அவை எவ்வெப்போதெனில்? தான் ஜனித்த 19-ஆம் வயதில் ஓர்கெண்டம் உண்டாகும். மற்றும் தனது 28-ஆம் வயதில் கொடியகோட்களில் கொடியவனென்னும் இராகுவினது தோஷத்தால் கொடிய கெண்டமுண்டாகுமென்றும், மேற்சொன்ன 28-ஆம் வயதுக்குப் பின் இரண்டு காலங்களில் கொடியரோகம் முதலியவற்றால் கெண்டம் உண்டாகு மெனவும், இவையாவும் பரமசிவனது செல்வக்குமாரனுகிய ஸ்ரீசுப்ரமண்யர் கிருபையால் மேற்படி கண்டங்களானது ஆயுள் விரயம செய்யாதென்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகருக்கு கெண்டங்கள்-4 என்றும், அவற்றுள் 19-ஆம் வயதிலொன்றும், 28-ஆம் வயதிலொன்று மெனக் கூறியதோடு பிற்காலங்களில் கொடியரோக முதலியவற்றால் கெண்டம் எனவும் கூறியுள்ளார். பொதுவாய் இந்த மயேந்திரரேகையானது 4-கோடுகளாயும், நான்கு மூலேகளாயும் இருக்குமென முன்பே கூறியுள்ளதால் மேற்படி 4-ரேகைகளும் எந்தெந்த காலத்தில் ஆயுள் ரேகையைப்போய் அடைகின்றனவோ அந்தந்த காலங்களில் கெண்டங்கள் சம்பவிக்கு மென்பது பொதுகருத்தாகும். ஆனதால் இவ்வாறு கெண்டம் சம்பவிக்கும் காலங்களில் அவரவர்கள் அஸ்தத்தை நோக்கி எந்தெந்த ஆண்டுகளில் ஆயுள் ரேகையை அடையும் என்பதை ஆராய்ச்சிசெய்து கூறுவது நலம். கெண்டமுண்டாயினும் ஸ்ரீசுப்ரமண்யக்கடவுள் கிருபையால் ஆயுள்விரயம் செய்யாதென்பது பொது கருத்து. 25

பலிவென்ற மயேந்திரன்தான் நான்குண்டானுல்
பக்குவமாம் வயததுதா னெழுபத்தைந்தாம்
பொலிவென்ற விவனுக்குப் புத்திரசாபம்
புலமையா லிவனுக்கே யரவசாபம்
குலிவென்ற முதற்பிறவி தன்னிலேதான்
கூர்மையாய் வந்ததென்று கூறலாகும்
ஒலிவென்ற விவனுடனே பிறந்தபெண்ணே
உதவுவாள் பொருள்களைத் தானுண்மைதானே.

(இ-ள்) இந்த ஜாதகனின் அஸ்தங்களில் மயேந்திரரேகை என்பது 4 உண்டாகியதால் வயது-75 என்றும் கூறவேண்டுவதாகும். மற்றும் இந்த ஜாதகனின் முற்பிறவியில் நாகசாபத்தால் இந்த ஜன்மத்தில் புத்திரசாபமுண்டாகி தோஷம் செய்தன என்றும் கூறவேண்டுவதாகும். மற்றும் இந்த ஜாதகனின் உடன் பிறந்தவர்களில் பெண் ஒருத்தியே பலபொருள்களைக் கொடுத்துதவுவாள் என்றும் கூறவேண்டுவது கடமையாகும் எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் தன் பூர்வஜன்மத்தில் ஏற்பட்ட நாகசாபத்தால் இந்த ஜென்மத்தில் புத்திரதோஷமுண்டாயின வென்றும் வற்புறுத்திக் கூறியுள்ளார். ஏனெனில், மேற்படி மயேந்திரரேகையானது தனரேகை அல்லது குடும்பரேகை என்பதை யடைவதால் அதற்கு கத்திரியோகம் என்றும், குடும்பவிருத்திக்குப் புத்திரர்கள் அதிகமாயிருக்கமாட்டார் என்னும் கருத்தை யொட்டியும், இவ்வாறு புத்திரதோஷ முண்டாக்குவது விசேஷமாய் சர்ப்பதோஷத்தாலேயாகும் என்னும் சாஸ்திரமிருப்பதாலும் இந்நூலாசிரியரும் இவ்வாறு கூறினர் என்றுங் கருத்துகொள்ள வேண்டியதாகிறது. மற்றும் பெண்சகோதரி ஒருவளே தனக்கு உபகாரம் செய்யத்தகுந்தவளாய் இருப்பாள் என்றமையால் குடும்ப உதவிக்கு ஆண் துணைவர் இல்லையாயினும் பெண் துணைவர் உண்டென்பதே முக்கிய கருத்தாகும். கீழ்வரும் செய்யுளால் இந்த ஜாதகனுடைய புத்திர விவரங்களை விளக்குவார். 26

தானமெனு மிவனுக்குப் பொருளதாகத்
தலைவனொன்று பெற்றிடுவான் முட்டியன்றுன்
ஞானமெனும் வினோதவித்தை செய்வானப்பா
நாலுபேர்க் குடன்பிறப்பாம் பெண்ணைக்கொள்வான்
வானமெனு மிக்குழவிக் கிருபத்தெட்டாம்
வயதுதனில் வியாதியினால் வருமேகெண்டம்
ஊனமெனும் பதினன்காம் வயதின்மைந்தன்
உடலெல்லாஞ் சிட்டைவிழுந் தொழிவான்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் தனது செல்வங்களுள் மிகப்பெரிய செல்வமாகிய புத்திரன் ஒன்றைப் பெறுவான். அந்த ஜாதகனும் மிக்க நாட்டமுடையவனும், ஞானமுடையவனும், வினோதவித்தையு முடையவனாகவே இருப்பானெனவும் மேற்படி புத்திரனவன் நான்கு சகோதர சகோதரிகளையுடைய பெண்ணைக் கொள்வானெனவும் கூறுவதோடு மேற்படி புத்திரன் ஜனித்த 28-ஆம் வயதில் ஓர் கெண்டமுண்டாகி நீங்குமெனவும், தன் வயது 42-ல் தனது சரீரத்தை துளைக்கத்தகுந்த அளவில் மகா கொடிய துன்பபிணியால் தனது ஆவியை இழப்பானெனவுங் கூறுக எ-று.

(வி-ரை) முன் 26-ஆம் செய்யுளில் கூறியபடியே புத்திரதோஷம் உண்டெனக் கூறினும் இச்செய்யுளில் அற்பவயதுடைய 42-வயதுடைய புத்திரன் ஒருவன் உண்டாவானென்றும் கூறியுள்ளார். இவையும் முன் சொன்னபடி இந்த ஜாதகனுக்குள்ள சர்ப்பதோஷத்தால் அற்ப புத்திரர்களுண்டாகி மரித்துப் போவார்கள் என்றே கருதவேண்டியதாகிறது. இதுகாறும் கூறிவந்த ரேகை விவரங்களை இதில் கூறியவண்ணம் கெண்டம் உண்டாகும் காலங்களையும், கலியாண சுபசோபனாதிகள் உண்டாகும் காலங்களையும் மிக்க சூக்ஷுமமாய் ஆராய்ந்து எந்தெந்த காலங்களில் மேற்படி மயேந்திரரேகை என்பது எந்தெந்த இடங்களை அடையும் என்பதை நன்கு ஆராய்ந்தறிந்து கூறவேண்டுவது அவசியமாகும். அவை எவ்வித

மெனில் முன்கூறிய 7-8-ஆம் பக்கத்தில் காட்டிய ரேகை சக்கரப்படி அதிசூக்ஷமாய்க் கண்டுகொள்க. 27

இதுவுமது

பாரென்ற மயேந்திரந்தா னுண்டானால்
பக்குவஞ் சொல்வனிது பரிந்துகேளு
காரென்ற வதியரக்கன் கார்க்கோடந்தான்
கருநாவு வினுவுவித்தை யிருந்துசெய்வான்
பேரென்ற விவன்வீட்டில் வீரமாற்றிப்
பிரிவாக விருக்குமுதல் விபரங்கேளு
காரென்ற சன்னியாசி யுபதேசத்தால்
காணினந்த குமரனையு மறந்தான்பாரே.

(இ-ள்) இதுவரையில் கூறிவந்த மயேந்திர ரேகை நான்கு உண்டாகி யதின் பலாபலன்களை இன்னும் சொல்லுவேன் கேட்பாயாக. எப்படி யெனில்? மயேந்திரரேகை என்பது தன் அஸ்தத்தினிடமாக 4 இருக்குமே யாயின் அந்த ஜாதகன் வனாந்தரங்களிலுள்ள அரக்கன் - கார்க்கோடன்- கருநாபி முதலிய வித்துகளால் செய்யவேண்டிய வாதவேலைகளை யாவையும் செய்பவனாக இருப்பான். மற்றும் இவன் தனது இல்லத்தின்கண்ணுள்ள ஆசாபாசங்களையும் தான் மிக்க ஆசையோடு பெற்று வளர்த்த அழகிய பிள்ளையையும் மறந்து இருக்கும்படி நேரும். இவை எதனாலெனில்? சன்னி யாசியின் உபதேசத்தாலும் என்றறிவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவது என்னவெனில்? இவனது வாழ்நாட்களில் சன்னியாசி ஒருவரது உபதேசத்தால் தனது இல்லத்தையும் ஏகச் செல்வனையும் மறந்து திரிவதோடு வனாந்தரங்களி லுள்ள மூலிகைகளால் வாதம் முதலியன செய்வானென்பதேயாகும். இச் செய்யுளால் மயேந்திர ரேகை நான்குண்டாவதின் பெருமையை விளங்கு கின்றன. பொதுவாய் எந்த ரேகைகளும் தனரேகையையோ அல்லது ஆயுள் ரேகையையோ கடந்து அவ்விடம் செல்வது இல்லறத்தாருக்குத் துன்ப முள்ளதாய் இருக்குமாயினும் துறவாரத்தாருக்கு நன்மையுஞ்செய்யத்தகுந் தாகுமென பொது சாஸ்திர விதியாகும். ஆனதால் முன்கூறியவண்ணம் ஒவ்வொரு ரேகைகளினது அளவையும் அவை எந்த காலத்தில் நாம் குறித்த இடத்தில் போய் அடையும் என்பதையும் ஆராய்ந்து கூறுவது முக்கிய கடமையாகும். 28

பாரென்ற குமரனிட காணிக்கைசர்க்கரை
பாலிக்க மறந்திட்டான் கருப்பனாலே
தேனென்ற மலைமேலே வாழுந்தெய்வஞ்
சிந்தனையாற் பரவசந்தான் றருவேனென்றான்
வானென்ற வயதிலே வாலைபூசை
வண்மையாய்ச் செய்தொழிலின் றப்பிதத்தால்
ஆரென்ற குழவிகட்கு மிவனுக்கப்பா
ஆனதொரு தொழின்முறைகண் முடக்கும்பாரே.

(இ-ள்) மற்றும் இந்த ஜாதகன் குமரன் என்னும் ஸ்ரீசுப்ரமண்யக்கடவுளுக்கு ஆராதனம் செய்யத்தகுந்த சர்க்கரை முதலிய வஸ்துவை கருப்பன் என்னும் தெய்வத்தின் சிந்தனையால் மறந்துபோனதாலும் மலைமீது வாசம் செய்யாநின்ற பலதெய்வங்களின் மீதுள்ள ஆசையாலும், பாசத்தாலும் தான் தனது வாலிபகாலத்திலிருந்து செய்யும் வாலைத்தேவியினது பூஜை முதலியனவற்றைத் தப்பிதமாய் செய்து முடித்ததாலும், இந்த ஜாதகனுக்கும், ஜாதகனது புத்திரர்களுக்கும் யோகம் என்னும் தொழின்முறை முதலியன சுருக்கமாகும் எனவும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்தாவது என்னவெனில்? மானிடர்களாய் பிறந்தவர்கள் கட்டாயமாய் வணங்கவேண்டிய தெய்வமாகிய ஸ்ரீசுப்ரமண்யக் கடவுளை வணங்காததாலும், தனது இளமைப்பருவம் முதல் வணங்கிவந்த ஸ்ரீவாலைதேவியை மலைகளிலும் காடுகளிலும் வாசம் செய்யாநின்ற துற்தேவதைகளினது உவாசனத்தால் வணங்காது மறுத்ததாலும் இந்த ஜாதகனுக்கும் இவனது பிள்ளைக்கும் அந்த தோஷம் சூழ்ந்து தொழில் சுருக்கம் என்று சொல்லும் பலகாரியங்களுக்கும் தடையுண்டாயின வென்றும் கூற இடமுண்டாயிற் றென்பனவாம். மற்றும் இச்செய்யுளால் முக்கியமாய்த் தெரிந்துகொள்ள வேண்டுவதென்ன வெனில்? முன்சொன்ன 28-ஆம் செய்யுளின்படி பிற்காலங்களில் சந்நியாசி யுபதேசத்தால் வாதம் முதலியவற்றையே அதிகமாய் அப்பியாசித்து எல்லாவற்றையும் மறந்து அன்னிய இடங்களிலேயே திரிந்துகொண்டிருப்பான் எனவுங் கூறலாம். 29

பாரெனவு மில்லறமுங் குடியுமைந்தா
பக்குவமாய் மூன்றினுக்கும் பாவமாச்சு
காரெனவுந் தலைமுறைதான் மூன்றுக்கப்பா
காட்சிபெறு ஓர்தந்தைக் கோர்சேயாகும்
சீரெனவு மிக்குழவி நாற்பத்தொன்றில்
சிலைப்பரவும் பிதாவுக்கு மரணமன்றோ
தீரெனவுங் கோத்திரத்தி லுடையார்மெத்த
செப்புகிறே னிவன்கையிலே ரேகையாறே.

(இ-ள்) மேலேசொன்ன காரணத்தால் இந்த ஜாதகனுக்கும் தனது இல்லத்திற்கும் இவனது குடும்பத்தவருக்கும் பாவம் சூழ்ந்ததோடு இந்த ஜாதகன் மூன்று தலைமுறைக்கும் தோஷம் வந்து சூழ்ந்தன. அவை எப்படியெனில்? இந்த ஜாதகன் பிதாவுக்கு இந்த ஜாதகன் ஒருவனே புத்திரனாகும். மற்றும் இந்த ஜாதகனின் வயது 45-ல் இவன் பிதாவுக்கு மரணம் உண்டென்றும், சிறப்புப்பெற்ற இவனது கோத்திரத்துள் இவன் ஒருவனது கையிலேயே ஆறுரேகைகள் இருக்குமெனவுங் கூறுவாயாக.

(வி-ரை) இவனது குலதெய்வமாகிய ஸ்ரீசுப்ரமண்யக்கடவுளைத் தொழாத காரணத்தாலும், பலநாள் வரையில் உபாசித்திருந்த ஸ்ரீவாலைத் தேவியைத்தொழாத காரணத்தாலும், மேற்படி இருதோஷமும் இவனைச் சூழ்ந்து இவனது குடும்பத்தையும், இல்லத்தையும் நாசம் செய்வதோடு

இவனையும் மலை முதலிய இடங்களில் வாசம்செய்யும்படி செய்யும் என்ப தோடு இவனது பிதாவுக்கு இவன் ஒருவனே புத்திரனென்றும், இவனுக் குப்பின் ஒரு புத்திரனே நிலைத்திருக்குமென்றும், மேற்படி தோஷத்தா லேயே இவனுக்கு இவ்வாறுண்டாயின் வென்று கூறவேண்டியதுடன் ஆறு ரேகையுடையவன் எனக் கூறியதால், மேற்படி ஆறுரேகையுடையவன் என்றதால் இவனது கைவிரல்களில் ஆறுரேகைகள் உடையவன் எனவுங் கூறவேண்டியதாயிற்று. ஆதலால் இவ்வாறான மயேந்திரரேகை யுடைய வர்களை கைவிரல் ரேகைகளை நன்றாய் கவனித்து முன்சொல்லிய பலனை யும் பின்வரும் பலனையும் ஆராய்ந்து கூறுவது நலம். 30

ஆறியதோ ரிக்குழவிக் கன்பாந்தாரம்
அப்பனே பெற்றமக்க ளாறுஞ்சாவாம்
கூறியதோர் குழவியுடைக் கையைக்கண்டு
குறித்தறிந்து சாபத்தின் குறைவுதீர்ப்பாய்
பாறியதோர் பெற்றபிள்ளை நிலைக்குமப்பால்
பரிகாரஞ் செய்ததனுற் பாவம்போச்சு
கூறியதோர் பெற்றபிள்ளை வம்சத்தோடு
கொல்லுமடா பாவத்தின் வரலாறுகாணே.

(இ-ள்) மற்றும் இந்த ஜாதகனுக்கு மிக்க அன்பையுடைய மனையாள் வாய்ப்பதோடு, புத்திர புத்திரிகள் அறுவர் உண்டாவர். உண்டாயினும் மரிப்பார். ஆனதால் இந்த ஜாதகனது அஸ்தங்களிலுள்ள ரேகையின்படி பாபம் சம்பவித்தபடியால் மேற்படி சாபத்திற்கு தோஷபரிகாரம் செய்யக் கடவாயாக. அப்படி செய்வாயேயாமானல் தனக்கு உண்டாகும் பிள்ளைகள் நிலைத்திருக்கும். தோஷமும் நீங்கும். செய்யவில்லையேல் மேற்படி புத்திர வர்க்கங்கள் வம்சவிருத்தியின்றி கொன்றுபோடும். மேற்படி பரிகாரம் செய்யும் விவரங்களைக் கூறுவேன் கவனிப்பாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனது அஸ்தரேகையின்படி புத்திரதோஷம் சம்பவித்தபடியால் இவனது சொந்த மனையாளுக்கு உதிக்கும் புத்திர புத்திரிகள் அறுவரும் மரிப்பார் என்றும், அந்த தோஷத்திற்கு பரிகாரம் செய்தாலொழிய புத்திரர்கள் நிலைக்கமாட்டாரெனவுங் கூறி யுள்ளார். முன்கூறிய 26-ஆம் செய்யுளில் இந்த ஜாதகனுக்கு சர்ப்ப தோஷம் சம்பவித்ததாயும் கூறியுள்ளார். ஆனதால், பரிகாரம் செய்யின் இவனுக்குப் பிறக்கும் 6-குழவிகளும் வரிசையாய் நாசமடைந்து 7-வது குழவியே பூரண ஆயுளுடன் நிலைக்குமென்று கூற இடமுண்டாகிறது. இச்செய்யுளின் முதலடியில் "இக்குழவிக் கன்பாந் தாரம்" என்றனர். இந்த ஜாதகன் மனதுக்கிசைந்த மனையாள் இவனுக்கு வாய்ப்பாள் என்பதே இதன் கருத்து. ஏனெனில்? மேற்படி மயேந்திர ரேகையானது ஆயுள் ரேகை - தனரேகை முதலியவற்றைக் கடந்து சுமார் வயது 21-க்குள் சுக்கிரமேட்டை அடையுந் தன்மையுடைய தானதாலென்க. சுக்கிரமே டென்பது தனது சுண்டுவிரலின் கீழ்பாகத்தில் இருப்பதாகும். 31

ஆறிலே ரெண்டுநீ கடமைசெய்து
அன்பான குமரனை நீயறிந்துபோற்று
சீறிலே வயதிவனுக் கெழுபத்தைந்தாம்
செப்பினேன் றுமதோ ரறுபத்தாறில்
காறிலா ருங்காண்ட மெட்டாம்பாட்டின்
கணக்குகளி னூர்கண்டமுதற் கருத்தாய்ச்சொல்வேன்
பாரிலே முனிவர்களுந் தேவர்போற்றப்
பக்குவங்கள் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே.

(இ-ள்) இப்பாரிலுள்ள முனிவர்களும் தேவர்களும் போற்றத்தகுந்த கருமகாண்டத்தில் ஆறாவதுகாண்டம் எட்டாம் செய்யுளின்படி மேற்சொன்ன புத்திரதோஷத்திற்கு வேண்டிய பரிகாரவிவரங்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? ஸ்ரீகுமரபிரானுக்கு நடக்கும் ஆறுகால பூஜை நைவேத்தியங்களில் இரண்டுகாலபூஜை நைவேத்திய முதலியவற்றை உன்னால் நடத்துவித்து மிக்க பக்திபூர்வகமாய் போற்றித் துதிப்பாயேயாமானால் உனக்குண்டாகும் புத்திரனுக்கு வயது-75 என்றும் கூறுக. மற்றும் உன் மனைவிக்கும் வயது-66 என்றறிவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முதலடியில் "ஆறிலே ரெண்டு நீகடமை செய்து, அன்பான குமரனைநீ யறிந்துபோற்று" என்றதால் ஸ்ரீசுப்ரமண்யக் கடவுளுக்கு நடக்கும் அறுகாலபூஜையில் முக்கிய காலங்களான, காலையிலும் மாலையிலும் நடக்கும் அபிஷேக ஆராதனையை நடத்தி போற்றித் துதிக்கவேண்டும் என்று கருத்தாகிறது. மற்றும் இந்த முனிவர் இங்கு கூறிய தோஷபரிகாரத்தை கருமகாண்டத்தில் ஆறாவது அத்தியாயம் 8-ஆம் பாட்டின்படி கூறினேன் என்றனர். மேற்படி செய்யுள் விபரம் வருமாறு.

"ஆச்சப்பா இவனுக்கு புத்திரதோஷம்
அகலவென்றால் குமரனுக்குக் காலைமாலை
ஆச்சப்பா அபிஷேகம் அன்பாய்செய்து
அப்பனருள் பெற்றபின்பே பிள்ளையுண்டு"

என்று கூறியிருத்தலாலும், மேற்கூறியவாறு முருகக்கடவுளுக்கு காலை மாலையில் அபிஷேக ஆராதனைகளை நடத்தித் துதித்துவந்தால் புத்திரர் நிலைப்பார் என்று கூறவேண்டுவதாகிறது.

32

கேட்கவே மயேந்திரந்தா னுன்குண்டானால்
கேவலமா யிரேகைகளின் மார்க்கஞ்சொன்னேன்
நாட்களுக்கும் ராசிகட்குஞ் சேராரேகை
நலமாகக் கண்டதனைத் தள்ளிமைந்தா
வாட்கவே மயேந்திரந்தா னைந்துரேகை
வளமாக விருப்பதென்றால் வகையைக்கேளாய்
கோட்களொன்று மில்லையடா குணமுண்டாகும்
கூறுவோ மதன்விபரங் கூறக்கேளே.

(இ-ள்) இதுவரையில் மயேந்திரரேகை நான்கு உள்ளவனது விஷயங்களையும் நாளும் இராசியும் அறியாமல் எவரும் கேவலம் என்று நினைக்கத் தகுந்த அஸ்தரேகையால் எல்லா விஷயங்களையும் விவரமாய்க் கூறியுள்ளேன். இனி மயேந்திரரேகை 5-உடையவனது பலாபலங்களையும் கூறுவேன் கேட்பாயாக. இவற்றுள் கிரகங்களைப்பற்றி கூறவில்லையாயினும் இவ்வாறு அவரவர்களது அஸ்தங்களிலுள்ள இரேகையால் எல்லாப் பலனையும் அறியலாமாதலால் அதன் விவரங்களைக் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) அவரவர்கள் தலை எழுத்தை அவரவர்கள் கையில் காணலாம் என்பது இம்முனிவரின் கருத்தாகும். இதனாலேயே "நாட்களுக்கு மிராசிகட்கும் சேராரேகை" எனவும், "கோட்களொன்று மில்லையடா" என்றும் கூறினார். இதன் கருத்து என்னவெனில்? இம்முனிவரைப்போன்ற பற்பல முனிவர்கள் கணித சாஸ்திரத்தால் அதாவது கிரக ஆராய்ச்சியால் அவரவர்களது வருவினையை நிச்சயமாய் அறியலாமென வற்புறுத்திக் கூறியிருந்ததால் இந்த இரேகை சாஸ்திரத்தில் கணிதசாஸ்திரம் என்னும் கிரக ஆராய்ச்சியாய் அறியக்கூடாத ரகஸ்ய விஷயங்களையும் இந்த அஸ்தரேகை சாஸ்திரத்தால் அறிந்துகொள்ள முடியும் என்பதே இச்செய்யுளின் முக்கிய கருத்தாகும். இதனை இந்நூலாசிரியரே இந்நூலில் முதற்காண்டம் மூன்றாம் செய்யுளில் இன்னும் தெளிவாய் விளக்கிக் காட்டியுள்ளார். எப்படியெனில்? அவரவர்கள் தலையெழுத்தானது அவரவர்கள் கையில் அமர்ந்திருக்கின்றனவாதலால் அவரவர்கள் கையிலுள்ள எழுத்தை அறிந்துகொண்டால் குறைவில்லை என்பதேயாகும்.

33

கேளடா மயேந்திரந்தா னைந்துண்டானால்
　　கீறுபுள்ளி மூன்றுண்டி ரண்டுரேகை
வாளடா வவன்பிறவி பாஞ்சாலந்தான்
　　வரிசையுள்ள வேழான கெர்ப்பமாச்சு
தாளடா விவன்பிறவி யேழுபேரும்
　　தங்கைமார் மூன்றுண்டு தயவாய்தானே
பாழடா வொன்றுமில்லை கனவானப்பா
　　பாக்கியங்கள் பெற்றிடுவான் பண்பாய்த்தானே.

(இ-ள்) அவரவர்களது அஸ்தங்களில் மயேந்திரரேகை என்பது ஐந்து உண்டாகியும், அவை கீற்றுப்புள்ளிபோல் மூன்று ஓர்வரிசையாயும், இரண்டு புள்ளிகள் ஓர்வரிசையாயும் அமர்ந்திருக்குமேயாமானால், அவன் பலனைச் சொல்லுவேன் கேட்பாயாக. எப்படியெனில் அவன் ஜனித்தது பாஞ்சால தேசமாகும். மற்றும் இந்த ஜாதகன் ஏழாவது பிறவியாகும். மேற்சொன்ன பிறவி எழினும், பெண்பிறவி மூன்றாகும். மற்றும் இந்த ஜாதகன் சகல பாக்கியங்களை அமோகமாயுடையவனாய் எந்நாளும் தாழ்ச்சியடையப்படமாட்டாத தனமுடையவனாக இருப்பான் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) இதுவரையில் மயேந்திரரேகை நான்குள்ளவனது பலனை விளக்கியதாலும், இங்கு மேற்படி ரேகை 5 உடையவனது பலாபலனை

விளக்குவதாலும், மேற்சொன்ன ரேகை கீற்றுகீற்றான புள்ளிகள் மூன்றும் ஒன்றாயும், மேற்படி சிறுபுள்ளிகள் 2 ஒன்றாயும் அமைந்திருக்கவேண்டும் என்னும் கருத்தமைத்து 'கீறுபுள்ளி மூன்றுண் டிரண்டிரேகை' என்று கூறினார். மற்றும் நான்காம் அடியில் 'ஏழான கெர்ப்பமாச்சு' என்றும், ஐந்தாம் அடியில் 'இவன்பிறவி ஏழுபேராம்' எனவும் கூறியிருத்தலால் இந்த ஜாதகன் உடன் பிறவி 7 என்றே கூற இடமுண்டாகிறது. ஏனெனில்? மேற்படி ரேகையானது உள்ளங்கையின் கட்டைவிரலின்கீழ் ஐந்து கீற்று யுண்டாகி எல்லா ரேகைகளையும் கடந்து மூலையாய் சுண்டுவிரலுக் கீழுள்ள சுக்கிரன் மேடிருப்பதாலும், இதற்குள் ஆறு முக்கியரேகைகள் இருப்ப தாலும், இவ்வாறு பிறவி விஷயமாய் கூறினார் எனக்கொள்க. இதனை அவரவர்களது அஸ்தலக்ஷணங்களுக்குத் தக்கபடி ஆராய்ந்து கூறுவது நலம்.()

தானமெனு மிவன்பிறவி யைந்தாம்பிள்ளை
　　தாட்டியர்கண் முன்பிறந்தா ரப்பாகேளாய்
வானமெனு மிவன்பிறந்த இல்லறந்தான்
　　வாழ்க்கையுள்ள விருமனையிற் றென்பால்வீட்டில்
கானமெனும் இவன்பிறந்த மூன்றுநாளில்
　　கட்டழகி பாட்டியவ ளிறப்பாள்பாராய்
ஞானமெனு மிவன்பிறந்த மாதமொன்றில்
　　நாகசர்ப்பம் வீட்டிலேதான் றொட்டிலாச்சே.

(இ-ள்) மற்றும் கூறவேண்டுவதெனின் இந்த ஜாதகன் 5-வது பிறவி யாய் பிறந்தான் எனவும், இவனுக்கு முன் பிறந்தவர்கள் மிகுந்த தாட்டிக முடையவரா யிருப்பாரெனவுங் கூறுவதோடு இவன் ஜனித்த இல்லமானது இருமனை என்றும், மேற்படி மனை இரண்டுள் தெற்கு திசையாயுள்ள அறையில் பிறந்தான் என்றும் கூறுவதோடு இவன் ஜனித்ததுமுதல் நாட்கள் மூன்றுக்குள் இவனது மூதாதை என்னும் பாட்டி இறந்துபோவாள் என்றும், தனது இல்லத்தின்கண் இவன் சயனிக்கும் தொட்டிலில் அல்லது தொட்டில் என்னும் ஊஞ்சலில் பாம்பானது படுத்து உறங்கும் எனவும் திண்ணமாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் 5-ஆம் பிறவி என்றும், இவன் ஜனித்த 3-நாட்களுக்குள் பாட்டியார் மரிப்பாள் என்றும், மாதம் ஒன்றில் இவன் சயனிக்கும் ஊஞ்சலில் பாம்புபடுத்திருக்குமெனவுங்கூறியுள் ளார். மயேந்திர ரேகையானது 5-உண்டாகிய காரணத்தால் ஐந்தாம் பிறவி என்றும், மேற்படி ரேகையானது எல்லா ரேகைகளையும் கடந்து செல்லும் காரணமுடையதானதால் மூதாதையாருக்கு தோஷம் செய்யத் தகுந்த தானதால், பாட்டியாருக்கு கெண்டம் செய்யுமெனவும், மேற்படி ரேகை யானது பாம்புபோல் வளைந்து வளைந்து செல்லுவதானதால் பாம்பினால் கெண்டமுண்டு என்னும் காரணமமைத்து படுத்திருக்கும் கட்டிலில் பாம்பு சயனித்திருக்குமெனவுங் கூறியுள்ளார். இதனது முழுவிவரங்களையும் பின்வரும் செய்யுளால் இன்னும் விரிவாய்க் காண்க. 35

ஆச்சென்ற தொட்டிலிலே நாகம்வந்து
அடவாகப் படுக்கைகண்டு பயந்தாரப்பா
கோச்சென்ற குழவியைத்தான் கொல்லுமென்று
கொந்தலிட்டு குமாரனைத்தான் வணங்கினாரே
தாச்சென்ற குமாரனுக்கு மனமிரங்கித்
தயவாக நாகசர்ப்ப மிறங்கிற்றப்பா
காச்சென்ற காட்சியதாய் சுப்பராயன்
கருணைவைத்து யோகவானாயாகலாச்சே.

(இ-ள்) இவ்வாறு இந்த ஜாதகன் சயனித்திருந்த ஊஞ்சலில் பாம்பும் சயனித்திருப்பதைக்கண்ட பெற்றோர்கள் அச்சத்துடன் நடுநடுங்கி, தனது மைந்தனின் ஆவியொழிந்து போகுமே என்று நினைத்து அலறி, ஸ்ரீசண்முகக்கடவுளைத் தோத்திரம் செய்தனர் அவ்வாறு வணங்கிய காரணத்தால் மேற்படி சண்முகனுக்கும் மனமிரங்கியதால் மேற்படி பாம்பானது அப்புறம் நகர்ந்து போயிற்று. பின்பு மேற்கூறிய ஸ்ரீசண்முகப்பெருமானது கிருபா நோக்கத்தால் இந்த ஜாதகன் மேன்மையையுடைய தனவந்தனாகி வாழ்ந்திருந்தான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் கூறியது இவனது வாழ்நாளில் நடந்த அல்லது நடக்கப்போகும் அபூர்வசம்பவங்களாகும். இதற்கு உள்ளுரையாவது என்னவெனில்? இந்த ஜாதகன் தனக்குச் சிறுபிராயத்திலேயே ஸ்ரீகுமாரக்கடவுள் அனுக்கிரகம் பெற்றவன் என்றும், மேற்படி குமாரக்கடவுளாலேயே இவன் உயிர் மீண்டான் எனவும், யோகத்தையடைவான் எனவுங் கூறலாம். பொதுவாய் 5-கீற்று ரேகையையுடைய மயேந்திரம் அவனது அஸ்தத்தின் எந்தபாகத்திலிருந்தாலும், அந்த ஜாதகன் யோகவான், கீர்த்திமான், சிவசிந்தையுடையவன், தருமமுடையவன், உண்மையுடையவன் என்றுகூற சாஸ்திரங்கள் இடம் கொடுக்கும். இவ்வாறு ரேகையமைய ஜனிப்பதும் கோடிக்கு ஒன்று என்று கூறவும் இடந்தரும். பொதுவாய் மயேந்திர ரேகைகள் 5 உடையவன், தனது பஞ்ச இந்திரியங்களையும் தன் வசமாக்குபவன் என்றும் கூறலாம். இங்கு மற்றுமுள்ள விவரங்களை யறிக. 36

ஆச்சப்பா மாதிவாரம் ராகுதன்னில்
அன்பான நாழிகைதா னிருபத்தைந்தாம்
பேச்சப்பா சுக்கிரனும் ராகுவுச்சம்
பிரியமாய்த் தசமியிலே பிறந்தானப்பா
வீச்சப்பா மெய்யதுநொந் தேழுநாளாய்
வேதனையாற் பெற்றமைந்தன் விபரங்கேளாய்
காச்சப்பா விவனாலே வீட்டிலேதான்
கடாட்சித்தா னிளையவளுங் கருணைகூர்ந்தே.

(இ-ள்) மற்றும் இந்த ஜாதகன் பிறந்தகாலங்களைக் கூறுமிடத்து, ஆதிவாரமாகிய ஞாயிற்றுக்கிழமையில், இராகுகாலம் என்னும் விஷநேரத்தில்

பகல் நாழிகை 25 ல் மீனராசியில், சுக்கிரன் உச்சம் பெறவும், ரிடபராசியில் இராகு உச்சமாயிருக்கவும் கூடிய சுத்த நேரத்தில் பத்தாம் திதியாகிய தசமி திதியில் பிறந்தான் என்றும், மற்றும் இவன் தனது தாய் கர்ப்பத்தில் ஏழு நாள்வரையில் வேதனையுண்டாகி பிறந்தவனுதலால் இவனது பிற்காலங் களில் உண்டாகும் பலன்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இவன் ஜனித்த பின்பே இவன் இல்லத்தில் மகாலட்சுமி கருணைகூர்ந்து வாசம் செய்தாள் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் இவன் ஜனித்தது 25 நாழிகை என்றனரே யொழிய, பகல் காலமா அல்லது இரவு காலமா என்பதைக் குறிக்கப்பட வில்லையானுலும் 'ஆதிவாரம் ராகுதன்னில்' என்றதால் ஞாயிற்றுக்கிழமையில் இராகுகாலத்தில் ஜனித்தான் எனப் பொருள்படுதலாலும், ஞாயிற்றுக் கிழமையில் பகல்நாழிகை $26\frac{1}{4}$-க்கு மேல் இராகுகால நேரமானதாலும், பகல்காலத்தில் ஜனித்தான் என்று வருவித்து எழுதலாயிற்று. மற்றும் 'கடாக்ஷித்தாள் இளையவளும்' என்றதால் மூத்தவள் மூதேவி, இளையவள் ஸ்ரீதேவி என்னும் பழமொழிப்படி லட்சுமி வாசம் செய்வாள் என்றும் கூறலாயிற்று. இதுவன்றி, சுக்கிரன்-இராகு உச்சம் பெற்றும், இராக்காலத் திலும் பிறந்த காரணத்தாலேயே முன்கூறிய 36 ஆம் செய்யுளில் இவன் படுக்கையில் பாம்பு இருந்து பயத்தைத் தருமென்று கூறினர். இவை கணித சாஸ்திரத்திற்கும் பொருந்தும் எனக்கொள்க. 37

கருணையென்ற விவன்மாதா குளித்தவேழிற்
கட்டழகன் மதுபானஞ் செய்துக்கொண்டு
வருணையென்ற வடமுகமாய்த் தலையைவைத்து
வங்கணத்தான் முதற்சாமம் புணர்ச்சியாகி
திருணையென்ற வவிதபட லீலையாலே
திரட்கண்ட வாயுவங்கே யொதுங்கிற்றப்பா
அருணையென்ற கருவதனிற் குழவியாய்த்தான்
ஆண்பிள்ளை பிறக்கும்போ துயரமாச்சே.

(இ-ள்) இந்த ஜாதகனின் தாயானவள் ஏழுமாத கெர்ப்பமாயிருக்கை யில், இவன் தந்தையானவன் மது என்னும் கள்ளையுண்டுவந்து, மேற்படி தாயானவள் வடக்குமுகமாய்த் தன் சிரசைவைத்து படுத்திருக்கையில் முதல் ஜாமத்திலேயே புணர்ச்சிசெய்த காரணத்தால் சுழிமுனையாகிய அக்கினியில் சுவாசம் சென்று ஸ்கலிதமாகிய காரணத்தால், மேற்படி அக்கினியானது பிண்டத்திலிருக்கும் இந்த சிசுவுக்குப்பட்டு இந்த சிசு ஜனிக்கையில் பலநாள் இவன் தாயானவள் வேதனைப்பட்டாள் எ-று.

(வி-ரை) முன்கூறிய 37-ஆம் செய்யுளில் இவனை ஜனிப்பதற்கு இவன் தாயானவள் 7-நாள் வரையில் கஷ்டப்பட்டாள் என்றதால், அவ்வாறு 7-நாள் வரையில் பிரசவவேதனை யடைந்ததற்கு இச்செய்யுளில் மார்க்கம் கூறினர். பாதுவாய் கெர்ப்பமாகிய ஸ்திரீயினது விஷயமாய் கவனிக்குமிடத்து,

சம்போக காலத்திற்குப்பின் மேற்படி இந்திரியமானது கருப்பையின் வாய் துவாரத்திலிருந்து பையின் உள்செல்ல 7-நாட்களாகிறது. ஏனெனில்? சாதாரண இந்திரியமானது முத்துபோன்று மெல்லியதாயிருந்தாலும் சுமார் 5 அல்லது 6-நாட்களுக்குப் பிறகே மேற்படி இந்திரியமானது ஒருவாறு கடினமான பக்குவமடைந்து கருப்பையின் வாய்துவாரத்தைக் கடந்து செல்லும் தன்மையுடையதாகிறது. கருப்பையின் உள்சென்ற 180-நாட்களில் மேற்படி கருவின் அவயவங்கள் வளர்ந்து முடிவடைந்து அசைவற்று நிற்கிறது. அக்காலம் மேற்படி பையானது வாய்மலர்ந்திருக்கும். அக்காலம் சம்போகம் செய்யின் மேற்படி பிண்டத்திற்கும் தாய்க்கும் பல இடையூறைத் தருமாதலால் அக்காலம் சம்போகம் செய்வது கூடாதென்பது சாஸ்திரவிதி. இங்கு கூறிய செய்யுளில் ஏழாம்மாதம் சம்போகம் செய்த காரணத்தாலேயே தாய்க்கு பிரசவவேதனை 7-நாள் வரையில் இருந்தன என்று கூறினும் பொருந்தும். 38

ஆச்சடா விவன்பிறவி யழகியன்முன்
ஐந்துமக்கள் பிறந்திடுவா ரிரண்டுசாவாம்
வாச்சடா தேவிமா ரிரண்டுபேராம்
கைம்பெண் சாதிகளுடனே வாழ்க்கையாகும்
பேச்சடா வயதொரு பத்தாகுமுன்னே
பிரபலங்க ளாகவே நடப்பான் மைந்தன்
கூச்சடா விவன்குடியிற் றனமோமெத்த
கொற்றவர்கள் துயரமெல்லாம் நீங்கிற்றன்றே.

(இ-ள்) மற்றும் இந்த ஜாதகன் தனது சகோதர சகோதரிகளில் மிக்க அழகுவாய்ந்தவனாக இருப்பானென்றும், தனக்குண்டாகும் புத்திரர்கள் 5 எனவும், மேற்படி 5-புத்திரர்களில் இரண்டு புத்திரர்கள் இறந்து போவார் எனவும், இவனது இல்லறத்துணைவிகள் இருவர் என்றும், கைம்பெண் என்னும் விதவை ஸ்திரீகளாகிய அமங்கிலிகளிடத்திலேயே வாழ்வானெனன்றும், இவன் ஜனித்த வயது 10-க்கு முன்பே மிக்க பிரபலமான வாழ்வை அடைவான் என்றும், இவனது இல்லத்தின்கண் அளவிறந்த தனமுண்டாயிருப்பானெனவும், இவன் பிறந்த பிறகே இவனது அன்னை தந்தைகளின் துயரம் யாவும் நீங்கிப்போயின வென்றும் கூறுவாய் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் பொதுவாய் அழகுடையவன், இரண்டு மனைவிகளையுடையவன், விதவைச்சேர்க்கையுடையவன், வயது 10-க்குள் பிரபலயோக முடையவன் என்றும் கூறினார். ஏனெனில்? மயேந்திரரேகை 5 உண்டானதின் சிறப்பேயாகும். மனைவி இரண்டு என்றும், விதவை சேர்க்கையுடையவ னென்றும் கூறிய காரணமென்னவெனில்? மேற்சொன்ன ரேகையுடையவன் ஸ்திரீலோலன் என்று கூறப் பொதுவிதி யொன்றுண்டு. ஆயினும், இந்த ரேகைகள் இரண்டும் தன் வயது முதிர முதிர சுக்கிரன் மேட்டை அடையும் ஆனதால் மனைவி இரண்டு என்றும், தன் வயது 10-க்குள்ளேயே மேற்சொன்ன ஐந்துகீற்று ரேகைகளும் தனரேகை

யையடையு யாதலால் தன் வயது 10-லேயே பூரண தனமுடையவன் என்றும், முன்சொன்ன 37-ஆம் செய்யுளின்படி இரண்டு கிரகங்கள் உச்சமானதால் இவன் பிறந்த அன்றே தாய்தந்தையரின் வறுமை நீங்கி சுகம் அடைந்தார் என்றும் கூறவேண்டியதாயிற்று. 39

நீங்கிடவே யிவன்வயதோ ரிருபத்தாறில்
நிகழ்த்துகிறேன் பொல்லாத கண்டமப்பா
தாங்கிடவே ராகினிடத் தோஷத்தாலே
தகவில்லாத் தைந்துதிங்க ளலைவானப்பா
ஏங்கிடவே சிவன்பதத்தை வணங்கிக்கொண்டால்
ஏகுமடா வல்பிணியு மியம்பினேனுன்
ஓங்கிடவே யிவன்வயதோ ரெழுபதுக்குள்
உத்தமன்றான் கண்டமட்டி லுயர்வுதானே.

(இ-ள்) மேலேசொன்ன தோஷங்கள் யாவும்நீங்கின என்றாலும், இந்த ஜாதகன் ஜனித்த வயது 26-ல் கொடிய கெண்டம் ஒன்று உண்டாகும். அவை எவ்வாற்றாலெனின்? இராகுவின் தோஷத்தாலென்க. மேற்படி கெண்டமானது வியாதி உண்டாகிய 5-மாதங்கள்வரையில் அளவிட முடியாத துன்பமும் அலைச்சலும் உண்டாக்கும். ஆதலால் மேற்படி கெண்டமும் துன்பமும் விலக, ஸ்ரீ சிவபிரானது திருப்பாத கமலங்களை வணங்கினால் அவனுக்கு உண்டாகிய துன்பத்தைத்தரும் பிணி முதலியன நீங்கும் என்றும், இவன் வயது 70-வரையில் இவனுக்கு உண்டாகிய யோகபாவங்கள் மிக்க மேன்மையுடையதாகவே இருக்குமென்றுங் கூறுக எ-று.

(வி-ரை) ஜாதகன் வயது 26-ல் கொடிய கெண்டமுண்டென்றும், அவை நீங்க ஸ்ரீ சிவபிரானை வணங்கவேண்டுமென்றும், அவ்வாறு வணங்குவதாலேயே மேற்படி கெண்டாதி கெண்டம் நீங்குமெனவுங் கூறினார். ஏனெனில்? அவை இராகு தோஷமென்றுங் கூறியுள்ளார். முன்சொன்ன 37-ஆம் செய்யுளில் இராகு உச்சமென்றும், இராகு கேதுக்களுக்குரிய ரேகையிடம் அஸ்தத்தின் அடியிலும் நுனியிலும் என்றும், அதனைக் கண்டு பிடிப்பது மகா கடினமென்றும் கூறியிருத்தலாலும், மேற்படி இருபத்தாறும் வயதில் தன் கையிலுள்ள ரேகையானது தனது அஸ்தத்தின் விரல் நுனியில் செல்லும். ஆதலால் அக்காலம் கெண்டாதி பீடை முதலியன உண்டு எனவும் கூறியுள்ளார். இதுவன்றி வயது 70-வரையில் யோகம் என்றது. மேற்படி மயேந்திரரேகையின் பொது லக்ஷணமாகும். 5-மாதம் வரையில் வியாதியால் அலைவான் என்றது அக்காலம் சனி ரேகையை தாண்டும் காலமாதலால் அவ்வாறு கூறினார் எனக்கொள்க. 40

வாவென்ற விவன்வயது பதினேழாண்டில்
தகைமையில்லா நாற்காற்றான் குத்தித்தள்ளும்
தானென்ற பதின்மூன்று வயதிலேதான்
தாட்டவே சத்துருவால் மெலிவான்மைந்தன்

ஊனென்ற விருபத்தா றுகுமாண்டில்
உயரவேகை முறிந்து விழுவான்பாரு
கானென்ற காட்டிலேதான் போகும்போது
கரடியிவன் மேல்விழுந்து பாயுமென்னே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த 17-வது ஆண்டில் மதங்கொண்ட நாற்கால் ஜீவன் ஒன்றானது இவனைக்குத்தி கெண்டமுண்டாக்கும் எனவும், மற்றும் தான் பிறந்த பதின்மூன்றாம் வயதில் தனது சத்துரு என்னும் பகைவனால் தனது தேகம் மெலிவடைந்து இம்சையைத்தரும். இதுவுமன்றி தன் வயது 26-ல் ஓர் உயரமான இடத்திலிருந்து கீழே விழுந்து கைமுறிந்து போகும் எனவும், மற்றுமொருகாலத்தில் இவன் காட்டின்மார்க்கமாய் பிரயாணம் செய்யும்போது கரடியானது இவன்மீது பாய்ந்து இம்சை செய்யும் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனுக்கு உண்டாகும் கெண்டாதி கெண்டங்களைக் கூறுவாராயினர். எப்படியெனில்? பதின்மூன்றாம் வயதில் பகைவராலும், 17-ஆம் வயதில் நாற்கால் ஜீவன்களாலும், 26-ல் உயரத்திலிருந்து வீழ்வதாலும் கெண்டாதிகெண்டம் உண்டாகுமென்று கூறியுள்ளார். நாற்கால் ஜீவன்களால் என்றது ஆடு மாடுகள் குத்தி காயமுண்டாக்குமென்றும், பகைவரால் என்றது தன் பகைவரின் சண்டை முதலியவற்றால் காயமுண்டாதல் சூன்னியம் முதலியன உண்டாதல் என்றும், உயரத்திலிருந்து வீழ்வது மலை மரம் சுவர் முதலியவைகளிலிருந்து வீழ்தல் என்றும் கொள்ள வேண்டும். மற்றும் இந்த ரேகையைப்பற்றிய பொதுவிஷயங்களை முன் கூறிய அனேக செய்யுள்களால் நன்குவிளக்கிக் காட்டியுள்ளனவாதலால், இங்ஙனம் அதிகம் கூறவேண்டுவதில்லை. பொதுவாய் இவனது யோக வாழ்க்கை முதலியன ஒருவாறிருக்கினும், மேற்சொன்ன ரேகைகள் ஆறும் மேற்குறித்த வயதில் சனிமேட்டையடையும் எனவும், அதனாலேயே அக்காலம் கெண்டாதிகெண்டங்களைக் கூறியுள்ளாரென்றும் கூறவேண்டுவதாகிறது.

41
என்னவே யிவன்வயது முப்பத்தாறில்
ஏந்திழையாள் தன்னாலே விலங்கில்வீழ்வான்
உன்னவே யிருபத்தா றுண்டிலேதான்
உற்பனமாய் வெடிமருந்தில் வேவானப்பா
பன்னவே யிருபத்தெட் டாண்டிலேதான்
பாலகனு நீராலே மெலிவானப்பா
கன்னவே கண்டமட்டின் மைந்தனுக்குக்
கருணையா லாச்சுதென்று கனிந்துகூறே.

(இ-ள்) மற்றும் இவன் வயது 36-ல் பெண் ஒருவளால் தண்டனையாகிய விலங்கு முதலியன கிடைக்கும் எனவும், 26-ஆம் வயதில் வெடிமருந்து என்னும் அக்கினியையுடைய வஸ்துவால் சரீரம் வேகும் எனவும், மற்றும் வயது 28-ல் இந்த ஜாதகன் ஜலத்தால் கெண்டமுண்டாகும். ஆயினும்

இதுவரையில் கூறிவந்த கெண்டாதி கெண்டங்களெல்லாம் ஸ்ரீ குமரப் பெருமான் கிருபையால் நீங்கி உயிர்பெற்றான் எனவுந் திண்ணமாய்க் கூறுக எ-று.

(வி-ரை) இங்கு கூறிவரும் ரேகையானது தன் வயது 26-ல் சூரியன் மேட்டை அடையும். ஆதலால் அக்காலம் அக்கினியால் கெண்டமுண்டென்றும், 36-ல் மேற்படி ரேகையான ஆயுள் ரேகையைப் பிளந்து சுக்கிரன் மேட்டை அடையும் ஆதலால் அக்காலம் ஸ்திரீகளால் தண்டனை என்னும் விலங்குண்டாகும் எனவும், 28-ஆம் வயதில் மேற்படி ரேகையானது ஆயுள் ரேகையைப் பிளந்து சனிமேட்டை தாண்டி சந்திரமேட்டை அடையுங் குணமுடையது ஆதலால் அக்காலம் ஜலத்தால் கெண்டமுண்டு என்றாலும், மேற்படி ரேகையானது ஆயுள்ரேகையின் இடையிலிருந்து செல்லத் தகுந்த தாகையால்பிராணனுக்கு அழிவில்லை என்றும், இவை தெய்வச்செயலென்றுங் கூற இடமுண்டாயிற்றெனக. இதனால் பிறவிகாலங்களில் உண்டாகிய ரேகை யானது நாளடைவில் வளர்ந்து மரத்தின் வேர்போன்று பல இடங்களிலும் ஓடிச் செல்லத் தகுந்ததென்றுகூற இடமுண்டாகிறது. ஆனதால் அந்தந்த ரேகைகளின் இருப்பிடம் எங்கு என்பதையும் எப்படிசமாய் வளர்ந்து செல்லக்கூடியது என்பதையும் எங்குபோய் முடிவடையும் என்பதையும் ஆராய்ந்து கூறுவது நலம்.

42

கூறியிவன் ரோகணியிற் செனனமானான்
குறிப்பான பொன்வார முச்சிதன்னில்
பாரியிவன் பதினான்காம் வயதிலொன்று
பாலகற்கு விவாகமது படியுமன்றோ
தாரிலிவன் தனவானும் முப்பத்தாறில்
தைரியங் கொண்டாடும் தாட்டிகனேயாவன்
தோர்வில்லா திருமனையுங் கட்டிவாழத்
தோன்றுதலே மங்கையிடத் துயரம்போமே.

(இ-ள்) இந்த ஜாதகனின் அஸ்தரேகையின் இலக்ஷணப்படி இவன் ஜனித்த நக்ஷத்திரமானது உரோகணியாகும். மற்றும் பொன்வாரமாகிய குருவாரமென்னும் வியாழக்கிழமையில் உச்சிநேரமென்னும் பகல் நாழிகை 15-ல் பிறந்தவனென்றுங் கூறுவதோடு இவன் ஜனித்த வயது 14-ல் மங்கள மாகிய விவாகாதிசுபங்கள் நடக்குமெனவும், மற்றும் தன் வயது 36-க்குள் மிக்க தைரியவீர பராக்கிரமம் உடையவன் என்றும், மூன்று இல்லங்களைக் கட்டி வாழத்தகுந்தவ னென்றும், மனைவி என்னும் மங்கைக்குள்ள துன்பம் யாவும் நீங்கும் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் 14-ல் விவாகம் என்றும், அவை ஒன்று என்றும் கூறி கீழ்வரும் செய்யுளில் இந்த ஜாதகனுக்கு இருமனைவி என்றும் கூறியிருத்தலால், தன் வயது 34-ல் இரண்டாம் விவாகம் நடக்குமென்றுங் கூற இடமுண்டாகிறது. இச்செய்யுளின் இறுதியில் 'தோன்றுதலே மங்கை யிடத்துயரம் போமே' என்றதால் தன் மனைவியின் துன்பம் நீங்கும் எனவுங்

கூறவேண்டியதாகிறது. ஆதலால், மேற்சொன்ன வயது 36-ல் முதல் மனைவிக்குள்ள சரீரதுன்பம் நீங்கும் என்றதாலும், முன்சொன்ன 41-ஆம் செய்யுளில் தன் வயது 36-ல் பெண்களால் விலங்குவரும் என்ற காரணத்தால் முதல் மனைவியானவள் மேற்படி 36-ல் தற்கொலை செய்து கொள்வாள் என்றும், அதனால் இந்த ஜாதகனுக்கு விலங்குண்டாகும் என்றும் 36-க்குப் பின்பே இரண்டாம் விவாகம் நடக்குமென்றும் உள்ளுரை கூறலாம். மற்றும் 36-ஆம் வயதில் தாட்டீகன், தனவான், மூன்று இல்லங்களைக்கட்டி வாழ்பவன் என்றது அவனது யோகத்தைப் பொருத்ததாகும். மற்றும் விவாகங்களைக் கீழ்வரும் செய்யுளாலறிக. 43

போமென்ற விவனுக்குத் தாரம்ரெண்டு
புகழுவே பெற்றபிள்ளை யைந்துண்டாகும்
காமென்ற விவன்மாதா முப்பத்தெட்டில்
கைம்முறையாய் பரமபத மடைவாளப்பா
ஊமென்ற விவன்பிறந்த நாற்பத்தைந்தில்
உத்தமனு மிறந்திடுவா னுயர்வுதானே
காமென்ற விவன்வயதோ ரெழுபதுக்குள்
கைலைதனை யடைந்திடக் காரணமாமென்னே.

(இ-ள்) இந்த ஜாதகனது மனைவி விஷயங்களை சோதிக்குமிடத்து களத்திரம்-2 என்றும் கூறவேண்டுவதாகும். புத்திரவர்க்கங்கள் எத்தனையெனில்? 5-என்றுங் கூறுக. மற்றும் இவனது தாயானவள் இவன் வயது 38-ல் கட்டாயமாய் மரணமடைவாள். இதுவன்றி இவனது பிதாவின் ஆயுளைக் கூறுமிடத்து இவன் வயது 45-ல் பிதா இறந்துபோவான். இந்த ஜாதகனது ஆயுளைக் கூறுமிடத்து இவன் வயது 70-க்குள் கட்டாயம் மரணமடைவானெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இதுகாறும் கூறிவந்த செய்யுளால் இவனது களத்திர விஷயங்களைப் பொதுவாய்க் கூறியுள்ளனரேயன்றி நிலைகூறவில்லையாயினும் இச்செய்யுளால் களத்திரம் இரண்டு எனக் கூறியது கவனிக்கத்தக்கது. மற்றும் பிதா மாதா ஜாதகன் முதலியவர்களின் ஆயுளையும் புத்திரர்கள் 5-எனவும் நிலைமைபெறக் கூறினார். இரேகை விஷயமாய்க் கவனிக்க வேண்டிய சில முக்கிய விதிகள் என்னவெனில்? எந்தெந்த ரேகைகள் வளரும் தன்மையுடையதெனவும், எந்தெந்த ரேகைகள் முற்காலத்தில் அமைந்ததுபோலவே இருப்பதென்பதையும் ஆராயவேண்டுவது முக்கிய கடமையாகும். அவ்வாறு தெரிந்த பிறகே பலன்கூற ஏதுவாகும். ஆதலால் ரேகைகளை நன்கு கவனிப்பது நலம். உதாரணமாய் குதிரை ஒன்றாயினும், பலவேறு செய்கையும் பலமும் உடையதாகிறது. அரபிக் குதிரைக்கும் நாட்டுக் குதிரைக்கும் உள்ள வித்தியாசத்தை கவனியுங்கள். குதிரை ஒன்றாயினும் குணம் வேறு. ஏனெனில்? அதன் அங்க லக்ஷணமேயாகும். அதுபோன்ற ரேகைகள் ஒன்றாயினும் அதன் நீளம் இடம் வளர்ச்சி முதலியவற்றால் அவரவர்கள் அந்தந்த ரேகையின் குணகுணத்தைப் பலவாறு

அநுபவிப்பர். மற்றும் ரேகை விவரங்களைப் பின்வரும் செய்யுளாலுங் காண்க. 44

### மயேந்திரரேகை ஆறின் பலன்

காரணமா மயேந்திரந்தா னாறுண்டானால்
காட்சிசொல்வே னிவன்வாழ்வு கருணைகூர்ந்து
வாரணமா முனிவர்களு முமையாந்தாயும்
வகுத்துரைத்த கட்டளையின் வகையைக்கேளாய்
பூரணமா முமையவளை ரிஷிகளெல்லாம்
போற்றிசெய்தே யடிவணங்கிப் புலனைக்கேட்க
நாரணனு நான்முகனுங் கும்பமூர்த்தி
நாதாக்க ளனைவோரு நன்றாய்க்கேளே.

(இ-ள்) எவ்வுலகினும் செகச்சோதிமயமாய் எவரும் போற்றற்குரிய வஸ்துவாய் விளங்காநின்ற ஸ்ரீசத்திதேவியை விஷ்ணு முதல் பிரமன் வரையில் வணங்கிக் கேட்டுத் தெரிந்து கொண்டதும், அகத்தியமாமுனிவர் மேற்படி தேவியினது அடிகளைவணங்கி உபதேசம் பெற்றதும், முனிவர் சித்தர்கள் ரிஷிகள் முதலிய யாவரும் மேற்படி தேவியைத்தொழுது ரேகை விஷயங்களை சொல்லவேண்டுமென்று இறைஞ்சிக் கேட்டதுமாகிய இந்த ரேகை சாஸ்திரத்தை என்னால் தெரிந்தவரையில் மயேந்திரரேகை ஆறுடையவனது வாழ்வுமுதலியவற்றைக் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ரேகை சாஸ்திரமானது ஸ்ரீசத்தி தேவியின் மூலமாகவே விஷ்ணுமுதல் நான்முகனும், சித்தர்கள், முனிவர்கள் முதலிய யாவரும் தெரிந்து கொண்டனர் என்று கூறவேண்டுவ தாகிறது. மேற்படி முனிவர்களில் மிகச் சிறந்தவர் அகத்தியரே யானதாலும், மேற்படி அகத்தியருடன் கலந்து ஞான ஆராய்ச்சியை யடைந்து முத்தியடைந்தவர் பலருள் இந்நூலாசிரியராகிய கமலமாமுனிவரும் ஒருவராதலாலும் 'வாரணமாமுனிவர்களும் உமையும் தாயும் வகுத்துரைத்த கட்டளையின் வகையைக் கேளாய்' என்றனர். அதுவன்றி அண்டாண்ட சராசரங்களுக்கும் ஆதார புருஷரான ஸ்ரீவிஷ்ணுவும் நான்குமுகத்தையுடைய பிரம்மனும் இந்த ரேகைசாஸ்திரத்தை ஸ்ரீசத்திதேவியினிடமிருந்தே தெரிந்துகொண்டாரென்றால் என்னால் உரைக்கப்போமோ? இல்லை. ஆதலால் யான் எனது சொந்த அறிவால் சொல்லாது எனது தாயாகிய சத்திதேவியும் முனிவர்களும் கூறியதை யானும் கூறுகிறேன் என்னும் கருத்தை யமைத்து 'முனிவர்களும் உமையும்தாயும் வகுத்துரைத்த கட்டளை' என்று முடித்து, பின் அந்தந்த ஜாதகனின் வாழ்வு யோகம் முதலியவற்றைக் கூறத்தொடங்கினர் என்பதாம். 45

கேட்கவே மால்விரலில் ரெண்டுகீறு
கேவலமாய் நான்குவரை சிறியபுள்ளி
ஆட்கவே வவன்கையிலே யிருக்குமாகில்
அன்பான யோகவா னறிந்துபாராய்

நாட்கவே யிவன்பிறந்த யோகவாழ்க்கை
நன்றாகச் சொல்லுகிறே னடிக்கேட்பாய்
வாட்கவே மைந்தனுந்தா னிடக்கண்சாயல்
வந்தவிவற் குடற்பிறப்போ ரேழுபேரே.

(இ-ள்) மால்விரல் என்னும் நடுவிரலில் கீற்றுகள் இரண்டும் மேற்படி விரலானது நான்கு வரையாகவும் மேற்படி வரையில் சிறுசிறு புள்ளிகளும் இவனது அஸ்தத்திலிடமாய் அமைந்திருக்குமேயாமானால் அவனது பலாபலன்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில், இந்த ஜாதகன் மிக்க யோகமுடையவனாக இருப்பான். இன்னும் சொல்லுகிறேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகன் இடக்கைசாயலுடையவன். (அல்லது கருடபார்வை யுடையவன்) என்றுங் கூறுவதோடு இந்த ஜாதகனின் உடன்பிறந்த சகோதர சகோதரிகள் ஏழுபேர் என்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) பிரம்மவிரல் என்பது ஆள்காட்டி விரலும், விஷ்ணுவிரல் என்பது நடுவிரலும், உருத்திரவிரல் என்பது மோதிரவிரலும், ஆகுமென சாஸ்திரங்களில் கூறியிருத்தலால் இச்செய்யுளில் 'மால்விரல்' என்று கூறியதற்கு நடுவிரல் என்று கூறலாயிற்று. இரண்டுகீறு என்பது மேற்படி நடுவிரலின் எந்த பாகத்திலேனும் கணுக்களில் உள்ள கோடுகள் 2-ஆக இருக்கவேண்டும் என்றும், நான்குவரை என்றது நான்கு துண்டுகள் போன்று காணப்படவேண்டும் என்றும், சிறியபுள்ளிகள் என்பது மேற்படி விரலின் கணுக்களிலுள்ள ரேகையில் சிறுசிறு புள்ளிகள் காணப்படவேண்டுமென்றுங் கொள்க. இவ்வாறு அமைந்துள்ள கைகள் அனேகமாயிருக்கும். ஆயினும் கணுக்களிலுள்ள ரேகைகளில் சிறுபுள்ளிகள் காணப்படுவது கடினம். ஆனதால் மேற்கூறியபடி கணுக்களையும் கோடுகளையும் கவனிப்பது ஒருபுறமிருக்க அதிலுள்ள சிறுபுள்ளிகளைக் காண்பதே விசேஷம். மேற்படி புள்ளிகளாலேயே அவன் வாழ்க்கை விஷயங்களை முன்னதாய் அறியக்கூடும் என்பதை முக்கியமாய் கவனிப்பீராக. 46

பேருடனே யிவன்பிறப்பு முன்னும்பின்னும்
பேணியேயாண்பிள்ளைகள் பிறப்பார்மைந்தா
காருடனே பிறந்ததிவன் றிங்களாகும்
சாட்சாதி யீஸ்வரனுஞ் சோதியாகும்
கூருடனே யிவன்மாதா குளித்தவேழாம்
குவலயத்திற் கெற்பமதாய்க் கூறலாகும்
சீருடனே கருதரித்த வூரைவிட்டு
சிந்தனையாய்ப் போனவிடம் பிறந்தான்றானே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்ததற்கு முன்பிறவியும் பின்பிறவியும் ஆண்பிரஜைகளே ஜனிக்குமெனவும் இந்த ஜாதகன் ஜனித்தவாரமானது சாக்ஷாத் ஈஸ்வரனானவர் சிரசிலுள்ள மகாநல்லிய சோதிமயமாகிய சந்திரனுடைய வாரமாகிய திங்கட்கிழமை என்றும், இவன் தாயானவள்

மாதவிடாயாகி ஸ்நானம் செய்து ஏழாவது நாள் இவன் மேற்படி தாயின் கருவிலுதித்தானென்றும், இவன் கருதரித்த ஊரைவிட்டு பிற்காலத்தில் அன்னிய தேசம் அல்லது கிராமங்களுக்குச் சென்றனர் என்றுந் திண்ணமாய்க் கூறுக எ-று.

(வி-ரை) முன்கூறிய செய்யுளில் இவனது உடன்பிறவி 7-என்றும், இச்செய்யுளில் இந்த ஜாதகனுக்கு முன்னும்பின்னும் ஆண்பிரஜைகளே ஜனிக்குமென்றும் கூறினரேயன்றி, இந்த ஜாதகன் எத்தனையாவது குழவி என்று கூறவில்லை. மொத்த சகோதரர்களில் நடுப்பிறந்தோன் என்று கூற இடமுண்டாயிற்று. இச்செய்யுளின்படி கவனிக்குமிடத்தும் இங்கு கூறுவதும் நடுவிரல் ரேகையைப்பற்றியே யாதலாலும் இந்த ஜாதகன் பிரவி மொத்தம் ஏழில் நடுப்பிறந்தோன் என்று கூறுகையில் இந்த ஜாதகன் நான்காம் பிறவி என்றுகூற இடமுண்டாகிறது. ஜாதகரது யோகங்களையும் ஆயுள் முதலியவற்றை பின்வரும் செய்யுளால் விளக்குவா ராயினும் மேற்கூறிய நடுவிரல் ரேகையைக்கொண்டே விளக்கிக்கொண்டு வருவதால் இதற்கு வேறு காரணம் கூறவும் முடியவில்லை ஆதலால் இவை ஏகரேகை என்றுங்கூற இடந்தருகிறது.

47

பிறந்தமனை சிறுகூரை பிதாவுமில்லை
　　பின்னுமுன்னு மனிதரின்றிப் பிறந்தான்மைந்தன்
அரன்றுணையா லிவன்பிறந்த யேழாமாண்டில்
　　ஆத்தாளைக் கொன்றிடுவா னவனுந்தானும்
பரந்தானே யிவன்பின்னே பிறந்தமைந்தன்
　　பக்குவமாய்க் காலுடனே நயனமில்லான்
குறைந்தவிம் மைந்தனுக்குப் பெண்ணேபாட்டி
　　குற்றமில்லா யிளையபிதா குருடுங்காதிலனே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த இல்லமானது சிறுகூறைவீடு என்று கூறுவதோடு இந்த ஜாதகன் பிறந்தகாலத்தில் இந்த ஜாதகனின் பிதாவானவன் வீட்டில் இல்லை என்றும், வெளியே சென்றிருந்தான் எனவும், பிறக்குங்காலம் இவன் தாய்க்கு எவ்விதத்துணைவர்களும் இல்லாது பிறந்தான் எனவும், ஸ்ரீ சிவபெருமானது கிருபையால் இவன் பிறந்த ஏழாவது ஆண்டிலேயே தாயைக் கொன்றுவிட்டான் எனவும், இவனுக்குப் பின் சகோதரனாய் ஜனித்தவனும் காலும் கண்ணும் இல்லாது முடவனாய் ஜனித்தான் என்றும், உடனே இறந்து போனான் என்றும், மேற்சொன்ன முடவனுக்குப் பின் பிறந்தவள் பெண் என்றும், இவளது பாட்டியானவள் எவ்வித அவயவப்பழுதும் இல்லாதவள் என்றும், இவனது இளையதந்தை யானவன் குருடனும் செவிடனுமாக இருப்பான் எனவுங்கூறுக எ-று.

(வி-ரை) 'பின்னுமுன்னும் மனிதரின்றிப் பிறந்தான்' என்றதால் இந்த ஜாதகன் ஜனித்தகாலத்தில் இவன் தாய்க்கு எவ்வித துணையும் இன்றி தனித்திருந்தநேரம் பிறந்தான் என்று கூறவேண்டியதாகிறது. இவனுக்கு பின் பிறந்த சகோதரன் காலும் கண்ணும் இல்லாதவனாகப் பிறந்து உடனே

இறந்துபோனான் என்றும், இவனுக்குப் பின் பிறந்ததே பெண் எனவும், மேற்படி குருடனும் மூடவனும் பிறந்தது வம்சவிருத்தியையறியும் பொருட்டே 'இளையபிதா குருடும் காதிலனே' என்று ஞாபகார்த்தமாய் கூறியதாகும். பிறந்த ஏழாம் வயதில் தாயைக்கொன்று விடுவான் என்றது மேற்படி ரேகையின் பொதுலக்ஷணமாகும். இதனை மற்றுமனேக நூற்களில் நடுவிரலில் நான்கு கணுக்களுடன் கூடிப்பிறந்தவன். தாய் சுகமில்லான், சகோதாருக்கு அஞ்சான், துற்மார்க்கன், துர்விஷய சிலவுடையவன் என்றும் கூறியுள்ளன. இவ்விஷயங்களைப் பின்வரும் செய்யுளாலும் தெளிவாய் காணலாம். 48

காதிலாச் சிறுவன் முப்பத்திரண்டில்
கருணையாந் தலைவனுந் தானிறந்தானப்பால்
வீதிலா விவனுக்கிங் குரிமையில்லை
விருதாவின் மைந்தனுந்தா னலைவானப்பா
தீதிலா விவன்தன்னைப் பிடித்தேதானடத்தச்
செகதலத்தி லொருத்தரில்லை சிவனல்லாது
பூதலத்தி லிவன்பிறந்த பதினேழாண்டில்
புதல்வனிவன் வெகுதுயரத் தலைவன்றானே.

(இ-ள்) தனது முன் பிறந்தோனானவனும் காது செவிடானவனுமாகிய ஜேஷ்டன் இந்த ஜாதகன் வயது 32-ல் உயிர்மாண்டான் எனவும், இந்த ஜாதகனும் தனது சுய இல்லத்தில் எவ்வித உரிமையும் இல்லாது விருதாவாய் பலவாறு அலைந்து திரிந்துகொண்டிருப்பான். இந்த ஜாதகனை அடக்கியாளத்தக்கவன் ஸ்ரீ சிவபெருமானேயல்லது இப்பூமியின்கண் எவரும் இல்லையென்றே கூறுவதற்கு இடமுண்டாகும். மற்றும், இந்த ஜாதகன் ஜனித்த பதினேழாம் வயதில் தனது சுயதேசத்தைவிட்டு பலதேயங்களில் சென்று அளவிடமுடியாக் கஷ்டத்தால் அலைந்து திரிந்துகொண்டிருப்பான் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் இரண்டாம் அடியில் 'கருணையாந் தலைவனுந் தான் இறந்தான்' என்றதால், இவனுக்கு முன்பிறந்தவனும், தயாளகுணமும் உள்ள தமையன் இறந்துபோனான் என்றும், அவன் எப்படிப்பட்டவனெனில் 'காதில்லாச் சிறுவன்' என்றதால் மேற்படி தமையனுக்கு 'காது இல்லான்' என்றமையால் மேற்படி தமையன் செவிடன் என்றும், எந்த காலத்தில் இறந்தானெனில்? முதல் அடியிலேயே: முப்பத்திரண்டில் என்று கூறியிருத்தலாலுணர்க. 'அப்பால் வீதிலாவிவனுக்கிங் குரிமை இல்லை' என்றமையால், மேற்படி தமையன் இறந்த பிறகு இந்த ஜாதகனுக்குத் தனது சுயயில்லத்தில் எவ்வித உரிமையும் இல்லை எனவும் கூற இடமுண்டாவதோடு பலவாறு அலைந்து கஷ்டப்படுவான் என்றும் கூறியுள்ளதை அறியலாம். இந்த ஜாதகன் எந்த இடம் சென்றான் என்பதை எவராலுங் கண்டுபிடிக்க இயலாது. ஸ்ரீ சிவபிரானே அறிவான் என்னும் கருத்தையொட்டி 'தீதிலா விவன்றன்னைப் பிடித்துத்தேட செகதலத்தில் ஒருவரில்லை சிவனல்லாது'

என்றுகூறி முடித்தமையால் இவன் சென்று அலையும் இடமானது மானிடர்கள் எவராலும் கண்டுபிடிக்க முடியாது என்றுங் கூறவேண்டுவதாகிறது. இதற்குப்பின். இவன் வயது 17-ல் அளவிட முடியாத்துயரத்தால் வருந்துவான் என்றதால் இந்த ஜாதகன் தன் வயது 17-முதல் கஷ்டத்தையே அடைவான் என்றுங் கூறலாம். 49

அலைவதப்பா வனேகமாந் தொல்லைபட்டு
ஆதரவின் றுளங்கலங்கி மயங்கிஞன்பார்
நிலைவதப்பா விருபத்தா றுண்டிலேதான்
நீதியுள்ள மைந்தனுக்கு யோகமாகும்
அலைவதப்பா பதின்மூன்று மாண்டிலேதான்
அன்பான நீரதனுற் கண்டமாகும்
மலைவதப்பா விருபத்தெட் டாண்டிலேதான்
வல்பிணியாற் கண்டமொன்று வந்ததன்றே.

(இ-ள்) முன்கூறியபடி வயது 17-க்குப்பின் இந்த ஜாதகனை எவரும் காப்பாற்றத்தகுந்த ஆதரவு இன்றி அளவிடமுடியாத தொல்லைகளனேகம் உடையவனாகி உள்ளங்கலங்கி அவஸ்தைப்படுவான் எனவும், இந்த ஜாதகன் ஜனித்த வயது 26-க்குப் பின்பே இவனுக்கு யோகம் உண்டாக ஏதுவாகுமெனவும் கூறவேண்டுவதோடு இந்த ஜாதகன் ஜனித்த பதின்மூன்றும் வயதில் ஜலத்தால் கெண்டமுண்டாகும் எனவும், மேற்படி வயது 28-ல் துன்பத்தைத் தரத்தகுந்த பிணியால் கெண்டமுண்டாகும் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) முன்கூறிய 49-ஆம் செய்யுளில் இவன் வயது 36-க்குப்பின் இந்த ஜாதகனுக்கு தன் பிதுர் இல்லத்தில் எவ்வித உரிமையும் இல்லையெனக் கூறினர். ஆயினும், இச்செய்யுளில் தன் வயது 26-ல் யோகமுண்டென்றும், முன் செய்யுளில் கூறியபடி 17-ஆம் வயதில் சிலகாலம் வெளிதேயம் சென்று திரிந்தலைவான் என்றபடி 17-ஆம் வயதில் வெளியூர் சென்று அலைவான் என்றும், 26-ல் யோகமுண்டாகு மென்றும், 32-ல் சகோதரமூல பங்குபாகங்கள் பிரியுமென்றும், கூறவேண்டியதாகிறது. மற்றும் 13-ஆம் வயதில் ஜலத்தால் கெண்டமுண்டென்றும், 28-ல் துன்பத்தைத் தரத்தக்க பிணியால் கெண்டமுண்டாகும் என்றதும் வேறென்றே கூறவேண்டும். இதுகாறும் கூறிவந்த மயேந்திரரேகை ஆறுள்ளவனது பலாபலன்களைக் கூறிய செய்யுள் 6-ஐயும் கவனிக்குமிடத்து இந்த ஜாதகனைக் குறித்துமாத்திரம் யோகமார்க்கங்களைக் கூறியுள்ளனரேயன்றி தனது குடும்பம் சகோதரர் முதலியவர்களுக்கு யோகம் கூறவில்லை. ஏனெனில்? 'நடுவிரல்' என்பது ஆணவன் என்று பொதுசாஸ்திரவிதியெனக் கூறியதாலும், அதில் பலபுள்ளிகள் இருந்தாலும்; என்றே கூறவேண்டுவதாகிறது. 50

அன்றுனே மயேந்திரந்தா னுறுண்டானுல்
அன்னவனு மியோகவா னுவான்பாராய்
நன்றுன விவன்வயது முப்பத்தாறில்
நலமுள்ள கன்னியைத் தானடிச்சேர்வான்

குன்றான குமரனிட வுதவியாலே
குவலயத்திற் பிறந்துவந்தான் தேவனுகும்
பன்றான மனையழித்து நாற்பத்துமூன்றில்
பதியிலிவன் புதுமனையு மெடுப்பான்பாரே.

(இ-ள்) மயேந்திர ரேகையானது முன்கூறியவண்ணம் ஆறுரேகைக ளாக இருக்கப்பிறந்தவன் பலன்கள் என்னவெனில்? இந்த ஜாதகன் அள விறந்த பாக்கிய யோக்கிய சிலாக்கிய மேம்பாடுடையவனும் யோகமுடைய வனுமாக இருப்பான். இந்த ஜாதகன் வயது 36-ல் நன்மையைத் தரத் தகுந்த பெண் ஒருவளை யடைவான். இந்த ஜாதகன் தேவவமிசத்தில் பிறந்தவனுதலால் ஸ்ரீகுமாரக்கடவுளினது அனுக்கிரகத்தால் இப்பூமியில் மானிடனாய் பிறந்தவனென்றும் தன் வயது 43-ல் தனது பழய இல்லத்தை யழித்து புதுமனையாக்குவான் என்றுங் கூறுவாராக எ-று.

(வி-ரை) 'நலமுள்ள கன்னியைத் தான்நாடிச் சேர்வான்' என்றதால் உத்தமஸ்திரீயை யடைவான் என்றுகூற ஏதுவாயினும், இந்த ரேகைக்குக் கூறிய 6-செய்யுளாலும், இனி கூறப்போகும் 5-செய்யுளாலும், இவனது விவாக விஷயங்களைக் கூருமையால், மேற்சொன்ன வயது 36-ல் ஓர் உத்தமஸ்திரீயை விவாகம் செய்துக்கொள்வான் என்று கூறவேண்டுவ தாயிற்று. 'குன்றான குமரனிட உதவியாலே, குவலயத்தில் பிறந்துவந் தான் தேவனுகும்' என்றதால், இந்த ஜாதகன் தனது முன்ஜென்மத்தில் தேவவமிசத்தில் இருந்தான் என்றும், இந்த ஜென்மத்தில் குன்று என்னும் மலையில் அமர்ந்துள்ள ஸ்ரீகுமாரப்பெருமான் கிருபையால் மானிடனாய்ப் பிறந்தான் எனவுங் கூறலாம். இவ்விரண்டு வாக்கியங்களாலும் நாம் முக் கியமாய் அறியவேண்டுவ தென்னவெனில்? தேவவமிசமாயிருந்த இவன் ஏதோ ஓர் ஆசாபாசத்தால் இந்த ஜன்மத்தில் மானிடனாய்ப் பிறந்து தன் பூர்வஜன்ம வாசனையால், தனது இல்லத்துணைவியாகிய மனைவியை உத்தம முடையவளாய் அடைந்து இல்லறசுகங்களை யனுபவிப்பான் என்பதே யாகும். 'தேவர்களும் மானிடராய் பிறப்பதுண்டு' என்றும், 'ஆசைக்கொரு ஜனனமுண்டு' என்றும் கூறிய பெரியார்வாக்கும் இங்கு பொய்க்காதிருக் கிறதென்பது அறியப்படுகிறது.

51

பாரடா விவன்வயதோ ரெழுபத்திரண்டு
பத்தனுக்குச் சக்கரத்தின் கருவமைப்பு
சீரடாவிவன் யாக்கை யொருவனுகும்
சிவப்பிரமாய் நவக்குழந்தை பிறக்குமன்றே
காரடா விவனைத்தா னரனுமம்மை
கடாட்சிக்கப் பிறந்தமைந்தன் கடவுள்பத்தன்
கூறடா வவனுக்குக் கிரகம்ரெண்டிற்
கொற்றவனும் உச்சமென்று கூறுவோமே.

(இ-ள்) இங்கு கூறிய மயேந்திர ரேகையின் பலாபலப்படி இந்த ஜாதகனுக்கு வயது-72 எனவும், இந்த ஜாதகனுக்கு உடன் பிறந்தோர் அநேகர்

பிறக்கினும் நிலைத்திருப்பது இவன் ஒருவனே எனவும், இவனுக்குண்டாகும் புத்திர உற்பவங்கள் மொத்தம் 9-எனவும், இந்த ஜாதகன் மகா பரஞ்சோதி மயமாயுள்ள ஸ்ரீசர்வேஸ்வரனுக்கும், சத்திதேவிக்கும் மகா அன்புடைய பக்தனுதலால் இவ்விருவர்களது கிருபா கடாக்ஷத்தால் மானிடனுய் பிறந்தவன் எனவும், இந்த ஜாதகன் ஜென்மலக்கினம் எவையோ அந்த லக்கினத்திற்கு இரண்டில் உச்சகிரகம் உண்டு என்றுங் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் ஈஸ்வரன் ஈஸ்வரியாகிய இருவருக்கும் அன்பார்ந்த பக்தன் எனவும், மேற்படி இருவர்களது கிருபா கடாக்ஷத்தாலேயே இவன் மானிடனுய் பிறந்தான் என்றும் கூறியதோடு, முன்கூறிய 46-ஆம் செய்யுளில் 8-ஆம் அடியில் 'வந்தவிவற் குடன்பிறப்போ ரேழுபேரே' என்று கூறி, இச்செய்யுளின் 3-ஆம் அடியில் 'சீரடா இவன் யாக்கை யொருவனுகும்' என்று கூறியதால், இந்த ஜாதகனுக்கு உடன் பிறந்தோர் மொத்தம் ஏழுபேர் என்றும், நிலைத்திருப்பவன் இவன் ஒருவனே என்றுங் கூறவேண்டியதாயிற்று. கொற்றவனுக் குச்சம்' என்முர். 'கூறடா இவனுக்கு கிரகம் ரெண்டிற் லக்கினத்திற்கு இரண்டில் குரு உச்சமாயிருப்பான் என்றமையாலும், குருவுக்கு உச்சராசி கடகம் ஆதலாலும், மிதுன லக்கினத்தில் பிறந்தவனுக்கே இரண்டாம் வீடு கடகமாகும் ஆதலாலும், இவன் ஜனித்தது மிதுன லக்கினமாகும் என்றும் கூறவேண்டுவதுபற்றியே மற்றும் இச்செய்யுளிலும் ஈசன் ஈஸ்வரியின் கருணையால் மானிடனுய் பிறந்தான் என்பது அறியத்தக்கது. 52

கூறுவோ மிவன்பிறந்த விருபத்தாறில்
குலமகனுந் தீர்த்தங்க ளாடுவான்பார்
பாருவோ மிவன்பிறந்த வைந்தாமாண்டில்
பாலகனும் புலைகளிப்பான் பண்பன்முனும்
நேருவோ மிவன்வயதோர் நாற்பத்தொன்றில்
நேர்மையுள்ள மைந்தனவன் பிறப்பானப்பா
சீறுவோந் திசையோக முடிந்துதப்பா
சீக்கிரத்திற் பிள்ளைகளைப் பெறுவான்பாரே.

(இ-ள்) மயேந்திரரேகை ஆறுடையவன் பலாபலன்களை இன்னும் சொல்லுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகன் ஜனித்த வயது 26-ல் பல தீர்த்தங்களிற் சென்று ஸ்நானம் செய்வான் எனவும், இவன் ஜனித்த வயது 5-ல் புலையென்று சொல்லும் நீச்ச சம்பந்த வழியில் மிக்க பக்குவத்துடன் ஒருவரையும் அறியாது தின்றுகளிப்பான் எனவும், வயது 41-ல் அழகியவனும் ஆயுள் உடையவனுமாகிய மைந்தன் பிறப்பானென்றும், இவனது கொடியதிசையும் யோகங்களும் எந்தகாலத்தில் நீங்கினவோ அதேகாலத்தில் இந்த ஜாதகனுக்குக் குழவிகள் பிறப்பார் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) ஒருவரையும் அறியாது புலை என்னும் மாமிசாதிகளை ஒருவருங் காணுது அருந்துவான் என்பதுபற்றியே 'புலைகளிப்பான்' என்முர். "சீறு



லோர் திசையோக முடிந்ததப்பா, சீக்கிரத்திற் பிள்ளைகளைப் பெறுவான் பாரே" என்றமையால், இந்த ஜாதகனுடைய கொடியதிசையும் யோகமும் என்றைக்கு நீங்கினவோ அந்தந்தக்காலத்தில் இந்த ஜாதகனுக்கு புத்திரர்கள் பிறப்பான் என்று கூறியதாலும், இச்செய்யுளில் ஐந்தாம் அடியில் இவன் வயது 41-ல் பிள்ளை பிறக்கும் என்றதாலும், இவன் வயது 40-வரையில் இந்த ஜாதகனுக்கு பிள்ளைகள் ஜனிக்கும் யோகமில்லை என்றும் 41-ஆம் வயதிலேயே மேற்படி புத்திரயோகம் உண்டெனவுங்கூற இடமுண்டாகிறது. மற்றும் இவனது வாழ்க்கை விவரங்களைப் பின்வரும் செய்யுளால் அறியலாம்.

53

பார்க்கவே யிவன்வயதோ ரெழுபத்திரண்டில்
பவழம்போல் பெற்றமைந்தன் சக்கிரவமைப்பில்
ஊர்க்கவே யிவன்பிறந்தான் றிசையோகத்தில்
உத்தமன்றான் பரமபத மடைந்தானன்றே
கார்க்கவே யீஸ்வரனார் கடாட்சத்தாலே
கருணைவைத்தா ரிவன்றானன் பத்துமூன்றில்
தீர்க்கமா யன்பதுமோ ரைந்திலேதான்
திரமாகப் பூமிகொள்வான் றிரமாய்த்தானே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனித்த அஸ்தரேகைகளினது அமைப்பாலும், இவனது மைந்தனுதித்த அஸ்தரேகையினது லக்ஷணங்களாலும், இந்த ஜாதகன் ஜனித்த யோகாவயோகங்களாலும், இவனது அருமைப் புதல்வனது யோகாவயோகத்தாலும், இந்த ஜாதகன் வயது 72-ல் பரமபதம் அடைவான் எனவும், இவன் வயது 53-க்குமேல் 55-க்குள் ஸ்ரீ சாக்ஷாத் ஈஸ்வரனது கிருபா கடாக்ஷத்தால் பூமிகளும் விசேஷ யோகங்களையும் உடையவனுவான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச் செய்யுளில் முன் கூறிய 52-ஆம் செய்யுளில் கூறியபடியே வயது-72 எனவும், நிர்ணயித்ததோடு இவன் ஜனித்த ரேகை லக்ஷணத்தோடு இவன் வயது 41-ல் பிறந்த மைந்தனது ரேகை லக்ஷணயோக விசேஷத்தால் இவனுக்கு வயது 72-ல் கட்டாயம் மரணம் அடைவான் என வற்புறுத்திக் கூறியுள்ளார். இதுவன்றி, வயது 53-க்குமேல் 55-க்குள் பூமி முதலியன கொள்வன் என்றதால் மேற்படி வயது 53-க்கு முன்பும் பிரமாதமான யோகம் முதலியன உண்டு என்றாலும், பூமிகொள்ளும் யோகம் இல்லையெனவும், மேற்படி யோகமானது மேற்படி வயது 53-க்குமேல் 55-க் குள்ளேயே சுயார்ஜித பூமிகொள்ளும் யோகம் உண்டென்றும் கூற இடமுண்டாகிறது. மேற்படி வயதிலேயே ஸ்ரீ சர்வேஸ்வரன் மேற்படி பூமியோகத்தை அருள் செய்வார் என்றும் நிர்ணயிக்கலாம். மற்றும் பல யோகங்களை முன் கூறிய செய்யுளால் நன்கு விளக்கிக்காட்டி இருப்பதால் அதனை இங்கு விளக்க வில்லை யென்றறிக.

54

தானென்ற விவன்குழவி மூன்றும்பிள்ளை
தனமெடுப்பா னெட்டாண்டிற் றலைவணுகி
வானென்ற விவன்குழவி பத்துக்குள்ளே
வையகத்திற் றனசாலி யாவான்பாராய்

கானென்ற தேவியிட கடாட்சத்தாலே
கணக்கில்லா யோகம்வந்து கதிக்கும்பாராய்
தேனென்ற சிவக்கருத்தை விட்டிடாதே
தேன்மொழியாள் பத்தாவை மறந்திடாதே.

(இ-ள்) மேற்கண்ட ரேகையின்படி இந்த ஜாதகனுக்கு ஜெனிக்கும் மூன்றாவது குழவியானது தான் ஜெனித்த எட்டாம்வயதில் மிக்க பிரசித்தியுடையவனாகி மேலான தனத்தை யடைவதோடு ஜனித்த 10-ஆம் வயதுக்குள் இப்பூமியின்கண் மிக்க மேன்மையைப்படைத்த பலசாலியாயும் தனவந்தனாயும் விளங்குவான். ஸ்ரீபராசத்தியாகிய வாலைத்தேவியினது கிருபா நோக்கத்தால் அளவிடமுடியாத யோகம் உண்டாகும். ஆதலால், உனது உள்ளத்தின்கண்ணுள்ள தேனுக்கொப்பாகியவரும் தேனினும் இனிய மொழியையுடைய ஈஸ்வரியினது மணவாளனுமாகிய ஸ்ரீசிவபிரானை மறவாதே எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கியகருத்தாவ தென்னவெனில்? இந்த ஜாதகன் தனது முன் ஜனனத்தில் தேவாம்சமாய்ப் பிறந்தும் பாசமாகிய ஆசையால் இந்த ஜன்மத்தில் மானிடனாய்ப் பிறந்தவனாதலால் ஸ்ரீசர்வேஸ்வரனது திருநாமங்களை எந்நாளும் இடைவிடாது பஜிப்பானாயின் இவனுக்குப் பிறக்கப்போகும் மூன்றாம் குழவி ஜனித்ததுமுதல் 8-ஆண்டுகளுக்கு மேல் 10-ஆண்டுக்குள் அளவிடமுடியாத யோகத்தையடைவான் என்னும் கருத்தையொட்டி இச்செய்யுளின் இறுதியில் "தேனென்ற சிவக்கருத்தை விட்டிடாதே, தேன்மொழியாள் பர்த்தாவை மறந்திடாதே" என்று கூறி முடித்தனர். மற்றும் மேற்படி மூன்றாவது குழவியானது தன்னுடன் பிறந்தவர்களில் தலைவனாய் விளங்குவான் என்றதால் தனக்கு முன்பிறந்த இருவரும் மரிப்பார் எனவுங்கருத இடமுண்டாகிறது. இதனை அவரவர்கள் கிரக ஆராய்ச்சியாலேயே நிலைகூற இடமுண்டாதலால் இந்த ஜாதகனது புத்திரபாவங்களை நன்றாய் ஆராய்ந்து மேற்படி விஷயங்களை நிலைகூறுவது நலம்.

மறக்காமற் கேசகியா மிரேகைமார்க்கம்
மாட்டுகிறேன் மைந்தனே மருவிக்கேட்பாய்
இறக்காம லீஸ்வரனாரெனக்குச் சொன்னார்
இன்னமுந்தான் மயேந்திரத்தின் விபரஞ்சொல்வேன்
பறக்கவே யிந்நூலை விட்டாயானால்
பவமான நரகத்தில் வீழ்வாய்மைந்தா
பிறக்கவே கேசகியின் மார்க்கந்தன்னை
பிரியமாய்ச் சொல்லுகிறேன் பெற்றபேறே.

(இ-ள்) யான்கூறும் ரேகையினது பலாபலங்களை மறக்காமல் கேட்பாய் அப்படிக் கேட்பாயாயின் இன்னும் சொல்லுகிறேன். இந்த மயேந்திரரேகை ஆறு உடையவனது வருவினைப் பலன்களை பிறப்பு இறப்பு என்பது இல்லாத மகாப் பிரபுவாகிய ஈஸ்வரன் எனக்கு உரைத்தது. ஆகையால், இந்நூலை அவமதித்து வெளியிடுவாயாயின் பவக்கடல் என்னும் பாழ் நரகத்திற்கு

ஆனாவாய். மற்றும் பின்வரும் மயேந்திரரேகை ஏழினது பலத்தையும் கூறுவேன் கவனிப்பாயாக எ-று.

(வி-ரை) இந்நூலானது ஸ்ரீ கமலமா முனிவருக்கு பராசத்தியாகிய ஈஸ்வரியாள் கூறும் நூலென முன்பே கூறியுள்ளேன். ஆயினும், மேற்படி தேவிக்கு எவர் உரைத்தவர் எனில்? ஈசனே உரைத்தார் என்னும் கருத்தினை யமைத்தே 'இறக்காம லீஸ்வரனுர் எனக்குச் சொன்னுர்' என்றனர். இப்படிப்பட்ட மகா மகத்துவம் பொருந்திய இந்த ரேகை சாஸ்திரத்தை அவமதித்து இதனது முக்கிய ரகஸ்யங்களை வெளியிடுவாயாயின் பாழ் நரகமே சித்திக்கும் என்னும் கருத்தாலேயே "பறக்கவே இந்நூலை விட்டா யாஞல் பவமான நரகத்தில் வீழ்வாய்" என்று சாபமிட்டனர். ஆனதால், இந்நூலை எவர் வாசிக்கினும் இதனது உள்ளுரையை தன் மனத்திற்குள் ளேயே அடக்கம் செய்துவந்து வினவுவோருக்கு விஷயபலங்களைக் கூற வேண்டுமே யொழிய, அந்தரங்கத்தைக் கூறலாகாதென்பதேயாகும். இவ்வாறுன கட்டுதிட்டங்களை இந்நூலில் இடையிடையே கூறுகிற்கும். 56

---

# இரண்டாம் காண்டம்

பேருன மானிடனுய்ப் பிறந்தபோதே
பெரிதான ரேகைகளை யறியவேண்டும்
கூருன மயேந்திரந்தா னுறுக்குமேல்
குணமாகக் கண்டக்காற் கூறக்கேளாய்
பாரான புவிதனிலே யிவனைப்போலும்
பாக்கியங்கள் பெற்றவர்க ளொருவரில்லை
சீரான சிவன்முதலா யைந்துபேரும்
சென்மித்து வருவதுமுண் டவரைப்பாரே.

(இ-ள்) இப் பூமியின்கண் எப்போது மானிடனுய்ப் பிறந்தோமோ அப்போதே அவனது வருவினைகளை அறியத்தக்க அவனது அஸ்தரேகை யினது விவரங்களைக் கட்டாயமாய் அறிதல்வேண்டும். ஏனெனில்? இது வரையில் கூறிவந்த மயேந்திரரேகை என்பது ஆறுக்குமேல் இருக்கப் பிறந்தவனுடைய பலாபலன்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? மேற்படி மயேந்திரரேகை ஆறுக்குமேல் தனது அஸ்தத்திலிருக்கப் பிறந்த வனைப்போன்று பாக்கியம் என்னும் நன்மையை அடையப்பெற்றவனுக்கு இணை எவரையும் சொல்லுதல் முடியாது. சிறப்பு பொருந்திய பிரமன், விஷ்ணு, உருத்திரன், சிவன், கணபதி முதலியோரும் இவ்வாறு ஆறு ரேகைகளுக்குமேலிருக்கப் பிறப்பதுண்டு. ஆதலால், அதன் விவரம் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச் செய்யுளின் முக்கிய கருத்தாவது என்னவெனில்? மயேந்திரரேகை 6-க்குமேலிருக்கப் பிறப்பவர்கள் மானிடர்களல்லாது மேற்சொன்ன பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மயேசுரன், கணபதி முதலியோருங்கூட பிறப்பதுண்டு என்பதேயாகும். மற்றும், இவ்வாறான ரேகையானது தனது அஸ்தத்திலிருக்கப் பிறந்தவனுக்கு எவரையும் இணையிட முடியாது என்று கூறத்தக்க கருத்தை யொட்டியே "பாரான புவிதனிலே யிவனைப்போலும், பாக்கியங்கள் பெற்றவர்க ளொருவரில்லை" என்று கூறியது அறியத்தக்கதாகும். மற்றும் மானிட ஜென்மமெடுத்தவர்கள் கட்டாயம் தங்களின் அஸ்தங்களிலுள்ள ரேகை விவரங்களை அறிந்தே தீரவேண்டும் என வற்புறுத்தி கூறியிருத்தலைக் காண்க. 57

மயேந்திரரேகை யேழின்பலன்

பாரடா மயேந்திரந்தா னேழுண்டானால்
பக்குவமாய் மால்விரலி லேறிநிற்கும்
காரடா நால்கீறு மூன்றுபுள்ளி
கண்டிப்பா யிருக்குமடா கருணைகூர்ந்து
பேரடா பிரமாவின் செய்கைவந்து
பேணியே மூளைத்ததென்று பிரிவாய்ச்சொல்லு
ஊரடா விவன்போல இல்லைமைந்தர்
யோகவானு யுதிப்ப னுகந்துபாரே.

(இ-ள்) தனது அஸ்தங்களிலுள்ள விரல்களில் பெரிய விரலென்று கூறும் மால் விரலாகிய நடுவிரலில் மயேந்திர ரேகையானது ஏழுவரையில் நீண்டிருக்கவும், அவை நான்குகீற்று வடிவமாயும் மூன்றுபுள்ளிகளாயுமிருக்கப் பிறந்தவனது பலாபலங்களைச் சொல்லுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இவ்வாறு மேற்படி ரேகை ஏழு அமரப்பிறந்தவன் ஸ்ரீசிருஷ்டிகர்த்தாவென்னும் பிரம்மனது திருவருளாலேயே ஏழுரேகைகள் தன்கையிலிருக்கப் பிறந்தான் என்று கூறுவதோடு, இப்பூமியின்கண் இவனுக்குள்ள யோகபோகங்களுக் கொருவரும் இணையில்லை என்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) மயேந்திரரேகை ஏழு என்பது நடுவிரலில் நான்குகீற்று வடிவமாயும் மூன்றுபுள்ளி வடிவமாயும் வளர்ந்து நிற்கும் என்று கூறியது அறியத்தக்கது. மற்றும் இவை பிரம்மனது அமைப்பு என்றதால் மேற்கூறிய ரேகைகள் அமையப்பெற்றது. அதிகமாயிராதென்றும் பூர்வஜன்ம நல்வாசனையுள்ளவர்களே இவ்வாறு ரேகைகளமையப் பிறப்பர் என்பது கருத்தாகிறது. இதுவன்றி முன்செய்யுளிலும் இச்செய்யுளிலும் இந்த ஜாதகனுக்கு இணை ஒருவரையும் கூறமுடியாது என்றமையால் இந்த ஜாதகன் அடையப்போகும் யோகபோகங்களுக்கு எவரும் ஈடாகார் என்றதேயாகும். இவ்வாறான ரேகையுண்டாகும் இடங்களை முன்கூறிய செய்யுள்களில் நன்கு விளக்கிக் காட்டியுள்ளமையால் இங்கு கூறாது விடுத்தனம். 58

பாரப்பா விவன்பிறந்த வாரந்திங்கள்
பாலகன்று னவ்வாரத் திரவுதன்னில்
நேரப்பா வோரிருபத் தைந்துநாழி
நேர்மையா நட்சத்திர தோஷமாகும்
கூறப்பா வநுஷத்தின் முதற்பாகத்தில்
கூர்மையாய்ப் புதனிவனுக் குச்சமானுன்
தாரப்பா இவன்பிறந்த வீட்டிலேதான்
தனமுதலாய்ச் சம்பத்து விளங்குமன்றே.

(இ-ள்) மற்றும் இந்த ஜாதகன் ஜனித்த வாரமானது சோமவாரம் என்னும் திங்கட்கிழமையாகும். ஆனதால் மேற்சொன்ன திங்கட்கிழமை யன்று இரவு நாழிகை 25-க்குமேல் நக்ஷத்திரங்கள் 27-ல் தோஷமுடைய நக்ஷத்திரமென்று கூறும். அனுஷ நக்ஷத்திரத்தில் 1-ஆம் பாதத்தில் ஜனன மானுன் எனவுங் கூறுக இதுவன்றி, இவன் ஜனித்தகாலத்தில் புதன் உச்சனுகி இருந்தான் எனவும், இவன் ஜனித்த இல்லத்தின்கண் இவன் ஜனித்த பிறகு அளவிறந்த தனதான்னிய சம்பத்து முதலியன விளங்குமென்றுங் கூறுவாய் எ-று.

(வி-ரை) இவ்வாறு ரேகை அமையப்பிறந்த ஜாதகன் திங்கட்கிழமையில் இரவு நாழிகை 25-ல் அனுஷம் முதல் பாதத்தில் புதன் உச்சம்பெற்று சிறக்கப் பிறந்தான் என்றுங் கூறியுள்ளார். 'நேர்மையா நக்ஷத்திர தோஷமாகும்' என்றமையால், நக்ஷத்திரங்கள் 27-ல் அத்தம், அனுஷம், ரேவதி என்னும் நக்ஷத்திரங்களையும், மற்றும் பல நக்ஷத்திரங்களையும், சுபகாரியங்களுக்கு ஆகாதென சாத்திரங்கள் கூறுதலாலும், இவன் ஜனித்தது மேற்சொன்ன நக்ஷத்திரங்களில் ஒன்றான அனுஷமாதலாலும் இவ்வாறு கூறினுர் என்பதாம். புதன் உச்சன் என்றமையால் புதன் கன்னியாராசியிலிருக்கப் பிறந்தான் என்பது கருத்து. இதனுலேயே இந்த ஜாதகன் ஜனித்ததுமுதல் இவனுக்குப் பல யோகபோகங்களை உடையவனுவான் என்று கூறினுர் எனக் கொள்க. மற்றும் பலன்களை கீழ்வரும் செய்யுளால் அறிக. 59

அன்றிடவே யிவனுக்கு வயதோமெத்த
அளவறுந்த யோகமுமாய் விளங்குவான்பார்
நின்றிடவே தாய்மார்கண் மூன்றுபேராம்
நிகரில்லாச் செல்வமுள ளிவன்பிதாவும்
நன்றிடவே தாய்மாம னைந்துபேராம்
நாற்றிநங்கை மார்களுமுண் டிவன்ருய்க்கப்பா
வன்றிடவே புத்திரரில்லா வீட்டிலேதான்
வந்து பிறந்தான் யோகவானுய்த்தானே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்கு வயது தீர்க்கவயதென்றும் அளவிறந்த யோகமுடையவனுயும் வாழ்வதோடு இந்த ஜாதகனுக்கு தாய்மார்கள் மூன்றுபேர் என்றுங் கூறுவதோடு இவனது பிதா அளவிறந்த செல்வமுடையவனெனவும் தனது தாய்மாமன் என்னும் அம்மான்மார்கள் 5-பேர்

எனவும், இவன் தாய்க்கு நாத்தியும் நங்கையும் உடையவள் எனவும் கூறுவதோ இந்த ஜாதகன் வெகுநாள் புத்திரரில்லாதிருந்தவர்கள் இல்லத்தில் வந்து மிகுந்த யோகமுடையவனாய்ப் பிறந்தான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனுக்குத் தாய்மார்கள் மூவர் என்றதால் இவன் பிதாவுக்கு மனைவிமார் மூவர் எனவுங் கூறலாம். இச்செய்யுளின் ஐந்தாம் அடியில் 'நாற்றிநங்கைமார்களு முண்டிவன் ருய்க்கப்பா' என்றமையால் இவன் தாய்க்கு ஓரகத்தியும், நாத்தினரும் உண்டு என்பதால் இவள் கணவனுடன் பிறந்த சகோதரியையும், கணவனுடன் பிறந்தவன் மனைவியும் உண்டு என்று கூறவேண்டுவதாயிற்று. 'புத்திரரில்லா வீட்டிலேதான் வந்து பிறந்தான்' என்றமையால் இவன் பிதாவுக்கு வெகுநாள் புத்திரரில்லை என்றும், அதனாலேயே மனைவி மூவர் உண்டாயினர் என்றும், இவனே குலபுத்திரனாய்ப் பிறந்தான் என்றும் கூறவேண்டியதாயிற்று. மற்றும் இவன் வாழ்க்கையில் மிக்க செல்வமுடையவனாகவும், யோகமுடையவனாகவும் இருப்பான் என்றது அறியத்தக்கது. 60

யோகவான் பிறந்தவுடன் பிதாவுக்கப்பா
யோகோகோ பல்லக்கு தண்டிகையும்வரும்பார்
ஆகவான் புவனமெங்கு மதிகாரந்தான்
ஆண்டிருக்கத் திசையோகம் வருகுமப்பா
தாகவான் கடவுள்பதந் தொழுதுவாழ்த்தி
சந்ததமுஞ் சிவயோகஞ் சாதிப்பான்பார்
பாகவான் மக்களின்றிப் பெற்றமைந்தன்
வழுத்தரிய திசையோகம் வருகும்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிதா பலநாள் புத்திரப்பேறின்றி தவமிருந்து பெற்றவன் இந்த ஜாதகனே ஆதலால், இந்த ஜாதகன் பிறந்தவுடன் பிதாவுக்கும் பிரபல யோகமுடையவனவதோடு பல்லக்கு தண்டிகை முதலிய வாகனங்கள் வந்தடைவதோடு மிக்க பிரசித்தியுடையவனாகி இப்பூமியெங்கும் அதிகாரம் செய்து அரசாளத்தக்க திசையும் யோகமும் உண்டாகும். மேலும் என்னாளும் சிவனது திருப்பாதங்களைத் துதிக்கப் பிரியமுடையவனாய் சிவயோகம் சாதிக்கத் தகுந்த தன்மை உடையவனாய் அளவிறந்த யோகமுடையவனாகி வாழ்வான் எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனது பிதா பலநாள் புத்திரப்பேறில்லாது மனைவி மூன்றினை யடைந்ததாய் முன்சொன்ன செய்யுள்களால் கூறப்பட்டன. ஆதலால், இச் செய்யுளில் 'மக்களின்றிப் பெற்ற மைந்தன்' என்றதால் பலநாள் தவமிருந்து பெற்ற பாலனாகும் என்று கூறப்பட்டன. இதுவன்றி இந்த ஜாதகனை முன்கூறிய 57-ஆம் செய்யுளில் தேவர்களும் இவ்வாறு ரேகைகளுடன் பிறப்பது உண்டு என்று கூறியமையால் இந்த ஜாதகன் ஜனித்தது முதல் பிதாவுக்குப் பிரபல யோகமுண்டு எனவும், இயற்கையிலேயே இந்த ஜாதகன் பிதா சிவபக்தி உடையவனாயும், சிவயோகமுடையவ

னையும் இருப்பான் என்றும் கூறியுள்ளார். மற்றும், இந்த ஜாதகனது பிதா தண்டிகை பல்லக்கு முதலியவற்றில் ஊர்ந்துசெல்லும் தன்மை உடையவனையும், அரசனைப்போன்று எல்லா தேயங்களும் புகழத்தக்க நிலையில் வாழ்வான் என்பது இச் செய்யுளின் முக்கிய கருத்து கீழ்வரும் செய்யுளால் இந்த ஜாதகனது யோகபோகங்களை விளக்குவார். 61

வருகுமப்பா விவனுக்குத் திசையோகந்தான்
வளமான வெண்பத்தா றுண்டுமட்டும்
தருகுமப்பா விவனுக்குத் தாரம்ரெண்டு
தாட்டியாய் முடியுமென்று தகமைசொன்னேன்
பெருகுமப்பா விவன்வயதோ ரிருபத்தைந்தில்
பேரான சர்ப்பத்தாற் கண்டமுண்டு
துருகுமப்பா விவனுக்குக் குதிரைகண்டம்
சுருதியாற் பதினெட்டில் வருகும்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகனது யோகாவயோக விவரங்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகன் ஜனனமுதல் வயது 86-வரையில் நல்ல மேலான ராஜயோகபோகமாகவே நடந்துக்கொண்டே வரும். இந்த ஜாதகனுக்கு மனைவியர் இருவர் என்றுங் கட்டாயமாய்க் கூற ஏதுவுண்டு. இந்த ஜாதகன் ஜனித்த வயது 25-ல் சர்ப்பம் என்னும் பாம்பினால் பிரபல கெண்டமுண்டாகும். மற்றும் வயது 18 - லேயே குதிரையாகிய நாற்கால் வாகனத்தால் கெண்டமுண்டாகுமென்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் இந்த ஜாதகனது யோகபோகங்களையும் களத்திர விஷயங்களையும் கூறியுள்ளார். எப்படியெனில்? வயது 86-வரையில் பிரபல யோகமுண்டென்றும், மனைவி இரண்டு எனவும், 18-ல் குதிரையால் கெண்டமும், 25-ல் சர்ப்பத்தால் கெண்டமும் உண்டாகுமெனக் கூறியுள்ளார். எவ்வாற்றாலெனின், இங்கு கூறும் மயேந்திரரேகை ஏழு என்பது மிக்க யோகபோக முடையவருக்கே வாய்க்குமென இதற்கு முன்கூறிய 4-செய்யுளாலும், அடிக்கடி வற்புறுத்திக் கூறப்பட்டதுடன் இந்த ரேகையானது பூர்வத்தில் செய்த நல்வினைப்பயனாலேயே உண்டாகியதாகும் எனக் கூறியிருத்தலாலும், மேற்படி ஏழு ரேகைகளில் புள்ளிகள் 3-போக மற்ற ஏழுரேகைகளும் நாளடைவில் வளர்ந்து தனரேகையை தாண்டி நடுவிரலை யடையுந்தன்மை யுடையதாதலால் இவ்வாறு கூறினார் எனக் கொள்வதோடு இந்த ஜாதகனது யோகத்தைப் பின்வரும் செய்யுளால் விளக்குவதையறிக. 62

பார்க்கவே யிவன்வயது நாற்பத்தைந்தில்
பண்பான வியாதிகண்டம் வருகும்பாரு
ஏர்க்கவே யிவனுக்குக் குழவிநான்காம்
ஏற்றமுள்ள குழவிகளாய்ப் பிறக்கும்பாரு

ஆர்க்கவே யிவன்யோகங் குபேரன்போலாம்
ஆனந்த கேசரியின் யோகமாகும்
மார்க்கமா யிவன்யோகஞ் சொல்லொண்ணாது
மன்னவனாய்ப் பூமிகொள்வான் மயேந்திரத்தாலே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனனாதி வயது 45-ல் மிருத்யுஜன்பத்தைத் தாத்தக்க கொடிய வியாதியால் பிரபலகெண்டம் உண்டாகும். மற்றும் இந்த ஜாதகனுக்கு அழகு முதலிய நற்குண விசேஷங்கள் அமைந்த குழவிகள் 4-உண்டாகும். இவனது யோக விஷயங்களைக் கூறுமிடத்து ஆனந்த கேசரி யோகமாகிய மேலான யோகமும் குபேரனுக்கொப்பாகிய விசேஷ தனங்களைப்படைத்து இவன் அடைந்த தனத்துக்கு இணை எவரையும் மதிப்பிடமுடியாத தன்மையில் அரசனைப்போன்று அனேக பூமிகளையுடையவனாய் வாழ்வன். இவை மயேந்திரரேகை எழின் பலனாகுமெனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் வாழ்க்கையில் உள்ள யோகங்களைக் கூறியுள்ளார். எப்படியெனில்? குபேரனைபோன்ற தனமும், அரசனைப்போன்ற பூமிகளையும் உடையவனாவான் என்பதே யாகும். 63

தாலமென்ற விவன்றானும் யோகத்தாலே
சகலருக்கு மிவன்வாக்கு பலிக்கும்பாரு
ஞாலமென்ற யோகமடா சக்கிரயோகம்
நலமான மயேந்திரத்தின் பெருமையெல்லாம்
மூலமென்ற முன்சொன்ன பெருநூற் காண்டம்
முப்பத்தாறும் பாட்டின் மொழிந்தேன் மைந்தா
காலமென்ற தீட்சையிடக் கருணையோகம்
கைகண்ட கண்டாந்திரங் கருணை கூர்ந்தே.

(இ-ள்) இன்னும் சொல்லவேண்டுவ தெனின் மயேந்திரரேகையானது எழுடன் பிறந்தவன் தனது யோகபோகத்தால் இப்பூமியின்கண் இவன் எவ்வித வார்த்தையைக் கூறினும் அவை உடனே சித்தியாகும். மற்றும் இந்த ஜாதகனுக்குச் சக்கிரதார யோகமுண்டாகுமென்றும் கூறலாம். மற்றும் இந்த ஜாதகனின் ரேகையாகிய மயேந்திரரேகையின் பலாபலன்களை இந்நூலின் 36-வது செய்யுளில் இவனது யோகபோகத்தையும் பெருமையையும், கெண்டாதி கெண்டங்களையும் வெகு தெளிவாய்க் கூறியுள்ளேன் என்றும் தெரிவாயாக எ-று.

(வி-ரை) இதுகாறும் கூறிவந்த யோகபோகங்களுடன் இச்செய்யுளில் இந்த ஜாதகனுக்கு சக்கிரதாரயோகம் உண்டென்றும் முன்கூறிய 36-வது செய்யுளில் கூறியபடி கட்டாயம் நடக்கும் என்றதால் இதன் விவரங்களை மேற்படி 36-ஆம் செய்யுளின்படி விவரமாய் அறிந்து கொள்ளுக. 64

### மயேந்திரரேகை எட்டின் பலன்

கருணைசொல்வேன் மயேந்திரந்தா னெட்டுண்டானால்
காட்சிபெறு மயேந்திரத்தின் மகிமைமெத்த
வருணைமந்திரஞ் செபஞ்செய்த யோகசாலி
வந்துதான் மைந்தனாய்ப் பிறந்தானப்பா

தருணைசொல்வே னிவனைப்போ லுலகுதன்னில்
தாட்டியர்க ளில்லையடா சதுர்த்தனுகும்
கருணையடா விவனைத்தான் கண்டபேர்கள்
சாஷ்டாங்கஞ் செய்திடுவார் தாளிற்றானே.

(இ-ள்) இதுவரையில் கூறிவந்த மயேந்திரரேகை எட்டு உடையவனது யோகபாகங்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? மகாமகுத்து வத்தையுடைய மயேந்திரம் எட்டுடன் பிறந்தவனது மகிமைக்கு அளவில்லை எனவும், இந்த ஜாதகன் தனது பூர்வஜன்மத்தில் வருணமந்திரம் ஜபித்து சித்தியைப்பெற்ற பாக்கியவானாகி இச்சென்மத்தில் மானிடனாய் பிறந்தான் என்றும், இந்த ஜாதகனைப்போன்ற யோகமுடையவன் இப்பூமியில் எவரும் இல்லை யெனவும், தாட்டீகமாகிய தைரியம் முதலிய வீரபராக்கிரமங்களை யுடையவனாவான் எனவும், இந்த ஜாதகனைக் கண்டபேர் எவர்களும் இவனது பாதங்களில் சாஷ்டாங்கமாய் விழுந்து தெண்டனிடுவார் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் முன்ஜன்மத்தில் வருணமந்திரம் ஜெபித்தவனானதால் இந்த ஜன்மத்தில் தவக்குறையால் மானிடனாய்ப் பிறந்தானாயினும் இவனைப்போன்ற வீரதீரபராக்கிரம முடையவன் வேறொருவருமில்லை யெனவும், இவனைக்கண்டோர் யாவரும் பணிந்து நிற்பர் என்பதும் இச்செய்யுளின் கருத்து. மற்றும் பலன்களைப் பின்வரும் செய்யுளால் அறிக. 65

தானென்றபிணிபோச்சு துறவுண்டாச்சு
சாற்றிய செல்வங்க ளிவனுக்காச்சு
தானென்ற இல்லறத்திற் குழவியைத்தான்
தகையாகப் பெற்றபின்பு வறுமைபோச்சு
நானென்ற ராசாக்க ளாலமுண்டாச்சு
நந்திகுரு பீடமுந்தா னனுகலாச்சு
கானென்ற கடவுளர்தன் னருளினாலே
கட்டழகன் குபேரனாய் வாழ்வான்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த உடனே இவனது வாழ்நாட்களில் இவனுக்குப் பிணியென்பது உண்டாகாது, எல்லோரும் உறவாயிருப்பர், சொல்வதற்கரிய செல்வங்களனேகம் இவனுக்குண்டாகும், இவனது தாய் தந்தையர்கள் இவனைப்பெற்ற பின்பு அவர்களுக்குள்ள வறுமையாவும் நீங்கின, மகாபிரசித்தியையுடைய ராஜாக்களால் எல்லாவித சுகசௌக்கிய மேன்பாடும் உண்டாயின, தனது ஆசிரியபீடம் தன்னைவந்தடுத்தன, எல்லோர்க்கும் பொதுவாயுள்ள தெய்வத்தினது கிருபாகடாக்ஷத்தால் இந்த ஜாதகன் குபேரனைப்போன்று வாழ்ந்திருப்பானெனவுங் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் ஜனித்தபிறகே இவனது தாய் தந்தையருக்குள்ள வறுமையொழிந்தன வென்றும் அளவிறந்த செல்வங்களையுடையவனாவான் எனவும், கடவுள் கிருபையால் குபேரனைப் போன்று தனமுள்ளவனாகி வாழ்வானென்றுங் கூறியுள்ளார். 'தானென்ற

பிணிபோச்சு' என்றதால் இந்த ஜாதகனுக்கு எக்காலத்தில் எவ்வித பிணி யுண்டாயினும் அவை உடனுக்குடனே நீங்கும் எனவுங் கூறவேண்டுவ தாயிற்று. இவை மயேந்திரரேகை எட்டின் சிறப்பேயாதலால் மற்றுமுள்ள பலன்களைப் பின்வரும் செய்யுளால் அறிக. 66

பார்க்கவே நிடதபுரி ராஜனைப்போல்
பண்பான யோகவனாய்ப் பிறந்தான்
ஏர்க்கவே யிவனுக்கிங் கயனுமாலும்
ஏற்றமுள்ள பாக்கியங்க ளீவதன்றி
காக்கவே பரஞ்சோதி யுமையாள்வந்து
கலைஞான முள்ளதுவுங் கருணை செய்வார்
தாக்கவோ சொல்லுகிறேன் தலைவனுக்குத்
தங்கமும் ரத்தின முளவாஞ் சார்புகேளே.

(இ-ள்) இந்த ஜாதகன் நிடதநாட்டரசனாகிய நளச்சக்கிரவர்த்தியைப் போன்று நல்ல மேன்மையைப்படைத்த ராஜயோகமுடையவனாகி வாழ்ந் திருக்கப் பிறந்தவன் என்றும், இவனுக்கு பிரமன், விஷ்ணு இவ்விருவரது கிருபாகடாக்ஷத்தால் தனக்கு வேண்டிய வளவுக்குமேல் அளவிறந்த பாக்கி யங்களைக் கொடுப்பதோடு உமாமயேஸ்வரி யுருவமாகிய ஸ்ரீசரஸ்வதி தேவியார் இவன்மீது அருள்சுரந்து ஞானம் முதலிய கலைக்கியானங்கள் யாவையுங் கற்றுக்கொடுப்பதோடு இந்த ஜாதகன் தனது வாழ்நாட்களில் தங்கம் ரத்தினம் முதலிய மேலான செல்வங்கள் அனேக முடையவனாகி வாழ்ந்திருப்பானெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) கலியுகத்தில் நிடதநாட்டரசனாகிய நளன் விசேஷ செல்வத் தைப் படைத்து வாழ்ந்திருந்தவனாதால் இந்த ஜாதகன் மேற்படி நளனைப் போன்று அளவிறந்த செல்வத்தை யுடையவனாகி வாழ்ந்திருப்பானென உவமை கூறினர். இதுவன்றி இவனுக்கு பிரமன் விஷ்ணு இவர்களது கிருபையால் சகலபாக்கியம் உண்டாகுமென்றுங் கூறியதால் இந்த ஜாதக னுக்குச் சகல பாக்கியங்களையும் மேற்படி தெய்வங்களே கொடுத்தருளுவார் என்பது கருத்தாகிறது. இங்கு கீழ்வரும் செய்யுளால் இவன் ஜனித்த இல்லத்தினது இலக்ஷணங்களும் பிறந்தகாலத்தையும் விளக்குவார். 67

கேளடா விவன்பிறந்த கூறைமைந்தா
கேவலமாய்ப் போனதுகீழ் வாசல்வீடு
ஆளடா கிழமையது வெள்ளியாகும்
ஆனந்தங் கொண்டநா ளுத்திரமாகும்
தாளடா விரவுதனிற் றசமிபக்கம்
தாட்டிகனுஞ் சனியுதையந் தனிற்பிறந்தான்
நாளடா லக்கினத்திற் கிரகமைந்து
நலமாகப்பிறந்துவந்தா னுடிக்கேளே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனனமாகிய இடமாவது எவ்விதமானதெனில் மிக்க பாழடைந்த கூறைவீடெனவும், ஜெனித்த இல்லத்திற்குக் கீழ்வாசல்

எனவுங் கூறுவதோடு இவன் ஜனித்தவாரமானது வெள்ளிக்கிழமை எனவும், எவரும் கேட்டு மகிழத்தகுந்த உத்திரநக்ஷத்திரத்தில் பிறந்தவன் எனவும், தசமிகூடிய இரவுகாலத்தில் ஜனித்தான் எனவும், மேற்சொன்ன வெள்ளி இரவும் சனி உதயகாலநேரமுமாகவும், ஜென்மலக்கினத்தில் ஐந்து கிரகங்கள் கூட்டமாயமைந் திருக்கவுமான நேரத்தில் பிறந்தவனுகும் எனவும் கூறுவாயாயினும் மற்றுமுள்ள விஷயங்களையுங் கேட்பாயாக எ-று

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் ஜனித்த இல்லமானது சிறு கூறை வீடெனவும், வெள்ளிக்கிழமை இரவுவிடியற்காலமும் சனிக்கிழமை உதயகாலமுமாகிய நேரத்தில் தசமிதிதியும், உத்திரநக்ஷத்திரமும்கூடிய நாளில் ஜென்மலக்கினத்தில் ஐந்துகிரகங்கள் கூட்டமாய்க் கூடியநேரம் பிறந்தானென்னும் கருத்தையொட்டிக் கூறியதாகும். 'ஆனந்தங்கொண்ட நாளுத்திரமாகும்' என்றதால், உத்திரம் உத்திராடம் உத்திரட்டாதி யென்னும் மூன்றும் யோகத்தைத் தரத்தக்க மேலான நக்ஷத்திரங்களாதலால் இவ்வாறு கூறினர் எனக்கொள்க. 68

கேட்கவே லக்கினத்திற் சுக்கிரனும் புதனும்
கேவலமாய்ச் செவ்வாயுஞ் சனியுஞ் சந்திரன்
மீட்கவே சுபர்பார்வை சுபரின்றிஷ்டி
மேலாகப் பெற்றிடவே பிறந்தான்மைந்தன்
வாட்கவே யிவன்வாழ்வு திசையின்மைந்தா
வரிசையாய் யிருந்தார்கள் வகையைக்கேளு
ஏட்கவே யிவன்பிறந்த வைந்தாநாளில்
எடுத்தார்காண் புதைத்திருந்த தனங்கடானே.

(இ-ள்) மயேந்திரரேகை எட்டு அமைந்திருக்கப் பிறந்தவனது கிரகங்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? ஜென்மலக்கினத்தில் சந்திரன்-செவ்வாய் - புதன்-சுக்கிரன்-சனி இவர்களிருக்கவும், சுபகோட்களினது பார்வை திருஷ்டி முதலிய மேலான பலமுடையவனுய்ப் பிறந்ததுடன் இந்த ஜாதகனது ஜனனகாலங்களில் இவனது தாய் தந்தையர்கள் மிக்க தரித்திரமுடையவர்களாய் இருந்தாராயினும் இவன் பிறந்த ஐந்தாம்நாளில் புதைத்துவைத்திருந்த தனமாகிய புதையல் தனத்தை எடுத்தார்களென்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவனது கிரக அமைப்பை இன்னின்ன கிரகங்கள் ஜென்மலக்கினத்திலிருக்கும் என்று கூறியதோடு இவன்பிறந்த ஐந்தாவதுநாளில் பூமியில் புதைத்துவைத்திருந்த தனத்தைக் கண்டெடுத்தார் என்றும் தனயோக பாவங்களைக் கூறியுள்ளார். இதுவன்றி இவன் ஜனனமாகாததின் முன்பு இவன் தாய் தந்தையர்கள் பலரும் பழிக்கும்படியான ஏழ்மை நிலையிலிருந்தனர் என்றுங் கூறியது அறியத்தக்கது. மற்றுமுள்ள பலாபலன்களைக் கீழ்வரும் செய்யுளால் அறிக. 69

தனமென்ற மிவன்வயது மூன்றிலேதான்
　　தலைவனைத்தான் பெற்றெடுத்தா ளிவன்றாயப்பா
கனமென்ற காட்டிலவள் சென்றபோது
　　கண்டெடுத்தா ணிட்சேப தனங்களைத்தான்
வனமென்ற விவன்பிறந்த மாசந்தானும்
　　வைகாசி முதற்றேதியாகு மன்றோ
நனமென்ற பொருளெல்லாம் வந்துதையா
　　நாற்றிசையு மெய்க்கவுந்தா னலம்பெற்றானே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனித்த வயது 3-ல் இந்த ஜாதகனுக்கு இளைய வனாகிய செல்வன் ஒருவனைப் பெற்றெடுத்தாள் என்றும், மேற்படி தாயானவள் காட்டுமார்க்கமாய்ச் செல்லும்போது நிக்ஷேபதனம் என்னும் புதையல் பொருளைக் கண்டெடுத்தாள் எனவும் கூறுவதோடு இந்த ஜாதகன் ஜனித்த மாதமானது ரிடபமாத மென்னும் வைகாசி மாதமென்றும், முதற்றேதி என்றுங் கூறுவதால் இந்த ஜாதகன் ஜனித்த பிறகே இவன் குடும்பத்திற்கு எல்லாவிதமான பொருளும் வந்தன வென்றும், நான்கு திசையில் பிரசித்தி பெறப் பேசத்தகுந்த நிலையிலிருந்தா னெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் ஜனித்தது வைகாசிமீ 1உ என்றும், இவனுக்கிளையவன் ஆண்சகோதரன் ஜனிப்பானெனவும், இவனது தாய்க்கு புதயல் பொருள் கிடைக்குமென்றுங் கூறியதையறிக. மற்றும் இந்த ரேகையினது மகுத்துவங்களைக் கீழ்வரும் செய்யுளாலும் விளக்குவார். 70

பெற்றிடவே யிவன்வயதோ ரெண்பத்தைந்தாம்
　　பேறுபெறு மில்வாழ்க்கை பெரியதாகும்
நற்றிடவே மனிதர்மக்கள் ரொம்பவானார்
　　நாற்றிசையு மெய்க்கவந்தா னலங்கள்செய்வார்
சுற்றிடவே யிவன்பிறந்த யோகத்தாலே
　　சூழ்வினைக ளெல்லாந்தா னோடிப்போச்சு
பற்றிடவே பரமனிட வருளினாலே
　　பாலகன்றான் பூமிதனை யாள்வான்பாரே.

(இ-ள்) இந்த ஜாதனுக்கு வயது 85 எனவும், இவனது வாழ்க்கை யானது மிக்க பெருமையும் பிரசித்தியுடையதாயு மிருக்கும் என்பதுடன் இவனுக்கு அனேக உறவின் முறையார் உண்டாவாரென்றும், நான்கு திக்கி லுள்ளவரும் புகழத்தக்க மேலான நன்மை முதலியவைகளைச் செய்து சிறப்பு பெற்றிருப்பா னெனவும், இந்த ஜாதகன் ஜனித்த யோகபோக கிரக அமைப்பால் இவனுக்குண்டாயுள்ள வினைகள் யாவும் பறந்துபோயின வென்றும், ஸ்ரீசிவபிரான் கிருபாகடாக்ஷத்தால் இப்பூமியை அரசாக்ஷி செய்யத்தகுந்தவனாவான் எனவுங் கூறுவாயாக எ-று. 71

பாரப்பா மைந்தனுக்கு வயதோர்பத்து
　　பண்பாக வாகுமப்பா பாக்கியமொன்று
யாரப்பா மைந்தன்றான் மண்ணைக்கெல்லி
　　மகத்தான காதுவைத்த நிதிதானென்று



சீரப்பா மைந்தன்றன் கண்ணிற்கண்டு
சீக்கிரத்தி லெடுத்துவந்து மனையில்வைத்தான்
கூரப்பா விவன்றானுங் குபேரனுன்
கூர்மையுள்ள ராஜாக்க ளுறவுமாச்சே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனனாதி வயது 10-ல் இவனுக்கு மேலான பாக்கிய யோக்கிய சிலாக்கியங்கள் உண்டாவதோடு இவனது வாழ்நாட்களில் பூமியின் உள்ளிருக்கும் தனத்தை தோண்டி எடுத்து அதனைத் தன் கண்ணாரக்கண்டு மேற்படி தனத்தை எடுத்துவந்து தனது இல்லத்தில் சேர்த்து வைத்து வாழ்வானெனவும், இந்த ஜாதகன் செல்வங்களில் மிக்க மேலான செல்வத்தையுடைய குபேரனைப்போன்று தனத்தை யுடையவனாகி நல்ல மேன்மையைப் படைத்த அரசர்களும் உறவாவார் என்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் இந்த ஜாதகன் வயது 10-லேயே மேலான செல்வமும், பிற்காலம் தனது சுயமாய் பூமி நிக்ஷேபதனம் முதலியவைகளை அறிந்து குபேரன்போன்ற சம்பத்துடையவனாய் வாழ்வானெனப் பொதுவாய்க் கூறியுள்ளார். கீழ்வரும் செய்யுளால் இவனது மனைவி விஷயங்களையும் போக பாக்கியங்களையும் கூறுவாராயினர். 72

ஆச்சடா விவனுக்குத் தாரமைந்து
அன்பான மைந்தனுக்கும் விவாகமாச்சு
பேச்சடா விவன்குடிதான் பெருகலாச்சு
பிரபலமாய் புதுமனைகள் எக்கியசாலை
வாச்சடா லாயத்திற் குதிரையானை
மகிழுமன்னர் கொடிதானுங் கட்டிஞன்பார்
ஆச்சடா லட்சுமியாள் குடியிருந்தாள்
ஆண்டவன் போலிவனைக்கை யெடுப்பார்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் மிக்க சந்தோஷத்துடன் விவாகம் செய்துக் கொண்ட தாரங்கள் மொத்தம் 5-ஆகும், இதுவன்றி இந்த ஜாதகன் ஜனித்த பிறகே இவனது குடும்பமானது பலம்பெற்றதாகும். மேலும் அநேக புதிய இல்லங்களும், கலியாண சத்திரங்களும் உள்ளவனாவதோடு தனது இல்லத்தில் அரசர்களும் மகிழத்தக்க கொடிக்கம்பமும் யானை குதிரைகளையும் கட்டி வாழ்வதோடு இவனது அழகிய மனையில் எந்நாளும் லக்ஷ்மிவாசம் செய்வதோடு இவனைக் கண்டோர் அனைவோரும் ஆண்டவனைத் துதிப்பது போன்று அனைவரும் துதிக்கத்தகுந்த நிலையிலிருப்பான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனுக்கு யோகபாவங்களைக் கூறிவருதைக் கவனிக்கையில் இவன் ராஜயோகமுடையவன் என்றுங் கருத்தாகிறது. மற்றும் இவனுக்கு மனையாள்-5 என்றும், அழகிய இல்லங்களும், கலியாணசத்திரங்களும், யானை குதிரை முதலியனவும் உடையவனாவான் என்பது மகிழத்தக்கதாகும், 73

எடுத்திடவே யதிகார மனேகஞ்செய்வான்
எண்ணுமித மில்லாத பூமிகொள்வான்
தொடுத்திடவே யேகசக்கிர வர்த்தியாவான்
தொல்லுலகிற் குபேரனைப்போல் வாழ்வான்பாரு
அடுத்திடும்பேர் யாவரையும் பேணுவான்பார்
ஆந்திரீக சிவபூசை செய்வான்பார்
கொடுத்திடவே தானமது பதினெட்டுந்தான்
கொடுத்திடுமோர் தயவுடைய பெருமைதானே.

(இ-ள்) இந்த ஜாதகன் தனது வாழ்நாட்களில் பலவிதங்களுக்கும் அதிகாரமுடையவனுகி இருப்பதோடு அளவிடமுடியாதபூமி முதலியவற்றை யுடையவனுகி எல்லோரும் சக்கரவர்த்தி யென்று சொல்லத்தகுந்தவனுகி இப்பூமியின்கண் குபேரனைப்போன்ற சம்பத்துடையவனுகி வாழ்வான். மற்றும் தரித்திரமும் கஷ்டமும் உடைய அனேகரை ரக்ஷிக்கத்தக்கவனும், அந்தரங்க பக்தியுடன் சிவபூஜை செய்யத்தகுந்தவனும், தனது காலங்களில், பதினெட்டுவகை தானங்களையும் செய்து பிரசித்தியுடையவனுகி பெருமையும் தயவும் உடையவனுகி வாழ்வான் என்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் தனது வாழ்நாட்களில் அடையும் பெருமை முதலியவற்றைக் கூறினர். எவ்விதமெனில் பற்பல அதிகாரமும் அனேகபூமியும், சக்கரவர்த்தியென சொல்லத்தகுந்தவனும், குபேர சம்பத்தும் அண்டினேரை ஆதரிக்கத்தக்கவனும் ஆவான் என்றதுடன் அந்தரங்க பக்தியும், சிவபூஜையும் செய்யத்தகுந்தவனுவான் என்றுங் கூறியதை யறிக. கீழ்வரும் செய்யுளால் இந்த ஜாதகனது புத்திரவிருத்தியையும், கெண்டாதி கெண்டங்களையும் கூறுவார். 74

பெருமையாய் வாழ்வதற்குக் குழவியைந்தாம்
பேரான விவனுக்குக் கண்டமூன்றும்
சிறுமையுள்ள மைந்தனுந்தான் வாலிபத்தில்
சீமையெங்கும் புகழ்ந்திடவே வாழ்வான்பாரு
அருமையாய் நடந்திவனும் அம்பாள்பாதம்
அறிவரிய யோகத்தா லறிந்துபோற்றும்
வருமையின்றிப் பிறந்தமைந்தன் குபேரனென்ன
வாழ்குவன்பார் மயேந்திரந்தா னெட்டினுலே.

(இ-ள்) இந்த ஜாதகனது குலத்தை விளக்கி மிகவும் பெருமையுடன் வாழத்தகுந்த புத்திரவர்க்கங்கள் ஐந்து ஆகும். இதுவன்றி இவனது வாழ்நாட்களில் இவனுக்குண்டாகும் கெண்டாதி கெண்டங்கள் மூன்று உண்டாகும். மற்றும் இவன் தனது நடுவயதிலேயே இவ்வுலகமெங்கும் புகழத்தகுந்த மேலான நிலையில் வாழ்வான் எனவும், பெருமையையுடைய அம்பாளுடைய திருப்பாதகமலங்களை மறவாதவனுகி குபேரனைப்போன்ற யோகங்களையுடையவனும் தரித்திரம் என்பது கொஞ்சமேனுமின்றி வாழ்வானென்றும், இவை மயேந்திரரேகை எட்டு உண்டாகியதின் பெருமை என்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) மயேந்திரரேகை எட்டு உடையவனது பெருமைகளை இங்கு நன்றாய் விளக்கிக் காட்டியுள்ளார். பொதுவாய்க் கூறுமிடத்து இந்த ஜாதகன் தன் சிறுவயது முதல் எல்லாபாக்கியங்களையும் உடையவனாயினும் தன் நடுவயதிலேயே மிக்க பிரசித்தியுடையவனுவான் என்றும், லக்ஷ்மி விலாசமும், தேவியினது பக்தியும் உடையவன் என்பதே முக்கிய கருத்தாகும். 75

ஆலென்ற விவன்வயதோ ரிருபத்தைந்தில்
அவனுடைய பிதாவுந்தா னிறந்தான் பாரு
ஞாலென்ற வவன்வயது முப்பத்தைந்தில்
நலமான மாதாவு மிறப்பாளப்பா
ஏலென்ற வவன்வயது முப்பதுக்குள்
ஏந்துகின்ற குழவிகளைப் பெற்றான்மைந்தன்
மாலென்ற மாயவனால் வந்தபாக்கியம்
மகத்தான யோகமிவை யமைந்ததன்றே.

(இ-ள்) இவனது பிதாவாகிய தந்தை இந்த ஜாதகன் ஜனித்த வயது 25-ல் இவன் பிதா இறந்துபோனான் எனவும், இவன் வயது 35-ல் இவனது தாயார் இறந்து போனாள் எனவும், இந்த ஜாதகன் வயது 30-க்குள்ளேயே நல்ல அழகிய மைந்தர்களைப் பெற்றான் என்றும், சிவந்த வாயையுடைய மகாவிஷ்ணுவின் திருபாகடாக்ஷத்தால் அளவிறந்த யோகமும் செல்வம் முதலியவற்றை யுடையவனானான் என்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இங்கு கூறிய செய்யுளால் இவன் வயது 25-ல் தந்தையும் 35-ல் தாயும் மரிப்பாரென்றும், 30-ஆம் வயதுக்குள் அழகிய குழவியைப் பெறுவாரென்றும் கூறியது கவனிக்கத்தக்கதாகும். இதுவரையில் மயேந்திர ரேகை எட்டின்பலனைக் கூறிவந்ததால் இனிவரும் செய்யுளால் மயேந்திர ரேகை 9-ன் பலனை விளக்குவார். 76

மயேந்திரரேகை ஒன்பதின் பலன்

அன்றெனவே மயேந்திரந்தா னெட்டுஞ்சொன்னேன்
அருமையினால் வந்ததுபார் மயேந்திரரேகை
நன்றெனவே நவமான மயேந்திரந்தான்
நன்னயமாய்ச் சொல்லுகிறே னடிக்கேளு
குன்றெனவேகுவலையத்தின் முனிவருக்கும்
கூடரிய மயேந்திரந்தான் நவமுண்டாகும்
சென்றெனவே யிவன்யோக வாழ்க்கைமைந்தா
செப்புகிறே னிரேகையிடச் செய்திகேளே.

(இ-ள்) இதுகாறும் கூறிவந்த செய்யுட்களால் மயேந்திரரேகை எட்டுடையவனது பலாபலங்களைக் கூறினேன். இனி மிக்க பெருமையை யுடைய மயேந்திரரேகை 9-உடையவனது பலாபலன்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? உயர்ந்த குகைகள் அடங்கிய மலைகளின்மீது

வாசம் செய்யத்தகுந்த முனிவர்களுக்கும் இங்கு கூறும் மயேந்திரரேகை 9-உண்டாவதுண்டு. இவ்வாறு ரேகை அமைவது மிக்க அரிது. ஆதலால், இந்த ரேகையுள்ளவனது பலாபலன்களையும், யோகம் வாழ்க்கை முதலிய வற்றையும் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) பொதுவாய்க் கூறுகையில் இங்கு கூறிவரும் மயேந்திரரேகை 8-அல்லது-9 தேவர்களுக்கும் முனிவர்களுக்குமே யமையும் ஆதலாலும், இங்கு கூறும் பலாபலன்கள் மானிடர்களுக்கே ஆதலால், இம்மானிடனின் வாழ்க்கையானது மிக்க மேன்மையும் பெருமையும் உடையதாகவே இருக்கு மென்பது இந்நூலாசிரியரது முக்கிய கருத்தாதலால் இதுகாறும் கூறிவந்த செய்யுளாலும், இனி கூறப்போகும் செய்யுளாலும், யோக பாவங்களை வெகு மேம்பாடாகவே கூறிவருகிறார் என்று அர்த்தமாகிறது. ஆனதால் இந்த ரேகையமையும் மார்க்கங்களைக் கீழ்வரும் செய்யுளால் விளக்குவார். 77

கேளப்பா விவன்கையி லாறுகீறு
கேவலமாய் மூன்றுபுள்ளி கெட்டியாகும்
வாளப்பா விவன்கைதான் புட்பம்போல
வண்மையாய்ச் சிவந்திருக்குங் கைகளெல்லாம்
நாளப்பா கூர்மைவிழி பாஞ்சாலன்றான்
நலமான யோகீஸ்வ ரன்றான்கேளு
ஆளப்பா விவன்பிறப்போ ரைந்துபேராம்
ஆந்திரிக முள்ளனிவ னருமைகேளே.

(இ-ள்) இங்கு கூறிய மயேந்திரரேகை 9-என்பது எவ்வாறிருக்கு மென்றால் கீற்று ரேகைகள் 6-ம் புள்ளிகள் மூன்றுமாய் ஆக-9 ரேகைகளாய் அமரும். இதுவன்றி, இவனது கையானது புட்பம்போன்று மெல்லிய தன்மையுடையதாய் தனது அஸ்தங்கள் யாவும் சிவந்த நிறமுடையதாய் இருக்கும். மற்றும், இவன் ஜனன க்ஷேத்திரமானது பாஞ்சாலதேசமென் றும், கூர்மையான விழிகளையுடையவன் என்றும், யோகீஸ்வரன் என்னும் ஞானமுடைய சன்னியாசி என்றும், இவனுடன் பிறந்த சகோதர சகோ தரிகள் மொத்தம் 5-பேர் ஆவாரெனவும், மிக்க ரகஸ்யத்தையுடைய இவனது விஷயங்களை இன்னும் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) மேற்படி மயேந்திரரேகை 9-என்பது 6 கீற்று ரேகைகளாயும் மூன்று புள்ளிகளாயு மிருக்குமென்றுங் கூறியதை வாசகர்கள் நன்கு கவனிக்கவும். மற்றும் புஷ்பம்போன்ற அஸ்தங்களுடையவன் என்றதால் மெல்லிய கைகளையுடையவன் எனவும், யோகீஸ்வரன் என்றதால் தத்துவ ஞானத்தை உடையவனென்பதும் கருத்து. மெத்த ரகஸ்யமுடையவன் என்றதால் இவரது விஷயங்களை எவரும் கண்டுபிடிப்பது அரிது என்றும் கூறவேண்டுவதாகிறது. 78

கேட்கவே யிவன்பிறந்த கிழமைதானும்
கேவலமாய் வியாழமைந்த விரவின்மைந்தா
ஆட்கவே நாழிகையோ ரிருபத்தைந்தாம்
அன்பான நாளது ரோகணிதானாகும்

நாட்கவே யிவன்பிறந்த மாதங்கேட்கில்
நலமான கன்னியென்ற மாதமாகும்
ஏட்கவே யெம்பிரா னருளினாலே
இவ்வுலகில் வந்தவனென் றியம்புவீரே.

(இ-ள்) எம்பெருமானது திருவருளால் மயேந்திரரேகை ஒன்பதுடன் பிறந்த இவனது பிறவிகாலம் என்னவெனில்? இவன் பிறந்த வாரமானது குருவாரம் என்னும் வியாழக்கிழமை இரவில் சூரியன் அஸ்தமயமாகி நாழிகை 25-க்குள் பிறந்தவனாகும். மற்றும் நக்ஷத்திரம் என்னவெனில்? எவரும் மகிழத்தகுந்த உரோகணி நக்ஷத்திரமாகும். இவன் பிறந்த மாதம் என்னவெனில்? கன்னி மாதம் என்னும் புரட்டாசி மாதம் என்றுங் கூறக்கடவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவன் பிறந்த மாதமானது புரட்டாசி எனவும், உரோகணியும், வியாழக்கிழமையும் கூடிய நாளில் இரவு 25-நாழிகையில் பிறந்தவன் எனவுங் கூறியுள்ளார். இவ்வாறமைந்த ஜாதகன் ரிஷிகளில் ஒருவனே யாகும் என்னும் கருத்தினை யமைத்துக் கீழ்வரும் செய்யுளால் விளக்குவதை கவனிக்கவும். 79

இயம்புவீ ரிவன்பிறந்த வைந்தாமாண்டில்
இயல்பான ரிஷிகளும்வந் துபதேசித்து
நயம்பெறவே மைந்தனைத்தா னழைத்துச் சென்று
நன்னயமாய் ரகசியங்கள் சொல்வார்சித்தர்
வயம்பெறவே வயதைந்தில் அனேகவாழ்க்கை
வண்மையாய் வந்ததென்று வழுத்துவாய்நீ
துயம்பெறவே சித்தனடா மைந்தனானும்
துப்புரவா யிவன்சித்த னுவான்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனனமாகிய 5-வது வருஷத்திலேயே பற்பல ரிஷிகளும் இவனிடம் வந்து ஞானோபதேசம் செய்து தானிருக்கும் இடங்களுக்கு அழைத்துச்சென்று நன்மையைத் தரத்தக்க சில ஞானமார்க்கங்களை உபதேசிப்பார். இதுவன்றி மேற்கூறிய 5-ஆம் வயதிலேயே இவனுக்கு அனேக நன்மையைத் தரத்தகுந்த யோகபோகங்கள் உண்டாயினவென்றும், இந்த ஜாதகன் தனது வாழ்நாட்களில் மகத்துவம்பெற்ற சித்தனுவான் என்று கூறுவதோடு மிக்க கவனமுடையவனும், யோகமுடையவனும் ஆவானென்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் ஞானியெனவும், சித்தன் எனவும், ஞானயோக மார்க்கங்கள் பல உடையவனென்றும் கூறியதோடு 5-ஆம் வயதிலேயே பற்பல யோகங்களையுடையவன் எனவுங் கூறினார். இதனால் முன்கூறிய 77-ஆம் செய்யுளில் கூறியபடி ரிஷிகளே இவ்வாறான ரேகை யமையப்பிறப்பதுண்டு எனக் கூறியவண்ணம் ரிஷிக்கூட்டங்களில் ஒருவனாக இருந்த இந்த ஜாதகன் இந்த ஜென்மத்தில் மானிடனாய் பிறந்தும் ரிஷிகளுடைய ஞானோபதேசமும், உண்மையும், யோகமுடையவனும்

ஆவானெனக் கருதவேண்டியதாகிறது. மேற்சொன்ன வயது 5-க்குப்பின் வரும் பலன்களைக் கீழ்வரும் செய்யுளால் விளக்குவார். 80

பாரப்பா விவன்பிறந்த நாளுங்கோளும்
பக்குவமாந் திசையோகம் பண்பாய்ச்சொன்னேன்
நாரப்பா விவன்பிறந்த யேழாமாண்டில்
நலமான பிதுருதனக் கோமவித்தை
ஆரப்பா வந்துபதே சிப்பதென்னில்
ஆனந்த போகர்வந்திங் கருள்செய்வார்பார்
ஊரப்பா விவனைப்போ லரசர்மற்றோர்
உலகுதனி லில்லையில்லை யுண்மைதானே.

(இ-ள்) இதுகாறும் கூறிவந்த செய்யுளால் இந்த ஜாதகன் பிறந்தநாள் நக்ஷத்திர முதலியனவும், தனது வருங்காலங்களிலுண்டாகும் திசை முதலியனவற்றையும், உள்ளதை உள்ளபடியே கூறினேன் ஆயினும் இன்னும் சொல்லுவேன் கவனிப்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகன் ஜனித்த ஏழாவது ஆண்டில் இவனது பிதாவினுக்கு ஓமவித்தை முதலியனவற்றை உபதேசம் செய்வர். மற்றும் எவர் வந்து உபதேசிப்பாரெனில்? மகா சந்தோஷத்தை விளைவிக்கத்தகுந்த போகமுனிவரே வந்து உபதேசிப்பர். மேற்படி காலத்திற்குப்பின் இவனைப்போன்ற அரசர்கள் இவ்வுலகிலில்லை என்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இதுகாறும் கூறிப்போந்த செய்யுளால் இந்த ஜாதகனது யோக விஷயங்களை வெகு விமரிசையாய் கூறினர் எனினும், இந்த ஜாதகனது ஏழாம் ஆண்டில் போகமுனிவரே மானிடரூபமாய் வந்து இவன் தந்தைக்கு உபதேசிப்பார் எனவும், அதுமுதல் இந்த ஜாதகனைப்போல் அரசர்கள் எவரும் இல்லையெனப் பெருமைபடக் கூறியுள்ளார். மற்றும் இந்த ஜாதகனையும் மேற்கூறிய வண்ணமே உபதேசம் பெறத்தக்கவன் என்னுங் கருத்தையொட்டிக் கூறிய கீழ்வரும் செய்யுளை அறிக. 81

தானென்ற விவன்பிறந்த யேழாமாண்டில்
சற்குருதான் வந்திவனை யழைத்துச்சென்று
ஊனென்ற வுடற்கூற்றை யுபதேசித்து
உற்றதொரு ரகசியங்க ளருள்வார்பின்பு
வானென்ற மைந்தனிவன் றன்னைப்போல்வார்
வையகத்தி லில்லையடா மைந்தாகேளு
தேனென்ற மைந்தனிவன் லோகத்துள்ளே
தேவர்களி லொருவனப்பா தெளிவாய்ச்சொல்லே.

(இ-ள்) மேற்கூறிய வண்ணம் இந்த ஜாதகன் பிறந்த ஏழாவது ஆண்டில் மிக்க மகிமைபெற்ற சற்குருநாதனென்னும் ஆசான் இவனிடம் வந்து இந்த ஜாதகனை அழைத்துச்சென்று உடலறி விளக்கமாகிய தத்துவ சாஸ்திரங்களை உபதேசித்து, வேதாந்த விஷயங்கள் யாவையும் உரைத்துப்போவார். பின்பு, இந்த ஜாதகனைப்போன்ற மேன்மை பெற்றவர்கள் இவ்வுலகில் இல்லை.

எனெனில்? மேற்படி ஜாதகன் இப் பூமியின்கண் இவ்வுலகிலுள்ள தேவர்கள் அனைவருள் தானும் ஒரு தேவனைப்போன் றிருப்பானெனத் திண்ணமாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் தான் பிறந்த ஏழாவது ஆண்டு முதல் தத்துவக்ஞானியாய் வேதாந்த ஆசார கிருத்திய முடையவனும் தேவர்களிலொருவனும் விளங்குவான் என்று அர்த்தமாகிறது. மற்றும் மயேந்திரரேகை 9-இருக்கப்பிறந்தவனது பெருமையைக் கீழ்வரும் செய்யு ளாலும் அறிக. 82

சொல்லடா மயேந்திரந்தான் நவத்திற்கப்பா
சொல்லுதற்கு லோகத்தி லில்லையில்லை
வல்லடா விவனைப்போற் சதுர்த்தரில்லை
வயதுதான் சொல்வதென்ன கவனியாச்சே
நல்லடாநான் முகன்முன் படைத்தமைந்தன்
நலஞ்சொல்லக் கும்பமுனி நாடிக்காண
அல்லடா விவனுடைய வாழ்க்கையெல்லாம்
அன்பாக நீயறிய வருளினேனே.

(இ-ள்) மயேந்திரரேகை-9 அமைந்துப் பிறந்தவனது பெருமைகளை இன்னும் எடுத்துரைக்க இவ்வுலகத்திலில்லை என்றே யறிவாயாக. மற்றும் இந்த ஜாதகனைப்போன்ற சாதுர்யவான் எவரும் இல்லை என்றும், இவனது வயதின் அளவை எவராலும் கூறுவதற்கு இயலாது எனவும், இந்த ஜாதகன் நான்முகன் என்னும் பிரமனுடைய அந்தரங்க ஆசையால் உண்டானவன் எனினும், கும்பமுனி என்னும் அகஸ்தியமாமுனிவரால் அருளிய நாடிசாஸ் திரத்தின் வகையால் இந்த ஜாதகனது சுகபோக இன்பம் என்னும் வாழ்க்கையினது விசேஷங்களை எல்லாம் அறிந்து சொல்வாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனது வாழ்க்கை பிறப்பு முதலியதின் பெருமை களை ஏற்கனவே தேவாமிசம் எனக் கூறியிருத்தலாலும், பிற்கால வாழ்க்கை யிலும், இவன் தேவர்களில் ஒருவனாகவே விளங்குவான் எனக் கூறியிருத்த லாலும், இவனது ஆயுளின் அளவை என்னால் கூறவியலாது. ஆனதால் அகஸ்தியர் நாடியால் அறிந்துகொள்ளுக என்று முடித்தனர். மயேந்திர ரேகை 9-ன் பலாபலன்களுக்காக கூறிய 7-செய்யுளாலும், இந்த ஜாதகன் இல்லறத்தோன் என்று குறிப்பிடாது துறவரத்தோனுக்குரிய மார்க்கங் களையே கூறியதும் கவனிக்கத்தக்கது. 83

## மயேந்திரரேகை பத்தின் பலன்

அருள்செயு மயேந்திரந்தான் பத்துண்டானால்
ஆச்சரிய மிவன்பிறவி ராஜனாவான்
வருள்செய்த வாறுவரை நாலுபுள்ளி
வகுத்ததொரு மயேந்திரந்தான் முன்பத்தாகும்

குருசெய்த பாக்கியம்போற் பிறந்தான்மைந்தன்
குவலயத்திற் றனசாலி யோகவான்றான்
திருவுளத்தின் செயன்மிருந்த செல்வனாகும்
செல்வனே கேளிதனைத் தெளிவாய்த்தானே.

(இ-ள்) எவரும் புகழத்தகுந்த மயேந்திரரேகை என்பது 10-உண்டாகிப் பிறந்தவனது யோகங்களைச் சொல்லுமிடத்து இந்த ஜாதகன் ஜனன பிறவியின் இலக்ஷணமானது ராஜன் என்றே கூறவேண்டுவதாகும். மேற்படி ரேகையானது எவ்வாறிருக்குமெனில்? வரை ஆறுடனும், புள்ளிகள் நான்கு மிருக்கப் பிறந்தவனானதால் மயேந்திரரேகை 10-எனக் கூறவேண்டுவ தாயிற்று. இந்த ஜாதகன் ஜனனவகை எப்படியெனில்? இவனது ஆசான் செய்த புண்ணியமே எனவும், இப்பூமியின்கண் பிறந்த பிறகு மேன்மையைப் பெற்ற தனவந்தன் ஆவானெனவும், கடவுளின் கிருபாகடாக்ஷம் மிகுந்த செல்வவான் எனவும் கூறுதலால் இவனது விஷயங்களைக் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச் செய்யுளைப் பொதுவாய் கவனிக்குமிடத்து இந்த ஜாதகன் அரசர்களிட மைந்தனாய் ஜனிக்கத் தகுந்தவன் எனவும், இந்த ஜாதகன் தனவந்தனாயும் கடவுளது ஆசீர்வாதம் பெற்றவனாயும் இருப்பதோடு இவனது முன்ஜன்மத்தில் இவனது ஆசிரியர்செய்த புண்ணியமே இச் ஜென்மத்தில் மானிடனாய்ப் பிறந்தானெனவுங் கூற இடமுண்டாகிறது. 84

தானென்ற விவனாறு பேர்கள்கூடத்
தருவாகப் பிறந்தவன்காண் தரணிமீதில்
ஊனென்ற விவன்றனக்குக் கிரகநான்கு
உச்சமடா லக்கினத்தி லுறுதியாக
வானென்ற கிரகநன் குச்சத்தாலே
வண்மைமிகும் புதன்கிழமை யேகாதசி
நானென்ற மகரமெனு மாதமப்பா
நலமாகப் பிறந்துவந்தான் நாதன்றானே.

(இ-ள்) மயேந்திரரேகை பத்துடன் பிறந்தவன் சகோதர சகோதரிகள் 6 பேரில் தானும் ஒருவனாய் பிறந்தவன் எனவும், இந்த ஜாதகன் ஜனன காலத்தில் நான்கு கிரகங்கள் உச்சத்துடனிருக்கப் பிறந்தான் எனவும், மேலே சொன்னபடி நான்கு கிரகங்கள் உச்சம்பெற்ற காரணத்தால் இந்த ஜாதகன் நல்ல மேன்மையைப்படைத்த புதன்கிழமையன்று பிறந்தவன் எனவும் 11-ஆம் திதியாகிய ஏகாதசி திதியில் பிறந்தான் எனவும், மகரமாதம் என்னும் தைமாதத்தில் பிறந்தவன் எனக் கூறுவதோடு தன் வாழ்நாட்களில் மிக்க யோகமுடையவனாகி வாழ்வான் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவன் உடன்பிறவி எத்தனை என்பதையும், இவனுக்குண்டாகிய கிரக அடைவினையும், மகரமாதமும், ஏகாதசியுங்கூடிய புதன்கிழமையில் பிறந்தான் எனவுங் கூறியுள்ளார். மற்றும் இந்த ஜாதகனைப்

பொதுவாய் தனவான் என்று கூறியதால் கீழ்வரும் செய்யுளால் மற்றுமுள்ள விஷயங்களை அறிக. 85

தானமெனு மிவன்யோகஞ் சொல்லொண்ணாது
தாட்டிகனும் ராசனிடப் பிறவியாகும்
ஏனமெனு மிவனாலே யனேகபாக்கியம்
ஏந்திழையாள் பெற்றமைந்த னேர்மையாகும்
வானமெனு மிவனுக்குத் தாரம்ரெண்டு
வகுத்துரைப்பேன் மைந்தர்களோ ராறதாகும்
பானமெனு மிவன்யோகங் கேசரியோகந்தான்
பண்பாக மேன்மேலாய் நடக்குந்தானே.

(இ-ள்) இந்த ஜாதகனுடைய யோகங்களைச் சொல்லவேண்டுவதெனில் அளவற்ற யோகமுடையவனும், இராஜபிறவி என்றும் கூற இடமுண்டாகும். இந்த ஜாதகன் ஜனனமான பிறகே இவன் தாயானவள் அனேக பாக்கியங்களை யடைந்தாள் எனவுங் கூறுவதோடு இந்த ஜாதகனுக்குக் களத்திரம் என்னும் மனைவிமார் இரண்டு எனவும், புத்திரர்கள் என்னும் மைந்தர்கள் அறுவர் உண்டாவாரென்றும், பொதுவாய் இவனது யோகங் களைச் சொல்லுமிடத்து கேசரியோக மென்றும், நாளுக்குநாள் மிக்க மேம்பாடாகவே நடக்குமென்றுங் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முதலில் இவனது யோகத்தைச் சொல்ல வியலாதென்றும், இறுதியில் கேசரியோகத்தைப்போன்று நாளுக்குநாள் மேன்மையடையும் என்றுங் கூறியதை யறிக. மற்றும் இந்த ஜாதகன் ஜனித்த பிறகே இவன் தாய் அனேக செல்வத்தை யடைந்தாள் எனவுங் கூறியதால், இந்த ஜாதகன் மன்னர் பிறவி என்றும், ஏழ்மை குடும்பத்தில் ஜனித்தானெனவும், பிற்காலத்திலேயே மேலான தனத்தை யடைந்தார்க ளென்றுங் கூறவேண்டுவதாயிற்று. 86

நடக்குமடா விவன்வய தெண்பத்தெட்டு
நகரமெல்லா மதிகார மிராச்சியங்கள்
கொடுக்குமடா வுமையவளும் பாக்கியத்தைக்
கொற்றவளு மிலட்சுமியுங் குடியிருப்பார்
அடக்குமடா வுத்திரத்திற் பிறந்தமைந்தன்
அன்பான திசைகார னாகும்பாரு
இடுக்கடைக ளொருநாளும் வருவதில்லை
இயல்பான மைந்தனுக்கு யியம்பிட்டேனே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்கு பூரணவயது-88 எனவும், தன் வாழ்நாட் களில் இவ்வுலகிலுள்ள எல்லா ராச்சியங்களையும் அதிகாரம் செய்யத்தகுந்த மன்னவனைப்போன்ற சம்பத்தையும், பாக்கியத்தையும், எல்லாம் வல்லவளும் பராசத்தியுமாகிய லக்ஷ்மியும் குடியிருந்து கொடுத்தருளுவாளெனவும், இந்த ஜாதகன் எவரும் கொண்டாடத்தகுந்த உத்திர நக்ஷத்திரத்திற் பிறந்தவன் எனவும், மிக்க திசையை யுடையவனெனவும், எந்நாளிலும் துன்பமென்பதே

அடையப்படாதவன் எனவும், மேன்மையைப்பெற்ற இம் மைந்தனது பலா பலன்களைக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) முன் கூறிய 85-ஆம் செய்யுளில் மாதம், வாரம், திதி முதலிய வற்றைக் கூறி ஜன்ம நக்ஷத்திரத்தைக் கூறுததால், இச்செய்யுளில் இவன் பிறந்தது உத்திர நக்ஷத்திரமென்றும், இவனிடம் என்னாளும் லக்ஷிமி குடியிருப்பாளெனவும், எந்த நாளினும் துன்பம் என்பதைச் சற்றேனும் அடையப்படாதவன் எனவுங் கூறினர். மற்றும் வயது-88 எனக் கூறியதை அறிக. 87

சாத்மீக ரேகையின் பலன்

இயம்பிட்டேன் சாத்மீக ரேகைமைந்தா
இயல்பாக விவன்கையி லிருக்குமாகில்
நயம்பிட்டே னிவன்பிறந்த மனைதானென்று
நலமான வடவாசற் றலாத்தின்மூலை
துயம்பிட்டே னினத்தார்க ளொருவரில்லை
துப்புரவாய்ப் பிதாவுந்தா னில்லையப்போ
அயம்பிட்டேன் றாய்மாமன் மனையிலேதான்
அன்னவன்தா னிருந்தவனு முதவியாச்சே.

(இ-ள்) சாத்மீகரேகை என்பது இவனது அஸ்தத்தில் இருக்குமே யாமானல் இவனது பலாபலன்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படி யெனில்? இவன் ஜனித்த மனையானது தனித்த மனையென்றும், வடக்கு பார்த்த தெருவாயிலையுடைய இல்லத்தில் தெற்கு மூலையிலுள்ள வீட்டில் ஜனித்தான் எனவும், இவன் ஜனனகாலத்தில் இவனது பந்துக்களது உதவி இல்லாமலும், தனது சொந்த பிதாவும் இல்லாத நேரத்தில் பிறந்தான் எனவும் கூறுவதோடு இவன் ஜனித்த மனையானது தாய் மாமனது மனை எனவும், பிறவிகாலம் மேற்படி தாய் மாமனது உதவியாலேயே பிறந்தான் எனவுங் கூறுவாயாக எ-று

(வி-ரை) 'மனைதானென்று' என்றதால் இந்த ஜாதகன் ஜனித்தது தனித்த வீடு எனவும், பிரசவகாலம் எவர்களும் உதவியின்றி தனித்துப் பிறந்தான் எனவுங் கூறவேண்டுவதாயிற்று. மற்றும் வடக்கு வாசலுள்ள மனையில் தெற்கு மூலையில் பிறந்தான் என்பது அறியத்தக்கது.

சாத்மீகரேகை ஐந்தின் பலன்

ஆச்சப்பா சாத்மீக மைந்தேயானல்
அப்பனே யிவனுடைய அருமைகேளு
வாச்சப்பா வசுபதியிற் பிறந்தமைந்தன்
வண்மையுள்ள கன்னியென்ற மாதமாகும்
கோச்சப்பா கோசரத்தில் வியாழன்புதனும்
கொற்றவர்க ளிருந்தார்கள் கோட்களுச்சம்
வேச்சப்பா வெய்யவன்றன் முதற்சாமத்தில்
வேணபடி சிவனையிவன் வரங்கேட்பானே.

(இ-ள்) சாத்வீக ரேகையானது ஐந்து தனது கையில் அமையப் பிறந்தானேயாமானால் அவனுடைய வாழ்க்கையினது விசேஷங்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இவன் ஜனித்த நக்ஷத்திரமானது அசுவினி எனவும், மேன்மையைப்படைத்த கன்னி என்னும் புரட்டாசி மாதம் எனவும், ஜென்ம லக்கினத்தில் குரு-புதன் என்னும் இவ்விருவர்களும் இருக்கப் பிறந்தான் எனவும், சூரியோதயமாகிய ஜாமம் ஒன்றுக்குள் உச்ச கிரகங்கள் அமையப்பிறந்தான் எனவும், இவனது வாழ்நாளில் சிவபிரானை வணங்கி வரங் கேட்பான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) கோசரத்தில் புதன்-வியாழன் இருந்தார் என்றதற்குச் சிலர் சந்திரனுடன் புதன்-குரு இருந்தார் எனவும், சூரியன் உதயமாகிய ஜாமம் 1-க்குள் என்றதால் ஜாமம் என்பது 6 நாழிகை கொண்டது ஆதலால் நாழிகை 6-க்குள் பிறந்தான் எனவுங் கூறவேண்டுவதாகிறது. கிரகம் உச்சம் என்பதை அப்போதுள்ள பஞ்சாங்க கணிதப்படி தெரிந்துக்கொள்வது உசிதமாகும். மற்றும் விவரங்களைக் கீழ்வரும் செய்யுளால் அறிக. 89

கேட்டிடவே யிவன்பிறந்த ரெண்டாமாண்டில்
கேவலமாய் பிதாவுக்கு யோகந்தானும்
நாட்டிடவே நகரமெங்கு மதிகாரந்தான்
நன்மையுள்ள திசையோகம் வந்ததப்பா
காட்டிடவே கால்நீண்ட மைந்தனுக்கு
கருணையால் வரவில்லை கதிக்கும்யோகம்
வாட்டிடவே திசையோகங் குழவியாலே
வந்ததடா சிவனருளால் வண்மையாமே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனித்த இரண்டாவது ஆண்டு முதல் ஏழ்மை திசையிலிருந்த இவனதுபிதாவுக்கு யோகமுண்டாகும் எனவும், இப்பூமி எங்கனும் அதிகாரம் செய்யத்தகுந்த மேலான ராஜயோகங்களும், இந்த ஜாதகனுக்கு கால்கள் அகன்று நீண்டிருக்குமென்றும், கொஞ்சமேனும் ஈவு இரக்கமில்லா தந்தை எனவும், இந்த ஜாதகன் ஜனித்த காரணத்தாலும், சிவபிரானுடைய புண்ணியத்தாலும், இவன் பிதாவுக்குப் பூரண ராஜயோகம் உண்டாயின என்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனுடைய பிதாவானவன் ஏழ்மைத்திசை யுடையவனென்றும், இந்த ஜாதகன் ஜனித்த பிறகே இவன் பிதாவுக்கு யோகமுண்டாகும் என்பதை கவனிக்கத்தக்கது. பிதா தன் வாழ்நாளில் ஒரு காசும் ஈயாதவனாவான் என்றது. பிதாவின் பின்வரும் குணங்களாகும். 'கால்நீண்டிருக்கும்' என்றது ஜாதகனுடைய கால்கள் எனவுங் கொள்க. 90

வண்மையா லிவன்வயதோ ரெழுபத்தைந்து
வகுத்திட்டேன் குரமொன்று வண்மையாக
உண்மையா லிவன்வயது பதினேழாண்டில்
உத்தமர்க்கு விவாகமது முடியுமன்றே

தண்மையா மிவனுக்குக் குழவியைந்தாம்
தகைமைசொல்ல முடியாது தாட்டிகற்கு
நன்மைபெற்று வாழ்ந்திருப்ப னுலகத்துள்ளே
நாகரிக முள்ளவன்று னளினனுமே.

(இ-ள்) இந்த ஜாதகன் தன் வயது-75 எனவுங் கூறுவதோடு, ஒரே மனைவி நிலைத்திருப்பாள் எனவும், மேற்படி விவாகமானது இவன் பிறந்த 17-ஆம் வயதில் முடியும் எனவும், இந்த ஜாதகனுக்குப் பிறக்கப் போகும் புத்திர புத்திரிகள் மொத்தம்-5 எனவும், மேற்படி புத்திரர்கள் எவ்விதமான குறைவுமின்றி மிக்க தாட்டிக முடையவர்களாகவே இருப்பார் எனவும், இப்பூமியின்கண் எல்லா நன்மைகளையு முடையவர்களாகவே வாழ்வார்களென்றும், நாகரீகமும் சம்பத்தும் உடையவர்களாய் வாழ்ந்திருப் பார்களெனவுங் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவனது வயதையும், மனைவியையும், புத்திரர்களையும், புத்திரயோகங்களையும் கூறினர். எப்படியெனில்? மனைவி ஒன்றே என்றும், புத்திரர்கள்-5 எனவும், மேற்படி மனைவி புத்திரர்கள் எவ்வித குறைவுமின்றி சுகஜீவியாய் வாழ்வாரெனவுங் கூறியதுடன் இந்த ஜாதகனுக்கு வயது-75 எனவுங் கூறியது கவனிக்கத்தக்கது. பின்வரும் செய்யுளால் புத்திரருண்டாகும் காலங்களை விளக்குவார். 91

நளினமென்ற விவன்வயதோ ரிருபத்தைந்தில்
நலமுள்ள வாண்பிள்ளை பிறக்கும்பாரு
தெளினமென்ற விவன்வயது நாற்பத்தெட்டில்
செல்வனுக்கு குழவியைந்து திரமாயுண்டு
வளினமுள்ள வாண்மூன்று பெண்ணிரண்டு
வண்மையாய்ப் பிறப்பார்கண் மைந்தர்தானும்
திண்மைசெய்ய வொட்டாது சாத்மீகந்தான்
செப்பினேன் கேசரியின் றிரமைதானே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனனமாகிய வயது 25-ல் அழகிய ஆண்பிள்ளை யொன்று ஜனிக்கும் எனவும், இவன் வயது 48-க்குள்ளேயே முன்சொன்ன படி 5-குழவிகளும் பிறந்துவிடும் எனவும், மேற்படி குழவிகள் 5-ல் ஆண் குழவிகள்-3, பெண் குழவிகள் 2-மாகப் பிறப்பார்களெனவும், மேற்படி குழவிகளுக்கு எக்காரணத்தைக்கொண்டும் தீமை என்பதே உண்டாக மாட்டாதெனவும் கூறுக. ஏனெனில்? இவன் ஜனித்த அஸ்தரேகை யானது சாத்வீகரேகை யானதாலும், கேசரியோகம் இவனுக்குண்டு என் பதினாலும் என்றறிக எ-று.

(வி-ரை) இங்கு சாத்வீகரேகையினது பெருமையை எடுத்துக் கூறினர். எப்படியெனில்? 25-க்குமேல் 48-க்குள் ஆண்-3, பெண்-2 ஆகப்பிறந்து எவ்வித குறைவுமின்றி சுகித்திருப்பார் எனவும் கூறியுள்ளார். சாத்வீகரேகை என்பது அவரவர்கள் அஸ்தத்தில் உள்ளங்கையில் ஆயுள்ரேகைக்கு இடையி லிருந்து நாலாவட்டமாய் ஆள்காட்டிவிரலை நோக்கிச்செல்லும் என்பது

சாஸ்திரசம்மதம் ஆதலாலும், சாத்வீகரேகை யிருக்கப் பிறந்தவர்கள் கேசரி யோக முடையவராவார் என, இச்செய்யுளால் விளக்கியிருப்பதாலும், இவன் தனசம்பத்தும், புத்திரசம்பத்தும், ஆயுள்விருத்தியும், நன்மையும் உடையவன் எனக் கூறியுள்ளார். மற்றும் கெண்டாதி கெண்டங்களைக் கீழ்வரும் செய்யுளால் அறிக.

92

தானென்ற விவன்பிறந்த வாறுமாண்டில்
தன்னுடைய தாய்மாம னிறப்பான்பாரு
ஊனென்ற விவன்வயதோ ரிருபத்தைந்தில்
உற்றதொரு தாய்தந்தை யிறந்துபோவார்
வானென்ற மாசமொன்றிற் றாயுந்தந்தை
வண்மையாய் முன்பின்னா யிறந்தார்பாரு
கானென்ற விவன்வயது பதினாறுண்டில்
கண்டமட்டுஞ் சொல்லுகிறேன் கருணைகூர்ந்தே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனித்த ஆறாவது வயதில் இவனது தாய்மாமன் என்னும் அம்மான் இறந்துபோவான் எனவும், மற்றும் வயது 25 ல் தாய் தந்தையர்கள் இறந்துபோவார் எனவுங் கூறுவதோடு, தாய் தந்தையர்கள் ஒரு மாதமே முன்பின்னாய் மரிப்பார்கள் எனவும் கூறுவதோடு, இவன் வயது-16, இவன் அடையப்போகும் விஷயங்களை என்னாலறிந்தவரையில் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் தாய் தந்தையர்கள் ஒருமாதம் முன் பின்னாய் மரிப்பார் என்று கூறினாரேயொழிய எவர் முன் என்றும், எவர் பின் என்றும் கூறப்படவில்லை யாதலால், இதனை அவரவர்கள் மாதுருரேகை பிதுரு ரேகை என்பதை ஆராய்ந்து கூறுவது நலம். தாய்மாமன் 6-ஆம் வயதிலே மரிப்பான் என்றமையால், இங்கு கூறிவரும் சாத்வீகரேகை என்பது பொதுவாய் தாய்மாமனுக்கு ஆகாது என்பது கருத்தாகும்.

93

கூர்ந்திடவே யிவனுக்குக் கண்டமப்பா
குவலயத்தில் வயதுபதி னாறின்மைந்தா
கார்ந்திடவே யிவன்றானுங் கிணற்றினேற்றத்
தலைமரத்தி லேறியிவன் விழுந்தான்பாரு
ஆர்ந்திடவே யிவன்வயதோர் முப்பத்தைந்தில்
அன்பான வியாதியினால் மெலிந்தான்பாரு
சார்ந்திடவே யிவன்வயதோ ரெழுபத்தைந்து
கண்டதுபார் சிவனருளாற் கருணைகூரே.

(இ-ள்) இந்த ஜாதகன் வயது 16ல் கெண்டம் ஒன்று உண்டாகும் எனவும், அவை எவ்விதத்தாலெனில், கிணற்றின் கரையிலிருக்கும் ஏற்றத்தின் உச்சியிலேறி கீழேவிழுந்த காரணத்தால் பிரபலகண்டம் உண்டாயினவென்றும் கூறுவதுடன் வயது 35-ல் கொடிய துன்பத்தை தரத்தகுந்த வியாதியால் மெலிவடைவான் எனவும், சிவபிரானது கிருபாகடாக்ஷத்தால் இந்த ஜாதகனுக்கு வயது மொத்தம் - 75 எனவுங் கண்டிப்பாய் கூறுவாயாக எ-று.

(வி-ரை) முன்கூறிய 91-ஆம் செய்யுளில் இந்த ஜாதகனுக்கு வயது-75 என்று கூறியதுடன் இச்செய்யுளாலும் அதனை வற்புறுத்திக் கூறியுள்ளார். ஏனெனில்? இச்செய்யுளில் இந்த ஜாதகன் வயது 16-ல் பிரமாத அவமிருத்யு கெண்டமும், 35-ல் கொடிய நோயால் கெண்டம் உண்டாகும் என்று கூறியதால், மேற்படி கெண்டாதி கெண்டங்கள் இந்த ஜாதகனது ஆயுளைக் கெடுக்கத்தக்கதல்ல வென்னும் காரணத்தையொட்டி தீர்க்க வயது-75 என மறுமுறையும் கூறினர் எனக்கொள்க. 94

கூறப்பா சாத்மீக ரேகையாகும்
    குறிப்பாகச் சொல்லிவிட்டேன் கூர்மையாக
ஆரப்பா வென்னைப்போ லோகத்துள்ளே
    அன்பான மக்களுக்கிங் குதவியென்றால்
காரப்பா வருணகிரி யுதவியாலே
    கடாட்சித்தேன் மக்களைநான் கார்க்கவேண்டி
சேரப்பா சின்மயத்தி னருளினாலே
    செப்புகிறேன் கேசகியின் றிறத்தைக்கேளே.

(இ-ள்) தனது அழகிய அஸ்தத்தின்கண் சாத்வீகரேகை யமையப் பிறந்தவனது பலாபலன்கள் யாவும் எனது அறிவுக்கெட்டிய வளவில் திண்ணமாய்க் கூறியுள்ளேன். இப்பூமியிலுதித்த மாந்தர்களுக்கு என்னைப் போன்று மனம் வந்து இந்த ரேகைசாஸ்திரத்தைச்சொல்லி உதவி செய்பவர் யார்? யானும் எதனால் உரைத்தேன் எனில் அருணகிரியாகிய சூரியபிரகாசமமைந்துள்ள அண்ணாமலையின்கண் வீற்றிராநின்ற ஆண்டவனின் கடாக்ஷத்தால் மண்ணுலகமக்களைக் காப்பாற்றவேண்டியே கூறினேன். மற்றும் மேற்சொன்ன சின்மயதேசோன்மயமாய் விளங்காநின்ற அருணசலேசர் கிருபையால் மற்றுமுள்ள ரேகையினது விஷயங்களையும் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) 'அருணகிரி யுதவியாலே' என்றமையால், அருணன்-கிரி என்ற பதத்திற்கு அருணன்-சூரியன். கிரி-மலை. அவையாவன:—சூரியமலை. சூரியனைப்போன்ற ஜோதி ஜொலிக்கும்மலை என்று பொருள் கொள்ள வேண்டியதாகிறது. இதனை அண்ணாமலை என்று கூறுவர். கார்த்திகைமாதக் கிருத்திகையில் சூரியோதயம்போன்ற பெரிய தீபத்தை ஏற்றி ஜனங்களுக்குக் காக்ஷி தருவது இந்த க்ஷேத்திரமே யாகும். இதனது பண்டைய புராணத்தை விரித்தெழுத இங்கு இடந்தாராதாகையால் இந்நூலாசிரியராகிய கமலமாமுனிவர் மேற்படி அருணகிரி என்னும் அண்ணாமலையிலிருந்து மேற்படி அருணசல ஈஸ்வரரைத் தொழுதுகொண்டிருந்திருக்கலாம் என்றும் கருத்துகொள்ள வேண்டியதாகிறது. இதனாலேயே 'அருணகிரி யுதவியாலே கடாக்ஷித்தேன் மக்களைநான் கார்க்கவேண்டி' என்று கூறினர். இவரது விரிவான சரித்திரத்தை முன்னுரையில் காண்க. 95

**கிரீடி இரேகையின் பலன்**

கேட்கவே கிரீடியிட ரேகைமைந்தா
கேவலமா யிவன்கையி லிருக்குமாகில்
நாட்கவே நன்மைபெற்ற மைந்தனுக்கு
நலம்பெற்ற யோகவா னடிக்கேளு
ஆட்கவே யாறுவரை யிரண்டுபுள்ளி
அப்பனே கைநடுவி லிருக்குமாகில்
ஏற்கவே யிவன்பிறந்த யோகவாழ்க்கை
என்னசொல்வேன் மகத்துவத்தை யியம்பக்கேளே.

(இ-ள்) ஒருவனது அஸ்தத்தின்கண் கிரீடிரேகை என்பது அமைந்திருக்குமே யாமானால் அந்த ஜாதகனது பலாபலன்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? அந்த ஜாதகன் வெகு நன்மையைப் பெற்றவன் எனவும், யோகவானாகவும் இருப்பான் என்பதாம். மற்றும் இவனது அஸ்தத்தின் விரல்களில் ஆறுவரைகளும், மூன்று புள்ளிகளுமாய் அமைந்திருக்குமாயின் இவன் வாழ்வினது யோகங்களைச் சொல்லமுடியாது. ஆதலால், மேற்படி ரேகையினது மகத்துவங்களை யின்னும் சொல்லுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) கிரீடிரேகை என்பதை எவ்விடத்திலிருக்கும் என்பதையும் எவ்விடம் செல்லும் என்பதையும், இங்கு கூறவேண்டுவதெனில்? அவரவர்களது விரலில் (கிரீடிரேகையுள்ளவனுக்கு) வரைகள் ஆறும், புள்ளிகள் இரண்டுமாய் அவன் விரல்களில் மிக்கப் பெரியதாகிய நடுவிரலில் அமர்ந்திருக்கும் என்பதே இச்செய்யுளின் கருத்தாகும். இவ்வாறு அமைந்திருக்கின் அந்த ஜாதகன் மிக்க யோகமுடையவனும், கீர்த்திவானும் ஆவான் என்பதே யாகும். 96

கேளடா வினத்தார்கண் மெத்தவுண்டு
கேவலமாய்த் தாய்தந்தை மிகவேபோற்றும்
ஆளடா விவன்பிறந்த மாசந்தன்னில்
அன்பான மனையிலே சோபனங்கள்
வாளடா விருக்குமந்த வேளைதன்னில்
வரிசையாய்ப் பெற்றமைந்தன் வண்மைகேளு
நாளடா விவன்பிறந்த நாளுங்கோளும்
நன்றாகச் சொல்லுகிறே னயந்துகேளே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்கு இனத்தவர் என்னும் பந்துக்கள் அனேகமாயிருப்பார். மற்றும் இந்த ஜாதகனைத் தனது தாய் தந்தையர்கள் ஆவலுடன் கொண்டாடத்தகுந்த புத்திரனாகும். இதுவன்றி இவன் ஜனித்த மாதத்திலேயே இவன் பிறந்த இல்லத்தில் கலியாண சுபசோபனாதிகள் முதலியன நடக்கும் விஷயமாய் ஆலோசிக்குங்காலம் பிறந்தான். ஆயினும், இந்த ஜாதகனது விஷயங்களையும், நன்மையைத் தாத்தகுந்த

கோட்களினது இலக்ஷணமும் பிறந்த வாரங்களின் விவரங்களையும் கூறு வேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் தாய் தந்தையர்கள் போற்றத் தகுந்தவனும், பந்துக்கள் அனேகமுடையவனும் ஆவன் என்றதோடு பிறந்த மாதம் ஒன்றில்தான் பிறந்த இல்லத்தில் சுபசோபன விஷயமாய் நடத்துங் காரியங்களைச் செய்துகொண்டிருக்கும் காலம் பிறந்தவனுவான் எனக் கூறி யது குறிப்பிடத்தக்கது. மற்றும் இவன் பிறந்த நாளையும் கோளையும் கீழ்வரும் செய்யுளால் குறிப்பிடுவதை யறிக. 97

கேட்கவே யிவன்பிறந்த நாள்தான்மைந்தா
கேவலமா யனுஷமதிற் பிறந்தமைந்தன்
ஆட்கவே வாரமது வெள்ளியாகும்
அன்பாகப் பெற்றமைந்த னருமைகேளு
நாட்கவே மாசமது மகரமாகும்
நன்மையினுற் செவ்வாய்தா னுச்சமானுன்
ஏட்கவே யிவனுடனே பிறந்தமைந்தர்
எண்ணவொரு பத்துபே ரியம்பினேனே.

(இ-ள்) இவன் எந்த நக்ஷத்திரத்திற் பிறந்தான் என்பதைக் கேட்கின், மிக்க தாழ்ச்சியையுடைய அனுஷத்திற் பிறந்தவன் எனவும், மற்றும் ஜனித்த வாரமானது வெள்ளிக்கிழமை என்னும் சுக்கிரவாரமென்றும், மிக்க சந்தோஷத்துடன் பிறந்தவனென்றும், ஜெனனமாகிய மாதமானது மகரம் என்னும் தைமாதம் எனவும், இவன் செய்த புண்ணியத்தால் செவ் வாய் உச்சமானுன் எனவும், இந்த ஜாதகன் உடன் பிறந்த சகோதர சகோதரிகள் 10-பேர் எனவும் திண்ணமாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) 'கேவலமா மனுஷத்தில்' என்றதால் அனுஷநக்ஷத்திரம் என் பது கொடியதென்னும் கருத்தாகும். 'அன்பாகப் பெற்றமைந்தன்' என்றதால் தாய் தந்தையருக்கு மிக்க பிரியமுடையவன் என்றும் பொருள் கூற வேண்டியதாகிறது. இவனுடன் பிறந்தவர் 10 என்றதால் இந்த ஜாதகன் எத்தனையாம் பிறவி என்பதைக் கீழ்வரும் செய்யுளால் விளக்கு வதை யறிக. 98

இயம்பிடவே யிவன்றனும் பத்தாம்பேராம்
இயல்பான ஆணறு பெண்கள்நான்கு
துயம்பிடவே இவனுக்குக் கண்டமெட்டு
துப்பரவாய்ச் சொல்லுகிறேன் தொடர்ந்துகேளு
வயம்பிடவே யிவனுக்குத் தாரநாலு
வாய்க்குமடா பெண்ணாலே திரவியங்கள்
நயம்பிடவே யிவனுக்கே யன்னியத்தில்
நயமாகப் பொருளும்வந் துதவும்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் பத்தாவது பிறவி என்று கூறுவதுடன் இவனுடன் பிறந்தவர்களில் ஆண்கள் 6-எனவும், பெண்கள் 4-எனவும்

கூறுக. இவனது வாழ்நாட்களில் 8-கெண்டாதி கெண்டங்கள் உண்டாகுமெனவும் கூறுவதுடன் இவனது வாழ்க்கை விவரங்களைக் கூறவேண்டுமெனின், இவனுக்கு மனைவிமார் 4-பேர் எனவும், பெண்களால் திரவியங்கள் சித்திக்கும் எனவும், மற்றும் அன்னியர்களால் மேலான பொருள் முதலியன சித்திக்கும் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவன் 10-வது பிறவி எனவும், மேற்படி 10-ல் ஆண்-6, பெண்-4 எனவுங் கூறியுள்ளார். வாழ்க்கைத் துணைவிகள்-4 என்றது கிரீடி ரேகையினது பொதுப்பலனாகும். பெண்களால் தனம் உண்டு சுகம் உண்டு என்பதும் மேற்படி ரேகையின் முக்கிய விசேஷமாகும். இவ்வாறு கூறியதற்கு திருஷ்டாந்தம் என்னவெனில்? பாரத வீரர்களில் சிறந்த அருச்சுனன் கிரீடிரேகை தனது அஸ்தத்திலிருக்கப் பிறந்தான் என்றும், பிற்காலங்களில் மேற்படி ரேகையினது சக்தியால் அவன் செய்த அபூர்வ செய்கையைக்கண்டே கிரீடி என்னும் பெயரும் உண்டாயின வென்றும், நாடி கிரந்தங்களில் கூறப்பட்டிருப்பதால் இந்த ஜாதகனுடைய வருங்காலபலனும் ஏறக்குறைய மேற்படி கிரீடியை யொத்திருக்கும் என்று கருதவேண்டியதாகிறது. ஆயினும், இந்த விஷயங்களைக் கீழ்வரும் செய்யுட்களால் காணலாம். 99

பார்க்கவே யிவன்வயதோ ரைந்திலேதான்
 பாலகர்க்கு விவாகமது பலிக்கும்பாரு
ஏற்கவே யிவன்வயது பதினெட்டிற்றான்
 இயல்பான விவாகமது முடியும்பாரு
தார்க்கவே தலைவனுக்கு முப்பத்தாறில்
 தகைமையில்லா விவாகமதொன் றுகும்பாரு
கார்க்கவே யிவனுக்கு மைந்தர்தாமும்
 கருணையாற் பதினாறு பிள்ளையாமே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனனாதி வயது 5-ல் இவனுடன் பிறந்தவர்களுக்கு விவாகம் முதலியன ஈடேறும் எனவும், வயது 18 ல் இந்த ஜாதகனுக்கு விவாகம் நடக்குமாயினும், வாலிபகாலமென்று கூறும் 36-ஆம் வயதில் மற்றொரு விவாகமும் நடக்கும் எனவும், இவனது விருத்தாபிய காலங்களில் இவனைக் காப்பாற்றத்தகுந்த புத்திர புத்திரிகள் ஈசன் கிருபையால் மொத்தம் 16-பேர்கள் ஜனிப்பார் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) 'ஐந்திலேதான் பாலகர்க்கு விவாகமது பலிக்கும்' என்று கூறியும், 'இவன் வயது பதினெட்டிற்றான் இயல்பான விவாகமது முடியும் பாரு' என்று கூறினமையால் 5-ஆம் வயதில் நடப்பது ஜாதகனின் சகோதர சகோதரிக்கெனவும், 18-ஆம் வயதில் நடப்பது தனக்கெனவுங் கூறவேண்டுவதாயிற்று. மற்றும் மனைவி நான்கு என்று கூறியும் இரண்டு விவாகங்கள் நடக்கும் காலத்தை மாத்திரம் வயதுடன் குறிப்பிட்டு மற்ற விவாக வயதைக் குறிப்பிடாததால் அவரவர்கள் ரேகை லக்ஷணத்தால் இதனைத் தீர்மானித்துக் கூறுவது நலம். 100

ஆமப்பா விவன்றார மிரண்டுக்குந்தான்
அப்பனே சாபத்தாற் பிள்ளையில்லை
ஓமப்பா மூன்றாவதாரந் தானும்
ஓகோகோ பிள்ளைகளைப் பெற்றாள்பாரு
வாமப்பா பத்துபே ராணதாகும்
வண்மையுள்ள பெண்குழவி யைந்ததாகும்
ஏமப்பா மக்களுக்கு வேதனையில்லாமல்
ஏற்றமுடன் மக்களுமே வாழ்வார்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் தான் முன் ஜன்மத்தில் சம்பாதித்த சாபத்தின் பயனால் இந்த ஜன்மத்தில் இவனது இரண்டு மனைவிகளுக்குப் புத்திரரில்லை என்றாலும், மூன்றாவது மனைவியே பிள்ளைகளைப் பெறுவாள். அவை எவ்விதமெனில்? ஆண்கள் 10-ம், பெண்கள் 5-ஆகும். மேற்சொன்ன ஆண்கள் 10-ம், பெண்கள் 5-ம், எவ்வித குறைவுமின்றி நீண்ட ஆயுளுடன் வாழ்ந்திருப்பார் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) முன்கூறிய 100-வது செய்யுளில் இவனுக்கு உண்டாகும் புத்திர புத்திரிகள் 16 பேர் எனக்கூறி இச்செய்யுளில் 10-ஆணும், 5-பெண்ணுமே நிலைத்திருக்கும் என்றமையால், மற்றுமொரு புத்திரன் நாசமாவான் என்றுங் கூறவேண்டியதாயிற்று. மேற்படி குழவி ஜனித்து மறிக்கும் கால வயதையும் பின்வரும் செய்யுளால் அறியலாம். இதுவன்றி புத்திர விருத்தியையும், மூன்றாம் மனைவிக்கே கூறியதை அறிக. 101

பாரடா விவனுக்கு வயதோமைந்தா
பக்குவமாய் தொண்ணூற்றைந் தாண்டதாகும்
காரடா விவன்வயது நாற்பதுக்குள்
கனமான குடியுந்தான் பெருகும்பாரு
நேரடா விவனுக்கு பேரன்தானும்
நிகரில்லை யிவன்யோக நிகழ்த்தப்போமோ
ஆரடா வீடுசொல்வா ரறிவிற்றானும்
ஆச்சரியம் பெற்றமக்க ளதிகாரமாமே.

(இ-ள்) இந்த ஜாதகனது பூரண வயது எவ்வளவெனில் 96 எனவுங் கூறுக. இதுவன்றி ஜாதகனது வயது 40-க்குள் மேன்மையும் பலத்தையுமுடைய புத்திரன் ஒருவன் பிறந்து இறந்து போவான் எனவும், இந்த ஜாதகனுடைய மகன்வயிற்றில் பிறந்த பேரனது வாழ்க்கைக்கு எவரும் நிகரில்லை யெனவும், அவனது வாழ்க்கை விசேஷங்களைக் கூறுதற்கு இயலாதெனவும் கூறுவதோடு இவனது மைந்தர்களுக்கு ஆறறிவும், வீடுமுதலியனவும், எவருங்கண்டு ஆச்சரியப்படத்தகுந்த நிலையில் அதிகாரம் செய்துக்கொண்டிருப்பார் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) முன் செய்யுளில் கூறப்படாத புத்திரன் ஒருவனை வயது நாற்பதுக்குள் பிறந்து இறந்து போவான் எனக்கூறி முடிவு செய்தனர். மற்றும் இந்த ஜாதகனுக்கு செல்வமும், அறிவும், அதிகாரம் செய்யத்தகுந்த

புத்திரர்களே பிறப்பார் எனவும், இவனது மைந்தர்களின் புத்திரரான பேரன்மார்களும் வெகுவீர சூரபராக்கிரமமாகவே இருப்பார் என்பதும் இச்செய்யுளின் முக்கிய கருத்தாகும். 102

ஆமெனவே இவன்றானு மனேகபூமி
அப்பனே விலைகொள்வா னன்பன்றானும்
வாமெனவே வயதிருபத் தாறுமுதலாக
வாகான வயதெண்பத் தைந்துமட்டும்
காமெனவே யுலகுதனி லதிகாரந்தான்
காட்சியா யாளுவன்றான் கருணையாக
பாமெனவே சிவன்பூசை யிவன்றான்மைந்தா
பக்குவமாய்ச் செய்துவந்தான் பண்புதானே.

(இ-ள்) இந்த ஜாதகனது வாழ்நாட்களில் அனேக பூமிமுதலியவற்றை விலைகொள்வதோடு தன் வயது-26 முதலாய் 85-வயது வரையில் இப்பூமியின் அதிகாரம் செய்து எவரும் கண்டு சந்தோஷிக்கத்தகுந்த மேன்மையுடன் வாழ்ந்திருப்பானெனவும், மற்றும் இந்த ஜாதகன் மிக்க மேன்மையையுடைய சிவபிரானை அன்புடன்தொழுது பணிந்துவந்தான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவனது யோகவாழ்க்கையையும், சிவபிரான் மீது அன்பார்ந்த பக்தி விஸ்வாசமாயிருப்பான் என்றுங் கூறியது அறியத்தக்கது. 103

பண்பணு யிருப்பனிவனுக்குக் கண்டம்
பகுத்துரைப்பே னிவன்வயது பதினேழ்தன்னில்
நண்பனாய்ச் சலந்தனிலே கண்டமொன்று
நலமாக வந்ததென்று நாடிச்சொல்லு
அன்பனா யிவன்வயது பதின்மூன்றுக்குள்
அப்பனே நாற்காலி கண்டமொன்று
வன்பனா யிருந்துவந்தா னிருபத்தேழில்
வரிசையாய் வியாதிகண்டம் வந்ததன்றே.

(இ-ள்) இந்த ஜாதகன் எல்லோரிடத்திலும் மிக்க சினேகமுடையவனாகி இருப்பதுடன், இவனுக்கு உண்டாகும் கெண்டாதி கெண்டங்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகன் ஜனித்த வயது 17-ல் தனது நண்பருடன் ஜலத்தில் விளையாடுகையில் ஓர் கெண்டம் உண்டாகுமெனக் கூறுவதுடன் மேற்படி ஜாதகன் வயது 13-க்குள்ளேயே நாற்கால் ஜீவனாகிய வாகனங்களால் ஓர் கெண்டம் உண்டாகும் எனவும், எவரும் விரும்பத்தகுந்த இந்த ஜாதகன் வயது 27-ல் வியாதியால் ஓர் கெண்டம் உண்டாகுமெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் எவர்களும் விரும்பத்தக்கவனாவான் என்றதுடன் 13-ல் வாகனத்தாலும், 17-ல் ஜலத்தாலும், 27-ல் வியாதியாலும் கெண்டம் உண்டாகும் என்றனர். 104

வந்துதா னிவன்வயதோ ரேழிலேதான்
வாகான மாரிகண்ட மெலிந்தான்மைந்தன்
இந்துதானுற் பத்தெட் டாண்டிலேதான்.
இயல்பான பிராணகண்டம் வருகும்பாரு
எந்துதா னிவன்வயதோ ரெழுபத்தைந்தில்
என்னசொல்வேன் சன்னியா லிறக்கலாச்சு
சந்துதான் சரவணையில் விளங்குகின்ற
சண்முகனால் வந்தபலன் ருக்கிப்பாரே.

(இ-ள்) இன்னும் உண்டாகும் கெண்டாதி கெண்டங்களைக் கூறுமிடத்து இந்த ஜாதகன் வயது 7-ல் மாரி என்னும் வைசூரி கெண்டத்தால் தனது தேகம் மெலிந்து கிடப்பான். மற்றும் தன் வயது 48-ல் தன் பிராணனுக்கு பயமுண்டாகத்தக்க கொடிய கெண்டம் உண்டாகும். ஆயினும், சரவணப் பொய்கையின்கண் உதித்திரானின்ற ஸ்ரீ சிவசண்முகப் பெருமானது கிருபையால் இந்த ஜாதகன் வயது 75-ல் ஜன்னி நோயால் மரணம் அடைவான் என்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவது என்னவெனில்? 7-ல் வைசூரி கண்டமும், 48-ல் கொடிய வியாதியால் பிரபல கண்டமும், 75-ல் பூரண கண்டமும் உண்டாகுமெனக் கூறினார் என்பதாம். 105

பார்க்கவே கிரீடியிட பிரபலன்கள்
பண்பான மைந்தனுக்குப் பதவிரொம்ப
ஏர்க்கவே யிவனமைப்பு காலயோகம்
என்னசொல்வேன் மைந்தனிட வியல்புமைந்தா
கார்க்கவே தேவரிலே யொருவனப்பா
காரணமாய்ப் பதவியுடன் வந்தான்மைந்தன்
தீர்க்கமாய்க் கிரீடியிட மைந்தனுக்குத்
திசைப்பலன்க ளுள்ளதெல்லாஞ் செப்பினேனே.

(இ-ள்) இன்னும் இங்கு கூறும் கிரீடிரேகையில் பிறந்தவர்களது பலாபலன்களைக் கூறுமிடத்து இந்த ஜாதகன் பண்பும், அளவிறந்த சிறப்பும், செல்வமும் அமைந்தவனும், இவனது தன்மையும், காலயோகங்களையும் என்னால் கூறவியலாது. ஏனெனில்? தேவர்களில் ஒருவராயிருந்தும், வினைப்பயன் காரணத்தால் மானிடனாய்ப் பிறந்தான். ஆனதால் கிரீடிரேகையில் பிறந்தவர்களது பலாபலன்கள் யாவும் சொல்லிவிட்டேன் எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் தேவர்கூட்டங்களில் ஒருவனாயினும், வினைக் காரணத்தால் மானிடனாய் பிறந்தானாயினும், சீர் சிறப்பு செல்வம் முதலியவற்றில் மேன்மைப்பட்டவனாகி வாழ்வான் என்பது கருத்து. 106

### விஷ்கம்ப ரேகையின் பலன்

செப்புகிறேன் விஷ்கம்பரேகை மார்க்கம்
சேதிசொல்ல முடியாது திறமாய்க்கேளு
ஒப்புகிறே னிவன்யோகங் காலகண்டம்
ஓகோகோ மைந்தர்களே யுவமைகேளீர்

அப்புகிறேன் க்ஷீரமென்ற சமுத்திரத்தில்
ஆனந்த வாலிலைமேற் பள்ளிகொண்டான்
செப்புகிறேன் ரிஷிகளே யுங்கட்காக
மேதினியி லுள்ளவர்கட் காதியாமே.

(இ - ள்) ஓ ரிஷிகளே! க்ஷீரசமுத்திரத்தின்கண் ஆலிலைமேல் துயின்ற ஸ்ரீமகாவிஷ்ணுவினது திருவருளால் இந்த ரேகைசாஸ்திரத்தைக் என்னால் கூடியவரையில்உங்களுக்குச்சொல்லுகிறேன் கேட்பீராகவும்.எப்படியெனில்? விஷ்கம்பரேகையில் பிறந்தவர்களது விஷயத்தை எவராலும் அளவிட்டுச் சொல்ல முடியாது. ஆயினும், முக்கிய விஷயங்களான இவனது யோகத்தை எந்தெந்த காலத்தில் கெண்டமுண்டாகு மென்பதையும் சொல்லுகிறேன் இதனை மிக்க கவனத்துடன் கேட்பீராகவும் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் விஷ்கம்பரேகையில் பிறப்பது அரிது என்றும் அவர்களது விஷயங்களை அறிய முடியாதென்றாலும், ஸ்ரீவிஷ்ணுவினது கிருபையால் என்னால் கூடியவரையில் சொல்லுவேன் கேட்பீராக வென்று இந்நூலாசிரியராகிய கமலமாமுனிவர் கூறத்தொடங்கினர். 107

ஆதியடா விஷ்கம்பம் இரண்டிரண்டு
அணிவிரலிற் சிறுவிரலி லேறிநிற்கும்
சோதியடா விருசுழியு நாலுபுள்ளி
சொல்லுதற்கு மூவரைமே லேறிக்காணும்
வாதியடா விவன்பிறவி யோகசாலி
வளமைபெற்ற மைந்தனிவன் வரிசைகேளு
நீதியடா வேதமுறைத் தகமைமைந்தன்
நீனிலத்தி லிவன்போல்வா ரில்லைதானே.

(இ-ள்) இங்கு கூறும் விஷ்கம்ப ரேகையானது நான்கு கீற்றுகளா யுள்ளது. மற்றும் அணிவிரலாகிய மோதிர விரலிலும், சிறு விரலாகிய சுண்டு விரலிலும், மேற்படி நான்கு கீற்று ரேகைகளும் ஏறி நிற்பதுடன் மேற்படி விரல்களின் மூன்று கணுக்களிலும் இரண்டு சுழிகளும், நான்கு புள்ளிகளு மாய் மேற்படி விரல்களின் மூன்று வரைகளிலும் காணப்படும். இதன பலனாவது என்னவெனில்? இந்த ஜாதகன் தர்க்கம் செய்பவனும், யோகப் பிரபலனும் ஆவான். மற்றும் இவனது விஷயங்களை கவனிக்குமிடத்து இந்த ஜாதகன் வேதவல்லவனாவான். மற்றும் வேதமோதும் விஷயத்தில் இவனுக்கு எவரும் நிகரில்லையெனக் கூறுவாராக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் 5-ஆம் அடியில் வாதி என்றதால், வாதமுறை செய்வோன் என்றும் பொருள் கூறுவர் சிலர் ஆயினும் 7-8-ஆம் அடிகளில் வேதமுறைக்கத்தக்கவன் வேதவல்லவன் என்றதால் மேற்கூறிய வாதி என்பதை தர்க்கம் செய்வோன் எனக் குறிப்பிடவேண்டியதாயிற்று. 108

இல்லையென்று சொல்வதென்ன மைந்தாகேளு
இகத்திலே வெறுமையில்லை யிளையாள்யோகம்
வல்லமையாய்ப் பிறந்தமைந்தன் சதயந்தன்னில்
மகத்தான யேழாநாள் கெர்ப்பக்காரன்

கல்லையென்ற வில்லறந்தான் பிறந்தவீடு
காட்சிபெறும் புதுமனையிற் கருணைகூர்ந்தான்
ஒல்லையென்ற வைப்பசியிற் செவ்வாய்தன்னில்
உதயம்போற் பிறந்துவந்தா னுவமைகேளே.

(இ-ள்) வேத முறைப்பதில் இவனுக்கு இணையானவர்கள் இல்லை என்று கூறியது யாதுகாரணத்தால் என சந்தேகம் வேண்டாம். இவை பொய்யல்ல, மற்றும் இந்த ஜாதகனுக்குத் தனது இளையாள் யோகம் பிரபலமுண்டு. இதுவன்றி இந்த ஜாதகன் 7-ஆந் தேதியும், சதய நக்ஷத்திரமும் கூடிய தினத்தில் பிறந்தவனுவான். அவையாவன: வைகாசியும் செவ்வாய்க் கிழமையும் கூடிய நாளில் உதய நேரத்தில் பிறந்தவனுவான். மற்றும் இந்த ஜாதகன் அழகியதும் புதியதுமாகிய மனையில் பிறந்தான் எனவுங் கூறுக. மற்றும் விஷயங்களையுங் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் ஐப்பசிமாதம் 7-ஆம் தேதி செவ்வாய்க்கிழமை உதயகாலத்தில் சதயம் கூடிய தினத்தில் பிறந்தான் என்று கூறியுள்ளார். இளையாள் யோகம் என்பதை பின்வருவனவற்றால் அறிக. 109

கேளப்பா பிறந்ததிவன் வடவாசல்வீடு
கேவலமாய்ப் பிறக்கையிலே பிதாவுங்காணுன்
நாளப்பா நாழிகைதான் முக்காலுக்குள்
நன்னயமாய்ப் பிதாவுமவன் மனையில்வந்தான்
தாளப்பா தனசாலி மூன்றும்பேறு
தனக்குமுன்னே பிறந்ததுதான் பெண்ணேயாகும்
ஆளப்பா விவன்முன்னோர் வைத்தபண்டம்
அத்தனையு மெடுத்திடவே வந்தான்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த வீட்டின்வாயிலானது வடக்குவாசல் எனவும், இந்த ஜாதகன் பிறந்தகாலத்தில் இவன் பிதா தன் வீட்டில் இல்லை எனவும், பிறந்த முக்கால் நாழிகைக்குப் பின்பே வந்தான் எனவும், இந்த ஜாதகன் மிக்க தனவந்தனுவான் எனவும், மூன்றும் பிறவி எனவும், இந்த ஜாதகனுக்கு முன்பிறந்த பிறவிகள் பெண் எனவும், இந்த ஜாதகன் முன்னோர் தேடிவைத்த பண்டபதார்த்தங்கள் யாவையும் எடுத்து கையாளவே இவன் பிறந்தான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) 'முன்னோர் வைத்த பண்டம்' என்றதால், தன் முன்னோர் புதைத்துவைத்திருந்த பொருள் எனவுங் கூறலாம். மற்றும் இந்த ஜாதகன் மூன்றும் பிறவி என்பதும் இவனுக்கு முன்பிறந்தவர்கள் பெண் என்பதும் கவனிக்கத்தக்கது. 110

பாரடா விவனுக்குக் கிரகமூன்று
பண்பான லக்கினத்தி லுச்சமானுர்
சீரடா திசையோகம் பார்த்துமைந்தா
சிற்பரத்திற் கருணைவைத்தா ரீஸ்பரர்தான்

கூரடா மண்மனைத்தான் கொள்ளமைந்தன்
குவலயத்தில் பிறந்திடுநற் குணவானப்பா
ஆரடா விவனைப்போல் யோகவான்றான்
ஆச்சரியம் பெற்றமைந்த னழகனாமே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த கிரக அடவியின்படி ஜனனகாலத்தில் மூன்று கிரகங்கள் உச்சமுண்டாயின. இது யாது காரணத்தால் எனில்? எல்லாம்வல்ல ஈசன் இவன்மீது கருணைகூர்ந்து திசையோகம் முதலியன பிரபலமாயுண்டாக கடாக்ஷித்தார். ஆகையால், இந்த ஜாதகனைப்போன்ற யோகவான் இல்லை எனவும், அனேக மண்மனைகளைக் கொள்ளத்தகுந்தவன் எனவும், குணவானும், ஆச்சர்யமும், மிக்க அழகும் பொருந்தியவனாவான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) ஈஸ்வரனது கடாக்ஷத்தால் இவன் அனேக பூமிகளைக்கொள்ளவும், குணம் அழகு முதலியன நிறைந்துள்ளவனாக வாழ்வதற்கே மூன்று கோட்கள் உச்சமுண்டாயின வென்பது இச்செய்யுளின் முக்கிய கருத்தாகும். 111

ஆமென்ற விவன்வயதோ ரெழுபத்தெட்டாம்
அன்பான வுடன்பிறவி பத்துபேர்கள்
காமென்ற கருவமைப்பின் மூன்றுபேர்கள்
கைவிட்டுத் தாண்டுவார் கனிவதாக
வாமென்ற சிவபூசை வாமபூசை
வரிசையாய் நடத்துவான் வகையைக்கேளு
தாமென்ற தாய்தந்தை யிருவர்தங்கள்
சரண கமலங்களைத்தான் போற்றுவானே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்குள்ள வயது மொத்தம்-78 எனவும், இவனுடன் பிறந்த சகோதர சகோதரிகள் மொத்தம் 10-ல், 3-பிறவிகள் தன் தாய் கர்ப்பத்திலேயே நசிந்துபோனார்கள் எனவும், இந்த ஜாதகன் தனது வாழ் நாட்களில் ஈஸ்வரர் ஈஸ்வரி என்னும் இருவரையும் இடைவிடாது பூஜை செய்து வணங்குவான் எனவும், தன் தாய் தந்தையர்களது இருபாத கமலங்களையும் போற்றி வணங்குவான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவனுக்கு வயது-78 எனவும், உடன் பிறந்தோர் 10-ல் மூன்று கெர்ப்பத்தில் நாசமாயின வென்றும், ஈஸ்வரபக்தியுடையவன் என்றுங் கூறினர். மற்றும் தாய் தந்தையரது சரண கமலங்களை வணங்குவான் என்றதால், தன் தாய் தந்தையரிடம் பக்தியும் அன்பும் உடையவன் என்றுங் கூறலாம். 112

போற்றுவன்கா ணிவன்வயது பத்துக்குள்ளே
பொக்கிஷந்தான் கொடுத்திடுவ னிவன்றானப்பா
சாற்றுவன்கா ணிவன்வயது பனிரண்டுக்குள்
தரணிதனிற் பூமிகொள்ள சோகமுண்டாம்



ஏற்றுவன்கா ணிவன்வயதோ ரேழுக்குள்ளே
இல்லறத்தி லுள்ளபொரு ளெல்லாம்போகும்
மாற்றுவன்கா ணிவன்வயதோ ரைந்துக்குள்ளே
வண்மையுள்ள மாரியது வருகும்பாரே.

(இ-ள்) மற்றும் இந்த ஜாதகன் பக்தியுடையவனுயினும், தன் வயது 10-க்குள் பொக்கிஷமெல்லாம் சேருவதுடன் வயது 12-க்குள் பூமி முதலிய விஷயங்களால் துயரமுண்டாதலும், வயது 7-க்குள் தனதில்லத்திலுள்ள பொருள் யாவும் தன் கைவிட்டு நீங்கும் எனவும், இந்த ஜாதகன் ஜனனுதி வயது 5-க்குள் மாரி என்னும் வைசூரி முதலியன உண்டாகுமென்றும் நிச்சயமாய் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவதென்னவெனில்? 5-ல் வைசூரிகாணும். 7-ல் தனது இல்லத்திலுள்ள பொருள் நஷ்டமாகும். 10-ல் எல்லா செல்வமும் சேரும் என்பதுடன், 12-ல் பூமி முதலியவற்றால் சோகம் உண்டாகும் என்றதால், 12-ல் பூமி மூலதொந்திரவு முதலியன உண்டாகு மென்பது கருத்தாகும். 113

பார்க்கவே யிவன்வயது பனிரண்டுக்குள்
பண்பான வுடற்பிறவி மூன்றுபோம்
ஏற்கவே யிவன்வயதோ ரிருபத்தெட்டில்
ஏற்றமுள்ள விவன்பிதா விறக்கும்பாரு
கார்க்கவே யிவன்வயது முப்பத்தைந்தில்
காரிழையாள் மாதாவு மிறப்பாள்பாரு
ஆர்க்கவே யிவன்வயது பதினாறுக்குள்
அன்னவனும் விவாகமது வாகும்பாரே.

(இ-ள்) இன்னும் கூறவேண்டுவதெனின் இந்த ஜாதகன் வயது 12-க்குள் மூன்று உடன்பிறவிகள் ஜனிப்பாரெனவும், இந்த ஜாதகன் வயது 28-ல் இவன் பிதா இறந்துபோவான் எனவும், வயது 35-ல் மாதா என்னும் தாயானவள் இறந்து போவாள் எனவும், இந்த ஜாதகன் வயது 16-க்குள் விவாகம் என்னும் கலியாண சுபசோபனுதிகள் நடக்குமென்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தென்னவெனில் இவன் பிறந்த 12-வருடங்களுக்குள் மூன்று சகோதாருண்டாவார் என்பது கவனிக்கத் தக்கது. மற்றும் 25-ல் பிதாவும், 35-ல் தாயும் மரிப்பார்கள் என்றும், 16-ல் விவாகம் நடக்கும் என்பதும் கருத்தாகும். 114

ஆவதென்ன விவனுக்குத் தாரம்யோகம்
அப்பனே ரெண்டுண்டா மிவனுக்கப்பா
பாவமென்ன மூன்றுர முப்பத்தாறில்
பனிமொழியாள் வியாதிகண்ட முண்டுபாராய்
ஈவதென்ன விவனுக்கு பிரதிஷ்டைதானே
இயல்பாகச் செய்திடவே நீங்கும்பாவம்
காவதென்ன பிரதிஷ்டை செய்யாவிட்டால்
காரிழையா ளிறந்துகலி யாணமாமே.

(இ-ள்) ஜாதகன் வயது 16-ல் விவாகம் நடந்தாலும், இந்த ஜாதகனுக்கு மனைவி இரண்டெனவும், மேற்படி மனைவிகளால் இந்த ஜாதகனுக்குப் பிரபலயோக முண்டென்றும், தன் வயது 16-ல் விவாகம்செய்த முதல்மனைவியானவள் இவன் வயது 36-ல் கொடிய வியாதி முதலியவற்றால் கெண்டமுண்டாகும் எனவும், அக்காலம் என்ன செய்யவேண்டுமெனில் சிவனுக்குப் பிரதிட்டை செய்யின் மேற்படி தோஷமானது நீங்கும் எனவும், மேற்கண்ட பிரதிட்டை செய்யாவிடின் மேற்படி மனைவியானவள் இறந்து மறுகலியாணம் செய்துக்கொள்வான் எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முதலில் இந்த ஜாதகனுக்கு மனைவியோகம் இரண்டு என்று கூறினாலும், 36 ல் முதல் மனைவிக்கு கொடிய வியாதியால் கெண்டமுண்டாகும் என்றும், அக்காலம் சிவாலயப் பிரதிட்டை செய்ய வேண்டுமென்றும், அவ்வாறு செய்யாவிடின் முதல்மனைவி மரித்து இரண்டாவது விவாகம் உண்டு என்று கூறியதால் சந்தேகத்திற்கு இடம் தருகிறது. இதனை அவரவர்களுடைய ஜாதககணிதமூலமாய் நிலைகூறுவது சோதிடர்களின் கடமையாகும். 115

ஆமடா விவனுக்கே கண்டமாறு
அகலாமல் வந்துவிடு மறிந்துகொள்ளு
வாமடா வாயுதத்தாற் பகையுமுண்டு
வஞ்சனைகேள் மெத்தவுண்டு வரிசைகேளு
ஊமடா விவனுக்கோ ரைந்துபிள்ளை
உற்பனமாய் பிறந்திடுவ ருறுதியாக
நாமடா சொல்லுகிறே மிவன்றன்மைந்தா
நலமான தனசாலி யையமின்றே.

(இ-ள்) இந்த ஜாதகன் தனது வாழ்நாட்களில் 6-கெண்டாதி கெண்டங்கள் தவறாதுண்டாகும் எனவும், மற்றும் தன் வருகாலங்களில் ஆயுதமூலமான கொடியபகையும், தன்னை வஞ்சனை செய்யத்தகுந்த விதங்களும் உண்டாகும் எனக்கூறுக. இதுவன்றி இந்த ஜாதகனுக்கு புத்திரபுத்திரிகள் 5-பேர் கட்டாயமாய் உண்டாவார் எனவும், இந்த ஜாதகன் தனவந்தன் என்றும், பணக்காரன் ஆவான் என சந்தேகமின்றி கூறுவாயாக எ-று.

(வி-ரை) 'ஆயுதத்தால் பகையுமுண்டு' என்றதால் தனது பகைவர்களால் ஆயுதத்தால் சண்டை முதலியனவுண்டாகும் என்றும் அவை ஒரு கெண்டம் என்பதும் கருத்து. மற்றும் பிள்ளைகள்-5 என்பது கெண்டாதி கெண்டங்கள் ஆறு என்பதும் கவனிக்கத்தக்கது. 116

ஐயமில்லை சொன்னமொழி மைந்தர்க்கப்பா
அருளுதவு மீஸ்பரனுர் சொன்னவாக்கியம்
மெய்யெனவே தாமென்ற பேர்க்குமைந்தா
மேதினியி னற்சனனம் விளங்கும்பாரு
பொய்யெனவே மனதினுள் நினைப்பாராகில்
போதமில்லா மறலிகுழி விழுவார்பாரு
வையகத்தின் மக்களுக்காய்ச் சொன்னமார்க்கம்
வாகான கேசரியின் வண்மைகேளே,

(இ-ள்) இதுவரையில் கூறிவந்த விஷயங்களில் யாதொரு ஐயமுமில்லை. ஏனெனில்? இந்நூலானது எல்லாம்வல்ல ஈஸ்வரன் ஈஸ்வரிக்குச் சொன்ன விஷயமாகும். இதனை மெய்யென்று நினைத்து ஆராய்வோருக்கு ஜனன வரும்வினைப்பயன் தெள்ளிதாய் விளங்கும். பொய்யென்று நினைத்து அவமதிப்போர்கள் நன்மையைத் தரப்படமாட்டாத எமக்குழி என்னும் நரகக் குழியிலேயே வீழ்ந்திருப்பார். இவை தனது பத்தினியாகிய உமாதேவிக்கு இப்பூமியிற் பிறந்த மானிடர்களின் வரும்வினை மார்க்கங்களை கூறினர் என அறிக எ-று. 117

சாத்மீக ரேகையின் பலன்

வண்மையடா சாத்மீக ரேகையினால்
வரிசையாய் கண்டங்க ளாறுண்டாகும்
உண்மையடா நீராலே கண்டமொன்று
உற்றதொரு சர்ப்பத்தாற் கண்டமொன்று
தண்மையடா வாயுதத்தாற் கண்டமொன்று
தாட்டியற்கு நாயாலே கண்டமொன்று
திண்மையடா கண்டங்க ளாறுஞ்சென்றால்
தீமையொன்று மில்லையடா செய்திநன்றே.

(இ-ள்) உலகிற் பிறந்த மானிடர்களுக்குத் தமது அஸ்தத்தின்கண் சாத்மீகரேகை என்பது உண்டாகுமேயாயின் அந்த ஜாதகனுக்குக் கெண்டாதி கெண்டங்கள்-6 உண்டாகுமெனவும், அவற்றுள் ஜலகண்டம் ஒன்றும், சர்ப்பகண்டம் ஒன்றும், ஆயுததால் கெண்டமொன்றும், நாய் கடியால் ஒரு கண்டமும், மற்றுமிரு கண்டங்களும் உண்டாகும். இந்த ஆறு கண்டங்களும் நீங்குமேயாமாகில் இந்த ஜாதகனுக்கு எவ்வித குறைவும் இல்லையென்றும், ஆயுள் தீர்க்கமெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) சாத்வீக ரேகையுடன் பிறந்தவர்களுக்கு கண்டாதி கண்டங்கள்-6 என்றும், அவற்றுள் மேற்கூறிய கண்டங்கள் 4-போக மற்றைய கண்டங்களைக் கீழ்வரும் செய்யுளால் விளக்குவார். 118

நன்றெனவே சத்துருக்கள் மருந்துங்கள்ளும்
நன்மையாய்க் கொண்டுவந்து மைந்தாகேளு
சென்றெனவே யிவனைத்தான் கொல்லவேண்டி
செய்திடுவார் மந்திரந்தான் முப்பத்தாறில்
அன்றெனவே யறிந்துநீ நீக்கவேண்டும்
அப்பனே சிவபூசை மறந்திடாதே
நன்றெனவே குமரனைநீ வணங்கிக்கொண்டால்
நலமான கெண்டமெல்லா மோடும்பாரே.

(இ-ள்) மற்றுங் கெண்டாதி கெண்டங்களைக் கூறவேண்டுவதெனில், தனது சத்துருக்களானவர் மது என்னும் கள்ளுடன் மருந்தைக் கலந்து இவர் பிராணனைத் தொலைக்க நல்லவர்களைப்போல் இவனிடம் வந்து அருந்தும்படி செய்வார் அவை ஒரு கண்டமாகும். மற்றும் ஜாதகன் வயது

36-ல் தனது பகைவர் செய்யும் மந்திரம் சூனியம் முதலியவற்றால் ஓர் கண்டமுண்டாகும். அதனை மெத்த ஜாக்கிரதையுடன் நீக்கவேண்டும். எப்படியெனில்? சிவனை மறவாமல் தொழுதும் ஸ்ரீமுருகக்கடவுளை இடைவிடாது வணங்கி வந்தால் மேற்படி கெண்டாதி கெண்டங்கள் யாவும் நீங்குமெனக் கூறுக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனுக்கு உண்டாகும் கெண்டாதி கெண்டங்களில் பகைவர் மருந்திட்டாலும், மேற்படி பகைவர் வைப்பு, சூனியம், முதலியவற்றாலும் உண்டாகும் கெண்டம் மிக்க கொடியது. ஆதலால் அக்காலம் சிவபிரானிடம் பக்தியும் குமரக்கடவுளைத் தொழுவதுமாயிருக்கின் மேற்படி கெண்டம் நீங்கி பூரண ஆயுளுண்டாகும் என்பது கருத்து. 119

### குடேரிகண்டனி ரேகையின் பலன்

பார்க்கவே குடேரிகண்ட ரேகைமைந்தா
பண்பான நடுவிரலிற் குறுக்கேரெண்டு
தீர்க்கவே யிருகூறு வரைகண்மைந்தா
சிற்பரம்போ லிருக்குமது திரத்தைக்கேளு
ஆர்க்கவே குடேரிகண்டன் வளையமாக
அன்பாக விருக்குமடா வறிவினாலே
சேர்க்கவே யிவன்பிறந்த திசையின்யோகம்
திரமில்லா பாவியடா செப்பக்கேளே.

(இ-ள்) குடேரி கண்டனி ரேகையினது விஷயம் யாதெனின்? மேற்படி குடேரிகண்டனிரேகை என்பது நடுவிரலிலுள்ள கணுக்களில் இரண்டு கீற்றுகளாயும், இரண்டு வரைகளிலும் சிற்பரம்போன்றும் வளைந்து நிற்குமாதலால் இதனை உமது அறிவினால் கண்டு தெளிந்துகொள்வாயாகவும். மற்றும் இந்த ஜாதகன் திசையோகம் என்னும் இரண்டும் நிச்சயமில்லாப் பாவியென கூறவேண்டியதால் இவனது விஷயங்களைக் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) 'குடேரிகண்டன்ரேகை' என்பது நடுவிரலிற் குறுக்கு இரண்டு கீற்றாயும் கணுக்களில் சிற்பரம் போன்று வளைந்திருக்குமெனவும், அதனை மிக்க சாக்கிரதையாய் கண்டுபிடிக்கவேண்டும் என்றும் கூறினார். மற்றும் இந்த ஜாதகன் யோகம் முதலியன இல்லாதவன் என்றும் கூறியுள்ளனர். 120

செப்புகிறேன் மைந்தனிவன் பிறக்கும்போது
சேதிசொல்வே னில்லறத்தின் மிகவேபாக்கியம்
அப்புகிறே னிவன்பிறந்த வாண்டுக்குள்ளே
அர்த்தமொன்று மில்லாம லழிந்துபோச்சு
நப்புகிறே னிவன்பிறந்த மூன்றாங்கொர்ப்பம்
நானிலத்தில் வெறுமைபட்டு திரிவான்மைந்தன்
வப்புகிறேன் வறுமையுள்ள மைந்தன்றானே
வகையான புதனின்ற நேரமாமே.

(இ-ள்) இந்த ஜாதகனது விஷயங்களைக் கவனிக்குமிடத்து இந்த ஜாதகன் பிறந்த வருஷம் 1-க்குள் இவனது செல்வம் யாவும் சென்றவழி தெரியாமல் நாசமாய் விடும். மற்றும் இந்த ஜாதகன் மூன்றும் பிறவியாதலால் இவன் பிறந்தது முதல் மிக்க வறுமை வெறுப்புடன் திரிவான் எனவும், இவன் பிறந்த நேரமானது கொடியதாதலால் என்றும் மிக்க தரித்திரமுடையவனாகவே இருப்பானெனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தென்ன வெனில், இந்த ஜாதகன் மூன்றும் பிறவியானதின் காரணத்தாலும், இவன் பிறந்த கால நேரத்தாலும், இவன் மிக்க வறுமைவாய்ப்பட் டிருப்பானெனவும், இவன் ஜனித்த வருடம் 1-க்குள் இவனது பிதுர் செல்வம் யாவும் நீங்கும் என்பது கருத்து. 121

நேரமடா கேட்டையிலே பிறந்தபிள்ளை
நேர்மையுள்ள சனிநாளிற் பிறப்பதாகும்
தாரமடா தனக்குத்தான் விவாகமில்லை
தன்மையுள்ள முதற்ஜனனஞ் செய்தபாவம்
ஆரமடா விவன்வெகுவாய் வீடுதோறும்
அன்னமில்லா திரந்துண்டு யலைவான்மேலும்
பாரமடா பந்துக்களிற் பகையுண்டாகிப்
பரதவித்துப் பேதையனாய்த் திரிவான்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனனமானது சனிவாரம் எனவும், கேட்டை நக்ஷத்திரமும் கூடிய தினத்திலும் பிறந்தவன். ஆதலால், இவன் தனது முன் ஜன்மத்தில் செய்த பாவத்தால் இந்த ஜன்மத்தில் விவாகம் என்பதே இல்லை யெனவும், இவனது வாழ்க்கையானது தமது பந்துக்களால் கொடிய பகையுண்டாகி பேதையைப்போன்று பரதவித்துத்திரிந்து அன்னமில்லாக் குறையால் வீடுதோறும்சென்று பிச்சையெடுத்துச் சாப்பிடத்தகுந்தவன் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கியகருத்தாவ தென்னவெனில், இந்த ஜாதகன் சனிவாரமும், கேட்டைநக்ஷத்திரமும் கூடியநாளிற் பிறந்தவனானதால் பந்து விரோதனாய் எவரும் உதவியின்றி பிச்சையெடுத்துச் சாப்பிடத் தகுந்தவன் என்பதேயாகும். 122

பார்க்கவே யிவன்வயது நாற்பத்தெட்டு
பண்பான வாயுளில்லை பாவிக்கப்பா
ஏர்க்கவே இல்லறத்தி லேஞ்சுக்குள்ளே
எடுத்திடுவன் றாய்தந்தை யினங்களோடு
தார்க்கவே யிவனுக்கோ ரைந்துகெண்டம்
தாட்டியா யுண்டெனவே சாற்றலாகும்
வார்க்கவே யிவன்கிளையி லொருவரில்லை
வண்மையின்றிப் பெற்றமைந்தன் வரிசைகூறே.

(இ-ள்) இந்த ஜாதகனது விஷயங்களை யின்னும் சோதிக்குமிடத்து எந்த விதமான சுகமும் இல்லாதவனும், தன்னுடன் பிறந்த துணைவர் என்பர் ஒருவரேனும் இல்லாதவனாகியும், தனது மாதா பிதாக்களைத் தன் 5-ஆம் வயதிலேயே இழந்துபோகுபவனாய் தன் வாழ்நாட்களில் 5-கெண்டாதி கெண்டங்களுடையவனாகிய தனது வயது 48-ல் கட்டாயமாய் மரணமாவா னெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தென்னவெனில் இந்த ஜாதகன் எவ்வித சுகமும் இல்லாதவனாகி தனது 48-ஆம் வயதில் மரிப்பான் என் பதேயாகும். மற்றும் விஷயங்களைப் பின்வரும் செய்யுளால் அறிக. 123

கூறிடவே யிவன்யோக வாழ்க்கைமைந்தா
குவலயத்திற் சொல்லிவிட்டேன் கூர்மையாக
ஆறிடவே யிவனுடைய வமைப்பினாலே
அடவாகச் சொல்லிவிட்டே னனைவோர்க்காக
பாறிடவே யிவனமைப்பிவ் வளவேமைந்தா
பரிந்துசொல்லும் ரேகையிடப் பலன்றானே
சீறிடவே புவியரச ருறவாவார்கள்
தேவர்களுக் கிந்திரனாய்ச் செப்பலாமே.

(இ-ள்) குடேரிகண்டன் ரேகையில் பிறந்தவர்களது யோகத்தையும், வாழ்க்கையினது விவரங்கள் யாவும் என்னறிவிற் கேற்பட்டபடி அவனது கையிலுள்ள ரேகையினது இலக்ஷணத்தால் எல்லாமறியும் வண்ணம் தெளி வாய்க் கூறியுள்ளேன். இந்த ரேகைப் பலனையும், மர்மங்களையும் சரிவர அறிந்துகொள்ளுவாயே யாமானால் இப்பூமியின்கண் உள்ள அரசர்யாவரும் உறவாவர். இதுவன்றி தேவர்களுக்கெல்லாம் இந்திரன் தலைவனானதுபோல் நீயும் தலைவனாய் விளங்குவாய் எனக் கூறலாம் எ-று. 124

### சக்கரகுலிச ரேகையின் பலன்

ஆமெனவே சக்கரக் குலிசைமைந்தா
அறியவே சொல்லுகிறே னன்பாய்க்கேளு
மாமெனவே யிவன்கையி லிருக்குமாகில்
மகத்தான குலிசமட்டும் வளரும்பாரு
நாமெனவே யிவன்பிறந்த யோகவாழ்க்கை
நலம்பெற்ற மைந்தனடா ஞுடிக்கேளு
காமெனவே யுமையவள் தான் கருணைகூர்ந்து
கடாட்சிப்பா ளிலட்சுமியுங் கருணையாயே.

(இ-ள்) சக்கரக்குலிசரேகை யுடையவர்களது விஷய விவரங்களைச் சொல்லுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? மேற்கூறிய சக்கரக்குலிச ரேகை என்பது எவர்கள் கையிலுள்ளனவோ அவர்களுக்கு நாளுக்குநாள் அஷ்ட ஐஸ்வர்யங்களும் உண்டாகும். இவன் பிறந்த யோகமும், வாழ்க்கை யும் மென்மேலும் பெருகும் எனவும், ஸ்ரீசத்திதேவியான உமையவள் கடாக்ஷத்தால் லக்ஷிமியும் கடாக்ஷம் செய்து மிக்க நன்மையும் சுகமும் உண்டாகும் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) சக்கரக்குலிசரேகையில் பிறந்தவர்கள் லக்ஷிமிவிலாச முடையவர்களாய் அஷ்டஐஸ்வர்யமும் பொருந்தியவர்களா யிருப்பார் என்பதே இச்செய்யுளின் முக்கிய கருத்தாகும். 125

ஆகுமென்ற குலிசமடா விற்பனந்தான்
ஆச்சரியம் லிபிகளெல்லாம் படிப்பான்பாரு
வாகுமென்ற வேதமெல்லாம் அறிவானப்பா
வகையாக வில்லறத்தி லிருந்துவாழ்வான்
போகமென்ற வதிபோகஞ் செய்வான்பாரு
போக்குநீக் குள்ளபுத்தி புலமைசெய்வான்
ஆகுமென்ற கலைக்கியானம அறிவன்மைந்தன்
அன்பான சரஸ்வதிவந் தருள்செய்வாளே.

(இ-ள்) சக்கரக்குலிச ரேகையில் பிறந்தவர்களது பலன் என்னவெனில்? அவர்கள் வாழ்க்கையானது மிக்க ஆச்சர்யமுடையவரும், வேத சாஸ்திரம் பலவும், தர்க்கசாஸ்திரம் பலவும் ஆராய்ந்தறிவதுடன் தனது இல்லறத்திலேயே இருந்து வாழத்தகுந்தவனுவான். இன்னும் சொல்ல வேண்டுவதென்னவெனில், எல்லாவித சுகபோகங்களையும் அறிந்தவனும் அடைந்தவனுமாகி, இவை நன்மை, இவை தீமை என்னும் பகுத்தறிவுடையவனுய் 64 - கலைக்கியானங்களையும் தெரிந்தவனுகி, சரஸ்வதிதேவியினது அருள்பெற்றவனுகி வாழ்வான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவதென்னவெனில், மேற்படி ரேகையில் பிறந்தவன் வேதம், சாஸ்திரம், கலைக்கியானம் எல்லாம் அறிவான். ஆயினும் இல்லறத்திலிருந்து வாழ்வான் என்பதே இச்செய்யுளின் கருத்தாகும். 126

செய்யவே மைந்தனிவ னழகனப்பா
செப்புகிறேன் மன்மதனுக் கொப்பேயாவன்
வையகத்தில் இவன்பெரிய யோகசாலி
வாகனங்க ளேறியிவன் றிரிவான்பாரு
மையல்விழி மாதர்களை மயங்கச்செய்வான்
மகாராச ராசர்களை வசமேசெய்வான்
ஐயமில்லா வழகனடா சூட்சுமபுத்தி
ஆச்சரிய முள்ளவனு மறிந்துபோற்றே.

(இ-ள்) இந்த ஜாதகன் மிக்க அழகுடையவனுக இருப்பான். எப்படியெனில்? மன்மதனுக்கு ஒப்பானவன் ஆவான் என்பதுடன் இப்பூமியின்கண் இந்த ஜாதகன் பிரபல யோகமுடையவனும், வாகனங்களில் ஊர்ந்து பிரயாணம் செய்யத்தகுந்தவனும், மையணிந்த கண்களையுடைய மாதர்களை மயங்கச்செய்யும் தன்மையுடையவனும், மகாராஜாக்களாகிய சக்கரவர்த்திகளையும் தன் வசமாக்கத் தகுந்தவனும் இவ்விதமான பழுதுமில்லாத அழகும் கூர்மையான புத்தியும் எவரும் கண்டு ஆச்சரியப்படத் தகுந்தவனும் ஆவான் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனைக்கண்டு எல்லா மாதர்களும் மயங்கத்தக்க அழகும், மன்மதனைப் போன்றவனும் ஆவான் என்று கூறியுள்ளார். மற்றும் புத்தி யுத்தி முதலியனவும், ராஜவசிய முடையவனும் ஆவான் என்பது கவனிக்கத்தக்கது.

127
போற்றுவதற் கிவனைத்தான் போற்றவேண்டும்
பூமியிலே குலிசமென்றால் விஷ்ணுவாகும்
சாற்றுவதற் கைங்கரனைச் சாற்றவேண்டும்
தன்மையுள்ள மைந்தனையுஞ் சாற்றவேண்டும்
வாழ்த்துவதற் கிவனுடைய யோகவாழ்க்கை
வையகத்தில் மற்றொருவர்க் குண்டோகண்டாய்
போற்றுவதற் கிவன்யோக வாழ்க்கைதன்னைப்
பேசரிதா முலகறியப் பேசுவோமே.

(இ-ள்) இவ்வுலகில் பிறந்த மானிடர்களில் பெருமையாய்ப் பேச வேண்டுமெனில், அழகில் இந்த ஜாதகன் ஒருவனையே பேசத்தகும். ஏனெனில்? அஷ்ட ஐஸ்வரியமும் பொருந்திய விஷ்ணுவைப்போன்றவனுவான். குணம் முதலியவற்றால் விநாயகருக்கு ஒப்பானவனுவான். ஆனதால் இந்த ஜாதகன் போற்றத்தகுந்தவனுவன். யோக வாழ்க்கை முதலியனவற்றும் இந்த ஜாதகனைத் தவிர வேறொருவருக்கும் உண்டாகாதென்பது நிச்சயம். இவனது வாழ்க்கை யோகங்கள் பேசமுடியாததாதலால் உலகறிய பேசத்தகுந்த யோகவான் என்றுங் கூறுவாயாக.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவது என்னவெனில்? அழகில் மன்மதனைப்போன்று அயிஸ்வர்யங்களில் விஷ்ணுபோன்றும், குணத்தில் விநாயகரைப் போன்றவனுமாதலால், இந்த ஜாதகனது யோக போக சுகங்களை எவராலும் கூறமுடியாது ஆதலால் உலகமெங்கும் புகழ்ச்சியாய்ப் பேசத்தகுந்த செல்வன் எனக்கூறி முடித்தனர்.

128
ஓமென்ற வுட்பொருளை யறிவான்மைந்தன்
உத்தமனுக் கிடதுகண்தான் சாயலாகும்
வாமென்ற கெஜகர்ன கோகர்னவித்தை
வையகத்தில் விநோதவித்தை மிகவுண்டாகும்
ஆமென்ற வாயுமையா ளுதவியுண்டு
அன்பான தேவிவந்தே யனுசரிப்பாள்
காமென்ற கர்னனடா குபேரவாழ்க்கை
காசினியி லுயிர்களுக்குக் கருணைசெய்வான்.

(இ-ள்) இந்த ஜாதகன் ஓம் என்னும் பிரணவப் பொருளினது ரகஸ்யங்களை அறிவான் எனவும், உத்தம மார்க்கத்தையுடைய இந்த ஜாதகனுடைய இடது கண்ணனது சாயலுடையவனுவான் எனவும், இப்பூமியின்கண் உண்டாயுள்ள ஜாலம் - விநோதம் - கெஜகர்ணம் - கோகர்ணம் முதலிய வித்தைகள் யாவும் அறியத்தகுந்தவன் எனவும், உமையாள் உதவியுண்டானவன் எனவும், ஸ்ரீசத்திதேவியானவள் ஆதாரமிருப்பாள் எனவும், கர்ன

மகாராஜனைப்போன்ற தருமமும், குபேரனுக்கொத்த சம்பத்தும் உடையவனுவான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் குபேரனைப்போன்ற சம்பத்தும், கர்னனைப்போன்ற தருமதானம் செய்பவனும், லக்ஷிமி வாசமுடையவனும், சத்திதேவியின் அனுக்கிரகம் பெற்றவனும் ஆவான் எனக் கூறியதுடன் மந்திர தந்திர உபாய வித்தைகள் யாவும் அறிவான் எனவுங் கூறியுள்ளனர். மற்றும் விவரங்களைப் பின்வரும் செய்யுளால் அறிக. 129

செய்யவே யிவன்பிறந்த மனைதான்மைந்தா
செப்புகிறேன் வடவாச லுள்ளதாகும்
ஐயமே செவ்வாயின் கிழமையாகும்
அன்பான லக்கினத்தி லிராகுவாகும்
உய்யவே யிவனுக்குக் கிரகமூன்று
உச்சமாய் நிற்குமடா வுறுதியாக
வையகத்திற் சதயமென்ற நாளேயாகும்
வாகாக விவன்பிறந்த நாள்தேளாச்சே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த மனையானது வடக்கு வாயிலுடையதாயிருக்கும். மற்றும் பிறந்த காலங்களைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகன் பிறந்த வாரமானது மங்களவாரமாகிய செவ்வாய்க்கிழமையும், சதய நக்ஷத்திரமும் தேள் என்னும் விருச்சிகராசியில் பிறந்தவனும், ஜென்மலக்கினத்தில் இராகு நிற்கவும், 3-கிரகங்கள் உச்சமாய் நிற்கவும் பிறந்தானெனவும் நிச்சயமாய்க் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் பிறந்தது செவ்வாயும், சதய நக்ஷத்திரமும் விருச்சிகராசி லக்கினத்தில் இராகு நிற்கவும், மற்றும் 3-கிரகங்கள் உச்சம் பெறவும் பிறந்தான் எனவுங் கூறவேண்டியதாயிற்று. இன்னும் இவனது யோகங்களைப் பின்வரும் செய்யுளால் அறிக. 130

ஆச்சப்பா வவதானஞ் சொல்லக்கேளு
அண்டரண்ட புவனமெங்கு மிவன்பேச்சப்பா
வாச்சப்பா தவருத வசனமுள்ளான்
வண்மையாந் தாரமது கிட்டும்பாரு
கோச்சப்பா கோத்திரமும் பெலமுள்ளான்முன்
கொற்றவனுந் தனசாலி வீரியவானும்
வாச்சப்பா மயேந்திரந்தா னிவன்தன்கையில்
வளமாக வேழுண்டா மருவிக்கேளே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது யோக விவரங்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? அண்டரண்ட புவனங்களினும் இவனது பெருமைகளை பேசுவார். மற்றும் என்றும் தவராத வசனநடையுள்ளவனும், அழகு வாய்ந்த மனைவியையுடையவனும், உத்தம பலமும் உடைய கோத்திரத்தில் பிறந்தவனும், அரசனுக்கொத்தவனும், தனவந்தனும், வீரமுடையவனும் ஆவான். இதுவன்றி இவனது அஸ்தத்தினிடையே மயேந்திர

ரேகையும் ஏழு உண்டாயிருக்கும். ஆனதால் இவனது விஷயங்களை இன்னும் சொல்லுகிறேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் அண்டாண்ட புவனங்களிலும் பேசத்தகுந்தவன் என்றமையாலும், பின்வரும் அடியில் அரசனைப்போன்றவன் என்றதாலும், இந்த ஜாதகன் ஓர் சக்கரவர்த்தி என்றுகூற இடமுண்டாகிறது. இதுவன்றி தைரியம், வீரம், பராக்கிரமும் உடையவன் என்பதும், இவனது அஸ்தத்தில் மயேந்திரரேகை ஏழு உண்டாயிருக்கும் என்பதும் கவனிக்கத்தக்கது. 131

மருவியதோ ரிவனுடனே பிறவியைத்தான்
மைந்தனுடன் பிறந்தவர்கள் வரிசைகேளு
கருவியதோ ரிவன்பிறவி யோகவானும்
சாட்சாதி ஈஸ்பரனு ருதவியாலே
பிறவியதோ ரிவன்றமையன் றம்பிமார்கள்
புஜபலங்க ளுள்ளவர்கள் புலமையாவர்
பெரியதொரு கோத்திரமாய் மிகவேவாழ்வர்
பேரின்பந் தனைநோக்கிப் பெருகுவாரே.

(இ-ள்) இந்த ஜாதகனுடன் பிறந்த சகோதர சகோதரிகளின் யோக முதலியவற்றைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகனின் உடன்பிறந்த சகோதரன் மிக்க பிரசித்திபெற்ற சாக்ஷாத் ஈஸ்வரனது கிருபையால் புஜபல வீரபராக்கிரமங்க ளுள்ளவர்களாயும், கல்விநிறைந்த புலவர்களாயும், பெரும் குடும்பகோத்திரத்துடன் அளவிடமுடியாத யோகமுடையவர்களாகி பேரின்பமென்னும் இகபரமாகிய மோக்ஷத்தையடைய வல்லவர்களாவார் எனக் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனது சகோதரர்களது குணம் தன்மை யோகம் முதலியவற்றைக் கூறினார். இச்செய்யுளின் இறுதியில் பேரின்ப மெய்துவாரே என்றமையால், இந்த ஜாதகனின் சகோதரர்கள் பக்தியும் ஞானமார்க்கம் உள்ளவர்களாயு மிருப்பார்கள் என்பது கருத்தாகும். 132

பாரடா விவன்யோக மெப்போதென்றால்
வாகான வயதுபதி னைன்றுக்குள்ளே
காரடா கறைமிடற்று னுமையாள்மாலும்
கருணையாக வழைத்திவனைக் கொண்டுபோய்தான்
தாரடா தனத்தையொரு தலத்தில்காட்டி
சாற்றரிய திருவருளை சார்வாயீவர்
ஊரடா தனமிவன்றான் கொண்டுவந்து
ஒப்பில்லா வாழ்விவர்க்கு வந்ததன்றே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்குண்டாகும் காலநேரங்களைக் கூறுமிடத்து இந்த ஜாதகனது வயது 16-க்குள்ளேயே உலக கர்த்தாவாகிய ஈசனும், உமாதேவியும், மகாவிஷ்ணுவும் பிரசன்னமாகி அழைத்துக்கொண்டுபோய்

தனங்களைக் கொட்டிவைத்திருக்கும் இடத்தைக்காட்டி அருள்செய்வராதலால் இந்த ஜாதகன் மேற்படி தனத்தைக்கொண்டு தன் வாழ்நாட்களில் எவரும் மதிப்பிடமுடியாத யோகத்தினாலும், சந்தோஷத்தினாலும் சுகித்து வாழ்வான் எனக் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தென்னவெனில் மேற்சொன்ன மூவரும் இந்த ஜாதகனிடம் வேறுருபமாய்த் தோன்றி தனமிருக்கும் இடத்தைக் காட்டுவார். இந்த ஜாதகன் அதனை எடுத்து வந்து நல்ல வாழ்வுடன் யோகமாய் யிருப்பான் என்பதே யாகும். 133

அன்றெனவே யிவன்வயதோ ரிருபத்திரண்டில்
அப்பனே யிவனுடைய கனவிலேதான்
சென்றெனவே சதாசிவன்றான் வந்துசொல்லி
சேவையாய் வடபாலி லழைத்துச்சென்று
குன்றெனவே குபேரனைப்போ லாகவென்று
குவலையற்றிற் றனமிகவே யீந்திட்டையன்
நன்றெனவே நிதிதானுங் காட்டிற்காட்டி
நலமுள்ள குடம்ரெண்டா யெடுப்பான்பாரே.

(இ-ள்) இன்னும் இவனது யோகங்களைக் கூறுமிடத்து இவன் வயது 22-ல் சதாசிவமூர்த்தியே இவனது கனவில் தோன்றி இவனிருக்கும் இடத்திற்கு வடபாலில் காட்டிற்கு அழைத்துச்சென்று இரண்டு குடங்களிலுள்ள புதையற் பொருளைக்காட்டி நீ எந்நாளும் குபேரனைப்போல் வாழக் கடவாய் என்று ஆசீர்வதித்ததால் இந்த ஜாதகனும் மேற்சொன்ன இரண்டு குடத்திலுமுள்ள தனத்தை எடுத்து குபேரனைப்போன்ற தனமுடையவனாகி சந்தோஷத்துடன் வாழ்வான் எ-று.

(வி-ரை) இதன் கருத்தென்னவெனில்? இவன் வயது 22-ல் இவன் கனவில் சதாசிவமூர்த்தியானவர் தோன்றி தனது இல்லத்திற்கு வடக்கேயுள்ள காட்டில் 2-குடம் புதையல் தனத்தைக் காண்பித்து நீ குபேரனைப் போல் வாழ்வாயாக என்று ஆசீர்வதிப்பார். இந்த ஜாதகனுக்கு மேற்படி புதையலை எடுத்து வாழ்வன் என்பதேயாகும். இதன் விவரம் பின்வரும் செய்யுளால் அறிக. 134

பார்க்கவே மைந்தனுந்தா னிதியெடுத்து
பக்குவமாய் மனைசேர்ந்த பாலன்றன்னை
ஏற்கவே தனவனைப் பேருங்கீர்த்தி
எடுத்துமவன் வளர்ந்திருப்பா னிகபரத்தில்
கார்க்கவே யுமையவளும் ரிஷியுந்தானும்
கருணைவைத்து ரக்ஷித்தார் மைந்தனைத்தான்
ஆர்க்குமிவ னடங்காத யோகசாலி
அருள்பெருகும் பிதாவினிடப் புண்ணியத்தாலே.

(இ-ள்) மேற்கூறிய சதாசிவமூர்த்தியானவர் கனவிற்றோன்றி அருள் செய்த வண்ணம் இந்த ஜாதகனும், மேற்படி தனத்தை நேரில்போய் கண்

டெடுத்து ஒருவரு மறியாவண்ணம் தனதில்லம்வந்து எவரும் மெச்சத்தருந்த தனவானுகவும், கீர்த்தி பிரக்யாதி முதலியன உடையவனுகி வாழ்ந்திருப்பான். ஏனெனில்? இந்த ஜாதகனை ஈஸ்வரரும் ஈஸ்வரியும் இவன்மீது கடாக்ஷம் வைத்ததினுலேயாகும். ஆனதால் இந்த ஜாதகன் எவருக்குங் கீழ்ப்படியாத யோகமுடையவனுவான். இவை, இவன் கெர்ப்பந்தரித்த (அல்லது இவன் ஜனன புணர்ச்சிசெய்த) காலம் என்றறிவாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் பிதா புணர்ச்சிசெய்த காலநேரம் உத்தம மாதலால் இந்த ஜாதகனது பிற்காலம் இவனுக்கு எல்லா நன்மையும் ஈஸ்வரனே நேரில் அருள்சுரந்தார் என்பதே இச்செய்யுளின் முக்கிய கருத்து.

135

தாலமென்ற இவன்தாய்தான் றிருவையாகும்
தன்னுடைய பிதாவுமவன் யோகவான்பார்
ஆலமென்ற தேவரிலே யொருவனப்பா
ஆச்சரியம் பெற்றமைந்த னதிகயோகம்
ஞாலமென்ற தெய்வமடா வதிகயோகம்
நாதாக்கண் மெச்சியிவ னல்கினுன்பார்
ஏலமென்ற வெம்பிரா னருளினுலே
ஏகாந்த அம்மையவள் சொல்லினுளே.

(இ-ள்) இக்காரணத்தால் இந்த ஜாதகன் தாயானவள் லக்ஷிமிக்கொத்த அந்தஸ்து உடையவளாயும் இவன் பிதா மிக்க யோகமுடையவனுகவும் இருப்பான். மேலும் இந்த ஜாதகன் தேவர்களி லொருவனென்றே கூறவேண்டும். ஆனதால் இந்த ஜாதகன் மிக்க ஆச்சர்யமுடையவனுயும் தனமுடைய யோகவானுகவும் இருப்பான். இதுவன்றி இவன் கலியுகதெய்வம் போன்று மேலான யோகமுடையவனுகவும், தெய்வானுகூலத்தால் விளங்குவான். இச்செய்தியை எம்பிரானது அருளால் உமாதேவியானவள் எனக்குச்சொன்னுர் எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்தாவது இந்த ஜாதகன்பிறந்த நேர விசேஷத்தால் இவன் பிதா தனவந்தனும், தாய் லக்ஷிமையைப்போன்ற தனமுடையவளும் இந்த ஜாதகன் குபேரசம்பத்தா யிருக்கவும், ஸ்ரீசாக்ஷாத் சிவபிரான் கருணைகூர்ந்தார் என்பதேயாகும்.

136

சொல்லவே சக்கரத்தின் குலிசைமைந்தா
சொற்பெரிய விவன்வயது துலங்கக்கேளு
நல்லவே இவன்றனக் கெழுபத்தைந்தாம்
நலமுள்ளயோகமடா நாடிக்கேளு
அல்லவே இவனுக்கு ஆறுகண்டம்
அப்பனே சொல்லுகிறே னறிந்துகேளு
வல்லவே இவன்வயது யோகவாழ்க்கை
வரிசைசொல்வேன் மைந்தனே மனதாய்க்கேளே.

(இ-ள்) சக்கரக் குலிச ரேகையில் பிறந்தவர்களது பலாபல வயது விவரங்களைக் கூறுவேன் கேட்பீராக. எப்படி எனில்? இந்த ஜாதகனுக்கு

வயது 77-எனவும், மேற்படி 77 வயது வரையில் மிக்க யோகப் பிரபலனாக இருப்பான் என்பதுடன் மேற்படி 77-க்கு கண்டாதி கண்டங்கள் 6 உண்டாகுமென்றும் கூறவேண்டும். மற்றும் இந்த ஜாதகனது வாழ்நாட்களிலுண்டாகும் யோகங்களின் விவரங்களைக் கூறவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவனுக்கு வயது 77-என்றும் மேற்படி 77-வரையில் பூரணயோகம் உடையவனென்றும், 6-கெண்டாதி கெண்டங்களுடையவ னென்றுங் கூறினர். இதன் விவரங்களைக் கீழ்வருவனவற்றால் அறிக.

137

கேளப்பா இவன்வயது ஐந்துக்குள்ளே
கேவலமாய் மாரிவந்து போச்சுதப்பா
வாளப்பா இவன்வயது பதினாலுக்குள்
மகத்தான வாய்வுகண்டம் வருகும்பாரு
ஆளப்பா இவன்வயது இருபத்தெட்டில்
அன்பான சத்துருவால் பேயாலுண்டு
பாரப்பா இவன்வயது இருபத்தஞ்சில்
பாலகனைப்பெற்றபிதா இறப்பான்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகனது கெண்டாதி கெண்டங்களைக் கூறுமிடத்து, இவன் வயது 5-க்குள் மாரி என்னும் கொடிய வைசூரிவந்து நீங்கும் எனவும், வயது 14-க்குள் பிரபல வாய்வுநோயால் கெண்டாதி கெண்டம் உண்டாகும் எனவும், வயது 28-ல் தனது பகைவராலும் பிசாசு முதலிய துற்கிரகங்களாலும் கெண்டம் உண்டாகி நீங்கும் எனவும் கூறுவதுடன் இந்த ஜாதகனது பிதா இவன் வயது 25-ல் பரமபதமடைவான் எனவுந் திண்ணமாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) 5-ல் வைசூரி 14-ல் வாய்வு 28-ல் பகைவர் பிசாசு முதலியவற்றால் கெண்டம் உண்டாகி நீங்கும் எனவும் 25-ல் பிதா மரிப்பான் எனவுங் கூறினர். மற்றுமுள்ள விஷயங்களைப் பின்வரும் செய்யுளாலுங் காண்க.

138

பார்க்கவே யிவன்வயது முப்பதுக்குள்
பாலகனைப் பெற்றெடுத்த மாதாசாவாள்
ஏர்க்கவே யிவன்வயது முப்பத்தாறில்
ஏற்றமுள்ள நீராலேகெண்டமுண்டு
தாக்கவே யிவன்வயது நாற்பதுக்குள்
தலைவனால் ராஜபகை சார்வதாகும்
வார்க்கவே யிவன்வயது அன்பத்தஞ்சில்
வளமான விஷத்தாலே பயமுண்டாமே.

(இ-ள்) இந்த ஜாதகன் வயது 30-க்கு மாதா என்னும் தாயானவள் மரிப்பாள், இதுவன்றி இவன் வயது 36-ல், ஜலப்பிரளயம் அல்லது ஆழமான நீர் முதலியவற்றால் பிரபல கெண்டமுண்டாகும் எனவும் வயது 40-ல் தனது முன் பிறந்தவன் மூலமாய் ராஜபகை என்னும் பயங்கரமும் வயது

55-ல் கொடியதாகிய விஷத்தால் பயம் என்னும் கெண்டம் உண்டாகும் எ-று.

(வி·ரை) 'தலைமகனால் ராஜபகை' என்றது தலைமகன் அரசன் என்றும் கூறுவதுண்டு. ராஜபகை எனப் பின் கூறப்பட்டதால் முன்பிறந்த ஜேஷ்டனால் பகையுண்டாகும் என உரை கூறலாயிற்று. 55-ல் வளமான விஷத்தாலே என்றதால் எவரும் அஞ்சத்தகுந்த விஷ ஜந்துவால் கெண்டம் உண்டென்றும் கூறலாம். 139

உண்டாகு மிவனுக்குத் திசையும்யோகம்
உறுதியாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
நன்றாகு நான்முகனார் வகுத்தவண்ணம்
நடக்குமடா திகைக்காம னன்றாய்க்கேளு
கொண்டாடுங் குமரனிட வருளேமெத்தக்
கோதண்டராமனவர் கோபாலன்றான்
வண்டாடும் பூங்குழலா ளம்மைசோதி
வகுத்துரைத்த கட்டளையு நடக்கும்வாழ்வே.

(இ-ள்) நான்முகனாகிய பிரம்மதேவரால் வகுத்தளித்த விதிப்படி இந்த ஜாதகன் மேலான திசையும் பிரபல யோகங்களும் உண்டாகும். இதற்கு எவ்வித ஐயமும் இல்லை. ஆயினும் இன்னும் சொல்லவேண்டுவதெனில் இந்த ஜாதனுக்கு எவரும் கொண்டாடத் தகுந்த குமரக்கடவுளினது கிருபை மெத்த மேன்மையா யிருக்குமென்று கோதண்டத்தைத் தாங்கியிரானின்ற ஸ்ரீராமமூர்த்தியும் கோபாலகிருஷ்ணன் என்னும் திருநாமமுடையவருமாகிய ஸ்ரீவிஷ்ணுவின் தங்கையும் வண்டுகளினது இனிய குரலைப்போன்ற இராகமும் உடைய ஸ்ரீசக்திதேவியின் அனுக்கிரகத்தால் எல்லா வாழ்வும் நன்மையுடையதாகவே இருக்குமெனக் கூறுவாயாக எ-று.()

வாழவே யிவன்பிறந்த வாறுமாண்டில்
வளமையுள்ள வில்லறத்திற் பொருள்களெல்லாம்
தாழவே செய்துவைத்தான் மைந்தன்றானும்
தாட்டியங்கள் குறையவைத்தான் பிதாவையப்பா
மாளவே பொருளெல்லாம் வாரிமைந்தன்
வையகத்திற் செலவுதனை செய்தான்பாரு
ஆளவே யில்லறத்தி லதிகமாக
ஆக்கிவைத்தான் மைந்தனிட அருமையாலே.

(இ-ள்) இந்த ஜாதகனது வருகால யோக முதலியவற்றைக் கூறுமிடத்து இவன் ஜனித்த 6-வது ஆண்டில் தனது இல்லத்திலுள்ள பெருந்தனங்கள் யாவையும் தாழ்ச்சியடையத் தக்கதாய் செய்தான் என்றும், மற்றும் இவன் பிதா மாதாவுக்குள்ள தைரியம் பலம் முதலியவற்றையும் குறைவுபடச் செய்தான் என்றும், தன் பிதாவின் செல்வம் யாவையும் இப்பூமியின்கண் அதிக விரயம் செய்து மாறும்படி செய்தான் எனவும் கூறுவதுடன் சிலநாளுக்குள் தன் இல்லத்தைக் கண்டு ஆச்சர்யப்படத் தகுந்த நிலையில், மேல்நிலைக்கு வரும்படி செய்தான் எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்தாவது இவன் வயது 6-க்குள் பிதாவின் செல்வம் தைரியம் திடம் முதலிய யாவற்றையும் தொலைத்தானாயினும் சில நாளுக்குள் எல்லோரும் ஆச்சரியப்படத் தகுந்தநிலையில் மேம்பாடடைந் தன என்பதாகும். 141

அருமையா யிவன்பிறந்த பத்தாமாண்டில்
ஆச்சரிய முமையவடா னனுக்கிரகிப்பாள்
பெருமையா மிவன்பிறந்த விருபத்தைந்தில்
பிரபலங்க ளனேகமதாய் நடக்கும்பாரு
அருமையா மிவன்பிறந்த விருபத்தாறில்
தாட்டிகனு மண்ணனுந் தகவேசெய்வான்
உருமையா மிவன்பிறந்த பதினாறுக்கு
உற்றதோ ருறவுவந்து கூடுமென்றே.

(இ-ள்) இந்த அருமை ஜாதகன் ஜனித்த 10-ஆம் ஆண்டில் எவரும் கண்டு ஆச்சரியப்படத் தகுந்ததாய் உமா மயேஸ்வரி கிருபைசெய்வாள். இதுவன்றி இவன் பிறந்த 25-ஆம் வயதில் பிரபல யோகங்கள் அமோகமாய் உண்டாவதுடன் வயது 26-ல் மிக்க தைரியமுடையவனும் அனேக பூமி முதலியவற்றை யுடையவனுமான் எனக்கூறுவதுடன் இவன்வயது பதினாறில் தனக்குச் சொந்த பந்துக்களனேகர் தம்முடன் கூடுவார்கள் என்றுங் கூறுக.

(வி-ரை) முன் கூறிய 141-ஆம் செய்யுளில் இந்த ஜாதகனது பிதுர்ச் செல்வம் யாவையும் போக்கி பலவீனனாகுவான் என்றதால், இச்செய்யுளில் மறுபடியும் யோக முண்டாகும் காலத்தை விளக்கிக் காட்டினார். அவை யாவன 10-ஆம் வயது முதல் பிரபல யோகமென்பது கருத்து. 142

கூடிடவே சக்கிரத்தின் குலிசமானால்
குலமான ரேகையடா மைந்தர்க்கப்பா
நாடிடவே யிவன்யோக வாழ்க்கைமைந்தா
நலமான குலிசமடா நாடிக்கேளு
பாடிடவே பரமனிட வருளாலேதான்
பாக்கியங்கள் வந்ததென்று பலிதஞ்சொன்னேன்
தேடிடவே யுமையவள்வந் திருப்பாள்பாரு
செப்பரிதாய்ப் பிறந்ததிந்த மைந்தன்றானே.

(இ-ள்) சக்கரக் குலிச ரேகை என்பதென்ன வெனில் மேற்படி ரேகையே மற்றெல்லா ரேகைகளுக்கு நற்குல ரேகை என்று கூறவேண்டுவ தாகும். ஆனதால் இந்த ஜாதகனது யோகம் வாழ்க்கைமுதலியனவும் குலிச மென்ன மதிக்கத் தகுந்ததாகவே இருக்கும். இந்த ரேகையின் மகுத்துவத்தாலும் பரமனது கிருபாகடாக்ஷத்தாலும் இந்த ஜாதகனுக்கு அள விறந்த பாக்கியங்கள் உண்டாயின வென்றும் இந்த ஜாதகனுக்கு என் னாலும் உமையவள் துணையிருப்பாள் என்றும் எவரும் சொல்வதற்கரிய தன் மையில் பிறந்து வாழ்வான் எனவுங் கூறுக எ-று.

12

(வி-ரை) குலிசம் என்பது அந்தரங்கமானதும் எவரும் மதிக்கமுடியாததுமாதலால் மேற்படி குலிசரேகையில் பிறந்தவனது வாழ்க்கையை எவராலும் மதிக்க முடியாது என்பது கருத்து. 143

மைந்தனுய்ப் பிறப்பதென்றால் குலிசம்வேண்டும்
மகத்துவங்கள் வேண்டுமென்றால் விஷ்கம்பம்வேண்டும்
சிந்தனைகளில்லையடா மைந்தா சொல்வேன்
சீக்கிரத்திற் சிவபூசை சிறக்கச்செய்நீ
தந்தையொடு தமையனையும் வைத்துப்பேணும்
தாட்டியற்கு மிகவாழ்வு தனஞ்சயன்றான்
சொந்தமடா வுமையவளும் பெற்றதாயும்
சோதியா மனோன்மணியாற் றுலங்கிட்டேனே.

(இ-ள்) மக்கட்பிறவியில் ஆணாய் பிறந்தார்களென்றால் மேற்படி குலிசரேகையே வேண்டும். இதுவன்றி, எவரும் மதிப்பிடத்தகுந்த மகுத்துவத்துடன் வாழவேண்டுவதென்றால் விஷ்கம்ப ரேகைவேண்டும். ஆனதால், ஓ! மானிடர்களே! மேற்சொன்ன ரேகையுடன் பிறக்கவேண்டுமெனில், எந்நாளும் சிவபூஜையை சிறப்புபெற நடத்திவைத்தும், தாய் தந்தை முதலியோரை அன்புடன் ஆதரித்துவந்த உத்தமனுகில் நீ மேன்மை பெற்ற வாழ்வும், தனஞ்செயனைப்போன்ற மகுத்துவத்துடன் வாழ்வதுடன் நம் தாயாகிய உமையவள் உன் வசமாவாளென சுயஞ்சோதியாகிய மனோன்மணியாள் கூறியதாகும் எ-று.

(வி-ரை) இதுவரையில் கூறிவந்த ரேகையின் யோகபாகங்களைவிட இங்கு கூறும் சக்கரக்குலிசரேகையில் பிறந்தவன் யோகத்தை அளவிடமுடியாது கூறியுள்ளனர். ஆனதால், இவ்வாறு யோகத்தையும், கௌரவத்தையும் தரத்தகுந்தது மேற்படி ரேகையே யாதலால் மேற்படி ரேகையுடன் பிறக்கவேண்டுமென்றால், கடவுளை வழிபாடு செய்தும், தாய் தந்தை தமையன் முதலியோருக்கும் தொண்டு செய்வாயேயாமானால் மனுஜன்மத்தில் மேற்படி ரேகையுடன் பிறந்து செல்வமும் கீர்த்தி உடையவர்களாய் வாழ்வார்கள் என இந்நூலாசிரியராகிய கமலமா முனிவருக்குத் தமது உபாசனு தேவியாகிய மனோன்மணியாள் கூறினுள். இன்னும் இவனது வரும் வினையைக் கீழ்வரும் செய்யுளாலும் அறிக. 144

துலங்கிடவே யிவன்வயதோர் முப்பத்தாறில்
தூய்தான ஆடைகள் பொன்னுரங்கொள்வான்
அலங்கிடவே யிவன்றானும் ராஜசேவை
அன்பாகச் செய்துலகில் வருவான்பாரு
பலங்கிடவே யிவன்வயது முழுதுமப்பா
பாக்கியங்கள் பெற்றிவன்றான் வாழ்வான்பாரு
நிலங்கிடவே யிவனுடைய முற்சனனவாழ்க்கை
நிகழ்த்துகிறேன் மைந்தனே நினைவாய்க்கேளே.

(இ-ள்) இன்னும் மேற்படி சக்கரக் குலிசரேகையில் பிறந்தவர்களது யோக முதலியவற்றைக் கூறவேண்டுமெனில், இந்த ஜாதகன் ஜனனமாகிய வயது 36-ல் மேன்மையைப் பெற்ற தனம், ஆடை, பொன் ஆரம், முதலிய மேலான பொருளை அடைவான். இதுவன்றி, இந்த ஜாதகன் இவ்வுலகிலுள்ள அனேக ராஜாக்களை பேட்டிகண்டு வருவான் எனவும், தன் ஆயுள் முடியும் வரையில் அநேக பாக்கியங்களை யுடையவனாகி மேன்மையுடன் வாழ்வான் எனவும் கூறவேண்டும். இன்னும் இந்த ஜாதகனது முன்ஜனன வாழ்க்கை விவரங்களைக் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவது என்னவெனில்? இந்த ஜாதகன் தன் 10-ஆம் வயதுமுதல் யோகமுடையவன் ஆவான் என முன் கூறிய 142-ஆம் செய்யுளில் கூறினாலும், வயது-36 முதலாகவே பிரபல ராஜயோகமும் மேற்படி யோகமானது தன் அந்தியகாலம் வரையில் நிலைக்கும் என்பதாம். 145

கேளுங்கள் முனிவர்களே யிங்கவன்றன்
கேவலமா முற்சனன வாழ்க்கைதானும்
வாழுங்க டேவர்களே யிவனைவாழ்த்து
வளமான மைந்தனிவ னங்காளிற்றான்
ஆறுங்க ளாண்டவனார் பாதந்தன்னில்
அம்பாளைப் பூசைசெய்த வருமையாலே
தாறுங்க ளீஸ்பரனார் மனமுவந்து
சமைத்துவிட்டா ருலகாட்சி செய்யுதற்கே.

(இ-ள்) தவத்தில் மிக்க முனிவர்களே! இங்கு கூறும் சக்கரக் குலிசரேகையில் பிறந்தவன் முன் ஜனன விஷயங்களைக் கூறுவேன் கேட்பீராகவும். எப்படியெனில்? இவன் முன் ஜன்மத்தில் தேவர்களும் இவனைக் கண்டு வாழ்த்தத் தகுந்தவன். இதுவன்றி, எமதாண்டவன் பாதத்தைத் துதி செய்த அருமையாலும், அம்பாள் பூஜைசெய்த அருமையான பக்தியாலும், மேற்படி அம்பாள் கருணைகூர்ந்து இப்பூமியை அரசாக்ஷி செய்யத்தகுந்த அருள்கொடுத்து இப்பூமியின்கண் ஜனிக்கும்படி கருணைகூர்ந்தார் எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் தன் முன் ஜன்மத்தில் ஈசனையும் ஈஸ்வரியையும் தேவர்கண்டு வாழ்த்தத் தகுந்த பக்தி வினயத்துடன் பூஜைசெய்த காரணத்தால் இச் சன்மத்தில் எல்லா சம்பத்தும் நிறைந்து அரசாக்ஷிசெய்யும்படி மேற்படி தேவி கருணை செய்தாள் என்றதாகும். இதன் விவரம் கீழ்வரும் செய்யுளிற் காண்க. 146

செய்யவே யிவன்முன்முற் சனனந்தன்னில்
செப்பரிய பிராமணன்றா னுகுமப்பா
ஐயமில்லை சிவனுக்குப் புட்பஞ்சாற்றி
அன்புமிகச் செய்ததினால் மனதிரங்கி
உய்யவே பூமியிலே பிறந்துவந்தான்
உற்றதொரு மைநாகம் பிறந்துமைந்தன்
வையகத்தி லீஸ்வரியாள் கோயில்புக்கி
வளர்ந்துமவன் வாம்வாங்கின மனிதனாகும்.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகன் முன்ஜன்மத்தில் பிராம்மணனாகும். இதில் யாதொரு ஐயமும் இல்லை. மேற்படி பிராமணனாய் பிறந்து சிவபிரானுக்கு அன்புடன் புஷ்பம் சாற்றித் தொண்டுசெய்து வந்தான். ஆதலால், மேற்படி ஈஸ்வரனது கருணையால் ஓர் நாகமாகப்பிறந்து ஈஸ்வரியினது ஆலயத்தில் புகுந்து நெடுநாள் வளர்ந்து, மேற்படி ஈஸ்வரிக்கும் தொண்டுசெய்து மேற்படி ஈஸ்வரியாளிடம் வரம்வாங்கி இம்மனிதப் பிறவியாய் பிறந்து உலகாளவந்தான் என்று கூறுவாயாக எ-று. 147

மனிதனென்றுற் பூர்வத்திற் பாக்கியசாலி
மானிலத்திற் பிறந்துவந்தான் யோகங்கூடி
கனிமொழியா ளுமையவள்தான் தானதர்மம்
காட்சிதன்னைக் கொடுத்திவனைப் பிறப்பித்தாள்பார்
இனிதயம்போ லிவனுடைய வாண்மைமெத்த
இன்னிவன்தான் மாயவன்றன் பாதத்தூளாம்
பணிமுதலாம் பாவகர்க்கு முதவியுண்டாம்
பாக்கியமாம் நிதியிரண்டு மெடுப்பான்பாரே.

(இ-ள்) தான் முன்சொன்னபடி பூர்வத்தில் செய்த பாக்கியத்தால் இச்சன்மத்தில் எல்லா யோகமும் உள்ள மனிதனாக இப்பூமியிற் பிறந்து தித்திப்பாகிய வார்த்தையினையுடைய உமையவள் இவ்வுலகில் தானம் தருமம் முதலியன ஓங்கவும், காக்ஷிகொடுத்து மானிடனாய்ப் பிறக்கும்படி செய்தாள். இச்சென்மத்தில் மாயன் என்னும் மகாவிஷ்ணுவின் பாதத்தூளி எனனும் பக்தனும் உண்மைமனமும், ஆண்மையுடையவனும், பாகவதர்களுக்கு வெகு உதவிசெய்யத் தகுந்தவனாகவும், இரண்டுவித பாக்கியமும் உடையவனாக இருப்பன் எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்தாவது இந்த ஜன்மத்தில் வைஷ்ணவனாகிப்பிறந்து பாகவதர்களுக்கு உபகாரம் செய்பவனும், செல்வம் புத்திரர் என்னும் இரண்டையு முடையவனாகி இருப்பான் என்பது கருத்து. இதுவன்றி, பாகவதர்களுக்கு வேண்டியபணி யாவும் செய்வான் என்பது அறியத்தகுந்ததாகும். 148

பார்க்கவே நிதியிரண்டு மெடுத்தபாலன்
பைங்கொடியா ளுதவியினல் பாக்கியவானும்
ஏர்க்கவே யிவனுடைய பிதாவோமைந்தா
இயல்பான தேவரிலே யொருவனப்பா
கார்க்கவே யிவனைத்தான் காளகண்டர்
கடாட்சித்தார் முன்செய்த புண்ணியத்தாலே
வார்க்கவே வைகுந்தன் வச்சுதந்தன்
வகையான மயேந்திரம்போல் வாழ்ந்தானன்றே.

(இ-ள்) ஸ்ரீ உமாதேவியின் கிருபையால் மானிடனாய்ப்பிறந்த இந்த ஜாதகன் பொருட்செல்வத்தையும், புத்திர செல்வத்தையும், அடைந்தவ

## படம் நெ-3.


ரதரேகை


குவண்ட ரேகை

சங்குபாலி


புஷ்பரேகை


புத்திரரேகை

அலகுரேகை


சக்கரரேகை


நாற்கோணரேகை


கலசரேகை


தராசுரேகை


ஐவிந்தரேகை


அஸ்வரேகை


யானைத்தலைரேகை


கிராமச்சின்ன ரேகை


கஜரேகை


அங்குசரேகை

குவண்டைரேகை


நக்ஷத்திரரேகை


சந்திரரேகை


சங்குரேகை


விஷமசதுர்ரேகை


சூரியரேகை


முக்கோணரேகை


வில் சக்கரரேகை


பல்லக்குரேகை


கங்கணரேகை


ஆட்டுதலைரேகை


பர்வதரேகை

ளுய் எவரும் மதிக்கத்தக்க நிலையில் வாழ்வான். மற்றும் இந்த ஜாதகனின் பிதா தேவர்களில் ஒருவரானதால் காலகண்டமூர்த்தியாகிய ஈசன் முன் செய்த புண்ணியத்தால் இச்சென்மத்தில் இவ்வாறான சுகங்களை யடையும் வண்ணம் கடாக்ஷம் செய்தார். ஆனால் அச்சுதனாகிய மகாவிஷ்ணு வைகுந் தத்திலிருந்து சகல சுகபோகங்களும் அடைவதுபோல் இந்த ஜாதகன் எல்லா சுகங்களும் உடையவனாகி வாழ்வான் எனக் கூறுக எ-று. 149

### குலிசை ரேகையின் பலன்

அன்றெனவே சக்கரத்தின் குலிசைமைந்தா
ஆச்சரிய மிதனுடைய அருமைசொன்னேன்
நன்றெனவே நான்முகனுங் கும்பமூர்த்தி
நவில்வேத வியாசமுனி நயந்துகேட்டார்
குன்றெடுத்த கோபாலர் கோழர்நந்தீ
குவலயத்திற் படைத்ததெனுங் கூறுகேட்டார்
நன்றெனவே நாதாக்கள் முனிவோரெல்லாம்
நாகரிக உமைபாத நாடிநின்றாரே.

(இ-ள்) இங்கு கூறிய சக்கரகுலிசரேகையில் பிறந்தவர்களின் ஆச்சர்ய மான யோக பலன்களைத் தெளிவாய்க் கூறியுள்ளேன். ரேகைசாஸ்திர மென்னும் இச்சாஸ்திரத்தை நான்முகனாகிய பிரம்மதேவரும், கும்பமூர்த்தி யாகிய குருமுனியும், எல்லா வேதங்களுக்கும் தலைவராகிய வேதவியாசரும், குன்றைக் குடையாய்ப்பிடித்த கோபாலருடைய தோழராகிய நந்திதேவரும், மற்றுமுள்ள நாதாக்களும், முனிவோர்களும், உமாமயேஸ்வரியினது பாதங் களை வணங்கிக்கேட்க மேற்படி சத்தியாகிய தேவி உளமகிழ்ந்து கூறினார் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்நூலை பராசத்தியே மேற்படி தேவர் ரிஷிகள் முனிவர்கள் முதலியவர்களுக்குக் கூறியதாயும், மேற்படி முனிவ ருள் ஒருவரான இந்நூலாசிரியர் பிற்காலத்தில் இவ்வுலகத்தார்க்குப் பயன் படும் வண்ணம் எழுதிவைத்ததாயும் தெரிகிறது. இதன் விரிவான விஷ யத்தை முன்னுரையில் விவரமாய்க் காண்க. 150

### சங்கபாலி ரேகையின் பலன்

நின்றிடவே யின்னமுந்தான் சங்கபாலி
நிகழ்த்துகிறேன் முனிவர்களே நினைவாய்க்கேளீர்
நன்றிடவே யிதுவித்தாம் யோகமாகும்
ராஜாதி ராஜர்களு நடுங்குவார்பார்
சென்றிடவே மயேந்திரத்தி லேறிநிற்கும்
செகத்திலே கேசரியின் பலன்களாகும்
மன்றிடவே வாலைசுப்பிர மண்ணியயோகம்
வாகான தெய்வசித்தி யாகும்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! சங்கபாலி ரேகை என்பது தனது அஸ்தத்தில் இருக்கப் பிறந்தவர்களது பலாபலன்களைச் சொல்லுகிறேன் கவனமாய்க் கேட்பீராகவும். எப்படியெனில்? மேற்படி சங்கபாலி ரேகை என்பது தமது அஸ்தத்திலிருக்கின் அது நன்மையைத் தரத்தகுந்த யோகத்திற்கு ஓர் வித்தாகும். இவனைக்கண்ட ராஜாதி ராஜர்கள் எவரும் நடு நடுங்குவர். ஏனெனில்? இந்த ரேகையானது மயேந்திர ரேகையில் ஏறிநிற்கும். ஆனதால், இந்த ஜாதகனுக்குக் கேசரியோகமென்றும், கேசரியோகப் பலனென்றும் கூறவேண்டும். மற்றும் யோகத்தில் மேம்பாடுடைய வாலையோகமும், சுப்ரமண்ய யோகமும் மேற்படி இருவர் சித்தியும் உண்டாகும் எனக் கூறுக எ-று.

(வி-ரை) மேற்படி சங்கபாலி ரேகையானது மயேந்திர ரேகையைப் போய் கலக்கும் தன்மையுடையதாதலாலும், மயேந்திர ரேகையைக்குறித்து முன்னமே 12-ஆம் செய்யுள் முதல் 87-ஆம் செய்யுள் வரையில் முறையே கூறப்பட்டதாலும், இச்செய்யுளில் கூறும் சங்கபாலி ரேகையை இவை யோகத்திற்கு வித்து என்றனர். பின்வரும் அடியில் வாலைசித்தி, சுப்ரமண்ய சித்தி முதலிய யோகமும் உண்டாகும் என்றனர். இதன் விவரம் பின்வரும் செய்யுளில் காண்க. 151

பார்க்கவே சங்கனிடப் பாலிஎன்ற
பண்பான ரேகையிடப் பலஞ்சொல்லக்கேள்
ஏர்க்கவே யிவன்கையி லிருக்குமாகில்
என்னப்பா இவன்யோகம் இயல்பாகத்தான்
கார்க்கவே இவனுடன்பிறப்போ ராறுபேரும்
கருணையால் பிதாவர்க்க மெல்லாம்போகும்
ஆர்க்கவே யிவன்வயது பதினைந்துக்குள்
அன்பான பாலகனும் மயங்குவானே.

(இ-ள்) சங்கபாலி ரேகை என்பது தன் கையிலிருக்குமேயாமாயின் அதனது பலன் விவரங்களைக் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இவன் யோகம் எல்லாம் தன்னாலே வரும் என்பதுடன் இவனை ஆதரிக்கத் தக்கத் துணைவர்கள் மொத்தம் ஆறுபேர் எனவும், இவன் பிறந்த உடன் பிதாவர்க்கத்தவர் யாவரும் நாசமாவார் எனவும், இந்த ஜாதகன் பிறந்த வயது 15-க்குள் இந்த ஜாதகன் எவ்வித உதவியும் இன்றி மயங்குவான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் தலைப்பில் எல்லா யோகமும், தன்னாலேயாகும் எனவும், இவன் பிறந்த உடன் பிதுர்வர்க்கத்தார் நாசமாவார் என்றும் 15-ஆம் வயதில் எவ்வித உதவியும் இன்றி மயங்குவான் எனவுங் கூறியது கவனிக்கத்தக்கது. இதன் உண்மை விஷயத்தை பின்வரும் செய்யுளால் காணலாம். இதுவன்றி, இவன் உடன் பிறப்பு ஆறுபேர் என்று கூறினர். இந்த ஜாதகன் எத்தனையாம் பிறவி என்பதைக் குறிப்பிடவில்லை. ஆதலால் இதனையும் பின் வருவனவற்றால் காண்க. 152

வானெனவும் இவன்வயதோ ரிருபதுக்குள்
வங்கிசத்தில் உள்ளவர்கள் எல்லாம்சாவார்
கானெனவும் காட்சிபெற்ற மைந்தனுக்கும்
கருணையுள்ள பாலகனும் இவன்தானப்பா
தேனெனவும் சோதியிலே முளைத்தகூட்டம்
செப்புதற்கு இவன்யோக வாழ்க்கைமைந்தா
மானெனவும் வையகத்தில் ஒப்பாரில்லை
வந்ததடா திசையோகம் வளமையாமே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த வயது 20-க்குள் இவன் வங்கிசத்தவர் என்னும் சகோதர வர்க்கத்தவர் யாவரும் மாண்டுபோவார். இதுவன்றி இந்த ஜாதகன் எவரும் புகழ்ந்து காணத்தகுந்தவனும், இவனையன்றி வேறில்லை யென்றே கூறவேண்டுவதாகும். தேன்போன்ற தித்திப்பும் எவரும் காணு தற்குச் சோதியாயுமுள்ள உத்தமகுலத்தில் பிறந்தவன் ஆனதால் இந்த ஜாதகனின் யோகம் வாழ்க்கை முதலியவற்றிற்கு இவ்வுலகத்தில் எவரும் ஒப்பாரில்லை யென்றே கூறவேண்டும். ஏனெனில்? எவருக்கும் கிடைக்காத திசையும் யோகமும் இந்த ஜாதகனுக்கு உண்டாகும் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் எவரும் காண்பதற்கு அறியவனும், எவரும் அடையமுடியாத யோகமுடையவனும் ஆவான் என்பதுடன் நற்குலத்தில் பிறந்தவன் எனவுங் கூறப்பட்டன. இவை யாதுகாரணம்பற்றி எனின்? இந்த சங்கபாலி ரேகையென்பது மயேந்திர ரேகையைப்போய் கலப்பதி னாலேயாகும். இங்கு கூறிய மூன்று செய்யுளையும் கவனிக்குமிடத்து வருடம் 20-க்குள் தன் பந்து ஜனைவர் யாவரையும் தொலைத்துவிட்டுத் தனியே நிற்பான் எனவுங் கூற இடமுண்டாகிறது. இதன் விவரம் பின்வரும் செய்யு ளாலேயே அறியமுடியும்.

153

வளமையடா சொல்லவென்றால் அனேகதொல்லை
வந்ததடா இவன்றனக்கு வன்மையாக
இளமையடா பருவத்தில் சனிதொடர்ந்து
எளிதாக நீக்கியல்லோ இனியதாச்சு
பழமைதாம் யோகமது இருபத்தாறில்
பாக்கியங்கள் வந்ததடா அன்பத்தைந்தில்
நிலமையதாம் அஷ்டதிக்கு எட்டிலேதான்
நிலையான நிதிஒன்று கிடைத்ததன்றே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்குத் தனது இளம்பிராயத்திலேயே சனி தொடர்ந்ததின் காரணத்தால் இந்த ஜாதகனுக்குண்டாகிய தொல்லைக்கு அளவில்லை. இவையாவும் அனுபவித்தானாயினும் அவையாவும் இலேசில் நீங்கின. அதன்பின்பே இந்த ஜாதகன் சுகப்பட்டான். மற்றும் இந்த ஜாதகன் வயது 26-ல் தான் பிறவி காலத்திலிருந்த யோகம் உண்டாயின வென்றும் வயது 55-ல் அனேக பாக்கியங்கள் கிடைத்ததெனவும், 8-திக்கி

லும் முதல் திக்காகிய இந்திரதிக்கில் நிதி என்னும் புதையல் கிடைத்த தென்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவதென்னவெனில்? இவனது சின்னஞ்சிறு வயதிலேயே சனிதொடர்ந்த காரணத்தால் பல கஷ்டங்களை யடைந்தானாயினும் அவையாவும் பனிபோல் நீங்கி 25-ஆம் வயதில் சுகப் பட்டானென்றும் 55-ல் சகல பாக்கியங்களும் கிடைத்தன வென்றும் கிழக்கு திக்கில் புதையல் கிடைத்தன என்பதேயாகும். 154

அன்றனவே இவனுக்குப் புத்திரன்எட்டு
ஆச்சரியம் பெற்றமக்கள் அதிகயோகம்
நன்றெனவே யிவன்வயதோ ரெழுபத்திரண்டு
நலம்பெறவே பரமபதம் அடைகுவான்பார்
இன்றெனவே யிவனுக்கு அன்னம்பாலும்
இஷ்டம்வொன்றும் இல்லாமல் இருந்துவாழ்வான்
மன்றெனவே இவன்தாரம் திருமால்மங்கை
மாயவனார் கட்டளையின் காரணமாமன்றே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்கு மொத்தம் புத்திர புத்திரிவர்க்கம் எட்டு எனவும், தனது புத்திரர்கள் எல்லாம் எவரும் கண்டு ஆச்சரியப்படத் தகுந்த நிலையும் அளவிடமுடியாத ரோகமும் உடையவராவார் எனவும், இந்த ஜாதகனுக்கு வயது-72 எனவும், மேற்படி வயது 72-லேயே பரமபதம் அடைவான் எனவும், இந்த ஜாதகனது வாழ்நாட்களில் அன்னம் வஸ்திரம் பால் முதலிய வகைகள் எவையும் குறைவின்றி வாழ்வான் எனவும், இந்த ஜாதகனுக்கு லக்ஷிமியைப்போன்ற மனைவி கிடைப்பாள் எனவும், இவை யாவும் மாயன் என்னும் மகா விஷ்ணுவின் ஆக்கினை எனவும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) சங்கபாலி ரேகையில் பிறந்தவர்களுக்குச் சொல்லிய ரேகைப் பலன் 5-லும், ஆரம்பத்தில் எல்லா உறவினரையும் ஒழிக்கத்தக்கவனாயினும், பிற்காலம் எல்லா யோகசுகத்தையும் அடையத்தகுந்தவன் என்று முடிவு செய்துள்ளனர். இவை எதனால் எனில்? முதலாவது மகாவிஷ்ணுவினது பெருமையும், இரேகையினது பெருமையுமே ஆகும். 155

## இரண்டாவது காண்டம் முற்றிற்று.

---

ஆக காண்டம் 2-க்கும் பாடல்-155.

---

# மூன்றாவது காண்டம்

### சாத்மீக ரேகையின் பலன்

காரணமாம் சாத்மீக ரேகைமைந்தா
காட்சிபெறச் சொல்லுகிறேன் கருணைகூர்ந்தே
வாரணமாம் புத்திரனைப் பெற்றமாதா
வாலைமனோன் மணித்தாயை வணங்கினேன்யான்
பூரணமாம் பராபரையின் பாதங்காப்பு
புகலரிய தேவர்களின் பாதங்காப்பு
நாரணனோ டயனிருவர் பாதங்காப்பு
நந்தியெனும் ஈஸ்வரனார் பாதங்காப்பே.

(இ - ள்) வாரணமாகிய யானைமுகத்தினையுடைய விநாயகக்கடவுளைப் பெற்ற பார்வதாதேவியினது திருப்பாதங்களை வணங்கியும், வாலை மனோன் மணியை தெண்டனிட்டும், பராபரியாகிய சத்திதேவியைக் கும்பிட்டும், சொல்வதற்கரிய தேவர்களினது பாதங்களைத் தொழுதும், பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்னும் மூவரையும் தொழுதும், நந்திதேவரை வணங்கியும், இங்கு கூறும் சாத்வீகரேகையில் பிறந்தவர்களது பலா பலன்களை அனைவரும் அறியும்வண்ணம் கூறுவேன் கேட்பீராகவும் எ-று.

(வி-ரை) இந்த சாத்வீகரேகையில் பிறந்தவர்களது பலாபலன்களைக் கூறுதற்கு முன்னதாய் தமது குலதெய்வமாகிய வாலைத்தேவியையும், மற்று முள்ளோரையும் வணங்கி பலன் கூறலாயினார். 1

காப்பென்ற சாத்மீக ரேகைமைந்தா
கைகளிலே இருந்தாக்கால் கருணைகேளு
வாப்பென்ற ஐந்துபுள்ளி ரெண்டுரேகை
வகையாகச் சிறுகீறு இருக்குமப்பா
தாப்பென்ற மயேந்திரம்போல் ஏறித்தானே
சகமுழுதும் புகழ்தாவே இருக்கும்பாரு
ஏப்பென்ற இவன்தனக்கோ யோகவாழ்க்கை
என்னசொல்வேன் சொல்லரிது மைந்தாகேளே.

(இ-ள்) சாத்வீகரேகை என்பது தனது அஸ்தத்தின்கண் அமைந் திருக்குமேயாயின் அதனது விருத்தாந்தங்களைக் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? மேற்படி ரேகையானது 5-புள்ளிகளாயும், சின்னஞ்சிறு கீற்றுகளாயிரண்டும், முன்கூறிய மயேந்திரரேகைபோன்று ஏறிவளர்ந்திருப் பதுடன் இப்பூமி எங்கும் புகழத்தகுந்ததாயிருக்கும் எனவும், இவனது யோகத்தினையும், வாழ்வினையும், என்னால் கூறுவதற்கு அரிதாயினும் என்னால் கூடியவரையில் சொல்லுவேன் கேட்பாயாக எ-று. 2

மைந்தனே இவன்பிறந்த மனையிலேதான்
வளமாக இவன்பிறக்கும் அந்தவேளை
கந்தனைத்தான் பெற்றெடுத்த கயிலைநாதர்
கருணையது கடாட்சிக்கக் கருணையானன்
வந்ததிவன் இருமனையில் தென்பால்வீட்டில்
வாழவே பிறந்தான்காண் சுக்கிரவாரம்
சிந்தனைக ளில்லாமல் செல்வத்தோடே
செப்புகிறேன் உதயமதில் பிறந்தானன்றே.

(இ-ள்) என் அருமை மைந்தா கேட்பாயாக! என்னவெனில்? கந்தனைப் பெற்ற கருணாகரராகிய சிவபிரானே இந்த ஜாதகன் பிறக்கும் நேரம் இவன் பிறந்த இல்லத்திலிருந்து கடாக்ஷம் செய்தார். அதனாலேயே இவன் பிறந்தான் என்பதுடன் இவன் பிறந்த மனையானது இருமனையாயும், தென் பக்கம் நோக்கிய வாசற்படியும் உள்ள வீட்டில் மிக்க செல்வத்துடன் இருந்து வாழ்வதற்காகவே சுக்கிரவார தினத்தில் பிறந்தான் ஆதலாலும், உதயகால நேரத்தில் பிறந்தமையாலும், இந்த ஜாதகன் எவ்வித சிந்தனையும் இன்றி மகா செல்வத்துடன் பிறந்தான் எனவுங் கூறுவாயாக எ-று. 3

அன்றெனவே இவன்பிறக்கும் போதில்மைந்தா
அன்பான பிதாதனது வீட்டிலில்லை
குன்றெனவே இவன்பிறந்த நாலாமாதம்
குலமான பிதாவுக்கு யோகமுண்டாம்
நன்றெனவே இவன்யோகம் மிகவாமப்பா
நலமான தெய்வத்தை நாடிநிற்பன்
மன்றெனவே இவன்பிறந்த ஆறும்மாதம்
வளமான புதுமனையும் எடுக்கலாச்சே.

(இ-ள்) இந்த ஜாதகனானவன் ஜனிக்கும் காலத்தில் இவனது பிதா தனது இல்லத்தில் இல்லையெனக் கூறுவதுடன் இந்த ஜாதகன் பிறந்த 4-ஆம் மாதம் முதல் இவன் பிதாவுக்கு பிரபலயோகம் உண்டெனவும், இந்த ஜாதகனது வாழ்நாட்களில், தான் மிக்க யோகமுடையவனாகவே வாழ்வானெனவும், தெய்வத்தை எந்நாளும் தொழுதுக்கொண்டு இருப்பான் என்றும், இந்த ஜாதகன் பிறந்த ஆறாவதுமாதம் புதுமனையாகிய புதிய இல்லம் ஒன்று கட்டுவான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இவ்விரண்டு செய்யுட்களாலும், இவனது யோகங்களையும், பிதாவினது யோக காலங்களையும் கூறப்பட்டன. மற்றும் மேற் செய்யுளில் சுக்கிரவாரம் உதயத்தில் பிறந்தான் என்பது கவனிக்கத்தக்கது. 4

ஆச்சப்பா இவனுக்கு கெண்டமைந்து
அன்பான பாலகனே அறிந்துசொன்னோம்
வாச்சப்பா விவனுக்குத் தாரம்ரெண்டு
வையகத்தில் இவனைப்போல் புண்ணியசாலி

கோச்சப்பா இவன்வயதோ பதினெட்டாண்டில்
　　கொற்றவர்க்கு விவாகமது ஆச்சுதன்றோ
வீச்சப்பா இவன்வயதோ ரிருபத்தெட்டில்
　　மேன்மையாம் இவனுக்கு விவாகமன்றே.

(இ-ள்) இந்த ஜாதகனது வாழ்நாட்களில் உண்டாகும் கெண்டாதி தோஷங்கள் ஐந்து எனவும், இவனது வாழ்க்கைத் துணைவிகளாகிய மனைவிமார் இரண்டுபேர் உண்டாவார் எனவும், இந்த ஜாதகனைப்போல் புண்ணிய சாலிகள் இவ்வுலகத்திலில்லை எனவும், இந்த ஜாதகன் தமயனுக்கு இவன் வயது 18-ல் விவாகம் நடந்தன வென்றும், தனது வயது 26-ல் யோகமும், விவாகமும் இந்த ஜாதகனுக்கு உண்டாயின எ-று.

(வி - ரை) இச்செய்யுளின் கருத்தாவது இவன் தமயனுக்கு இந்த ஜாதகன் வயது 18-லும், 26 ல் இந்த ஜாதகனுக்கே விவாகம் என்றனர், இதுவுமன்றி இந்த ஜாதகனது யோகமும் வாழ்க்கையும் 26 ல் மேன்மையுண்டு என்றது கவனிக்கத்தக்கது. 5

அன்றேதான் இவனுக்குப் புத்திரன்பத்து
　　அப்பனே பிறக்கும்பென அறிந்துசொன்னோம்
நன்றெனவே இவன்பிதாவுடன் பிறந்த
　　நலமான உடற்பிறப்போ ராறுபேராம்
குன்றெனவே இவன்பிறவி பதின்மூன்றாகும்
　　குறித்துரைப்பேன் ஆண்யெட்டு பெண்நான்நாலு
நன்றெனவே இவன்தானும் ஆறும்பேராம்
　　நலமான இவன்வயதோ ரெழுபத்தைந்தே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்குப் பிறக்கும் புத்திர புத்திரிகளோ வெனில் மொத்தம்-10 என்றும், இவன் பிதாவுடன் பிறந்த சகோதரர்களோ மொத்தம் 6-பேர் எனவும், இந்த ஜாதகனுக்கு உடன் பிறந்தவராகிய சகோதர சகோதரிகள் மொத்தம்-13 எனவும், அதில் இந்த ஜாதகனைத்தவிர மற்றும் ஆண்கள் 8 எனவும், பெண்கள்-4 எனவும், அவற்றுள் இந்த ஜாதகன் ஆறும் பிறவியாகுமெனக் கூறுவதுடன் இந்த ஜாதகனுக்கு தீர்க்கவயது மொத்தம் 75 எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனுக்கு வேண்டிய சில முக்கிய விஷயங்களைக் கூறியுள்ளனர், என்னவெனில்? இந்த ஜாதகன் ஆறும் பிறவி எனவும், இவனுடன் பிறந்தவர் மொத்தம் 13-ல் இவனைத்தவிர ஆண்-8, பெண்-4 என்றும், பிதாவினுடைய பிறவிகள் மொத்தம் 6-எனவுங் கூறியது- இந்த ஜாதகனுக்கு மொத்த வயது-75 எனவுங் கூறினர். 6

ஐந்தான பரிசுத்த ரேகைமைந்தா
　　அன்பான பாலகனே அறியச்சொல்வேன்
மைந்தான முக்கவரின் வட்டம்போலாம்
　　மகத்தான ரேகையது வெறுமையாகும்

நிந்தான இவனுக்குப் பிறந்துவந்த
நீணிலத்தின் வருடம்தான் ஒன்றுக்குள்ளே
மன்றான தாய்தந்தை கொன்றான்பாரு
வண்மையாம் இவன்வெறுமை ஆனானன்றே.

(இ-ள்) பரிசுத்தமாகிய ஐந்து புள்ளிகளையுடைய இந்த ரேகையினது விஷயங்களை இன்னும் எல்லோரும் அறியும்வண்ணம் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? மேற்படி ரேகையானது வட்டம்போன்று சுற்றிச் சுற்றி தனித்து நிற்கும் தன்மையுடையது. மகா மகுத்துவம் பொருந்திய ரேகையானது வட்டம்போன்று சுற்றியிருந்த காரணத்தால் இந்த ஜாதகன் பிறந்த வருடம் ஒன்றுக்குள் இவனது தாய் தந்தையரைக்கொன்று தானும் தனித்து வெறுமையானான் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன ரேகையானது எவ்வாறு வட்டம்போன்று சுற்றி தனித்து நின்றனவோ அதைப்போன்றே இந்த ஜாதகனும் இவன் பிறந்த வருஷம் 1-க்குள் தன் தாய்தந்தையரை இழந்து தானும் தனியன் ஆனான் என்பது இச்செய்யுளின் கருத்து. 7

காப்பிலி ரேகையின் பலன்

ஆனதென்ன காப்பிலியின் ரேகைமைந்தா
அப்பனே யிவன்கையில் இருக்குமாகில்
தானதென்ன இவன்பிறந்த இருபத்தைந்தில்
தருவான ஆயுதத்தால் மடிவான்அன்றோ
நானதென்ன பாலியிட ரேகைமைந்தா
நலமாகக் கண்டுநீ தள்ளுதள்ளு
வானதென்ன வண்மையிட ரேகைகண்டால்
வம்மிசத்திற் காகாது வண்மைதானே.

(இ-ள்) மக்களாய்ப் பிறந்தவர்களில் எவர்கள் அஸ்தத்திலேனும் காப்பிலி ரேகை என்பது இருக்குமேயாமானால், அதன் பலனென்னவெனில்? அந்த ரேகையானது மகா கொடியதென்றும், அந்த ஜாதகன் பிறந்த 25-ஆம் வயதில் இறந்துபோவான் எனவும் கூறுக. ஆனதால் எவர்களது அஸ்தத்தில் மேற்படி காப்பிலிரேகை என்பது உள்ளனவோ அவர்கள் பிரயோசனம் இல்லாதவர் எனத் தள்ளுவாய். ஏனெனில்? மேற்சொன்ன ரேகையுடன் பிறந்தவர்களுக்கு அவர்கள் வங்கிசத்திற்கே ஆகாதெனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்தென்னவெனில்? மற்றெல்லா ரேகையைவிட, இந்த ரேகையானது மகா கொடியது. தனது வம்மிசத்திற்கு இடையூறு செய்வதுடன் தானும் 25ல் ஆயுதத்தால் மடிவான் என்றதால் அவர்களைத் தள்ளுவாய் எனறு கூறி அவன் விஷயங்கள் எவற்றையும் கூறாது விட்டனர். 8

பாஞ்சாலி ரேகையின் பலன்

தானென்ற பாஞ்சாலி ரேகைமைந்தா
தருவான திருவையிட ரேகைதானும்
ஊனென்ற பஞ்சவர்ண ரேகைமைந்தா
உற்பனமாய்ச் சொல்லுகிறேன் உணர்வாய்க்கேளு

வாமென்ற சுசிவர்ன மஞ்சுரெண்டு
வண்மையாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
பாமென்ற சுக்கிரன்தன் ரேகைமைந்தா
யான்சொல்வேன் இதனுடைய அடர்புபாரே.

(இ-ள்) எல்லாவற்றிலும் மேம்பட்ட பாஞ்சாலிரேகையினது விஷயங்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? மேற்படி ரேகையை லக்ஷிமிரேகை என்றும், பஞ்சவர்னரேகை என்றும் சொல்லலாம். ஆனதால், அதனது மகுத்துவத்தைச் சொல்லுவேன் கேட்பாயாக. அவை எவரும் விரும்பத்தக்கதும், ஐந்து வர்னம் (அல்லது) ஐந்து விதங்களாய் இரண்டு இடங்களிருக்கும். அவை எங்ஙன மிருக்குமெனில் சுக்கிரன் மேட்டிலிருக்கு மாதலால் இதன் பலாபலன்களைக் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) சுக்கிரன் மேடென்பது தமது உள்ளங்கைக்கு மேல்விரல்களுக்குக் கீழுள்ள இடமாகும். அங்கு பஞ்சவர்ணத்துடன் இரண்டு இடங்களில் மேற்படி ரேகையிருக்கும் என்பதாகும். இதன் பலன் பின் வருமாறு. 9

பாரென்ற யிவன்வீட்டில் தெய்வக்காரி
பைங்கொடியாள் அனல்மாய்ந்த கன்னிப்பெண்ணுள்
கூறென்ற இவன்வழியில் தலைமுறைதான்மூன்றும்
குடும்பத்தார் பூசைதனை மறந்தார்பாரு
சாரென்ற அனேகநாள் செய்யவில்லை
சற்குணமாய் இவள்தன்னைப் போற்றிசெய்தால்
சீரென்ற திசையோகம் பின்னாலேதான்
சீக்கிரத்தில் வருடம்ரெண்டு செல்லுமன்றே.

(இ-ள்) இந்த ஜாதகனது மூன்றும் தலைமுறையில் நெருப்பினால் உயிர்விட்ட கன்னிப்பெண்ணானவள் இவன் வீட்டுக் குலதெய்வமா யிருப்பதாலும் மேற்படி குலதெய்வ பூஜையை அனேக நாட்களாய் மறந்துள்ளதாலும், மேற்படி தமது குலதெய்வத்தைப்போற்றி பூஜைசெய்து வந்தால் இந்த ஜாதகன் ஜனித்த வருடம் இரண்டில் திசை, யோகம், செல்வம், சிறப்பு, முதலியன யாவும் நாளுக்குநாள் மேம்பாடடையும் எனவும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) பொதுவாய் மேற்படி குலதெய்வத்தை இவனது தாய் தந்தையர்கள் வணங்குவார்களே யாயின் வருடம் 2-க்குமேல் எல்லாவிதமான யோக சுகங்களும் உண்டாகும் என்பது இச்செய்யுளின் முக்கிய கருத்து. 10

சொல்லுமடா யிவன்மனதின் துயரமெல்லாம்
சேயிழையாள் உதவியது செய்வாளன்றோ
வல்லுமடா வியாகூலம் வேண்டாமைந்தா
வாகான புத்திரபாக்கியமும் உண்டாம்

அல்லுமடா ஆயிமைந்தன் குமரன் தன்னை
அன்பாகச் சிவனையும் பூசிக்கவேண்டும்
நல்லுமடா இவன்குழவி பிறந்தயோகம்
நலமான நீதியுண்டாம் நாடிக்கேளே.

(இ-ள்) முன் சொல்லிய செய்யுளில் கூறியவண்ணம் பூஜை செய்வானேயாமானால், மேற்படி தேவியானவள் அனுக்கிரகம் செய்து எல்லா சம்பத்தையும் ஈவதுடன் தன் மனதிலுள்ள வியாகூலம் யாவும் நீங்கும் என்றறிக. இதுவன்றி, புத்திரபாக்கியமும் உண்டாகும். மேலும் சத்திதேவியின் திருக்குமாரனாகிய குமரக்கடவுளையும், சிவனையும் பூசிக்கில், இந்த ஜாதகன் பிறந்த யோகமானது மேன்மையான தனமும், சம்பத்தும் உண்டாகுமெனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் பிதா தனது குலதெய்வத்தையும், குமரவேலையும், சிவனையும் தொழுதுவந்தால் மேலான தனம் முதலியன உண்டாகுமென்பது கருத்து. மற்றும், விவரங்களைப் பின் வருவனவற்றால் காண்க. 11

கேட்கையிலே ரேகையிலே திருவையப்பா
கேவலமாய்த் திசையோகம் கெடுதிகேளு
வாட்கையிலே முன்னோர்கள் பொருள்கள்வைத்து
வகைசொல்லி மாளாமல் மாண்டுபோனார்
நாட்கையிலே தலைமுறைகள் மூன்றுமப்பா
நலமாகப் பூமியிலே வைத்திடும்பொருளை
ஆட்கையிலே நாலான தலைமுறைதனில்தான்
ஆண்பிள்ளை இவன்பிறந்து எடுப்பான்பாரே.

(இ-ள்) இந்த ரேகையானது மற்றெல்லாவற்றைக் காட்டிலும் லக்ஷ்மி என்று கூறவேண்டும். ஆதலால், இந்த ரேகையில் பிறந்தவர்களது திசை யோகம், நன்மை, தீமை முதலியவற்றைக் கூறுவேன் கேட்பீராக. எவ்வாறெனில்? இவனுக்குமுன் மூன்றும் தலைமுறை பாட்டன் அநேக திரவியங்களைச் சம்பாதித்து புதைத்துவிட்டு எவரிடமும் சொல்லாமல் மாண்டுபோனார்கள். ஆனதால், அந்த திரவியத்தை நான்காம் தலைமுறையில் ஆணாகிப் பிறந்த இந்த ஜாதகன் பிறந்து எடுப்பான் எனவுங் கூறுவாய் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த பாஞ்சாலிரேகை யென்பது லக்ஷ்மிக்கு ஒப்பாகியதென்றும் தனது மூன்றும் பாட்டனார் புதைத்துவைத்த பொருளை இந்த ஜாதகன் கண்டெடுப்பான் எனவுங் கூறியுள்ளார். மற்றுமுள்ள விஷயங்களைப் பின்வரும் செய்யுளாலுங் காண்க. 12

எடுத்திடவே திருவைக்கு யின்னங்கேளு
இயல்பாக மனதிலிவன் எண்ணுங்காரியம்
தொடுத்திடவே மனையிலேதான் சுகமேயில்லை
தொல்லைமெத்த பிள்ளைகள்தான் துயரத்தாலே

கொடுத்திடவே பாக்கியத்தின் வியாகூலந்தீர
கொடுப்பாரே அருணகிரி கோபாலர்தாமும்
அடுத்திடவே ஆயிர நாமத்தையன்
அன்பான விஷ்ணுவுந்தான் அருள்செய்வாரே.

(இ-ள்) லக்ஷிமிரேகை யென்னும் பாஞ்சாலிரேகையில் பிறந்தவர்களது பலாபலன்களை இன்னும் சொல்லுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகனுக்கு வயது முதலில் தன் மனத்துள் விசனமான எண்ணமும், தனது மனையில் சுகக்குறைவும், அதிக புத்திரர்களால் துயரம் தொல்லையும் உண்டாகும். மேற்சொன்ன பொருள் வியாகூலம் தீரும்படி அண்ணாமலைக்கடவுளும், ஆயிரம் திருநாமத்தையுடைய மகாவிஷ்ணுவும் அருள் செய்வார் எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்தாவது இந்த ஜாதகன் பிறந்த ஆரம்ப காலம் சில கஷ்ட நஷ்டங்களுண்டாயினும், பிற்காலம் யோகசுகம் முதலியன அனேகமாய் உண்டென்று கூறுவதே யாகும். யோகமுண்டாகுங் காலங்களைப் பின்வருவனவற்றால் அறிக. 13

அருள்செய்வார் ஐயனிட உண்டிக்கேயென்றும்
அரிவையாள் அனல்மாய்ந்த கன்னிப்பெண்ணும்
பொருள்செய்யும் ஈஸ்வரனார் உதவியாலே
போச்சுதடா இருபத்தி ரெண்டிலேதான்
அருள்செய்தார் திசையோகம் வந்ததப்போ
அன்னவன்தன் வயதிருபத் திரண்டதாகும்
விருள்செய்த ஒருதாய்க்கோர் மைந்தனுக்கும்
மிகவான மைந்தனுக்கு விவாகமாச்சே.

(இ-ள்) மேலே சொன்ன மகாவிஷ்ணுவுக்கு உண்டிப்பணம் செலுத்தி வரில் மேற்படி விஷ்ணுமூர்த்தியின் கிருபையாலும், தன் குலவத்தருள் நெருப்பால் உயிர்விட்ட கன்னிப்பெண்ணாகிய குலதெய்வத்தினது உதவியாலும், ஸ்ரீபரமேஸ்வரனது கிருபையாலும், இந்த ஜாதகன் வயது 22-ல் பலவித யோகங்களுண்டாகும் எனவும், இந்த ஜாதகன் தாய்க்கு இவன் ஒருவனே பூரண ஆயுளுடன் நிலைத்திருப்பவன் எனவும், மேற்படி வயது 22-லேயே தன் முன்னவனுக்கு விவாக சுபசோபனதிகள் நடக்கும் என்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் ஒருவனே என்ற விவரத்தைப் பின் வருவனவற்றால் காண்க. இதுவன்றி 22-ஆம் வயதுமுதல் யோகம் என்பதும், மேற்படி 22-ஆம் வயதில் விவாகம் நமயனுக்கு நடக்கும் என்பதும், அறியத்தக்கது. பொதுவாய் இந்த ஜாதகன் தெய்வஸ்துதியிருக்கின் நல்ல யோகம் உண்டென்பது கருத்து. 14

ஆச்சப்பா ஆறுநாள் கெர்ப்பக்காரன்
ஆனந்த மதியோகன் அன்பானபிறவி
காச்சப்பா இவன்பிறந்த பதின்மூன்றுண்டில்
கணக்கில்லாத் தொல்லையது வந்ததப்பா

தாச்சப்பா தலைவனுடன் பிறந்ததாறு
தன்னுடைய பிறவிகளைக் கொன்றான்பாவி
போச்சப்பா மயேந்திரத்தில் நாலுண்டானால்
பிரபலங்க ளாவனடா விருபத்தாறே.

(இ-ள்) இன்னும் சொல்லவேண்டுவதெனில்? இந்த ஜாதகன் ஆறாவது கெர்ப்பமாகும். இதுவன்றி, இவன் எல்லோருக்கும் அன்புடையவனும், அனைவரும் மதிக்கத்தகுந்த போகமுடையவனும் ஆவான் என்பதுடன் இவன் பிறந்த 13-ம் ஆண்டில் அளவிடமுடியாத தொல்லைகளைப் பலவுடையவனும், இந்த ஜாதகனுடன் பிறந்த பிறவிகள் 6-ஐயும் இவன் பிறந்த பிறகே கொன்றான் எனவும், மேற்சொன்ன பாஞ்சாலி ரேகையுடன் மயேந்திர ரேகையும் இருக்குமேயானால் இவன் வயது 26-ல் பிரபலயோகம் அநேகம் உடையவனாக இருப்பான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன பதினான்காம் செய்யுளில் இவன் தாய்க்கு இவன் ஒருவனே எனவும், இச்செய்யுளில் இந்த ஜாதகனுடன் பிறந்த ஆறு பிறவிகளைக் கொன்றான் எனவுங் கூறியுள்ளதால் இவனுடன் பிறந்தவர் ஆறுபேராயினும் இவன் ஒருவனே நிலைத்திருப்பவன் என்பது கருத்தாகிறது. 15

ஆறிடவே யிவன்யோகன் தனவானப்பா
ஆச்சரியங் கேட்டபொருள் கூடும்பாரு
பாறிடவே யிவனுக்கு யிருபத்தெட்டில்
பண்பான கலியாண மாகும்பாரு
பேறிடவே யிவன்வயதோ ரிருபத்தெட்டில்
பெரியதொரு கெண்டங்கள் வந்ததப்பா
சீறிடவே யிவன்றானும் திசையோகத்தால்
சீக்கிரத்தில் திசையோகம் வருகும்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகனது யோகம் முதலியவற்றைக் கூறுமிடத்து மிக்க யோகமுடையவனாயும், எவரும் ஆச்சரியப்படத் தக்கவனாகவும், தான் எப்பொருளைக் கேட்கினும் அவை உடனே கைக்கூடுதலும் உண்டாவதுடன் வயது 28-ல் விவாகம் நடக்கும் எனவும், மேற்படி வயது 28-லேயே பிரபலமாகிய கெண்டம் வந்ததெனவும் கூடிய சீக்கிரத்தில் பிரபல திசையும், பிரபல யோகமும் உண்டாகுமென்று கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்தாவது என்னவெனில்? 28-ல் விவாகமும், பிரபல யோகபோகமும் உடையவனாவான் என்பதேயாகும். மற்றும், மேற்படி 28-ல் பிரபல கெண்டமும் உண்டாகி நீங்கும் என்பதேயாகும். 16

பாரடா விவன்கேட்ட காரியந்தான்
பக்குவமாந் தனத்தோடு பாக்கியங்கேட்டால்
சீரடா விவனுக்கு ஐந்நூற்றுநாற்பது
சிவசிவா கிடைக்குமென்று செப்புவாய்நீ

கூரடா குழவிகள்தா னாறுக்குள்ளே
கொழுநனுக்குப் பாக்கியங்கள் கூறுவோம்பாம்
வாரடா மயேந்திரத்தின் பெருமையாலே
வகையான திருவையுட வள்ளல்தானே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது விஷயங்களைச் சொல்லவேண்டுவ தெனில்? பக்குவசாலியும், தனவந்தனுமாக இருப்பான் எனக் கூறலாம். எவ்வளவு பாக்கியமுள்ளவனுவான் எனில், சிவபிரானது கருணையால் 540-ஆயிரம் வரையில் கிடைக்குமென நிச்சயித்துக் கூறலாம். இதுவன்றி இவனுக்கு உண்டாகும் புத்திரர் ஆறு, ஆதலால் மேற்படி குழவிகளும் பாக்கியசாலிகளாகவே வாழ்வார். இந்த பாஞ்சாலி ரேகையுடன் மயேந்திர ரேகையும் கலந்துள்ளதால் லக்ஷிமி கடாக்ஷம் பொருந்தியவனெனவுங் கூறலாம் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் இந்த ஜாதகன் 540-ஆயிரம் பொன் பூஸ்திதி யுடையவன் எனவும், இவனது புத்திரவர்க்கம் 6 எனவும், மேற்படி புத்திரர் களும் லக்ஷிமிகடாக்ஷம் உள்ளவர்கள் எனவுங் கூறியுள்ளார். புத்திர விஷயங் களைப் பின் வருவனவற்றால் காண்க 17

தானென்ற விவன்பிறவி யோகவானாய்
தருவான தேவரிலே யொருவனப்பா
ஊனென்ற வுட்கருத்து மிகவேயப்பா
உத்தமன்றான் தனசாலி யாகிவாழ்வான்
வானென்ற விவன்குழவி யோகத்தாலே
வையகத்தி லில்லையடா வரிசைகேளு
கானென்ற கருணையடா கடவுளார்தான்
கண்டித்தபடி சொல்வான் கருணைகேளே.

(இ-ள்) இந்த ஜாதகனது பிறவி என்னும் புத்திரர்கள் மிகுந்த யோக முடையவர்கள் எனவும், தேவர்களில் ஒருவரெனவுங் கூறலாம். மற்றும் மேற்படி குழவிகள் மிக்க யுக்தி புத்தியுடையவர்களாகவும், உத்தமர்களாக வும், தனவந்தர்களாகவுமே இருந்து வாழ்வார். இவன் புத்திரர்களின் யோகத்திற் கொப்பாய் இப்பூமியில் வேறு ஒருவரும் இல்லையென்றே கூற வேண்டுவதாகும். முதற்கடவுளாகிய ஈசன் விதித்த கட்டளையின்படி இன்னும் இந்த ஜாதகனது விஷயங்களைக் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் இந்த ஜாதகனது புத்திர வர்க்கங்களினது யோகபோகங்களை விளக்கினர். இனிப்பின்வரும் செய்யுளால் இந்த ஜாதக னது விஷயங்களைக் கூறுவார். 18

கேட்கவே யிவன்றானும் சத்புருஷனாகும்
கேவலமாய்ப் பூமிகொள்வான் தனவானப்பா
ஆட்கவே ஆயுசுதா னெழுபத்தைந்தாம்
அப்பனே யிவனுக்கு அறிவுமெத்த

நாட்கவே யுமையவளும் இளையாள்தானும்
நலமாகப் பிரியாது இடையிருப்பார்
வாட்கவே திருவையுட யோகத்தாலே
வறுமைதான் நீங்குமடா நாற்பத்தெட்டே.

(இ-ள்) பாஞ்சாலிரேகை என்பது தனது அஸ்தத்தின்கண் இருக்கப் பிறந்தவனது பலாபலன்களை இன்னும் கூறுமிடத்து இந்த ஜாதகன் மிக்க சத்புருஷனவன். மற்றும் தனவந்தனும் எவ்வித சிரமமும் இன்றி பல பூமிகளைக் கைக்கொள்ளுபவனும் ஆவான். இதுவன்றி வயது-75 உடையவனும், மிக்க அறிவுடையவனும் ஆவதுடன் எந்நாளும் ஸ்ரீஉமையவளும், லக்ஷிமிதேவியும், இடைவிடாது அருகிலிருப்பதால் தனது வயது 48-ல் எல்லா வறுமையும் நீங்கி லக்ஷிமிகடாக்ஷ முடையவனுகி வாழ்வான் எ-று.

(வி-ரை) முன்கூறிய செய்யுளால் தன் வயது 28-முதல் யோகம் எனக் கூறினாராயினும், 48-லேயே சகல ஐஸ்வர்யங்களும் உடையவன் ஆவன் என இச்செய்யுளில் கண்டித்துக் கூறியிருப்பதை யறிக. இது வன்றி என்னாளும் லக்ஷிமிவிலாசம் உடையவன் என்பது கவனிக்கத் தக்கது. 19

எட்டான விற்பனந்தான் அஞ்சுக்குள்ளே
ஏகாந்த மானபரஞ் சோதியப்பா
வட்டான குமரனைத்தான் பெற்றதேவி
வண்மையாம் பூஜைதனை மறந்திடாதே
இஷ்டான சுகமெல்லாம் குறைக்குமப்பா
எடுத்திடுவான் புதுமனையும் இயம்பத்தானே
இஷ்டான பரமசுக மெல்லாந்தானும்
ஏகாந்தந் தானுக இருப்பான்பாரே.

(இ-ள்) அஷ்டாக்ஷரங்களுக்கும் மேலானதாயுள்ள பஞ்சாக்ஷரமென்னும் ஏகாந்தமான பரஞ்சோதியாய் விளங்காநின்ற ஸ்ரீகுமாரகுருபரக்கடவுளைப்பெற்ற ஸ்ரீஉமாதேவியினது பூஜையையும் பக்தியையும் எந்நாளும் மறக்காதே அப்படி மறந்தாயாயின் உன சுகம் யோகம் முதலியன யாவும் குறைவுபடும். மேற்படி தேவியை நீ எந்நாளும் தொழுது வருவாயாயின் உனக்கிஷ்டமான சுகங்களெல்லாம் அனுபவித்து ஏகாந்தமாகிய வாழ்வும் புதிய அழகிய இல்லத்துடன் வாழ்வாய் எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்தென்னவெனில்? மேற்படி ஜாதகன் தேவியை பூஜைசெய்யின் எல்லாவித சுகமும் உடையவனுவான் என்றும், பூஜை செய்வதை மறந்தால் எவ்வித சுகமும் குறைந்து வாழ்வன் என்பதேயாகும். 20

பாரடா இவனொருவன் பத்தனுகும்
பண்பான சிவபூசை முடிக்கும்வள்ளல்
தீரடா இவனுக்கு மூன்றுகண்டம்
திசையாகச் சொல்லுகிறேன் தெரியத்தானே

ஆரடா இவனைப்போல் யோகவான்தான்
அன்பான பூமியிலே இல்லைமைந்தர்
பேரடா இவன்தானும் மகிழ்ச்சிபெற்று
பெரியவனாய் வளர்ந்திருப்பான் பேசுவீரே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது விஷயங்களைக் கூறவேண்டுவ தெனின்? இந்த ஜாதகன் சிவபூஜையைத் தவறாமல் முடித்துவைக்கும் வள்ளல் எனவும், சிவபக்தன் எனவுங் கூறலாம். இவனது வாழ்நாளில் மூன்று கெண்டாதி கெண்டங்கள் உண்டாகுமென்றும் நிச்சயமாய்க் கூற வேண்டுவதுடன் இந்த ஜாதகனைப்போன்ற யோகமுடையவர்கள் இப் பூமியில் வேறொருவருமில்லை எனவும், மிக்க கீர்த்தி பெற்றவனாகவும், மகிழ்ச்சி உடையவனாகவும், எல்லோருக்கும் பெரியவனாகவும் வாழ்வானெனப் பெருமையாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனுக்கு மூன்று கெண்டாதி கெண்டங்களுண்டு எனக் கூறினரேயன்றி, அவை எக்கெந்த காலங்களி லெனக் கூறாமையால் இதனை அவ்வவர்களுடைய கிரக வரிசையால் ஆராய்ந்து கூறுவது நலம். 21

பேசுவீர் கோபால சாமிதானும்
பெற்றெடுத்த மைந்தனென்று பெருமையாச்சு
ஆசுவீர் ஆண்டவனார் உதவியாலே
ஆக்கிவிப்பார் தனவானாய் ஐம்பதுக்குள்
கோசுவீர் பலனில்லா வருஷம்ஏழு
கொற்றவனை வதைக்குமடா கொடுமையாலே
வேசுவீர் காலமெல்லாம் யோகவாழ்க்கை
வேதாந்த குருஉப தேசம்செய்வார்.

(இ-ள்) இந்த ஜாதகன் ஸ்ரீ கோபாலர் என்னும் நாராயணமூர்த்தி யினது கிருபா கடாக்ஷத்தால் உண்டாகியவனானதால் இவ்வளவு பெருமை யாய்க் கூறவேண்டியதாயிற்று. ஆதலால் மேற்படி நாராயணமூர்த்தியினது கிருபையால் இந்த ஜாதகன் வயது 50-க்குள் சகல பாக்கியங்களையும் கொடுத்தருள்வார். இந்த ஜாதகன் வயதில் 7-வருஷங்களே வறுமை துன்பம் முதலியவற்றால் கஷ்டப்படுவானெனவும், மற்றகாலம் முழுதும் பிரபல யோகமும் வாழ்வுமே உண்டாகும் எனவுங் கூறுவதுடன் இந்த ஜாதகனுக்கு வேதகுருவினது உபதேசமும் கிடைக்குமென அறிக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் மொத்த வயதில் 7-வருஷங்கள் அவயோக மென்றும், மற்ற காலங்களில் பிரபலயோகமும் உண்டென்பது கருத்து. 22

செய்யமே இன்னமும்தான் அசுபதிக்கு
செப்புகிறேன் இவனுடைய காரியம்தான்
வையகத்தில் இவனைப்போல் இல்லைமைந்தன்
மகத்தான யோகமடா மருவிக்கேளு

கையதனிற் கர்னனைப்போல் புலவர்க்கெல்லாம்
கனகமுதற் குறைவின்றி கனிவுற்றீவான்
ஐயமில்லா வேளைப்போல் இருப்பன்மைந்தா
அன்பான வாழ்க்கைநன்று அறிவுகூறே.

(இ-ள்) அசுவினியில் பிறந்த இந்த ஜாதகனது யோகபாகம் முதலியனவற்றை இன்னும் சொல்லுகிறேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகன் இப்பூமியின்கண் மிக்க அபூர்வமான காரியங்கள் பல செய்து வைப்பான். இன்னும் அளவிடமுடியாத யோகமுடையவனாகி வாழ்வன். இதுவன்றி ஈகையில் கர்னனைப் போன்றவனாகவும், புலவர்களாகிய வித்துவான்களுக்கு எல்லா தான தருமங்களையும் குறைவின்றி முடித்து வைப்பான். எக்காலத்தும் தீமை என்பதே இன்றியும் சுகமானவாழ்வுடனும் ஜீவிப்பான் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் சகல பாக்கியங்களும் உடையவனாய் புலவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுப்பதும், கர்னனைப்போன்ற தருமமும் உடையவனுவான் எனக் கூறினர். ஏனெனில்? மேற்படி பாஞ்சாலிரேகையினது பெருமையேயாகும். 23

கூறிடவே யிவன்வாழ்க்கை யோகமெல்லாம்
குறிப்பாகச் சொல்லிவிட்டேன் கூர்மையாலே
நேரிடவே யிவனுடைய திசையும்கண்டம்
நேர்மையாய்ச் சொல்லுகிறே னினைவாய்க்கேளு
ஆரிடவே லக்கினத்தின் முறைகளெல்லாம்
அன்பாகச் சொல்லிவிட்டே னறிவினாலே
பாரிடவே யின்னமுந்தா னனேகரேகை
பக்குவமாய்ச் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே.

(இ-ள்) இதுவரையில் கூறிவந்த செய்யுட்களால் இந்த ஜாதகனுடைய வாழ்க்கை, யோகம், திசை, வருங்காலம், கெண்டாதிகெண்டம் முதலியவற்றை பாஞ்சாலிரேகை என்பது தன் அஸ்தத்தின்கண் இருக்கப் பிறந்தவனது இலக்கின கிரகமுறைமை யாவையும் எனது அறிவிற்கேற்றவாறு மிக்க சூக்ஷமமாய்ச்சொல்லி முடித்தேன். இனி மற்றுமுள்ள அனேக ரேகையினது விவரங்களையுங் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இதுவரையில் பாஞ்சாலிரேகையில் பிறந்து மயேந்திரரேகையுங் கலந்தவர்களது யோக முதலியவற்றைக் கூறினார். ஆதலால் இனி மற்றுமுள்ள ரேகையினது விவரங்களைக் கூறுவார். 24

### பஞ்சவர்ன ரேகையின் பலன்

கேளப்பா பஞ்சவர்ன ரேகைமைந்தா
கேவலமா மதின்மகிமை பெரிதேயாகும்
நாளப்பா யிவன்கையிலே யிருக்குமாகில்
நன்மைபெற்ற மைந்தனைத்தா னுடிச்சொல்வேன்

வாளப்பா விவன்தானு மாருங்கெர்ப்பம்
வண்மையுள்ள வில்லறத்திற் பிறந்தானன்றே
ஆளப்பா மாதிவார விரவுதன்னில்
அன்பான திதியேகா தசியுமாமே.

(இ-ள்) பஞ்சவர்ன ரேகையினது பெருமையைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. மேற்படி ரேகையானது கேவலமானதல்ல. மேற்படி ரேகை யானது இவன் கையிலிருக்குமேயாமானால், அவன் மிக்க நன்மையுடைய வனேயாகும். அவை எப்படியெனில்? அதின் விருத்தாந்தம் சொல்லுகிறேன் கேட்பாய். இந்த ஜாதகன் ஆறாவது பிறவியாகும். அதிலும், இவன் மிக்க பெருமையையுடைய இல்லறத்தில் பிறந்தவனெனவும், ஞாயிற்றுக்கிழமையும் ஏகாதசியுங் கூடிய இரவில் இந்த ஜாதகன் ஜனித்தான் என்றுங் கூறு வீராக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முதலிலேயே மேற்படி பஞ்சவர்ன ரேகை யானது கேவலமல்லவென்றும், மிக்க மகுத்துவமுடையதென்றும் கூறினார். இதன் விவரம் பின்வரும் செய்யுளால் அறிக. மற்றும், ஆதிவாரமும் ஏகாதசியுங் கூடிய இரவில் ஜனித்தவனென்பது கவனிக்கத்தக்கது. 25

ஆமென்ற விவனுடனே பிறந்தபேர்கள்
அப்பனே யைந்துமக்க ளொன்றுபெண்ணும்
வாமென்ற வலியதொரு வீட்டிலேதான்
வகையான பூரமதி லிரண்டாங்காலாம்
ஓமென்ற உட்பொருளே யறியும்வள்ளல்
உத்தமன்தான் தனசாலி யாகிவாழ்வான்
காமென்ற காமியங்க ளுள்ளவன்தான்
காட்சியுள்ள வழகியனு மைந்தன்றானே.

(இ-ள்) இந்த ஜாதகனுடன் பிறந்தவர் மொத்தம் 5-ல் பெண் 1-எனவும், நல்ல வலுவான இல்லறத்தில் பிறந்தவனென்றும், பூரநக்ஷத்திரம் இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் எனவும், ஓம் என்னும் பிரணவப் பொருளினது ரகஸ்யங்களை அறியத்தகுந்த செல்வன் எனவும், உத்தமமார்க்க முடைய வனும், தனவந்தனுமாகி வாழ்ந்திருப்பவன் எனவும், பற்பல விதமான காரியா காரணங்களைச் செய்யத் தகுந்தவனும், எவரும் மதிக்கத்தக்க அழகு வாய்ந்த வனும் ஆவானெனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) சகோதரர் 5-ல், 1-பெண் என்றதாலும், இவன் ஆறும் பிறவி என்றதாலும், இவனுக்கு முன் பிறந்தவர் 4-ஆணும், 1-பெண்ணும் எனக் கொள்க. 26

மைந்தனெனு மிவன்யோக மாருதம்போல்
மகத்தான தாய்தந்தை வைத்துவாழ்வான்
ஐந்ததெனு மாறுபே ருடப்பிறப்பாம்
அன்பான பாலகன்தான் ஆறும்பேராம்

விந்தனெனும் விற்றொழிலும் விநோதவித்தை
விதமான வேதங்கள் படிப்பான்பாரு
சுந்தரம்போற் பிள்ளையுந்தான் யோகவானும்
சுசிகரமு முள்ளவன்தான் சூழத்தானே.

(இ-ள்) பஞ்சவர்ணரேகை யிருக்கப்பிறந்த ஜாதகனானவனது யோகமானது மாருதம்போன்று மிக்க பெருமையுடையதாயும், தாய் தந்தையர்களைப் போற்றி வாழத்தகுந்தவனும் ஆகும். மற்றும் இந்த ஜாதகன் ஆறு சகோதர சகோதரிகளை யுடையவனும், இவனே ஆறுவது பிறவியுமாகும். இதுவன்றி இந்த ஜாதகன் எவரும்கண்டு மகிழத்தகுந்த விநோத வில்வித்தை முதலியனவும், பற்பல விதமான வேதாகமசாஸ்திரங்களைப் படிக்கத்தக்கவனும், சுந்தரம் என்னும் அழகு பொருந்தியவனும், யோகமுடையவனும், மிகுந்த சுசியுடன் அருந்தத்தகுந்தவனும் ஆவான் எனக் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் முன் கூறிய 26-ஆம் செய்யுளில் சொல்லிய சகோதர விஷயங்களை விளக்கியுள்ளார். இதுவன்றி வேதசாஸ்திரமும், வில்வித்தை முதலியனவும் அறிவான் என்றது அறியத்தக்கது. 27

தானென்ற விவன்வயது பனிரண்டுக்குள்
தருவான விவாகமது ஆச்சுதப்பா
கானென்ற காணிக்கை யோகவானும்
காட்சிசொல்வே னிவன்வயதோ வைம்பத்தாறு
ஊனென்ற விவன்வீட்டி லனேகபாக்கியம்
உற்றதொரு மைந்தனுக்குக் குழவிரெண்டாம்
பானென்ற பஞ்சகர்த்தா வுதவியாலே
படும்பாடு வொன்றுமில்லை பண்பனுக்கே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜன்மாதி வயது 12-க்குள் விவாகாதி சுபகாரியங்கள் நடக்குமெனவும், அளவிறந்த பொருளையுடைய தனவந்தனாய் ஆவதுடன் இவனுக்கு வயது-56 என்றுங் கூறவேண்டுவதுடன் இவனது இல்லத்தின்கண் சகலபாக்கியம் பொருந்தியிருப்பதுடன் இவனுக்குண்டாகும் புத்திரர்கள் மொத்தம்-2 எனவும், பிரமா, விஷ்ணு, உருத்திரன், மயேசுரன், விநாயகர் என்னும் பஞ்சகர்த்தாக்களது உதவியால் எவ்வித குறைவுமின்றி எவரும் விரும்பத்தக்கவனாகி வாழ்வான் எ-று.

(வி-ரை) இவனது யோகபாகங்களைப் பொதுவாய் எவ்வித குறைவும் இல்லாதவன் எனக் கூறியதுடன் 12-ஆம் வயதில் விவாகம் என்றும் கூறினார். மற்ற விஷயங்களைப் பின் வருவனவற்றால் காண்க. 28

பண்பான விவனுக்குக் கண்டமைந்து
பாங்காக வருமென்று பரிந்துசொல்லு
நண்பான விவன்வயது பதினேழாண்டு
நலமான மாரிகெண்டம் நடந்ததப்பா

உண்பான விவன்வயதோ ரிருபதுக்குள்
உற்றதொரு நாய்கடிக்கு மாடுபாயும்
வண்பான விவன்வயதோ ரிருபத்தெட்டில்
வரிசையாய் வியாதிகண்டம் வந்ததன்றே.

(இ-ள்) எவரும் விரும்பத்தக்க இந்த ஜாதகனுக்குண்டாகும் கெண்டாதி கெண்டங்கள் ஐந்து ஆகும். அவையாவன: தன் வயது 17-ல் மாரி என்னும் வைசூரி முதலியனவற்றால் கெண்டம் உண்டாகும் எனவும், வயது 20-க்குள் நாய்கடி மாடு முதலிய வாகனங்கள் பாய்வதனால் கெண்டாதி கெண்டம் உண்டாகுமெனவும், வயது 28-ல் கொடிய வியாதி முதலியவற்றால் பிரபல கெண்டமுண்டாயின என்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் கெண்டாதி கெண்டமுண்டாகும் விதமும் வயதும் கூறியுள்ளனர். அவையாவன: 17-ல் வைசூரி, 20-ல் நாய்கடி வாகனம் பாய்தல், 28-ல் கொடிய வியாதியால் கெண்டம் என்றனர். மற்றுமுள்ள கெண்டாதி கெண்டம் பின் வருமாறு. 29

அன்றெனவே யிவன்வயது முப்பத்திரண்டில்
அப்பனே சத்துருவால் மெலிவான்பாரு
குன்றெனவே யிவன்வயது நாற்பத்தஞ்சில்
குலமகனு நீராலே மெலிந்தான்பாரு
நன்றெனவே யிவன்வயதோ ரன்பத்தாறில்
நலமான சக்கரத்தி னமைப்பினாலே
இன்றெனவே யிவன்தானு மிறப்பானப்பா
இயல்பான சக்கரத்தின் அமைப்புதானே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனித்த வயது 32-ல் தன் கொடிய சத்துருக்களால் கெண்டமுண்டாகுமென்றும், 45-ஆம் வயதில் ஜலத்தால் பிரபல கெண்டம் உண்டாகும் எனவும், இவை யாவும் நீங்கித் தனது வயது 56-ல், இவனது அஸ்தத்தின்கண் உள்ள ரேகையின் அமைப்பின்படி மரணமுண்டாகுமெனவுங் கூறுக. இதுவே மேற்கூறிய பஞ்சவர்ன ரேகையின் கால அமைப்பும் கிரக அமைப்பு எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) 32-ல் பகைவரால் கண்டம் என்பது சண்டையிட்டு காயம் படல் வைப்பு சூனியம் முதலிய வகையால் கெண்டம் என்பது கருத்து. மற்றும் முன்கூறிய 28-ஆம் செய்யுளின்படியே இச்செய்யுளாலும் வயது - 56 என்று கூறினர். 30

தானெனவும் பஞ்சவர்ன ரேகைஅப்பா
தருவான வாழ்க்கைமுதல் யோகமெல்லாம்
வானெனவும் திசையோகம் கர்மமெல்லாம்
வளமையுள்ள கண்டமுதல் வரிசைசொன்னேன்
நானெனவும் நாயகியாள் சொன்னவாக்கியம்
நயந்துநின்று கேட்டவர்க்கும் மோட்சமாச்சு
வானெனவும் தேவர்களும் முனிவரெல்லாம்
வணங்கினு ருமைபாதம் வண்மையாமே.

(இ-ள்) இங்கு கூறிய பஞ்சவர்ன ரேகையினது விருத்தாந்தமாகிய வாழ்க்கை முதலியவற்றையும், யோகத்தினது விவரங்களையும், திசையுண்டாகும் காலத்தையும், தனக்குண்டாகப் போகும் நன்மை தீமையையும், கெண்டாதி கெண்டங்களையும் வரிசையாய்ச் சொல்லி விட்டேன். இவை ஈஸ்வரியுரைத்த வாக்கிய மாதலால் இதனை பக்தியுடன் கேட்டோர்க்கு மோக்ஷமுண்டாகும். இதனாலே வானவர் தேவர் முனிவர் முதலாயினோர் மேற்சொன்ன உமாமயேஸ்வரியை வணங்கிக் கேட்டிருந்தனர் என அறிவாயாக எ-று. 31

அன்னரேகையின் பலன்

ஆகவே இன்னமும்தான் மைந்தாசொல்வேன்
ஆச்சரிய முள்ளதொரு ரேகைமைந்தா
ஆகவே அன்னத்தின் ரேகையுண்டு
அப்பனே சொல்லுகிறேன் அறியத்தானே
தாகவே பிரம்மவரை உள்ளடியில்மைந்தா
தகையான முக்கோணம் கீறுமுண்டாம்
ஏகவே இருபுள்ளி ரெண்டுரேகை
என்னசொல்வேன் மைந்தனிட இயல்புதானே.

(இ-ள்) கேட்பாய் மைந்தனே! இன்னும் அநேகவித ஆச்சர்யமான ரேகைகளினது விஷயங்கள் யாவும் கூறுகிறேன். ரேகைகள் பலவற்றுள் அன்னரேகை என்பது ஒன்றுண்டு. அதனது விருத்தாந்தங்களைக் கூறுவேன் கேட்பாயாக. மேற்படி ரேகையானது பிரம்மவரை என்னும் ஆள்காட்டி விரலின் கீழ்பாகத்தில் முக்கோண வடிவமாய் கீற்றுக் கீற்றாய் இருப்பதுடன் இரண்டு புள்ளிகளாயும் இரண்டு ரேகைகளாயும் அமர்ந்திருக்கும். அந்த ரேகையுள்ளவனது வாழ்க்கையைச் சொல்லுகிறேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) பிரம்மவரை என்பதைச் சிலர் கட்டை விரலென்றும், சிலர் ஆள்காட்டி விரலென்றும் கூறுவர். மேற்படி விரலுக்கும் உள்ளங்கைக்கும் உள்ள கணுவிடத்தில் முக்கோணக் கீற்று வடிவமாயும் மற்றும் இரண்டு கீற்றுமாய் இரண்டு புள்ளிகளாயும் இருப்பதே அன்னரேகையாகும். இதன் பலனைக் கீழ் வருவனவற்றால் அறிக. 32

தானடா இவனுக்கு யோகமெத்த
தருவான அன்னத்தின் பாலரேகை
வானடா இவன்பிறந்த மனையிலேதான்
வளமையில்லா வெறுமையால் மெலிந்தான்பாரு
ஊனடா இவன்பிறந்த பின்புமைந்தா
உற்றதொரு செல்வமுந்தான் உயர்ச்சிஆச்சு
பானடா பரமகுரு அருளாலேதான்
பாக்கியங்கள் வந்ததென்று பலிவாய்க்கூறே.

(இ-ள்) அன்னரேகையானது தனது அஸ்தத்தின்கண் அமைந்திருக்கப் பிறந்த ஜாதகன் மிக்க யோகமுடையவனாகவே இருப்பான். அவை

எக்காலத்தில் எனில்? இந்த ஜாதகன் பிதா செல்வமின்றிய வருத்தமும், வறுமை முதலியவற்றால் மெலிந்தவனாயினும், இந்த ஜாதகன் ஜனித்த பின்பு இவன் பிதாவுக்கு செல்வமுதலிய மேம்பாடும் பரமபுருஷராகிய சிவபிரானது கருணையால் பற்பலவிதமான பாக்கியங்கள் அனேகமாய் உண்டாயின என்று பெருமையாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்து என்னவெனில்? இந்த ஜாதகன் பிறந்த பிறகே விசேஷ செல்வமும், பற்பலவிதமான பாக்கியங்களும் உண்டாயினவென்றும், இந்த ஜாதகன் மிக்க யோகமுடையவனாக இருப்பான் என்பதும் கருத்தாகும்.

33

கூறிடவே இவன்பிறந்த வாரம்தானும்
கூர்மையாய்ச் சொல்லுகிறேன் சனிவாரம்தான்
பாறிடவே பகல்வேளை உச்சிதன்னில்
பண்பான துதிகையுடன் சித்திரை ஆகும்
ஊறிடவே உட்கருத்து உள்ளபாலன்
உற்றதொரு விசாகநாள் ரெண்டாங்காலில்
வாறிடவே மைந்தன்தான் ஓர்மனையில்மைந்தா
மண்பார்த்துப் பிறந்ததிவன் ஐயமின்றே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த காலத்தைக் கூறுவேன் கேட்பீராகவும். எப்படியெனில்? இவன் பிறந்த வாரமானது சனிவாரம் என்றும், பகற்காலத்தில் உச்சிவேளையில் எவரும் மகிழத்தக்க துதிகை திதியும், சித்திரை மாதமும் கூடியநாளில் பிறந்தவனாகும். இதுவன்றி, விசாக நக்ஷத்திரம் இரண்டாம் பாதமெனவும், இவன் பிறந்த மனையானது தனித்த மனை எனவும், பிறக்கும்போது பூமியைப் பார்த்துப் பிறந்தான் எனவும், எவ்விஷயத்தையும் வெளிவிடாத உட்கருத்துள்ளவன் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் சித்திரை மாதத்தில் சனிவாரமும், துதிகைதிதி கூடியநாளில் பகல் உச்சிவேளையில் பிறந்தான் என்று கூறியுள்ளார். பூமியைப் பார்த்துப் பிறந்தான் என்றது சிரோதயமாய் ஜனித்தான் எனக்கொள்க. உட்கருத்துள்ளவன் என்றதால் கபடன் என்றுங் கூறலாம்.

34

ஐயம்இல்லாமல் இவன் பிறந்தான்ஐயா
ஆச்சரியம் லக்கினத்தில் வியாழம்சுக்கிரன்
வையகத்திற் பணங்களைத்தான் மிகவேதேடும்
மண்ணுலகில் வேளாண்மை மிகுதிசெய்வான்
பையஇவன் பிரபலங்கள் ஆவான்பாரு
பார்வதியாள் கடாட்சத்தால் பாக்கியம்சேரும்
உய்யவுமே உறமுறைதான் மெத்தவுண்டு
உண்மையாக இப்பலன் நடக்குந்தானே.

(இ-ள்) இந்த ஜாதகனது பிறவிகால கிரக லக்ஷணங்களைக் கூறுகையில் ஜென்ம லக்கினத்தில் வியாழனும் சுக்கிரனுமாகும். இதுவன்றி, பிறந்த

காலம் எவ்வித கஷ்டமுமின்றிப் பிறந்தான் எனவும், இப்பூமியின்கண் அநேக தனங்களைச் சம்பாதிக்கத் தகுந்தவனும், வேளாண்மை என்னும் பயிர்த்தொழில் செய்ய வல்லவனும், இவனது வாழ்நாட்களில் மிக்க பிரபல முடையவனுகி ஸ்ரீ பார்வதாதேவியினது கருணையால் சகல பாக்கியங்களும் உடையவனுகவும், அநேக உறவின் முறையினரை உடையவனும் ஆவான் என உண்மையாயும், உறுதியாயும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இலக்கினத்தில் குருவும்-சுக்கிரனும் ஆவன் என்று கூறி மற்றைய கிரகங்களைக் கூருமையால் இதனை அவரவர்களுடைய வருடம்' மாதம் முதலியவற்ருல் அறிக. 'ஐயம் இல்லாமல் இவன் பிறந்தான், என்றதால், பிரசவகாலம் எவ்வித கஷ்டமும் இன்றிப் பிறந்தான் என்பது கருத்து. 35

உறுதியாய் இவன்வயதோ ரைந்திலேதான்
உற்றதோ ரிவன்தானும் தோளில்அப்பா
பருகியாய் கிழங்குகளை மிகவேதோண்டிப்
பக்குவமாய் நிதியொன்று எடுப்பான்பாரு
சிறுதியா யிருந்தவொரு வாழ்க்கைதானும்
சிற்பரத்தின் பெருமைபெற்று வாழ்ந்தார்பாரு
கருதியா யிளையவளுங் கருணைகூர்ந்து
கடாட்சித்தா ளிவனுக்குக் கருணைதானே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த ஐந்தாவது ஆண்டில் கொல்லைப்புறத்தில் கிழங்கு முதலியவற்றைத் தோண்டிக்கொண்டிருக்கையில் மேன்மையைப் படைத்த புதையல் பொருள் ஒன்று கண்டெடுப்பான் எனவும், மிக்க கேவலமாயிருந்த இவனது வாழ்க்கையானது ஸ்ரீ சிவபிரானது கிருபையால் மிக்க பெருமையுடன் வாழ்வார் என்றும், இளையாளாகிய ஸ்ரீ லக்ஷிமி தேவியும் இவனுக்குக் கருணைகூர்ந்தாள் எனத் திண்ணமாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இவை இவனது யோகமுண்டாகும் வயதைக் குறித்ததாகும். அவையாவன: இவன் வயது 5-ல் கண்டெடுத்த புதையலால் வறுமையாய் இருந்த இவன் குடும்பம் லக்ஷிமிவிலாசம் பெற்றுவாழும் என்றும், சிவபிரான் கிருபையும் உண்டாகுமென்பது கருத்து. 36

கருணையடா விவனுக்கு வயதோமைந்தா
கடாட்சித்த வாண்டெழுபத் தைந்தாகும்
வருணையடா விவனுடனே பிறந்தார்மூவர்
வண்மையுள்ள மக்களென்று வரிசைகூறு
தருணையடா தங்கையொன்று பிறப்பாள்மைந்தா
தாழ்வில்லாத் தாய்தந்தை வைத்துவாழ்வான்
கருணையடா சற்சனனுய் வேதம்பார்ப்பான்
சற்குருவாம் சிவபூசை செய்வானன்றே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்குக் கடவுளின் கிருபா நோக்கத்தால் உண்டாகிய வயது 75-ஆகும் எனவும், இவனுடன் பிறந்த சகோதரர்கள் மூவர் எனவும், தங்கை என்னும் பெண்சகோதரி ஒருவள் எனவும், கூறலுடன் இவனது தாய் தந்தையர்களை வெகுவாய் போஷித்து வாழத் தகுந்தவனும், மிக்க நற்குணமும் சற்குணமும் பொருந்தியவனுகி பலவிதமான வேதங்களை ஆராய்வதுடன் எல்லோர்க்கும் சற்குருவும் நற்குருவுமாகிய சிவபிரானை என்னளும் பூஜை செய்யத் தகுந்தவனுகவும் இருப்பான் எனக் கூறுவா யாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவனுடன் பிறந்த சகோதரர் மூவர் என்றும், சகோதரி ஒருத்தி என்றும், கூறியதுடன் சிவபிரானை தவராது பூஜை செய்யத் தகுந்தவன் எனவுங் கூறியுள்ளனர். கீழ்வரும் செய்யுளால் கெண்டாதி கெண்டங்களை யறிக. 37

அன்றெனவே யிவனுக்குக் கண்டம்நாலு
அற்பமாய்த் தீருமடா ஆய்ந்துபாரு
நன்றெனவே யிவனுக்கு நீராலொனறு
நலமில்லாச் சத்துருக்கள் வாதைவொன்று
குன்றெனவே அக்கரமாய் முப்பதாமாண்டு
கூர்மையாங் கடியதனுற் கண்டமொன்று
வன்றெனவே யிவன்வயதோ ரெழுபத்தாறில்
வரிசையாஞ் சக்கரத்தின் வண்மைதானே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்குண்டாகும் கெண்டாதி கெண்டங்கள் நான்கு என்று வேண்டுவதாயினும், அவை எவ்வித சிரமமும் இன்றிச் சுலபமாய் நீங்கும் எனவும், அவையாவன ஜலத்தால் ஒருகெண்டமும் துன்பத்தைத் தரும் சத்துருக்கள் உபாதியால் ஒரு கெண்டமும், 30-ஆம் வயதில் அக்கிரமத்தையுடைய கூரிய விழியையுடைய சர்ப்பக்கடியால் ஓர் கெண்டமும் உண்டாயினும் இவனது அஸ்தத்திலுள்ள ரேகையினது இலக்ஷணத்தால் வயது 76-ல் பரமபதம் அடைவான் எ-று.

(வி-ரை) கெண்டாதி கெண்டங்கள் பல வுண்டாயினும் அவை யாவும் நீங்கி 76-ல் பூரணகெண்டம் உண்டாகும் எனவும், இவைய பிரமனின் விதி என்பதும் இச்செய்யுளின் கருத்தாகும். 38

தானடா இவன்தானும் பிறந்தவாழ்க்கை
தகமைசொல்லி விட்டேன்காண் தாழ்வில்லாமல்
ஊனடா திசையோகம் வாழ்க்கைகண்டம்
உத்தமர்க்குச் சொல்லிவிட்டேன் வுண்மையாக
வானடா வயசுமுதல் தப்பாதெல்லாம்
வாகான இதன்விபரம் வகுத்துச் சொன்னேன்
ஏனடா இன்னமுண்டு மைந்தாகேளு
எடுத்துரைப்பேன் பிரமமதை இயைந்துகேளே.

(இ-ள்) அன்னரேகையிற்பிறந்த ஜாதகனது வாழ்க்கை யோகம்-திசை-சுகம்-கெண்டாதி கெண்டம் முதலியனவற்றையும் இந்த ஜாதகனுக்கு மொத்த வயது எவ்வளவு என்பதையும், தாழ்வின்றி எல்லா விஷயங்களையும், உண்மையாய்க் கூறிவிட்டேன். இன்னும் பிரமதேவனால் உண்டாக்கிய விதி பலவுண்டு. அதனையும் சொல்லுகிறேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இதுவரையில் அன்னரேகையில் பிறந்தவர்களுக்குச் சொல்லிய 7-செய்யுட்களாலும் அவரவர்களது வாழ்வினது விஷயமும், கெண்டாதி கெண்டமும், வயது எவ்வளவு என்பதையும், கூறியுள்ளாராயினும் இன்னும் பல விஷயங்கள் உண்டு. அதனையும் கூறுவேன் எனக் கூற லாயினார். 39

கேட்கவே நந்தீசர் பிரமாவோடு
கேவலமாய் கும்பமுனி ரிஷிகளெல்லாம்
வாட்கவே வானோர்கள் முனிவரெல்லாம்
வண்மையாய்க் கேளுங்கள் வரிசையாக
நாட்கவே லோகத்தில் நடக்கும்வாழ்வு
நான்சொன்னபடி யதுபோல் நடக்கும்வாழ்வு
ஆட்கவே அனைவோரும் சந்தோஷித்து
அன்பான மனோன்மணியைத் தொழுதபோதே.

(இ-ள்) எவரும் அன்புடன் கொண்டாடத் தகுந்த பராசத்தியென்னும் ஈஸ்வரியானவள், தன்னை இடைவிடாது தொழுது நின்று கேட்கும் நந்தி தேவரையும், பிரம்மனையும், அகத்தியர் முதலிய ரிஷிகளையும் அநேக முனிவர்களையும் பார்த்து, ஓரிஷிகளே! முனிவர்களே! தேவர்களே! கவனமாய்க் கேளுங்கள். இப்பூமியிற் பிறந்த மானிடர்களின் வாழ்வானது இதுவரையில் சொல்லி வந்ததைப்போல் நடக்குமல்லாமல் வேறில்லை. என்றவுடன் எல்லோரும் சந்தோஷித்து ஈஸ்வரியைத் தொழுது நின்றனர் எ-று.

(வி-ரை) இவை இந்நூலுண்டாகிய காரணமாகும், எப்படியெனில்? ஈஸ்வரியானவர் மேற்கூறிய ரிஷிகள் முனிவர்கள் தேவர்கள் முதலியோருக்கு இந்த ரேகையினது மர்மங்களையும் ரகஸ்யங்களையும் கூறுவாராயினர். 40

சங்குபாலி ரேகையின் பலன்

போதென்று இவர்களெல்லாம் போற்றிக்கொள்ள
புதுமையுள்ள உமையவளும் பெருமைசொல்வாள்
ஆதென்ற அஷ்டகன்மம் எட்டுரேகை
அன்பான திசைபால ரேகைமைந்தா
தானென்ற சங்கினுட பாலியென்பார்
தருவான ரேகையிட மார்க்கங்கேளு
காதென்ற காட்சியடா ஏகசூட்சம்
கருதுகிறேன் இதன்விபரம் காட்சிகேளே.

(இ-ள்) உலக மாதாவாகிய உமாதேவியைப் பணிந்துநிற்கும் ரிஷிகளையும், தேவர்களையும், முனிவர் முதலாயினோரைப் பார்த்து மேற்படி

உமாதேவியானவள் ஓ முனிவர்களே! ரிஷிகளே! தேவர்களே! கேளுங்கள். எட்டு கன்மரேகை என்பது ஒன்றுண்டு. அவை திசையைத்தர குமரன் போன்றதாகும். அதனை சங்குபாலி ரேகை என்று கூறுவர். இந்த ரேகையானது அனைவரும் கண்டுகளிக்கத்தக்கதும், சூக்ஷமமானதுமாகும். ஆனதால் இதன் விவரங்களைக் கூறுவேன் கேட்பீராக எ-று.

(வி-ரை) சங்குபாலிரேகை என்பது எட்டு ரேகைகளாயிருக்கும். ஆதலால் இச்செய்யுள் முதலில் அஷ்டகன்மம் என்றனர். இதன் விவரம் பின்வரும் செய்யுளில் காண்க. 41

கேளடா இவன்கையிலே மால்விரல்தன்னில்
கேவலமாய் எட்டுப்புள்ளி ரெண்டுரேகை
ஆளடா இருகீற்றும் ஐந்துகீற்றும்
அன்பாக இருக்கும்அதின் அருமைகேளு
வாளடா இவன்கையிலே இருக்குமாகில்
வண்மையுள்ள வரிசைகளைக் கண்டுசொல்லு
பாழடா ஒன்றுமில்லை இவன்யோகம்மைந்தா
பக்குவமாய் திசையோகம் சொல்லுவேனே.

(இ-ள்) ஓ முனிவர்களே! கவனமாய்க் கேளுங்கள். மேற்சொன்ன சங்குபாலிரேகை என்பது மால்விரல் என்னும் நடுவிரலில் எட்டு சிறு புள்ளிகளாய் இரண்டு ரேகையும் அடுத்தடுத்து இரண்டு கீற்று ரேகை ஓர் இடத்திலும், 5-கீற்று ரேகை ஓர் இடத்திலுமாக நிற்கும். இவ்வாறான ரேகையானது அமைந்திருக்குமாகில் அவனுக்கு எவ்வித குறைவுமில்லை. ஆதலால், இந்த ஜாதகனது திசை யோகம் முதலிய பலாபலன்களை வரிசையாய் கூறுவேன் கவனமாய்க் கேளுங்கள் எ-று.

(வி-ரை) மேற்படி ரேகையானது இரண்டு இடத்தில் 8-புள்ளிகளாயும், இரண்டு கீற்று ஓரிடத்திலும், ஐந்துகீற்று ஓர் இடத்திலும் இருக்குமென்பதாகும். இந்த ரேகையுள்ளவர்களது பலாபலன்களைக் கீழ்கண்டவாறு அறிக. 42

சொல்லுவேன் இவன்பிறந்த யோகமைந்தா
சொற்பெரிய பதினாறு பிள்ளையாகும்
அல்லுவேன் இவன் பதினாறுபிள்ளை
அன்பாகப் பெற்றிவன்தான் வாழ்வானப்பா
நல்லுவேன் இவனுடனே பிறந்தோராறு
நலமான வீட்டிலேதான் பாக்கியமுண்டாம்
வெல்லுவேன் வில்தொழிலும் வினோதவித்தை
விசிதமுள்ள திசையோக மாகும்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த யோக முதலியவற்றைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இவனுக்குச் ஜெனிக்கும் பிள்ளைகள் 16 எனப்படும். மேற்சொன்ன 16-பிள்ளைகளையும் மிக்கப் பெருமையுடன் பெற்று வாழ்ந்திருந்தவனாகும். இதுவன்றி, இவனுடன் பிறந்த சகோதர சகோ

தரிகள் 6-எனப்படும். இவனில்லத்தில் எல்லாவித பாக்கியங்களும் பொருந்தி இருக்குமெனவும், இன்னும் வில்வித்தை, விநோத வித்தை என்னும் அபூர்வ வித்தைகளையும் அறிந்தவனாகி எவரும் கண்டு மகிழத்தகுந்த வாழ்வுடன் வாழ்வான் எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனுக்கு புத்திரவர்க்கம் 16-என்றும், சகோதர வர்க்கம் 6-என்றும் கூறினரே ஒழிய, ஆண் பெண் விவரத்தையும், மரணம் இருப்பு முதலியவற்றையும் கூறவில்லை. ஆதலால் இதனை அவரவர்களது கிரக ஆராய்ச்சியால் அறிந்துகொள்க.

43

ஆகுமடா இவன்பிறந்த நாளுங்கோளும்
அன்பான திசையோகம் ஆய்ந்துசொல்வேன்
வாகுமடா திசையுட னவிட்டம் தன்னில்
வரிசையாய் வியாழமதில் வனிதனுன
வாகுமடா திசைகன்மம் யோகவாழ்க்கை
மைந்தனே சொல்லுகிறேன் வண்மையாக
வேகுமடா வறுமைமுத விடர்களெல்லாம்
வேதாந்த நல்லறிவு விளங்குங்கேளே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த வாரம், நக்ஷத்திரம், கிரகவரிசை முதலியவற்றைக் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இவன் வியாழக் கிழமையும், அவிட்ட நக்ஷத்திரமும், துதிகை திதியும் கூடிய சுபதினத்தில் பிறந்தவனுனதால், இந்த ஜாதகனது வருமவினை முதலிய யோக வாழ்க்கை முதலியனவற்றைக் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகன் பிறந்தவுடன் இவனது வறுமையாவும் நீங்கி, துன்பம் கழிந்து சுகித்திருப்பதுடன் வேத ஆராய்ச்சியும், நல்லறிவும் விளங்குமெனக் கூறுக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் பிறந்தது வியாழமும், அவிட்டமும், துதிகையும் கூடிய நாளில் பிறந்தான் என்று கூறியதுடன், இவன் பிறந்தபோதே சகல துன்பமும் நீங்கின என்பது கவனிக்கத்தக்கது.

44

கேளப்பா அஷ்டதிக்கு ரேகைகண்டால்
கேவலமாய் இவனுக்கு லக்கினத்தில்
வாளப்பா இவனுக்குக் கிரகம்நாலு
வண்மையாய் உச்சமுண்டு வரிசைசொல்வேன்
நாளப்பா இவனுக்குத் தேவிஒன்று
நலமாக முப்பத்தி ரண்டிலேதான்
ஆளப்பா யிவன்வயதோ ரெண்பத்தைந்தில்
அன்பான சக்கரத்தின் அமைப்புகேளே.

(இ-ள்) அஷ்டதிக்கு ரேகை என்பது இவன் கையில் இருக்குமே யாமாகுல், இந்த ஜாதகனது கிரக வரிசைகளைக் கூறுமிடத்து இவன் ஜனனப்படி நான்கு கிரகங்கள் உச்சமாயிருக்குமென நிச்சயமாய்க் கூறுவா யாக. இதுவன்றி, களத்திர விஷயமாய் கூறுமிடத்து களத்திரம் ஒன்று

எனவும், அவை தன் வயது 32-ல் நடக்குமெனவும், இந்த ஜாதகனது அஸ்தத்திலுள்ள கைரேகையினது அமைப்பின்படி வயது 85-எனவும் நிச்சயமாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் அஷ்டகோணரேகை என்பது இருக்குமேயாயின், அந்த ஜாதகனுக்குக் களத்திரம் ஒன்றெனவும், அவை 32-ஆம் வயதில் நடக்குமெனவும், வயது 85-எனவும் கூறியுள்ளார். இன்னும் இவனது யோக விவரங்களைக் கீழ்வருவனவற்றால் காண்க. 45

கேளெனவே இவனுக்குத் திசைகேசரியோகம்
கேவலமாய்ச் சகடையது நடக்கும்பாரு
நாளெனவே நாயகனு மனேகமான
நலமான பூமிகள்தான் கொள்வான்பாரு
வாளெனவே வர்னமுள்ள ரூபனாகும்
வஞ்சனைகள் கொலைகளவு இல்லைமைந்தா
தாளெனவே தாழ்ச்சியில்லா மைந்தனுக்குத்
தைரியவான் இவன்யோக தாஷ்டிகனென்னே.

(இ-ள்) இந்த ஜாதகன் தனது வாழ்நாட்களில் கேசரியோகம் என்பதையும், சகடையோகம் என்பதையும் அனுபவிப்பான் எனவும், பின்னும் அநேகமான பூமி முதலியனவற்றை வாங்கி சுகித்திருப்பான் எனவும், நல்ல மேன்மையான அழகிய ரூபலாவண்யம் உடையவனாயும், வஞ்சனை செய்யாதவனாகவும், கொலை களவு முதலியன செய்யமாட்டாதவனாகவும், எக்காலமும் தாழ்ச்சியடையப்படாத வாழ்வுடன் தைரியமுடையவனாகவும் வாழ்வான் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) கேசரியோகம் என்பது பிரபல யோகமாயினும், சகடையோகம் என்பது சிலகாலம் அளவிட முடியாத துன்பமும், சிலகாலம் அளவிட முடியாத மேன்மையான யோகமும் தரும் என்பது கருத்தாகும். 46

தாட்டிகனும் மயேந்திரத்தில் முக்கால் உண்டாம்
தைரியவான் இவனுக்கு நிகரோ இல்லை
ஆட்டிவைப்பான் லோகமெல்லாம் இவன்சொல்கேட்கும்
அண்டரண்ட புவனமெல்லாம் அடக்கும்வள்ளல்
நாட்டிவைப்பான் நாயகனு மீசன்தன்னை
நன்மைபெறப் பிரதிஷ்டை பண்ணுவிப்பான்
வாட்டமில்லா யோகமடா வண்மையாக
வரிசையாய்ச் சொல்லிவிட்டேன் வண்மைகேளே.

(இ-ள்) இங்குகூறிய சங்குபாலிரேகையில் பிறந்தவன் மிக்க தாட்டீகமுடையவனாகவும், முன்கூறிய மயேந்திர ரேகையில் பிறந்தவனது யோகத்தில் முக்கால் வரிசை யோகமுடையவனாகும். தனக்கு எவரையும் நிகர் சொல்லப்படமாட்டாத தைரியவானும், இவ்வுலகெங்கையும் ஆட்டிவைக்கத் தக்கவனும், இவ்வுலகமெங்கும் இவனது பெருமை விளங்கத்தக்கவனும், அண்டரண்ட புவனத்தவரையும் அடக்கியாளத்தகுந்த பெருமை வாய்ந்த

வனும், ஈசன் முதலிய சிவஸ்தலப் பிரதிட்டை செய்யத் தகுந்தவனும், எந்நாளும் தாழ்ச்சி யடையப்படமாட்டாத யோகமுடையவனும் ஆவான் என மேற்படி சங்குபாலி ரேகையில் பிறந்தவனுக்குக் கூறுவாயாக எ-று. 47

### ஐவிந்த ரேகையின் பலன்

கேளடா இன்னம் ஒரு ரேகை உண்டு
கேவலமாய்ச் சொல்லுகிறேன் கேளுகேளு
ஆளடா ஐவிந்தம் ரேகை ஒன்று
அப்பனே சொல்லுகிறேன் அறிவாய்க்கேளு
நாளடா நடுவரையில் ரெண்டுபுள்ளி
நலமாகு முக்கவரின் நலினமாங்கேள்
தாளடா தாழ்வில்லா யோகவானும்
தர்ச்சினனும் பெருமைபெற்று வாழ்வான்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இதுவரையில் கூறிவந்த ரேகைகளுள் இன்னுமொரு ரேகையுண்டு அதனது விவரங்களைக் கூறுவேன். அவை யாவன: ஐவிந்தரேகை எனப்படும். அந்த ரேகையினது விவரம் கூறுவேன் கவனமாய்க் கேட்பாயாக. மேற்படி ரேகையானது தனது அஸ்தத்திலுள்ள நடுவிரலில் இரண்டுபுள்ளிகளாயும், முக்கோண வடிவமுள்ளதாயும் இருக்கும். இவ்வாறு ரேகையானது உடையவன் எந்நாளும் தாழ்ச்சி யடையப்பட மாட்டாத யோகமுடையவனும், தனமுடையவனும், மிக்க பெருமையுடன் வாழத்தகுந்தவனும் ஆவான் எனக் கூறுவாயாக எ-று

(வி-ரை) மேற்படி ரேகையானது நடுவிரலில் முக்கோண வடிவமாய் ஒன்று இரண்டு புள்ளிகளாயுங் காணப்படும் என்பது கருத்து. மற்றும், தாழ்வில்லா யோகவான் என்றதைப் பின் வருவனவற்றால் காண்க. 48

பார்க்கவே இவன்தானும் மூன்றும் பேராம்
பக்குவமாம் சொல்வதென்ன பரிந்துகேளு
ஏர்க்கவே ஆணிவனும் பெண்ணேரெண்டு
இயல்பாகப் பிறந்ததின்பின் னிவன்பிறந்தான்
வார்க்கவே இவன்பிறந்த பின்புமைந்தா
வண்மையாம் வறுமையெல்லாம் போச்சுதன்றே
கார்க்கவே தேவியிடக் கடாட்சத்தாலே
கருதுதுவாதசி மதியாம் வாரம்தானே.

(இ-ள்) இந்த ஜாதகன் மூன்றும் பிறவியாதலால் இதன் விவரம் சொல்லுவேன் கேட்பாய். எப்படியெனில்? இவனுக்கு முன் இரண்டு பெண்ணும், இந்த ஜாதகன் மூன்றும் பிறவியும், ஆண் எனவும் கூறவேண்டுவதுடன் இந்த ஜாதகன் பிறந்த பின்பே தனது குடும்பத்திலுள்ள வறுமை நீங்கி சுகப்பட்டான் எனவும், இவனை ஸ்ரீ சக்திதேவி கடாக்ஷிப்பாள் எனவும், இவன் பிறந்தது மதிவாரம் என்னும் திங்கள் எனவும், துவாதசிதிதி எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனுக்கு முன் 2-பெண்கள் பிறந்தபின் இவன் மூன்றும் பிறவியாகி ஆணாய்ப் பிறந்தான் எனவும், திங்கட்கிழமையும் துவாதசி திதியுங் கூடியநாளில் பிறந்தான் என்றனர். மற்றும் விவரங் கீழ் வரும் செய்யுளால் காணலாம். 49

வாரம் என்றபுனர்பூசம் ரெண்டாங்காலாம்
வண்மையாய்ப் பிறந்ததிவன் மாநிலத்தில்
தாரம் என்ற இவனுக்கு ரெண்டு தாரம்
தன்மையாய் முடியுமென்று தகைமைசொல்வேன்
பாரம்என்ற இவன்வயதோ ரிருபதுக்குள்
பண்பான விவாகமது ஆகும்பாரு
சாரம்என்ற இவன்வயது நாற்பத்தாறு
சற்குணனும் இறந்திடுவான் சார்புதானே.

(இ-ள்) மேற்சொன்ன திங்கட்கிழமை கூடிய நாளில் புனர்பூசம் 2 ஆம் பாதத்தில் இப்பாலகன் ஜனித்தான் எனவும், இந்த ஜாதகனுக்கு மனைவிமார் 2-என்றும், அவை மிக்க சிலாக்கியமானதாகவே முடியும் எனவும், இந்த ஜாதகன் வயது 20-க்குள்ளேயே விவாகமானது முடியும் எனவும், சற்குணம் பொருந்திய இந்த ஜாதகனது வயது 46-ல் இறந்துபோவான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இவ்விரண்டு செய்யுளாலும், திங்கட்கிழமையும் புனர்பூசம் 2-ஆம் பாதமும், துவாதசிதிதியும் கூடியநாளில் பிறந்தான் எனவும், மனைவி 2-எனவும், வயது 46-என்றும் முடிவாய்க் கூறியுள்ளனர். மற்றும் யோகங் களைப் பிரமாதமாகவே கூறியுள்ளனர். மற்றும் விவரம் வருமாறு. 50

தானென்ற இவனுக்குக் குழந்தை மூன்றும்
சற்குணமாய்ப் பிறக்கும்என்பர் சான்றோர்தாமும்
வானென்ற இல்லறத்தில் அனேக பாக்கியம்
வண்மையாய் உண்டாகும் வரிசைகேளு
ஆனென்ற ஐங்கரனர் உதவியாலே
ஆனந்த யோகமடா அப்பாகேளு
ஊனென்ற உட்கருத்து மிகவேஉண்டாம்
உண்மையாய்ச் சொல்லிவிட்டேன் உறுதிதானே.

(இ-ள்) ஐவிந்தரேகை என்பது தன் கையில் அமையப்பிறந்த இந்த ஜாதகனுக்குப் புத்திர வர்க்கங்கள்-3, மிக்க சற்குணமுடையவர்களாய்ப் பிறப்பார்கள் என்று கூறவேண்டுவதாகும். இவன் இல்லத்தின்கண் அநேக விதமான பாக்கியம் முதலியன மேன்மைப்பட உண்டாகும் என்றும், ஸ்ரீவிநாயகமூர்த்தியினது கிருபையால் ஆனந்தமடையத் தகுந்த யோகமும் பலவித உட்கருத்தும் ஆராய்ச்சியும், உடையவன் ஆவான் என மேற்படி ரேகையில் பிறந்தவர்களுக்குக் கூறுவாயாக. இவையாவும் உண்மையும் உறுதியும் ஆகும் எ-று. 51

### கடோர்க்கயன் ரேகையின் பலன்

உறுதியப்பா இன்னம் ஒரு ரேகைமைந்தா
உண்மையாய்ச் சொல்லுகிறேன் உறுதிகேளு
பருதிமதி யுள்ளளவுங் கீர்த்தியோகம்
பார்த்திபனு மேலவர்கள் பணிந்துநிற்பார்
பருதியென்ற கடோற்கயன் தன் ரேகையைத்தான்
பாவகமாய்ச் சொல்லுகிறேன் பண்பாய்மைந்தா
திருதியென்ற சுண்டுவிரற் கீழேமைந்தா
திரமாக இருக்குமடா செப்பக்கேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இன்னம் ஒரு ரேகையுண்டு, அதனது உண்மைப் பலன்களைக் கூறுவேன் கேட்பீராக. இதனை கேட்டுத் தெரிந்து கொள்வீர்களானால், இந்த சூரிய சந்திரர் உள்ளவரையில் உங்களுக்கு பிரபல கீர்த்தியுண்டாவதுடன் அனேக அரசர்கள் உன்னைப் பணிவார். ஆனதால் கடோர்கய ரேகையுடன் பிறந்த ஜாதகனது வருவினைப் பயன்களை விளக்கு வேன் கேட்பீராகவும். மேற்படி கடோற்கயரேகை என்பது சுண்டு விரலின் கீழிருக்கு மாதலால் அதன் விவரங்களைக் கூறுவேன் கேட்பீராக எ-று.

(வி-ரை) ஸ்ரீ அம்பாள், இந்த ரேகை சாஸ்திரத்தை, முனிவர் தேவர் ரிஷிகள் முதலியோருக் குபதேசிப்பதாலும், இந்த ரேகை சாஸ்திரத்தை யறிந்தவர்கள் எல்லா அரசர்களாலும், போற்றத் தகுந்தவனும், இவ்வுல கெங்கணும் பிரசித்தியாய்ப் பேசத் தகுந்தவனும் ஆவான் எனப் பெருமை யாய்க் கூறியுள்ளதாகும். மற்றும் இந்த ரேகையானது சுண்டு விரலின் கீழ் இருக்கும் என்றனர். விவரம் பின் வருமாறு. 52

கேட்கவே இருபுள்ளி இரண்டுகீறு
கேவலமாய் விரல்தனிலே ஏறிநிற்கும்
ஆர்க்கவே கடோற்கயன் தான் இருந்துதானல்
அன்பாகச் சொல்லுகிறேன் ஆய்ந்துதானே
வார்க்கவே யிவன்பிறந்த யோகவாழ்க்கை
வண்மையாய்ச் சொல்லுகிறேன் வரிசையாக
ஏர்க்கவே, ஏகாதசி இயன்றநாளில்
என்னவே அஸ்தம்என்ற இயல்பதாமே.

(இ-ள்) மேலே சொன்ன கடோர்க்கயன் ரேகை என்பது மேற்படி சுண்டுவிரலின்மேல் சிறுகோடுகளாய் மேற்சொன்ன சுண்டுவிரலின் கீழ் பாகத்திலிருந்து மேல்நோக்கிச் செல்லும் தன்மையுடையதாகும். இவ்வா றுடைய கடோர்க்கயன் ரேகை என்பது அமைந்திருக்குமே யாமானல், இவன் பிறந்த யோகத்தின் அளவையும், வாழ்க்கை விசேஷங்களையும் உண்மையாயும் வரிசையாயும் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகன் பிறந்தது ஏகாதசியும், அஸ்த நக்ஷத்திரமும் கூடியநாளில் பிறந்தான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) மேற்படி ரேகையானது அமைந்திருக்கும் அளவை முன் சொன்ன 52-ஆம் செய்யுளில் சுண்டு விரலின்கீழ் உள்ளதெனக் கூறி முடித்து இங்கு இருகீற்றாய் ஏறி சுண்டுவிரலில் செல்லும் என்றமையால், மேற்படி ரேகையானது சுண்டுவிரலின் கீழ்பாகத்திலிருந்து இரண்டு கீற்றுகளாய் மேற்படி சுண்டுவிரலில் ஏறிச்செல்லும் என்பது கருத்தாகும். மற்றும் ஏகாதசியும், அஸ்தமும் கூடியநாளில் பிறந்தான் என்றதால மற்றுமுள்ள விஷயங்களைப் பின் வருவனவற்றால் காண்க. 53

தாகவே இவன்பிறந்தான் செவ்வாய்தன்னில்
 தகமையுள்ள மைந்தனுக்குச் சார்புகேளு
ஏகவே யிவன்பிறந்த திரவேயாகும்
 ஏற்றமுள்ள நாழிகையோ இருபத்தைந்தாம்
வாகவே வர்னிப்பு உள்ளமைந்தன்
 மன்மதன்போல் அழகனடா வரிசைகாணில்
காகவே யிவன்பிறந்த ஐந்தாமாதம்
 கருணையாம் பிதுருதனம் எடுப்பான்றானே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த வாரமானது செவ்வாய்க்கிழமை எனவும், இரவு 25-நாழிகை நேரத்திலும் பிறந்தவனானதால், இம்மைந்தனுடைய வாழ்வு விசேஷங்களைக் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகன் அனைவராலும் பெருமையாய்ப்பேசத் தகுந்தவனாகும். இதுவன்றி, மன்மதனைப்போன்ற அழகுடையவன் எனவும், இந்த ஜாதகன் பிறந்த ஐந்தாம் மாதம் இவன் பிதா தனம் முதலியன கண்டெடுப்பான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) முன் சொல்லிய 53-ஆம் செய்யுளில் ஏகாதசியும், அஸ்தமும் கூடியநாளில் பிறந்தான் என்றும், இச்செய்யுளில் செவ்வாய்க்கிழமை இரவில் 25-நாழிகையில் பிறந்தான் எனவுங் கூறியதை அறிக. மற்றும் இங்கு கூறிய பொதுப்பலனில் பிதுரு தனம் எடுப்பான் என்றதை எவ்வாறு எடுப்பான் என்பதையுங் காண்க. 54

எடுத்திடவே இவன்பிதா வழியிற்போகும்
 ஏற்றமுள்ள விருட்சமொன்று அடியோடுவீழ
கடுத்திடவே மரவேறிற் கிளம்பிமேலே
 கனமாக நிதியொன்று கண்டுமைந்தன்
மடுத்திடவே மரவேரிற் கிளம்பிமேலே
 வண்மையாய் மனையில்வந்து பெரியோனானன்
இடுக்கமில்லா மனையிலவன் வாழ்வான்பாரு
 இயல்பான மைந்தனுக்கு இனஞ்சொல்வேனே.

(இ-ள்) (மேற்சொல்லிய வண்ணம்) பிதா எவ்வாறு தனம் கண்டெடுப்பானெனில்? தன் பிதாவின் மனையும், வழிப்பாதையிலுமுள்ள மரமானது வேருடன் அடியோடு கீழே வீழ்ந்தமையாலும், அவ்வேரின் அடிப்புறத்திலுள்ள புதையல் தனமானது மேலே கிளம்பிற்று. மேற்படி புதையல்

பொருளை இந்த ஜாதகனின் பிதாவானவன் கண்டு எடுத்து தன் மனையிற் கொண்டுவந்த பிறகே பணக்காரன் ஆயினன். அதுமுதல் தன் மனையில் ஏதொருவிதமான துன்பமும் இல்லாதவனுகி வாழ்வான். இன்னும் இந்த ஜாதகனது விஷயங்களைக் கூறுவேன் கேட்பாயாக எ-று. 55

சொல்லுவேன் யிவனுக்குத் தாரமொன்று
சொற்பெரிய யிவன்வயதோ ரெழுபத்திரெண்டாம்
அல்லுவேன் இவனுக்குப் பாலரைவர்
அன்பாகப் பிறக்குமென்றே அறிந்துகேளு
நல்லுவேன் யிவனுக்கு முன்னோர்சாபம்
நலமாகச் சாபமதிற் பட்டான்மைந்தன்
எல்லுவேன் யிவன்சாபம் பொல்லாச்சாபம்
இயல்பாகத் தீர்க்கவென்று இனிதுகூறே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்கு மனைவி என்னும் பெண்சாதியானவள் ஒன்றே தீர்க்கம் எனவும், சொல்லுதற்கரிய இந்த ஜாதகனுக்கு வயது-72 எனவும், இதுவன்றி இவனுக்குப் புத்திரவர்க்கங்கள் 5-பேர் மிக்க அருமையாய்ப் பிறப்பார் எனவும் கூறுவதுடன் இந்த ஜாதகனுக்கு இவன் முன்னோரால் கொடிய சாபமுண்டாயின வெனறும், அவை மகா பிரமாதமாகிய சாபம் எனவும் கூறவேண்டுவதால் மேற்படி சாபத்தை நிவர்த்தி செய்துக் கொள்ளவேண்டுமெனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இவ்விரண்டு செய்யுட்களாலும், இந்த ஜாதகன் பிதா கண்டெடுத்த புதையல் திரவியத்தால் இந்த ஜாதகன் மிக்க சீமான் ஆவன் எனவும், இவனுக்கு முன்னோர் சாபமுள்ளனவாதலால் அதனை தீர்க்க வேண்டுமென்றுங் கூறியதால் இதனை அனுபவ வாயிலாய்க் கண்டு கர்மகாண்டப்படி பரிகாரம் செய்யவும். 56

### குவண்டை ரேகையின் பலன்

கூறிடவே குவண்டையிட ரேகைமைந்தா
குணமாகச் சொல்லுகிறேன் கூர்ந்துகேளு
பாறிடவே நுனிகளெல்லாம் சங்குதிருகுபோலும்
பண்பாக யிருந்தாக்கால் பகரக்கேளு
காறிடவே இவன்கையிலே காசுதங்கும்
கனத்தபண்டம் இவன்கையிலே யிருக்கும்பாரு
பாறிடவே திசையுள்ள மைந்தனென்று
பெற்றியுடன் சொல்லுகிறேன் பெருமையாச்சே.

(இ-ள்) குவண்டைரேகையினது பலாபலன்களைக் கூறுவேன் கேட்பீராக. மேற்படி குவண்டைரேகை என்பது விரல்களின் நுனியில் சங்கு முனையில் சுருண்டிருப்பதைப்போன்று சுருண்டிருக்கும் தன்மையுடையதாகும். இவ்வாறிருக்கின் இதன்பலனைக் கூறுவேன் கேட்பீராக. எவ்வாறெனின்? இந்த ஜாதகனிடம் என்னேரம் பணம் இருந்துகொண்டே இருக்குமெனவும், இந்த ஜாதகன் மகாயோகமுடையவன் எனவும், பெருமை

யுடையவனும் ஆவான் எனக் கூறுக. மற்றுமுள்ள விவரமும் சொல்வேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) மேற்படி ரேகையானது கைவிரல்களின் நுனியில் சங்கானது திருகுதிருகாய் இருப்பதைப்போன்று சுருண்டிருப்பதாகும் என்று கூறியுள்ளனர். இதன்பலன் என்னவெனில்? என்றும் பொருள் உள்ளவன் என்பது கருத்தாகும். 57

ஆச்சப்பா குவண்டையுட ரேகைதானும்
அன்பான விரல்நுனியில் இருக்கும்பாரு
பேச்சப்பா இவன்கையிலே காசுண்டப்பா
பிரபலமாய் இருக்காது பேணிப்பாரு
வாச்சப்பா வைரமணி ரேகைதானும்
வளமாகச் சொல்லுகிறேன் கேளுகேளு
காச்சப்பா காச்சுதடா கருணையாலே
கைகண்ட வித்தையடா கருணைகூறே.

(இ-ள்) மேலே கூறிய குவண்டைரேகை என்பது தனது அஸ்தத்தின் விரல்நுனியில் இருக்குமேயாமாகில் அதன் பலன் என்னவெனில்? இவன் கையில் எந்நாளும் காசு என்னும் பணம் வந்துகொண்டே இருக்கும். ஆனாலும் மேற்படி பணமானது நிலைத்துப் பிரபலமாயிராது. மேற்படி ரேகையுடன் வைரமணிரேகையும் இருக்குமேயாமாகில் அதனது பலாபலன்களைக் கூறுவேன் கேட்பீராக. எதனாலெனில்? இவை பராசத்தியாகிய தேவியின் கிருபையால் உண்டாகிய சாஸ்திரமாதலால், இவை கைகண்ட வித்தையென்று மனதில் நினைத்து ஆராய்வாயாக எ-று.

(வி-ரை) மேற்படி குவண்டைரேகை மாத்திரம் தனித்திருக்கின் பணம் உண்டாகி சிலவாகுமென்றும், இதனுடன் வைரமணிரேகையும் இருக்கில் அதன்பலனைக் கூறுவேன் கேட்பீராக என்றனர். 58

கருணைவைத்து வைரமணி ரேகைதானும்
கார்குழலா மாதுமையாள் கருணைகூர்வாள்
வருணைவைத்து வைரமணி ரேகைதானும்
வயம்பெறவே நற்கரத்தில் இருக்கும்பாரு
அருணைவைத்துப் பிறந்தமைந்தன் இவனையப்பா
ஆச்சரியம் பெற்றமைந்தன் அதிகம்பாரு
திருணைவைத்து தேவரிலே ஒருவனப்பா
திசையோகம் வல்லமைதான் செப்பொணாதே.

(இ-ள்) வைரமணிரேகை என்பது தனது அஸ்தத்திலிருக்கப் பிறந்த ஜாதகன் ஸ்ரீசாக்ஷாத் உமாமயேஸ்வரியே கருணைவைத்துப் பிறந்தவன் என்றே கூறவேண்டுவதாகும். மேலேசொன்ன வைரமணிரேகை என்பது தன் அஸ்தத்திலிருக்கப் பிறந்தவன் ஈஸ்வரகடாக்ஷத்தால் ஜனித்தவன் என்றும் எவரும் ஆச்சரியப்படத்தக்க பிரபலன் என்றும், இந்த ஜாதகனைப் பெற்ற பிதாவானவன் தேவர்களில் ஒருவனே என்றும், இவனுக்குண்டாகும் திசையோகம் முதலியவற்றைச் சொல்லமுடியாது எ-று.

(வி-ரை) 'அருணனைவைத்துப் பிறந்தவன்' என்றதால் சூரியனுக்குப் பிறந்தவன் என்றும், மேற்படி சூரியனுக்கு மைந்தன் கர்ணன் என்றும் பொருள் கூறலாம். இதன் விவரம் கீழ்வருவனவற்றால் அறிக. 59

செப்புகிறேன் வைரமணி ரேகையுற்றால்
 செபமான விவன்தானும் பாஞ்சாலந்தான்
ஒப்புகிறேன் உத்தமியாள் பெற்றமைந்தன்
 ஓகோகோ இவனுக்கு உறுதிகேளு
மெய்ப்புகிறேன் இவன்தனக்கு மதியாம்வாரம்
 மேன்மையா மமரபட்சத் தசமியாகும்
அப்புகிறேன் ஆண்டவனார் உதவியாலே
 ஆண்பிள்ளை ஓரிரண்டு பிறக்கும்பாரே.

(இ-ள்) தமது அஸ்தத்திலிடமாக வைரமணிரேகை என்பது அமைந் திருக்கப் பிறந்தானேயாமானால் ஜெயத்தையுடைய பாஞ்சாலதேயத்தின் அரசன்மனைவி பெற்ற மைந்தன் என்றே சொல்லவேண்டியதால் இந்த ஜாதகனது பலாபலன்களைக் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகன் பிறந்தது மதிவாரமாகிய திங்கட்கிழமையும், அமரபக்க மாகிய தேய்ப்பிறையும், சப்தமிதிதியுங் கூடிய நாளில் பிறந்தவன் என்றே கூறவேண்டுவதாகும். இன்னும் கூறவேண்டிய தென்னவெனில்? ஸ்ரீ சாக்ஷாத் சிவபிரானது கிருபையால் இந்த ஜாதகனுக்கு இரண்டு ஆண் குழவிகள் பிறக்குமென்றும் கூறுவாயாக எ-று. 60

பார்க்கவே யிவன்தானும் ஏழாம்பேராம்
 பண்பான பக்குவத்தி லிறந்துபோவார்
ஆர்க்கவே தசமியிலே பிறந்தான்மைந்தன்
 அன்பான உத்திரத்தில் அவதரித்தான்
ஏர்க்கவே யிவன்பிறந்த இல்லறந்தான்
 இயல்பான பெரியமனை இரண்டதாகும்
சார்க்கவே சற்புத்திரன் இவன்பிதாவும்
 தாயுந்தான் முதற்சாதி மங்கையாமே.

(இ-ள்) இந்த ஜாதகனது பலாபலன் யோகம் முதலியவற்றைக் கூறுமிடத்து இந்த ஜாதகனுக்கு சகோதரர்கள் 7-பேர் ஆயினும், மேற்படி 7-பேரும் தனது உத்தமவயது காலத்தில் மரித்துப்போவார். ஏனெனில்? இந்த ஜாதகன் உத்திரநக்ஷத்திரமும் தசமிதிதியும் கூடிய நாளில் பிறந்தி னால் என்க. இதுவன்றி இந்த ஜாதகன் ஜனித்த இல்லமானது பெரிய மனையாயும், இரண்டு வீடுகளாயும் உள்ளதாகும். மற்றும் இந்த ஜாதகனது பிதா மிக்க சற்குணமுடையவ னெனவும், தாயானவள் உத்தமகுலத்தில் பிறந்தவளெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இவ்விரண்டு செய்யுளாலும், திங்கட்கிழமை அமரபக்ஷத்து சத்தமி உத்திரநக்ஷத்திரம், கூடியநாளில் பிறந்தான் என்று கூறினார். இதுவன்றி இவனுக்குப் புத்திரர்கள் 2 என்பது கருதத் தகுந்ததாகும். 61

ஆகவே யிவன்பிறந்த ஆறுமாண்டு
அன்பான மாதாவு மடிவாள்பாரு
ஏகவே யிவன்பிறந்த மூன்றுமாண்டு
யியல்பாகப் பிதாவுந்தான் இறந்துபோவான்
பாகவே பரப்பிரம்ம யோகத்தாலே
பாக்கியங்கள் பெற்றிடுவான் பாலன்தானும்
வாகவே வாலையாம் பருவந்தன்னில்
வலுவான வறுமையால் மெலிவான்தானே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த ஆறும்வயதில் இவனது பிதா இறந்து போவான் எனவும், பிதா என்னும் தந்தை இவன் பிறந்த மூன்றும் ஆண்டிலேயே இறந்து போவானாயினும், ஸ்ரீபரப்பிரம்மத்தினது கிருபையால், இந்த ஜாதகன் சகல பாக்கியங்களையும் பெற்று வாழ்வானாயினும், இந்த ஜாதகனது வாலிபகாலமாகிய நடுவயதில் வறுமை என்னும் தரித்திரத்தால் வாடி மெலிவான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் 3-ஆம் வயதில் பிதாவும், 6-ஆம் வயதில் தாயும் இறந்துபோவார் என்றது கவனிக்கத்தகுந்தது. 62

மெலிவதென்ன யிவனுக்குப் பதினாலாண்டு
மேன்மையுள்ள மைந்தனிவன் மெலிவான்பாரு
அலிவதென்ன இவனுக்குத் திசையோகந்தான்
ஆண்டவனார் அளித்திடுவர் பதினாறில்தான்
ஒலிவதென்ன இவனுக்கு உத்தியோகந்தான்
உற்றதொரு அரண்மனையில் எழுதலாச்சே
பலிவதென்ன யோகத்தால் பாக்கியம்வந்து
பலித்ததடா திசையோகம் பண்பதாமே.

(இ-ள்) மேலே சொல்லியபடி எத்தனைநாள் மெலிவானெனில்? தன் வயது 14-வரையிலுமேயாகும். வயது 14-க்குமேல் ஸ்ரீசாக்ஷாத் சிவபிரானது கிருபா கடாக்ஷத்தால் இவனுக்கு மேலான திசையும் யோகங்களும் உண்டாகும் எனவும், கடவுள் கிருபையால் இந்த ஜாதகன் வயது 16-ல் பெரிய ராஜாக்களது அரண்மனையில் உத்தியோகம் முதலியன கிடைக்குமெனவும், மேற்படி உத்தியோகத்தால் இந்த ஜாதகனுக்கு மேலான திசையும், யோகமும் மேன்மேலும் உண்டாகும் என்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவது என்னவெனில்? 14-வயது வரையில் சுலப கஷ்டமடைவான் எனவும், 14-க்குமேல் 16-க்குள் பிரபலயோக முடையவன் என்பதும் கருத்தாகும். 63

ஆகவே யிவன்வயதோ ரிருபத்தைந்தில்
அன்பான ராஜாக்க ளுறவுமாமே
வாகவே யிவன்வயதோ ரிருபத்துநாலில்
வரிசையாய்ப் பெரியிடத்தில் விவாகமாச்சு

பாகவே பத்தனுக்கு உத்தியோகந்தான்
பண்பாக நடக்குமென்று பகரலாகும்
ஆகவே யிவன்தேவி மூலத்தாலே
ஆனஇளை யவளாண்மை செய்திட்டாளே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது யோக பாகங்களைச் சொல்லு மிடத்து இவன் வயது 25-ல் மேன்மையும் அன்புமுடைய அரசர்கள் உறவு என்னும் சிநேகம் உண்டாகும் எனவும், வயது 24-ல் மிக்க பெருமையும் மேன்மையும் உடைய இடத்தில் பெண் கிடைத்து விவாகம் ஆகும் எனவும், இவனது வாழ்நாட்களில் உத்தியோகம் முதலியன மேம்பாடடையும் எனவும், இவ்வுலகெங்கனும் பிரசித்திபெற்ற உமாதேவியினது கிருபையால் இளையாள் என்னும் லக்ஷ்மியும் அருள்செய்வாள் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவனது யோகம், வாழ்வு, விவாகம் முதலி யனவற்றைச் செவ்வனே கூறியுள்ளனர். அவையாவன? வயது 24-ல் தன்னிலும் மேம்பட்ட பூஸ்திதியுடைய இடத்தில் பெண்கிடைக்கும் எனவும், விவாகம் நடக்கும் எனவும் கூறியது கவனிக்கத்தக்கது. 64

செய்திடவே யிவனுக்குக் குழவியெட்டாம்
செல்வமுண்டாம் ஆயசுண்டாம் திரமாய்த்தானும்
ஐதிடவே ஆண்ஆறு பெண்யிரண்டு
அப்பனே யோகத்தால் பிறந்தார்மைந்தர்
பாடிடவே பரமனுட அருளாலேதான்
பாக்கியங்கள் வந்துதடா பலிதஞ்சொன்னேன்
ஆடிடவே அண்டத்தி லிவனைப்போலே
ஆச்சரியம் பெற்றமைந்த னில்லைகேளே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்குண்டாகும் புத்திரர் மொத்தம்-8 எனப்படும். மேற்படி புத்திர புத்திரிகளுக்கு தீர்க்க ஆயுளும் செல்வ விருத்தியும் உண்டாகும். அவையாவன மேற்படி புத்திர புத்திரிகள் 8-ல் ஆண்-6 என்றும், பெண்-2 என்றும் கூறவேண்டுவதுடன், மேற்படி புத்திரர்கள் பிரபலயோக முடையவனும், ஸ்ரீசாக்ஷாத் சிவபிரான் கிருபையால் சகல பாக்கியங்களும் பெருகும் எனவும், மற்றும் இந்த ஜாதகனுக்கு உண்டாகும் புத்திரர்களைப்போல் இப்பூமியின்கண் எவரும் இணைசொல்ல முடியா தென்று கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனுக்குண்டாகும் புத்திரர்கள் மொத்தம் 8 எனவும், அவர்களுள் 6-ஆண், 2-பெண் எனவும் தீர்க்காயுளும் செல்வமும் உடையவர் என்றது இப்பூமியில் மேற்படி புத்திர புத்திரி களுக்கு எவர்களும் இணைசொல்ல முடியாதென்றது கவனிக்கத்தக்கது. 65

கேளப்பா யிவனுக்குக் கோசரங்கள்
கேவலமாய் கிரகமது நாளுண்டாகும்
வாளப்பா யிவனுக்கு ராகுதோஷம்
வளமையாய் நாற்பத்தி ஆறிலேதான்

ஆளப்பா யிவனுக்குப் பொல்லாரோகம்
　　ஆண்மையால் வந்ததென்று அறிந்துபாரு
மீளப்பா பொல்லாத கண்டமுண்டு
　　விருதாவி லிவனைத்தான் அடிக்கும்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்குண்டாகிய கிரக அடவியின் விஷயங்களைக் கூறுமிடத்து ஜாதகப்படி 4-கோட்கள் பலயீனம் பெற்றிருக்குமெனவும், இராகுதோஷம் உடையவனும் ஆவன். ஆனதால் இந்த ஜாதகன் வயது 46-ல் அளவிடமுடியாத கொடியரோகத்தால் மிகவும் வருத்தமும் கஷ்டமும் உண்டாகும் என்பதுடன் மேற்படி வயது 46-ல் இந்த ஜாதகன் மேற்படி கொடிய வியாதியால் கெண்டமுண்டாகி மடிவான் எனவும் திண்ணமாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவ தென்னவெனில்? இந்த ஜாதகனுக்கு பலவித யோகமுண்டாயினும், 4-கிரகங்கள் பலவீனம் பெற்றதாலும், இராகுதோஷ மிருப்பதால் 46-ஆம் வயதில் கொடிய வியாதியால் மரணமடைவான் என்பதேயாகும். 66

பார்க்கவே வச்சிரமணி ரேகைமைந்தா
　　பண்பாகச் சொல்லிவிட்டேன் பலிதமாக
ஏர்க்கவே யிவனுடைய திசையும்வாழ்வும்
　　இயல்பான யோகமுதல் கரணம்நாளும்
வார்க்கவே வச்சிரமணி ரேகைமைந்தா
　　வளமையுள்ள நட்புமுத லெல்லாஞ்சொன்னேன்
ஆர்க்கவே சக்கரத்தின் அமைப்புமுதலாய்
　　அன்பாகச் சொல்லிவிட்டேன் ஆய்ந்துபாரே.

(இ-ள்) இதுவரையில் கூறிவந்த வச்சிரமணி ரேகையினது பலாபலங்களாகிய திசை முதலியனவற்றையும், யோகமுண்டாகும் காலத்தையும், வாழ்வுண்டாகும் காலத்தையும், மேற்படி ரேகைக்குரிய காரண காரியங்களையும், மேன்மையுண்டாகும் காலநேரங்களையும், சுகா சுகங்களையும், மேற்படி ரேகையினது அமைப்பால் யாவும் விவரமாய்க் கூறிவிட்டேன். ஏனெனில்? மேற்படி வச்சிரமணி ரேகை என்பது மிக்க பிரமாதமானதாலேயாகும் எ-று. 67

பார்க்கவே வச்சிரமணி ரேகைமைந்தா
　　பண்பாகச் சொல்லுகிறேன் பரிந்துகேளு
ஏர்க்கவே அதினுடைய விபரமெல்லாம்
　　இயல்பாகச் சொல்லிவிட்டேன் மூன்றுங்காண்டம்
தார்க்கவே தன்னுடைய யோகமெல்லாம்
　　தயிரியமாய்ச் சொல்லிவிட்டேன் சார்பதாக
மார்க்கமாய் மைநாக ரேகைமைந்தா
　　மகத்துவத்தைச் சொல்லுகிறேன் மருவிக்கேளே.

(இ-ள்) இங்கு கூறிய மூன்றுங்காண்டம் வச்சிரமணி ரேகையில் பிறந்தவனது விஷயங்கள் யாவையும் விவரமாய் யோகம்-சுகம்-ஆயுள்-புத்திரர்

முதலிய விஷயங்களை எல்லோரும் அறியும்வண்ணம் என்னால் அறிந்த வரையில் விவரமாய்ச் சொல்லிவிட்டேன். இனி பின்வரும் செய்யுளால் மைநாக ரேகையில் பிறந்தவர்களது யோகம்-சுகம் முதலியவற்றையும் கூறுவேன் கேட்பீராக எ-று.

(வி-ரை) இதுவரையில் கூறிவந்த வச்சிரமணி ரேகையினது விஷயங்களில் கூறியதை கவனிக்குமிடத்து மேற்படி வச்சிரமணி ரேகையானது அர்ச்சுனனுக்கு இருந்ததாயும், மேற்படி அர்ச்சுனனுக்குள்ள வீரம்-வைராக்கியம்-சுகம் முதலியனவற்றில் ஏறக்குறைய இந்த ஜாதகனுக்குண்டு எனக் கூறியதாலும், முடிவில் ஆயுள் 46-என முடிவுசெய்ததும் கவனிக்கத் தக்கது. இதுவன்றி 4-கிரகங்கள் பலவீனமும், ராகுதோஷமும் உண்டு என்பதை கிரக அடவியால் கண்டு கூறுவது நலம். 68

மைவிந்த ரேகையின் பலன்

கேழ்க்கவே யின்னமுந்தான் மைநாகத்தின்
கேவலங்க ளானதொரு ரேகைகேளு
வாழ்க்கவே மணிவிந்தன் இருக்கையாலே
வளமாக இருக்கிறதை வரிசைகேளு
தாழ்க்கவே மைநாகம் சமத்துதானும்
தனிமையாய்ச் சொல்லுகிறேன் சார்புகேளு
நாட்கவே நாலுவரை யிரண்டுபுள்ளி
நலமான இருகோணம் நாடிக்காணே.

(இ-ள்) பற்பல ரேகைகளுள் ஒன்றான மைவிந்த ரேகையினது விஷயங்களைக் கூறுவேன் கேட்பாயாக. மேற்படி மைவிந்த ரேகையுடன் மணிவிந்த ரேகையும் கலந்திருப்பதால் இவை மிக்க கேவலமான ரேகை என்றே கூற இடம் தரும். மேற்படி இரு ரேகைகளும் சமமாய் இருப்பதால் இந்த ரேகையினது விவரங்களைக் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? மேற்படி ரேகையான நான்கு வரைகளிலும் இரண்டு புள்ளியாயும், இருகோண வடிவமாயும் அமைந்திருக்குமெனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) மேற்கண்ட ரேகையானது தன் விரலிலுள்ள நான்கு வரைகளில் இரண்டு புள்ளிகளாயும், இருகோண வடிவமாயிருக்கும் என்பதே இச்செய்யுளின் முக்கிய கருத்தாகும். 69

காணுகின்ற மைநாகம் கையிலானால்
கனம்பெற்று வாழ்வுண்டாம் நன்றாய்க்கேளு
தோணுகின்ற இவன்யோகம் நல்லயோகம்
தொல்லைமெத்த இல்லாத தொழிலேயாவான்
வாணுகின்ற வர்னலக்ஷம் தொழிலேசெய்வான்
வர்ணிப்பு வுள்ளமைந்தன் அழகனாவான்
வீணுகின்ற இவன்பிறந்த மனையிலேதான்
விகல்பமில்லாச் செல்வத்தோர் மைந்தனாவான்.

(இ-ள்) மேலேசொன்ன மைநாகம் என்னும் ரேகையானது தனது அஸ்தத்தில் இருக்குமேயாயின், அந்த ஜாதகன் மிக்க பெருமையுடையவனுகையால் அதன் விவரம் சொல்லுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகனுக்கு பிரபலயோகம் உண்டாகும் என்று கூறுவதுடன், சிரமம் கஷ்டம் முதலியன இல்லாத தொழிலேயே செய்வான் என்றும், அநேகவிதமான தொழிலையும் செய்யத்தகுந்தவனும், அனைவராலும் புகழத் தகுந்த அழகுடையவனும், இந்த ஜாதகனது குடும்பத்தில் அளவில்லாச் செல்வம் உடையவனும் ஆவான் எனத் திண்ணமாய்க் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்து என்னவெனில்? பிரபல செல்வம் உடையவர்கள் மனையில் இந்த ஜாதகன் ஜனித்திருப்பான் என்பதேயாகும். மற்றும் விவரங்களைப் பின் வருவனவற்றால் காண்க. 70

ஆவதப்பா இவன்பிறவி அஞ்சுபேராம்
அருமையா யிவன்தானும் நாலாம்பேராம்
காவதப்பா பெண்ணொன்று பிறக்குமைந்தா
கருணைசேர் இவன்யோகம் நசிக்கும்பாராய்
ஆவதப்பா ஆச்சரியம் பெற்றபாலன்
ஆய்ந்துசொல்வேன் மைநாகம் பெருமைதானும்
மாவதப்பா ராஜ்ஜியத்தில் மந்திரியேயாவான்
மைந்தனே இவன்பிறந்த வாழ்க்கைசொல்லே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்கு மொத்த பிறவிகள்-5 எனவும், இந்த ஜாதகன் 4-ஆம் பிறவி என்பதுடன் இந்த ஜாதகன் ஜனித்தபிறகு ஓர் பெண்பிறவி ஜனிக்குமென்றும் கூறுவதுடன் நாளுக்குநாள் யோகம் மேம்பாடடைவதுடன் இவனை எவர்களும் கண்டு ஆச்சரியப்படத் தகுந்தவனுவான். இன்னும் இந்த ஜாதகனது விவரங்களைச் சொல்லவேண்டுவதெனில்? மைநாகரேகையானது தமது கையில் அமைந்திருக்கப் பிறந்தவன் ராஜாங்க மந்திரியாகி வாழ்வான் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்தென்னவெனில்? இந்த ஜாதகன் நான்காம் பிறவியும் ராஜாக்களிடம் அமைச்சத்தொழில் செய்து வாழ்வான் என்பதேயாகும். 71

சொல்லவே இவன்பிறந்த வேளைதானும்
சொற்பெரிய வெள்ளியினில் இரவின்போது
அல்லவே சத்தமியும் பூரட்டாதி
ஆனதொரு மூன்றுங்கால் பிறந்தார்அன்றோ
வல்லவே இருமனையாய்ப் பிறந்தவீடு
வாழ்மனையில் தென்பாலில் வீட்டிலேதான்
நல்லவே வலதுகைப் பக்கந்தன்னில்
நலமான மச்சமொன் றுண்டுகாணே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்தவேளை நாள் கோள் முதலியவற்றைச் சொல்லவேண்டுவதெனில், இந்த ஜாதகன் சுக்கிரவாரமாகிய வெள்ளிக்

கிழமை இரவில் சத்தமிதிதியும் பூரட்டாதி மூன்றும்பாதமும் கூடிய நேரத்தில் ஜனித்தானெனவும், இந்த ஜாதகன் பிறந்த மனையானது இருமனை என்றும், மேற்படி மனையின் தென்புறத்தில் பிறந்தான் எனவும் கூறவதுடன், இவனது சரீரத்தில் வலது கைபக்கத்தில் நன்மையைத் தரத்தகுந்த மச்சம் ஒன்றுண்டு எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் இந்த ஜாதகன் வெள்ளிக்கிழமை இரவு சத்தமியும், பூரட்டாதி மூன்றும்பாதமும் கூடிய நாளில் பிறந்தான் எனவும், வலது கைபக்கம் மச்சமுண்டு எனவுங் கூறினார். மற்றும் பிறந்த இடம் முதலியவற்றையுங் கூறியுள்ளார். பின்வரும் செய்யுளால் வயது யோகம் முதலியன அறிக. 72

காணுமடா இவன்வயதோ ரெழுபத்தெட்டாம்
கைபாகம் மச்சம்வுள்ள கருணைவீரன்
ஆணுமடா இவன்யோகம் அதிகவான்தான்
அப்பனே சொல்லுகிறேன் ஆய்ந்துதானே
வாணுமடா மைநாக ரேகைஆனல்
வச்சிரம்போல் பிள்ளையிவன் வாழ்வான்பாரு
தாணுமடா இவன்பிறந்த யோகத்தாலே
தாய்உமையாள் உதவியினால் எல்லாம்ஆச்சே.

(இ-ள்) மைநாக ரேகையென்பது தமது அஸ்தத்தின்கண் அமைந்திருக்கப் பிறந்தவனுக்கு வயது 78 எனவும், கைபாகத்தில் பிரபலமுடையவனும், கருணையுடையவனும், மேலான யோகமும் உடையவனும் ஆவான் என்பதுடன் இன்னும் இந்த ஜாதகனது பெருமையைச் சொல்லுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகன் பிறந்த சக்கரத்தின் அமைப்பால் உலக மாதாவாகிய உமையவள் கிருபையால் இந்த ஜாதகனுக்கு சகல சம்பத்தும் உண்டாகி வச்சிரம்போன்று வாழ்ந்திருப்பான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனது வயது யோகம் முதலியவற்றைக் கூறினார். பின்வரும் செய்யுளால் இந்த ஜாதகனுக்கு நிதியுண்டாகும் வயதும் எவ்வாறு கிடைக்கும் என்னும் விருத்தாந்தமும் கூறுவார். 73

ஆச்சப்பா இவன்பிறந்த ஆறும்ஆண்டு
அன்பாக இவன்பிறந்த சயனம்தன்னில்
பேச்சப்பா ஒருபேயே வந்துதானும்
பிரபலமாம் நீதியுள்ள இடத்திலேதான்
வாச்சப்பா அழைத்துப்போய் நிதியேகாட்டும்
வகையாக மறுநாளில் மைந்தன்சென்று
தாச்சப்பா தட்சணத்தில் நிதிஎடுத்து
தாஷ்டியனும் குபேரன்போல் ஆனான்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்கு நிதியுண்டாகும் விருத்தாந்தம் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகன் தான் பிறந்த மனையில்

சயனித்திருக்கும் காலம் இவனது கனவில் ஓர் பேயானது தோன்றி இவனை அழைத்துக்கொண்டுபோய் அநேக திரவியங்கள் கொட்டிக்கிடக்கும் இடத்தைக் காட்டும் அதனை கவனம்வைத்து மறுநாள் இந்த ஜாதகன் மேற்படி பேய்காட்டிய தனமுள்ள இடத்தில் சென்று மேற்படி தனத்தைக் கொண்டுவந்து குபேரனைப்போன்ற தனமுடையவனும், தாட்டீகமுடையவனும் ஆவான் என்று கூறுவாயாக எ-று. 74

பார்க்கவே இவனுக்குப் பிள்ளைஐந்தாம்
பண்பாக இவன்வயதோ ரெழுபத்தெட்டாம்
ஏர்க்கவே இவன்வயதோ ரெட்டுக்குள்ளே
எம்பிரான் அருளாலே விவாகம்ஆச்சு
தார்க்கவே தாயினிட உதவியாலே
தன்மையுள்ள மைநாக ரேகைக்காரன்
வார்க்கவே இவன்யோகம் கனகயோகம்தான்
வண்மையாய்ச் சொல்லிவிட்டேன் வகையதாமே.

(இ-ள்) உலகமாதாவாகிய உமாமயேஸ்வரியினது கிருபையால் மைநாக ரேகை என்பது தமது அஸ்தத்தில் அமையப்பிறந்த இந்த ஜாதகன் பிரபல யோகமுடையவனாய் வாழ்வன் என்றும், இவனுக்கு வயது-78 என்றும், இவனுக் குண்டாகும் புத்திரர்கள்-5 எனவும் கூறுவதுடன் எம்பிரானது கிருபையால் இவன் ஜனித்த 8-ஆம் வயதில் விவாகம் ஆகும் எனவும் கூறுக. மேற்படி ரேகையில் பிறந்தவனது பலன் யாவும் கூறிவிட்டேன். மற்றும் பல ரேகையினது பலனையும் கேட்பீராக எ-று. 75

## ஆந்தை ரேகையின் பலன்

வகையான ஆந்தையிட ரேகைமைந்தா
வசனித்தேன் இவன்கையி லிருக்குமாகில்
பகையான யிவன்பிறந்த அம்மாவாசை
பாலகன்தான் அஸ்தமதின் நாலாங்காலாம்
துகையான யிவன்பிறவி நாலுபேராம்
துன்பத்தா ளாகத்தான் யிளையாள்போச்சு
நகையாக யிவன்வயது நாற்பதுக்குள்
நல்மனையும் பாக்கியங்கள் நாசமாச்சே.

(இ-ள்) ஆந்தைரேகை என்பது தமது அஸ்தத்தில் அமைந்திருக்கப் பிறந்த ஜாதகன் தான் ஜனித்தது அமாவாசை என்றும், அஸ்தநக்ஷத்திரம் நான்காமபாதத்தில் ஜனித்தான் என்றும், இந்த ஜாதகனது பிறவியாகிய சகோதரர்கள் நால்வர் எனவும், இவனுக்கு இளையாள் பெண் என்றும், மேற்படி பெண் பிறவியானது பல துன்ப வியாதியால் மரணமானாள் என்றும், இவன் பிறந்த 40-ஆம் வயதுக்குள் இவனது மனை பாக்கியம் முதலிய யாவும் அனைவரும் நகைக்கும்படி நாசமாயினவென்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவன் பிறந்தது அமாவாசையும், அஸ்தம் நாலாம்பாதமும் என்றதுடன் 40-க்குள் தனது செல்வம் மனை யாவும் நாசமாயின என்பதைப் பின்வரும் செய்யுளால் அறிக. 76

ஆச்சப்பா யிவன்தானும் தாயாதிகொண்டு
அண்டாத தொழில்முறைகள் செய்ததாலே
வாச்சப்பா யிவன்பிதா இருபத்தாறில்
வளமையாய் யிறந்தபின்பு மனைபாழாச்சு
வேச்சப்பா வெய்யவன்தன் சாபம்மூண்டு
மேன்மையுள்ள ஸ்திரீசாபம் வெகுவாயாச்சு
நாச்சப்பா லவணமுதல் யில்லாமல்தான்
நாசந்தான் சூழ்ந்ததடா சாபத்தாலே.

(இ-ள்) இந்த ஜாதகனும் இவனது தாயாதியும் சேர்ந்து கூட்டுத் தொழில் செய்ததின் காரணத்தாலும், இவனது பிதா இவன் வயது 26-ல் மரணமடைந்ததாலும், மேற்படி வயது 26-க்குப்பின் இவனது மனை பாழாய்ப் போனதென்றும், இதுவன்றி, இவனது முன் ஜனனத்தில் சூரியனது சாபம் வந்ததால் இச்சென்மத்தில் ஸ்திரீசாபம் உண்டாயினவென்றும், இது வன்றி வாழ்நாளில் உப்புக்கும் வழியின்றி மேற்படி சாபத்தால் வெகு கஷ்டப்பட்டான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) முன்சொன்ன 76-ஆம் செய்யுளில் தன் செல்வம் யாவும் 40-ல் நாசமாகும் என்று கூறியதை இச்செய்யுளால் விளக்கிக் காட்டப் பட்டன. எப்படியெனில்? தனது தாயாதியுடன் கூட்டுத்தொழில் செய்த தாலும் 26-ல் தனது பிதா இறந்ததாலும் என்பது கவனிக்கத்தக்கது. 77

தாலென்ற ஆந்தையிட ரேகையாலே
தன்னுடைய பிறவிகளைக் கொன்றான்பாவி
ஆலென்ற யில்லறமும் பாக்கியமும்போய்
ஆதினமாம் மண்மனையும்விற் றலைவான்பாரு
காலென்ற பாதத்தில் காலசக்கரம்
கண்டிப்பாய் இருக்குமிவன் தாரத்திற்கு
வேலென்ற அவளைத்தான் விவாகம்செய்வன்
வெகுசுருக்காய் லட்சுமியும் இறந்துபோமே.

(இ-ள்) ஆந்தைரேகை என்பது தனது அஸ்தத்தின்கண் இருக்கப் பிறந்த ஜாதகன் மேற்படி ரேகையினது கொடூரத்தால் தனது பிறவியாகிய சகோதரர்களைக் கொன்றான் என்றும் தனக்குண்டாகிய இல்லத்தையும், மற்றுமுள்ள மண் மனைகளையும் விற்று தனது பாக்கியங்கள் எல்லாவற்றையும் தோர்த்து அலைவதுடன் இவனுக்கு கிடைக்கும் மனைவியானவள் தனது காலில் காலசக்கிரம் உடையவள் என்றும், அப்படிப்பட்ட பெண்ணையே கலியாணம் செய்துக்கொள்வானாயினும், மேற்படி மனைவியானவள் கூடிய சீக்கிரம் இறந்துபோவாள் என்றுங் கூறுக எ-று.

(வி-ரை) முன்சொன்ன செய்யுளில் சூரிய சாபத்தால் மனைவிக்குச் சாபம் நேர்ந்ததென்று கூறியதை இங்கு விளக்கியுள்ளார். எப்படி யெனில்? இவன் மனைவிக்குக் காலசக்கிரம் உண்டென்றும் அவள் கூடிய சீக்கிரம் இறந்துபோவாள் என்றும் கூறியதை அறிக. 78

போகவே ஆந்தைபிட ரேகையிலே
பொல்லாத வெறுமையாய் அலைவானப்பா
ஆகவே யிவனுக்கு நாலுபெண்ணு
அன்பாகப் பிறக்குமடா எல்லாஞ்சாகும்
வாகவே யிவனுக்கு வயதுதானும்
வளமாக அன்பத்து ஆறுமைந்தா
சாகவே யிவனுக்குச் சக்கிரமமைப்பு
சங்கரியாள் கட்டளைப்போல் நடக்கும்பாரே.

(இ-ள்) ஆந்தைரேகை என்பது தன் கையிலிருந்த விசேஷத்தால் இந்த ஜாதகன் மிக்க கஷ்டமுடையவனாகி அலைவதுடன் இவனுக்குப் பிறக்கும் பெண்கள் 4-என்றும், அவையாவும் இறந்துபோகுமென்றும் கூறுவதோடு இந்த ஜாதகன் ரேகை லக்ஷணப்படியும், உலகமாதாவாகிய உமாமயேஸ்வரியினது கட்டளைப்படிக்கும், ஏற்பட்ட வயது மொத்தம் 56-என்றும் கூறுவாயாக எ-று. 79

கேசரி இரேகையின் பலன்

பார்க்கவே கேசரியின் ரேகைமைந்தா
பண்பான இவனுடைய பாக்கியங்கேள்
கார்க்கவே அரசனைப்போ லவனிமீதில்
கற்பகம்போல் நினைத்ததெல்லாங் கனிந்தளிப்பான்
ஏர்க்கவே கேசரிதான் இருக்குமாகில்
என்னசொல்வேன் யிவன்யோகம் எளிதோமைந்தா
கார்க்கவே உமையவள்தான் கடாட்சம்வைத்து
கருணைசெய்து பிறந்தமைந்தன் கனிவுகேளே.

(இ-ள்) தனது அஸ்தத்தினிடமாக கேசரி ரேகை என்பது அமைந்திருக்குமேயாமாயின், அதனது பராக்கிரமத்தைக் கூறுவேன் கேட்பாயாக. அந்த ஜாதகனானவன் ஸ்ரீ உமாமயேஸ்வரியின் கிருபா கடாக்ஷத்தால் பிறந்தவன் என்று கூறுவதுடன் இவன் மிக்க பெருமைவாய்ந்த அரசனைப் போன்று இப்பூமியின்கண் தான் நினைத்ததெல்லாம் முடியும் என்றும், மேலான யோகமுடையவனும் ஆவதுடன் மேற்படி கேசரி ரேகையானது தனது அஸ்தத்திலிருக்கின் இவனது யோகத்தை இலேசாய்ச் சொல்ல முடியாதென்பதுடன் இவனது விஷயங்களை இன்னும் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) சாத்வீக ரேகையென்பது தமது அஸ்தத்தின்கண் இருக்குமேயாமாயின், அவனது யோகத்தை எவராலும் அளவிட்டுக்கூற முடியாது

என்பதே இச்செய்யுளின் முக்கிய கருத்து. அவற்றின் விவரம் கீழ் வருவன வற்றால் காண்க. 80

கேட்கவே நடுவரையின் மூன்றுகோணம்
கேவலமாய் யிரண்டுபுள்ளி இருக்குமப்பா
வாட்கவே இவனுடனே பிறந்தார்மூவர்
வையகத்தி லிவனைப்போல் யோகமில்லை
ஆட்கவே யிவனுடைய ஆண்மைமெத்த
அன்பான பாலகன்தான் யோகம்மெத்த
நாட்கவே நல்மனையில் பிறந்தபாலன்
நாதாக்கள் மெச்சிவரம் நல்கினாரே.

(இ-ள்) மேலேசொன்ன கேசரிரேகை என்பது எவ்வாறிருக்கும் எனின்? தத்தமது நடுவிரலில் நடுவரையில் சின்னஞ் சிறியதாய் இரண்டு புள்ளிகளுடன் காணப்படும். மற்றும் இந்த ஜாதகனுடன் பிறந்தவர் மூவர் என்றும், மேற்படி மூவரில் இவனே மேலானயோகம் உடையவன் என்றும், இந்த ஜாதகன் தன் வாழ்நாட்களில் மிக்க யோகமுடையவனும், மிகுந்த ஆண்மையுடையவனும் ஆவதும், இவன் பிறந்தது நன்மை பொருந்திய மனையாதலால் இவனுக்கு மேலோரெல்லாம் மெச்சி மேலானவரம் முதலியன அளித்தார் என்றும் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் மேற்படி ரேகை இருக்கும் வண்மையைக் கூறினர். எவ்விதமெனில்? நடுவிரலில் நடுவரையில் 2-புள்ளிகள் சிறியதாய் இருக்கும் என்பதேயாகும். 81

நல்கியே யிவன்பிறந்த யோகவாழ்க்கை
நலமான நாட்கள்முதல் நவிலுவேன்யான்
அல்கியதோர் யிவன்தனக்கு வடபால்வீட்டில்
அன்பான துதிகையுடன் சதயமாகும்
மல்கியதோர் இவன்தானும் ரெண்டாங்காலாம்
வளமாகப் பிறந்தவன்பார் மதிவாரத்தில்
ஓங்கியதோ ரிரவதனில் உதயநேரம்
உத்தமன்தான் பிறந்திடுவான் உயர்வுதானே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகன் பிறந்த யோகம் வாழ்க்கை ஜனன நாள் முதலியவற்றைக் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இவன் தனது மனையில் வடக்கு பாகத்தில் பிறந்தான் என்றும், மதிவாரமாகிய திங்கட்கிழமையில் எவரும் கொண்டாடத்தகுந்த துதியை திதியும், சதய நக்ஷத்திரம் 2-ஆம் பாதமும் கூடியநாளில் இரவு உதயகாலத்தில் பிறந்தான் என்றும் கூறுக எ-று.

(வி-ரை) இரவு உதயம் என்றது இரவு ஆரம்பிக்கும் நேரம் என்பதாகும். அவையாவன? சூரியன் அஸ்தமயமாகும் நேரம் என்பதாகும். மற்றும் இவனது வாழ்க்கை உயர்வு என்பதைப் பின்வரும் செய்யுளால் காணலாம். 82

தானென்ற யிவன்பிறந்த போதுமைந்தா
தகையான பிதாவுந்தான் இருக்கமாட்டான்
ஆனென்ற யிவன்பிறந்தான் கன்னிமூலை
அன்பான தனுராசி ஆகும்பாரு
வானென்ற யிவனுக்குக் கிரகம்நாலு
வண்மையாம் உச்சமென்று வசனித்தேன்யான்
ஊனென்ற உட்கருத்து விணுவுவித்தை
உத்தம வேதம்படித்து வாழ்வான்தானே.

(இ-ள்) கேசரிரேகையானது தனது அஸ்தத்தில் அமைந்தவன் தான் ஜெனிக்கும்காலம் தமது பிதா இல்லத்திலில்லை எனவும், இந்த ஜாதகன் தமது இல்லத்தில் கன்னிமூலையிலுள்ள அறையில் பிறந்தான் என்றும், ஜனன இராசியானது கன்னியென்னும் இராசி என்றும், இந்த ஜாதகன் பிறந்த லக்ஷணப்படி 4-கிரகங்கள் உச்சம் என்றும் மற்றும் இவன் பல ஆராய்ச்சியும் தர்க்கசாஸ்திரம் மேன்மையைப் படைத்த வேதங்கள் முதலியனவற்றைப் படித்து வாழ்வனெனத் திண்ணமாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) முன்சொன்ன 82-ஆம் செய்யுளில் இந்த ஜாதகன் தமது இல்லத்தின் வடச்கு மூலையில் பிறந்தான் என்பதையே இச்செய்யுளிலும் கன்னி மூலையில் பிறந்தான் என்றனர். மற்றும் நான்கு கிரகங்கள் உச்சம் என்றமையால் அதனது விருத்தாந்தங்களைப் பின்வருவனவற்றால் காண்க. 83

வாழ்வதென்ன இவன்பெரிதும் சமர்த்தனப்பா
வையகத்தில் தாய்தந்தை வைத்துவாழ்வான்
தாழ்வதென்ன ஒருநாளும் இல்லைமைந்தா
தாட்டிகற்கு வயதொருபத் தாகவேண்டும்
நாழ்வதென்ன யிவனுக்கு வயதோமைந்தா
நலமான எழுபத்து ஐந்தேயாகும்
வாழ்வதென்ன பாலகன்தன் யோகத்தாலே
பாக்கியங்கள் வந்திடும்பார் பண்பாய்த்தானே.

(இ-ள்) இந்த ஜாதகனது வாழ்க்கை விவரங்களைக் கூறவேண்டுவதெனில், மகா சமர்த்துடையவனாகவும், தமது தாய்தந்தையரை அன்புடன் போஷிக்கத் தகுந்தவனாகும். இவ்வாறான யோகங்கள் எக்காலத்தில் உண்டாகுமெனில்? இவன் வயது 10-க்குப் பின்பேயாகும். மேற்படி வயது 10-க்குப்பின்பே இவனுக்குச் சகல பாக்கியங்களும் உண்டாகுமென்றும், இவனுக்கு வயது-75 எனவுந் திண்ணமாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இதுவரையில் கூறிவந்த யோகங்களானது எக்காலத்தில் உண்டாகும் என்பதை இச்செய்யுளால் தன் வயது 10-க்குப்பின் என்று திண்ணமாய்க் கூறியுள்ளனர். மற்றும் வயது-75 என்றது கவனிக்கத்தக்கது.

தானென்ற யிவனுக்கு வயதோமைந்தா
தருவான எழுபத்து எட்டேயாகும்
வானென்ற இவனுக்குக் கண்டமூன்று
வையகத்தில் இவனுக்கு நிகரேயில்லை

ஏனென்ற யிவன்வயது பதினறுக்குள்
எடுப்பான்பார் கொழுமுனையில் நிதியேமைந்தன்
கானென்ற யிவன்வயது இருபதுக்குள்
கருணையாம் கடவுளால் அதிகாரமாச்சே.

(இ-ள்) கேசரிரேகையில் பிறந்த இந்த ஜாதகனுக்கு வயது 78-என்று நிச்சயமாய்க் கூறுவதுடன் மேற்படி வயது 78-க்குள் கெண்டாதி கெண்டங்கள் 3-உண்டாகும் எனவும், எவரையும் நிகர் சொல்லப்படமாட்டாத நிகரற்ற வாழ்வையுடையவன் என்றும், இந்த ஜாதகனது வாழ்வு 17-க்குள் தனது இல்லத்தின் முனையில் புதையல் கண்டெடுப்பான் என்றும், கடவுள் கிருபையால் இவன் வயது 20க்குள் சகல அதிகாரமும் உடையவன் ஆவான் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனுக்கு வயது 78-என்றும், மூன்று கெண்டாதி கெண்டங்கள் உண்டெனக் கூறினர். ஆதலால், எந்தெந்த காலத்தில் எப்படிப்பட்ட கெண்டம் வரும் என்பதை கீழ்வருவன வற்றால் விளக்குவார். 85

ஆச்சப்பா யிவன்வயது யிருபத்தெட்டில்
அன்பான விஷகண்டம் உண்டுகண்டாய்
பேச்சப்பா இவன்வயது எழுபத்தாறில்
பெரியதொரு ரோககண்டம் பேசுவோம்பார்
வாச்சப்பா யிவன்வயது அன்பத்தாறில்
வருகுமடா ராஜாவின் கோபமொன்று
நீச்சப்பா நிலவரமாய்ச் சிவனைத்தானும்
நேர்மையாய்க் கைதொழுதால் நீக்குவாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜன்மாதி வயது 28-ல் விஷப்பூச்சுகளால் கெண்டாதி கெண்டம் உண்டு எனவும், 36-ஆம் வயதில் கொடிய ரோகம் என்னும் பிரபல வியாதியால் கெண்டம் உண்டாகுமென்றும், 56-ஆம் வயதில் ராஜாக்கள் என்னும் அரசர்களின் கோபத்தால் பயம் ஆபத்து முதலிய கெண்டங்களும் உண்டாகுமென்றுங் கூறவேண்டும். ஆனதால், மேற்சொன்ன கெண்டாதி காலங்களில் ஸ்ரீசாக்ஷாத் சிவபிரானை வணங்கித் தொழுதால் மேற்சொன்ன கெண்டம் நீங்கும் என்றறிவாயாக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன வயது காலங்களில் கெண்டமுண்டாயினும், அவை நீங்கி வயது 78-வரையில் இருப்பானாயினும், அந்தந்த காலங்களில் தெய்வஸ்துதி வேண்டும் என்பது இச்செய்யுளின் முக்கிய கருத்தாகும். 86

வாரென்ற யிவன்யோகம் மயேந்திரயோகம்
வாருதிபோற் கனயோகம் செய்வான்மைந்தன்
காரென்ற காணிக்கை உத்தியோகங்கள்
கட்டழகன் செய்திடுவான் கருணையாக

பாரென்ற பார்தனிலே இவனைப்போலும்
பாக்கியங்கள் பெற்றமைந்தன் பாரிலில்லை
ஊரென்ற உட்கருத்து மிகவேயப்பா
உத்தமன்தான் பெற்றிடுவான் உயர்ச்சியாமே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்கு எப்படிப்பட்ட யோகம் உண்டாகுமெனில்? மயேந்திர யோகத்தைப்போன்று மேன்மையும் பிரபலமுமாகவே இருப்பான் என்பதற்கு ஐயமில்லை. அழகிற் சிறந்த இந்த ஜாதகன் தான் செய்யும் உத்தியோகத்தால் மிக்க பிரபலமடைவான் என்றதுடன் கருணையுள்ளவனு மாவான். இப்பூமியின்கண் இவனையொத்த பாக்கியமுடையவர்கள் வேறொரு வர் இல்லையென்றும், எவரும் கண்டுபிடிக்க முடியாத விஷயங்களையும் இவன் அறிந்து தெரிந்து மேன்மை பெறுவான் என்று அறிவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் காணிக்கை, உத்தியோகம் என்றமையால் பணமுள்ள இடத்தில் உத்தியோகம் என்றமையுங் கூறு இடந்தரும். 87

வால்மீகபந்தன ரேகையின் பலன்

உயர்ச்சியா யின்னமுந்தான் ரேகைமைந்தா
உண்மையுள்ள ரேகையொன்று உரைக்கக்கேளு
வயர்ச்சியாய் வால்மீக பந்தனந்தான்
வண்மையாய்க் கைகளிலே கண்டதானல்
பயிர்ச்சியாய்ப் பருவரைகள் ரெண்டுகீறு
பண்பாக இருமூலை பயில்வாய்காணும்
வியிர்ச்சியாய் நடுக்கீற்றி லிருக்குமைந்தா
விண்ணுலகு மண்ணுலகு மெச்சும்பாரே.

(இ-ள்) மேன்மைபெற்ற ரேகைகள் பலவற்றுள் வால்மீகபந்தன ரேகை என்பதும் ஒன்றாகும். மேற்படி வால்மீகபந்தன ரேகை என்பது தமது அஸ்தத்தின் எந்த பாகத்தில் இருக்குமெனில்? தமது பெருவிரல் என்னும் கட்டை விரலில் இரண்டு கீற்றுகளாய் மேற்படி விரலின் நடுக்கீற்றில் காண்பதாலும், இவ்வாறு ரேகை அமைந்திருக்குமேயாமாஞல் அந்த ஜாதகனை இவ்வுலகிலும் தேவருலகிலும் மெச்சத்தகுந்தவனுவான் என அறிவாயாக எ-று.

(வி-ரை) விண்ணுலகிலும் மண்ணுலகிலும் மெச்சுவார் என்றதை பின் வருவனவற்றால் காண்க. மற்றும் வால்மீகபந்தன ரேகை என்றது பெரு விரலில் இருக்கும் என்றது கவனிக்கத்தக்கது. 88

பார்க்கவே யிவன்கையில் வால்மீகபந்தனம்
பண்பாக யிருக்குமென்றால் பகரக்கேளு
ஈர்க்கவே யிவன்பிறந்த வாரஞ்செவ்வாய்
இயல்பான இரவுதனில் யிருபத்தைந்தில்
வார்க்கவே அனுஷமதில் ரெண்டாங்காலாம்
வண்மையாய்ப் பிறந்ததிவன் வண்மைகேளே
கார்க்கவே காணிக்கை யுள்ளபேர்க்கு
கைகண்ட வால்மீக பந்தனமே.

(இ-ள்) வால்மீகபந்தனரேகை என்பது தமது அஸ்தத்தின்கண் இருக்கப்பிறந்தவனது பலாபலன்களையும் பிறந்த விவரங்களையும் கூறுமிடத்து இந்த ஜாதகன் பிறந்தது மங்களவாரம் என்னும் செவ்வாய்க்கிழமையாகும். அவற்றுள் செவ்வாய் இரவில் 25-நாழிகையில் அனுஷநக்ஷத்திரம் 2-ஆம் பாதம் கூடியநாளில் பிறந்தவனானதால் இதன் பலனைச் சொல்லுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ரேகையுடையவர்கள் மிக்க செல்வந்தராகவே இருப்பார் என்பதை யறிக எ-று.

(வி-ரை) பொதுவாய் மிகுந்த செல்வந்தர்களுக்கே இந்த ரேகையிருக்கும் என்பது முக்கிய கருத்தாகும். 89

ஆமென்ற யிவன்பிறந்த வருஷநாலில்
அன்பான யிவன்பிறந்த யோகத்தாலே
வாமென்ற யிவனுக்கு உத்தியோகந்தான்
வண்மையாய் வந்ததென்று வரிசைகூறு
தாமென்ற யிவனுக்கு ஆறுபிள்ளை
தயவாகப் பிறக்குமென்று சார்புசொன்னேன்
வேமென்ற யிவனுக்கு கண்டம்நாலாம்
வெகுமான மாகயிவன் வாழ்வான்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த ரேகையின் யோகத்தின்பயனால் இவன் பிறந்த 4-ஆம் வயது முதலாகவே யோகம் உண்டாயினவென்றும், இவனது பிற்காலங்களில் உத்தியோகத்தால் பிரபலயோகத்தை யடைவான் என்று கூறுவதுடன் இந்த ஜாதகனுக்குப் பிறக்கும் புத்திர புத்திரிகள் மொத்தம்-6 என்றும், கெண்டாதி கெண்டங்கள் நான்கு உண்டாகுமென்றும் எல்லோரிலும் மேம்பாடான அந்தஸ்து உடையவனாய் வாழ்வானென்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தென்னவெனில் நான்காம் வயதுமுதல் யோகமுடையவனும், உத்தியோகத்தால் மேம்பாடுடையவன் ஆவன் என்பதேயாகும். மற்றும் புத்திர விஷயங்களையும் கெண்டாதி கெண்டங்களையும் அறியத்தக்கது. 90

பார்க்கவே யிவனுக்கு நீரால்கண்டம்
பண்பான நரியாலே கண்டமுண்டு
ஏர்க்கவே யிவன்பிறந்த யோகத்தாலே
இயம்புவேன் சக்கரத்தி னியல்புநன்றாய்
மார்க்கவே மனுநெறியே தவறாமைந்தன்
மன்னவன்தான் மந்திரங்கள் மகிழ்ந்துஓதும்
ஆர்க்கவே யிவன்கோத்திரம் விளங்கவைப்பான்
அன்பான யிவன்வயதோ ரெழுபத்தெட்டே.

(இ-ள்) கெண்டாதி கெண்டங்களின் விருத்தாந்தங்களைக் கூறுமிடத்து நீரால் ஒரு கெண்டமும், நரி முதலிய மிருகங்களால் கடித்தல் முதலியன

வற்றால் கெண்டம் உண்டென்றும், இவனது அஸ்தத்தின்கண் உள்ள ரேகையினது பெருமையாலும், யோகத்தாலும், மனுநெறி தவறாத உத்தம அரசனாய் பற்பல மந்திரங்களை அறிந்துரைக்கத் தகுந்தவனும், தமது கோத்திரத்தை விளங்கச் செய்விக்கும் உத்தமனும், வயது 78-வரையில் சுகஜீவியாய் வாழத்தகுந்தவனும் ஆவான் என்று கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்தென்னவெனில்? நான்கு கெண்டாதி கெண்டங்களை யுடையவனாயினும், வயது 78-வரையில் சுகஜீவியாய் வாழத் தகுந்தவன் என்பதேயாகும். 91

எட்டான யிவன்வயதும் யோகஞ்சொன்னேன்
எம்பிரா னருளாலே வாழ்க்கைசொன்னேன்
மட்டான வால்மீக பந்தனத்தை
வரிசைபெறச் சொல்லிவிட்டேன் வண்மையாக
கட்டான ரிஷிகளென்போற் சொல்லவில்லை
கந்தபிரான் சொன்னதிந்தக் கருத்துமைந்தா
இட்டான சுகமெல்லாஞ் சொன்னாற்போலே
இனிதாக நடக்கவென்று எண்ணிச்சொன்னேன்.

(இ-ள்) தமது அஸ்தத்தின்கண் வால்மீக பந்தனரேகை என்பது அமையப் பிறந்த ஜாதகனது விஷயங்களை ஸ்ரீ எம்பிரானது திருவையால் உண்டாகிய வாழ்வு யோகம் முதலியனவற்றையும், வயது விவரங்களையும் தெளிவாய்ச் சொல்லிவிட்டேன். இவ்வாறு எல்லா உண்மை விஷயங்களையும் யான் கூறியதைப்போன்று மேன்மையைப் பெற்ற ரிஷிகளும் கூறவில்லை. ஏனெனில்? இவை ஸ்ரீ சண்முகக்கடவுள் எனக்கு உரைத்தனர். ஆதலால் இவையாவும் இவ்வுலகத்தவர்க்கு உண்மையாகவே பலிக்குமென்றெண்ணிக் கூறியதாகும். இதில் எதொரு ஐயமும் இல்லை எ-று. 92

சொன்னேனையா வெகுசுருக்காய்ச் சுருக்கித்தானே
சொற்பெரிய வால்மீக பந்தந்தன்னை
அன்னைமுதல் தந்தைவரை ஆய்ந்துசொன்னேன்
அப்பனே யிவன்வாழ்வும் அறிவுசொன்னேன்
என்னையே தொழுகின்ற பேர்கட்கெல்லாம்
எம்பிரா னருளாலே யியற்றுவேன்யான்
அன்னையைப்போ லின்னமுண்டு மைந்தாகேளு
அரனார்தன் னுதவியெலாம் ஆண்மைதானே.

(இ-ள்) வால்மீக பந்தனரேகை என்பது தமது அஸ்தத்தின்கண் அமையப்பெற்ற ஜாதகனது விஷயத்தை வெகு சுருக்கமாய் எவரும் அறியும் வண்ணம் கூறினேன். எவையெனில்? தாய் தந்தையர்களது விஷயமும், இவனுக்கு உண்டாகும் வாழ்வினது விசேஷங்களையும், யுக்தி புத்தியையும், இந்நூலில் நம்பிக்கை வைத்து என்னை தொழுவோர் யாவரும் எளிதில் அறியும்வண்ணம் எம்பிரானது அருளால் கூறுவேன் கேட்பீராக. எதனால் கூறுவேன் எனில்? எமது தாயாகிய பிராட்டியாரது அனுக்கிரகத்தாலும்,

ஸ்ரீ சிவபிரானது கிருபையாலுமே யான் கூறுவதற்கு முன் வந்துள்ளேன் எ-று. 93

தானமெனு மென்தாயைத் தோத்திரித்து
தயவாகப் பூரணியை வணங்கிநிற்பாய்
வானமெனும் மனோன்மணியே உமையேதாயே
வர்னவிழி மாமயிலே மாயிஆயி
பானமெனும் பராசத்தி யென்றுவானோர்
பதம்போற்றி யர்ச்சித்து புரிந்துவாழ்த்தித்
தானமெனுந் தங்கையடித் தரணியாளி
சரணமுவந் தெங்களைநீ காப்பாய்தாயே.

(இ-ள்) வானோர்கள் என்னும் தேவர் முதலாயினோர்கள் எல்லோர்க்கும் பிரணவப் பொருளாகிய எமது தாயைப் பலதரம் தொழுது தோத்திரித்து எவரும் தோத்திரம் செய்யத்தகுந்த மனோன்மணியே! உமாதேவியாகிய எனது அன்னையே! பலவர்ணங்கள் அமைந்த அழகான விழியும், மயிலை யொத்த நடையும் உடைய மகாமாயி! எமது பிராட்டியே! எல்லோரும் பராசத்தி என்கிற திருநாமத்தையே பானஞ்செய்து அழகிய திருவடிகளைப் போற்றி பலபுஷ்பங்களால் அருச்சித்து வாழ்த்திய ஓ நாராயணன் தங்கையே எம்மை காப்பது உமது கடமை என்றும், எந்நாளும் நீயே எங்களைக் காக்கத் தகுந்தவள் என்று வணங்கினார் எ-று.

(வி-ரை) இவை இந்நூலுண்டாகிய காரணமும், ஸ்ரீ சத்திதேவியினது பெருமையும் ஆகும். 94

கார்க்கவென்று தேவர்களும் முனிவோர்வாழ்த்த
காரணியாள் உமையவள்தான் மனதிரங்கி
ஏர்க்கவென்று ஈஸ்வரனு ரருளினாலே
இயம்புகிறேன் பிரம்மாவே யிசைந்துகேளு
பார்க்கவென்று பராபரனும் உமையாள்சோதி
பத்தினியாள் மனதுவைத்து பகர்வாள்சேதி
சேர்க்கவென்று திருமாலின் உதவியாலே
திருஷ்டித்த ரகசியத்தின் திரத்தைக்கேளே.

(இ-ள்) மேற்சொன்னவாறு நீயே காக்கத்தகுந்தவள் என்று வணங்கி நின்ற தேவர்களையும், முனிவர்களையும் பார்த்த உலகமாதாவாகிய உமாமயேஸ்வரியாள் கண்டு மனமிரங்கி பராபரவஸ்துவாகிய சத்திதேவியானவள் ஓ பிரம்மனே! நீங்கள் கேட்டுக்கொண்டுள்ளபடி இந்த ரகஸ்யத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக வென்று சொல்லத் தொடங்கினாள். ஆனதால், அப்படிப்பட்ட மகா சிரேஷ்டம்பொருந்திய மயேஸ்வரியாள் கூறிய ரகஸ்யத்தை இங்கு கூறுவோம் கேட்பீராக எ-று

(வி-ரை) இவை மகாபரமேஸ்வரியால் தேவர்களுக்கும், முனிவர்களுக்கும் உரைத்ததானதால், அப்படிப்பட்ட இரகஸ்யத்தை கூறுவேன் கேட்பீராக வென்று இந்நூலாசிரியராகிய கமலமாமுனிவர் கூறினார். 95

கேளப்பா அகஸ்தியனே பிரம்மாவேநீ
கேவலமாய் வதிஷ்டர்முதல் ரிஷிகாளென்று
வாளப்பா உலகத்தி லனேகசீவர்
வர்னலட்சங் கோடியதாய் வகுத்தாரீசன்
நாளப்பா சீவர்கட்குப் பிராணஞ்சேர்ந்து
நலமான சீவாத்மா எல்லோருக்குந்தான்
வேளப்பா கருதகிர்த்தர் மூவர்தாமும்
விதிப்படி சொல்லுகிறேன் விகற்பமாமே.

(இ-ள்) இவ்வாறு வணங்கிநின்றவர்களை உலகமாதாவானவள் கண்டு ஓபிரம்மாவே! அகத்தியர் முதலான ரிஷிகளே! கேளுங்கள். உலகரக்ஷகரான, ஸ்ரீசாக்ஷாத் ஈஸ்வரன் இவ்வுலகின்கண் பலவித யோனிபேதமாய் லக்ஷங் கோடி ஜீவன்களை யுண்டாக்கிப் பிராணனைக் கொடுத்தார். மேற்படி சீவாத்துமாக்களுக்கு பிரம்மா விஷ்ணு உருத்திரன் என்னும் மூவராலும் விதிக்கப்பட்ட வருவினைகளைக் கூறுவேன் இதில் யாதொரு சந்தேகமும் இல்லையாதலால் கவனமாய்க் கேட்பீராகவும் எ-று. 96

ஆகவே முன்காண்டந் தன்னிலேதான்
அறிந்தமட்டு மெல்லாந்தான் சொல்லிவிட்டேன்
வாகவே வகைதுறவும் அமைப்புமைந்தா
வாகாகச் சொல்லிவிட்டேன் வரிசையாக
தாகவே தரணியிலே மக்கட்காக
தாய்காக்க என்னையவர் தொழுததாலே
பாகவே பலபேர்கட் காகவென்று
பத்தினியாள் சொன்னமொழி கேட்பார்பாரே.

(இ-ள்) ஓ தேவர்களே! முனிவர்களே! நீங்கள் கூடி, ஓ பரமேஸ்வரி நீயே காக்கக்கடவை என்று தொழுததின் காரணத்தால் முன் சொன்ன மூன்று காண்டங்களாலும், அந்த ரேகைகளுக்கும் உடைய வகைகளையும், வாழ்க்கை விசேஷங்களையும், வயது கெண்டாதி கெண்டங்களையும் கூறினேன். இன்னும் மற்றுமுள்ள ரேகைகளுக்கும் என்னால் அறிந்தவரையில் கூறுவேன் கேட்பாயாக என்று, மற்றுமுள்ள மானிடர்களின் அஸ்தரேகை லக்ஷணங்களைக் கூறினள். ஆதலால் மேற்படி உத்தமியாள் வாய்பார்த்து மேற்படி தேவியானவள் சொன்ன உபதேசங்களைக் கேட்டனர் எ-று. 97

கேட்கவே தேவர்களும் முனிவோர்போற்ற
கேவலமா முமையவள்தான் சொன்னாளப்பா
ஆட்கவே பருவத ராஜன்குமாரி
அன்பாக வாய்திறந்து அளித்தாள்மைந்தா
நீட்கவே கவுரிமாரி வடுகிஆயி
நீலிதிரி சூலியவள் நிகழ்த்தினாள்பார்
வாட்கவே யுலகமெல்லாம் வாழவேண்டி
மனோன்மணித்தா யுரைத்தனள்பார் மகிழ்வதாயே.

(இ-ள்) மேலே சொன்னபடி முனிவர்களும் தேவர்களும் வணங்கி ஓ கௌமாரி! வடுகி! எல்லோர்க்கும் சக்தியைத்தரத்தகுந்ததேவி! நீலி! திரிசூலி! என்று தொழுது போற்றியதை உலகமாதாவும் பருவதராஜன் புத்திரியும், மனோன்மணியுமான ஈஸ்வரி இவ்வுலகிற் பிறந்த மானிடர்கள் தமக்கு உண்டாகும் வரும்வினையை முன்னதாயறிந்து வாழ்ந்திருக்கவேண்டும் என்ற எண்ணங்கொண்டு மிகுந்த சந்தோஷத்துடன் இந்த ரேகை சாஸ்திரத்தை எல்லோரும் அறியும்வண்ணம் கூறுவாள் எ-று.

(வி-ரை) எல்லா சாஸ்திரங்களிலும் ரேகை சாஸ்திரமென்பது மிக்க பெருமையுடையது ஆகலால் இதனை சத்திதேவியாலே தெரியலாம் என தேவர்களும், முனிவர்களும், ரிஷிகளும் வணங்க மேற்படி தேவியால் உபதேசிக்கப்பெற்றதே இரேகை சாஸ்திரம் என்னும் இந்நூல் என்பது கருத்து. 98

ஆகவே முன்காண்ட மூன்றுசொன்னேன்
அறிந்தமட்டு மெல்லாந்தா னன்பாய்ச்சொன்னேன்
வாகவே வகைதுகைகள் வகுத்துச்சொன்னேன்
வளமையுள்ள நாள்கோள்கள் மகிழ்ந்துசொன்னேன்
ஏகவேமுன்காண்டத் தெல்லாஞ் சொன்னேன்
என்மக்க ளறிவதற்கா யியம்பினேன்பார்
காகவே கருணைவைத்து கருதிநன்றாய்க்
கைலாச மனோன்மணித்தாய் கடாட்சித்தாளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! முன் கூறிய மூன்று காண்டத்தாலும், அந்தந்த ரேகைகளிருக்கும் தன்மையையும், அதற்குண்டாகிய நாள் கோள் நக்ஷத்திரம் திதி முதலியவற்றையும், ஆயுள் கெண்டம் முதலியனவற்றையும், இப்பூமியிலுதிக்கும் மானிடர்களாகிய எனது மக்கள் எளிதில் அறிந்து பயனடையும்வண்ணம் ஸ்ரீசர்வேஸ்வரன் மூலமாய் என்னாலறிந்தவரையில் சொல்லிவிட்டேன். இன்னுமுள்ள ரேகைகளினது விஷயங்களையும் என்னாலறிந்தவரையில் கூறுவேன் என ஸ்ரீமனோன்மணியானவள் கூறத் தொடங்கினாள் எ-று. 99

மூன்றாவது காண்டம் முற்றிற்று.

---

ஆக காண்டம் 3-க்கு பாடல்-254.

---

# நான்காவது காண்டம்



ஆதியெனும் பராபரத்தி னருளினாலே
 ஆனந்தசிவயோக மம்பாள் சொல்வாள்
சோதியெனும் பரப்பிரம்ம சோதிமாதா
 சொல்லுவாள் நாலாங்காண்டத்திலேதான்
நீதியெனும் பரஞ்சோதி யுமையாள்தாயே
 நீணிலத்தில் தேவர்களும் முனிவோரெல்லாம்
வாதியெனுங் கேசரியின் வண்மைதன்னை
 வகுத்துரைப்பேன் தேவர்கட்கும் வண்மைகேளே.

(இ-ள்) முதற்பொருளாகிய பராபரத்தினது கிருபாகடாக்ஷத்தால் என்னேரமும் சிவானந்தவாரியில் மூழ்கிக்கிடக்கும் எமது தாயாகியும் பிரகாசத்தையுடையதும் பரப்பிரம்ம சொரூபமாகியும் விளங்காநின்ற உலக மாதாவும், நீதியையுடையதும், எவருங்காண்பதற்கரிய பரஞ்சோதியாயும் உள்ள உமையாள், தன்னை வணங்கித் துதிக்கும் தேவர்களையும் முனிவர்களையும் பார்த்து நீங்கள் கேட்ட ரேகைபலனைக் கூறுவேன் கேட்பீராகவென்று கூறத்தொடங்கினர் எ-று. 1

சங்குசக்கரக்குலிச ரேகையின் பலன்

கேளீரோ சக்கரத்தின் ஆறுங்கூட்டி
 கேவலமாய்ச் சங்குசக்கிரக் குலிசப்பாடல்
நாளீரோ சங்குசக்கரக் குலிசைமைந்தா
 நலமாக மால்விரலில் வுயர்ந்துகாணும்
கேளீரோ இவன்கையிலே ஏழுரேகை
 கர்க்கடக ரேகையது இருக்கும்பாரு
ஆளீரோ விடக்கம்பந் திருவையோடு
 ஆனநல்ல கையிலேதா னிருக்கும்பாரே.

(இ-ள்) ஸ்ரீ ஆறுமுகக் கடவுளினது திருப்பாத கமலங்களைத் துதித்து சங்குசக்கரக்குலிச ரேகையினது பலாபலன்களைக் கூறுவேன் கேட்பாயாக. மேற்படி சங்கு சக்கரக்குலிச ரேகை என்பது மால்விரல் என்னும் நடுவிரலிலேறி நிற்பதாகும். அதாவது இவனுடைய அஸ்தத்தில் ஏழுரேகைகள் கர்கடக ரேகை என்னும் பெயருடனும், லக்ஷ்மிரேகை, விஷ்கம்ப ரேகை முதலானவைகளும் இவனது அஸ்தத்தின்கண் அமைந்திருக்கும் என்று கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் மேற்படி ரேகையானது மூன்று விதமானது என்று கூறவேண்டியதாகிறது. அவையாவன: லக்ஷ்மிரேகை, விஷ்கம்ப ரேகை என்னும் இருவகைகளாய் நடுவிரல் ஏழு ரேகைகளாய் அமைந்திருக்கும் என்பதாம். இதன் பலன் பின் வருமாறு. 2

பாரப்பா சக்கரமாம் குலிசைதானும்
பரமனிட அருளாலே ரேகைகாணும்
காரப்பா கடாட்சிக்கப்பெற்ற ரேகைமைந்தா
கருணையினுல் மால்கையி லிருக்கும்பாராய்
சாரப்பா சற்குருவாம் பிரமரேகை
சாஷ்டாங்கம் சிவன்செயலுஞ் சற்குருவாகும்
பேரப்பா பேரின்பம் பேணிவாழ்த்தும்
பெரியவன்பார் இவன்ரேகை பெரியதாச்சே.

(இ-ள்) மேற்படி சங்குசக்கரக்குலிச ரேகையானது தனது நடுவிரலில் அமைந்திருக்குமேயாமாஞல் இவை ஸ்ரீ பரமேஸ்வரனது கிருபா கடாக்ஷமும், எல்லோராலும் மிக்க புகழ்ச்சியாய்ப் பேசத்தகுந்த ரேகை என்றே கூறவேண்டுவதாகும். ஏனெனில்? மேற்படி ரேகையானது சற்குரு ரேகை என்றும், பிரம்மரேகை என்றும் கூறவேண்டியதாகும். மற்றும் இந்த ரேகை உடையவர்கள் எல்லோராலும் நமஸ்கரிக்கத் தகுந்தவனும், சிவ பிரானது கருணையுடையவனும், பேரின்பம் என்னும் மேலான பதவியும், எல்லோர்க்கும் பெரியவனுயும் இருப்பான் எனவும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன ரேகையானது பிரம்மரேகை என்னும் பெயருடையது. ஆதலால், பொதுவாய் பேரின்பமுடையவன் என்பது கருத்து. இதனது விஷயங்களைப் பின் வருவனவற்றுல் காண்க. 3

ஆச்சென்ற இவன்செயலும் திசையும்யோகம்
அன்பான விவாகமது ஆனதெல்லாம்
வாச்சென்ற முடிகிடைப்பில் காலகண்டம்
வச்சிரமணி யோகமடா வரிசைகேளு
நீச்சென்ற இவன்யோகங் குபேரனப்பா
நிதியுடைய வல்லவன்பார் நேர்மைகேளு
வாச்சென்ற வகைநடத்தி யுள்ளமைந்தன்
வாகான அழகியன்மா வர்னனுமே.

(இ-ள்) சக்கரக்குலிசரேகை என்பது தமது அஸ்தத்தின்கண் அமைந் திருக்குமேயாமாஞல் அந்த ஜாதகன் திசையோகம் முதலியன பிரபல முடையவனும் அழகும் தனக்குச் சந்தோஷமான கலியாண சுபசோபனுதி களும் முன்கூறிய வச்சிரமணிரேகைக்கு சொல்லியதுபோல் நடக்கும். இதுவன்றி நிதியில் குபேரனைப் போன்றவனுகி நற்செய்கை நன்னடத்தை முதலியன உடையவனுகி மாநிறமுடையவனுகியும் இருப்பான் என அறிவா யாக எ-று.

(வி-ரை) இந்த ரேகையினது யோகம் சுகம் முதலியனவற்றைக் கீழ் வருவனவற்றுல் கூறுவார். ஆயினும், இங்கு பொது வச்சிரமணிரேகைக் குரிய திசை யோகம் முதலியன உடையவன் என்றனர். 4

வர்னமடா அழகியனும் இடக்கண்சாயல்
வாகான மச்சங்கள் மூன்றுஉண்டு
சொர்னமடா இவன்வாழ்வு குபேரன்வாழ்வாம்
சொற்பெரிய யோகத்தில் வல்லவன்காண்

நிர்னமடா ஒல்லியிவன் உருவமையா
நீலாதிசொல்தவருன் பொய்சொல்லானே
கர்னனடா கீர்த்திகள் யோகவாழ்க்கை
காசினியி லிப்பிறவி வேணுந்தானே.

(இ-ள்) மேற்கூறியவண்ணம் மாநிறத்தை யுடையவனும், அழகுடைய வனும், இடக்கண்ணுனது சாயலுடையவனும், பெருமைபெற்ற மச்சங்கள் மூன்றுடையவனும், சொர்ணமாகிய பொருளில் குபேரனைப்போன்றுண்டாகி வாழ்பவனும், சொல்வதற்கரிய யோகங்கள் அனேகமுடையவனும், மெல் லிய உருவமும், சொல்தவராதவனும், தந்திரவகைகள் அறியாதவனும், பொய்சொல்ல மாட்டாதவனும் ஆகி, கர்ணனைப்போன்ற கீர்த்தி யோகம் வாழ்வு முதலியன உடையவனுவான். இப்பூமியில் மானிடராய்ப் பிறந்தால் இப்படிப்பட்ட பிறப்பல்லவோ பிறக்கவேண்டும் எ-று.

(வி-ரை) மாந்தராய் பிறந்தால் இவ்வாறல்லவோ பிறக்கவேண்டும் என்ற கருத்தைப் பின் வருவனவற்றுல் காண்க. 5

வேணுமென்ற இவன்போலுந் தவங்கள்செய்து
வேதாந்த குருவருளால் வரங்கள்வாங்கி
ஆணுவங்கள் போலவுந்தான் பாக்கியத்தோடே
அன்பாகப் பூமியிலே பிறக்கவேணும்
தாணுவங்கள் தனயோகம் இல்லாமைந்தன்
தவஞ்செய்த மகிமையினுல் வந்ததன்றே
பாணுவங்கள் பரமனிட அருளேமைந்தா
பார்வதியாள் பெற்றமைந்தன் பாக்கியமாச்சே.

(இ-ள்) யோகம் தனம் முதலிய இல்லாதவனுய் இருந்த முன் ஜன்மத் தில் இந்த ஜாதகன் அளவிறந்த செல்வத்தையும், சுகத்தையும் அடைத வேண்டும் என்னும் அவாவினேடு வேதங்களையறிந்த குருமூலமாய் அனேக தவங்களைச்செய்து வரம் பெற்றுன். மேற்படி தவம் செய்த மகிமையால் ஸ்ரீசர்வேஸ்வரனது கிருபையுண்டாகி பார்வதியின் கிருபையால் இவனுக்கு நல்ரேகையமைந்ததின் காரணத்தால் இந்த ஜாதகன் சகலபாக்கியமும் பெற்றுன் எ-று.

(வி-ரை) 'பார்வதியாள் பெற்றமைந்தன் பாக்கியமாச்சே' என்றதால் பார்வதியினது புத்திரர் அறுமுகக்கடவுள் ஆதலாலும், இந்த ஜன்மத்தில் மேற்சொன்ன அறுமுகக்கடவுளினது பாக்கியமும் பெற்றுன் என்றும் கூறலாம். 6

ஆச்சப்பா முற்சனனம் சொல்வேன்மைந்தா
அன்பான பாலகனும் பிராமணன்பார்
மூச்சப்பா விஷ்ணுவின்தன் மூச்சதாகும்
முற்பிறவி யீஸ்வரனுர் பாதத்துளாம்

பாச்சப்பா பரமனிட அருளாலேதான்
பார்தனிலே பிராமணனாய்ப் பிறந்தான்பாரு
காச்சப்பா உமையவட்கும் விஷ்ணுவுக்கும்
காட்சியாய்ப் பூஜைவிதி செய்தான்காணே.

(இ-ள்) ஓ எனது மைந்தனே! எவரும் சந்தோஷிக்கத்தகுந்த இந்த ஜாதகனது முன் ஜனனத்தின் விஸ்தாரம் சொல்வேன் கேட்பாயாக. இவன் தனது முன் ஜனனத்தில் பிராமணனும், ஸ்ரீவிஷ்ணுவினது உயிராகியமைந்தவனும், ஈஸ்வரனது பக்தபாததூளியும் ஆவன். மேற்படி ஈஸ்வரனது கிருபாகடாக்ஷத்தால் பிராமணனாய்ப் பிறந்து உலகமாதாவாகிய உமாமயேஸ்வரிக்கும் உலகரக்ஷகரான விஷ்ணுவுக்கும் பூஜைவிதிகளைத் தவராமல் செய்து வந்தான் எனவுங் கூறுவாய் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் பிராமணனும் 'ஈஸ்வரனார் பாதத்தூளாம்' என்றதால் முதல் ஜனனம் சைவப்பிராமணன் என்பது கருத்தாகும். 7

செய்திடவே முன்னேதான் முத்திபெற்றான்
செப்பமுடன் அறமிகுதி செலுத்தினான்பார்
மெய்திடவே மேதினியில் யாரும்வாழ்த்த
மெய்ப்பரனுஞ் சந்தோஷம் விளங்கினான்பார்
ஐதிடவே இவன்தேடுந் திரவியந்தான்
அந்தணர்கள் பூமியிலே மறைத்ததுண்டு
உய்திடவே யுலகமதில் சனனம்ரெண்டு
ஓகோகோ விஸ்வனுமாய்ப் பிறந்தான்ரெண்டே.

(இ-ள்) மேற்சொல்லிய செய்யுளில் கூறியவண்ணம் தனது முதல் ஜன்மத்தில் அநேக தானதருமங்களைச் செய்து இப்பூமியிலுள்ள யாவரும் வாழ்த்தவும், ஸ்ரீ சாக்ஷாத் பரமேஸ்வரரும் சந்தோஷிக்கத் தக்கவனாய் விளங்கி முத்திபெற்று இருந்தாலும், இவன் தேடிய திரவியங்களை மற்றுமுள்ள பிராமணர்கள் பூமியில் புதைத்துவிட்டனர். அதனை அனுபவிக்கவே இரண்டாம் ஜன்மததில் விஸ்வகர்ம குலத்தில் பிறந்தான் என்றும் கூறுக எ-று.

(வி-ரை) முன் ஜன்மத்தில் பிராமணனாய்ப் பிறந்து அநேக நற்செயல் புரிந்து முக்திபெற்றவனாயினும், இவனது திரவியத்தை இவன் வருணத்தார் பூமியில் புதைத்துவிட்டதால் அதனை தான் அனுபவிக்கவே இரண்டாவது விஸ்வகர்மனாய் பிறந்தான் என்பது கருத்தாகும். 8

ரெண்டான ஜனனந்தான் உலகுதன்னில்
ரேகையுடன் விஸ்வனுமாய்ப் பிறந்ததென்ன
வண்டான முதற்சனன மூன்றுக்குமுன்
வளமான விஸ்வகர்மா சிவபூஜைக்கு



நன்றான புஷ்பவகை சமிதைகந்தம்
நலமாகக் கொண்டுவந்து நல்கினன்பார்
அன்றான சிவதூளிதஞ் செய்ததாலே
ஆனதொரு பாக்கிய விஸ்வனானன்பாரே.

(இ-ள்) இரண்டாம் ஜன்மத்தில் விஸ்வகர்மனாய் ரேகை அமைந்து இப்பூமியில் பிறந்ததற்குக் காரணம் என்னவெனில்? இச்செனனத்திற்கு முன் மூன்றும் ஜனனத்தில் விஸ்வகர்மாவினது சிவபூஜை செய்தற்கு வேண்டிய புஷ்பவகைகளும், கந்தபரிமளாதி முதலிய வாசனை திரவியங்களை இந்த ஜாதகன் கொண்டுபோய் உதவிசெய்தான். அவ்வாறு சிவபிரானுக்கு பக்த பாததூளியாயிருந்த காரணத்தால் இந்த ஜன்மத்தில் அளவிறந்த தனம் உடையவனாய் விஸ்வகுலத்தில் பிறந்தான் என்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இரண்டாம் ஜன்மத்தில் ஏன் விஸ்வகுலத்தில் பிறந்தான் என்பதை இச்செய்யுளால் விளக்கினார். அவையாவன: முன் மூன்றும் ஜன்மத்தில் விஸ்வகர்மாவினது சிவபூஜைக்கு வேண்டிய திரவியங்களைக் கொடுத்து தொண்டு செய்ததால் என்க. 9

ஆனதென்ன விஸ்வகர்மா மனதுவந்து
அன்னவர்க்குப் பலமீந்து உலகுதன்னில்
வானவரி லோர்பிறவி செய்துவைப்பேன்
வங்கிசத்தில் போய்பிறக்க என்றுசொன்னான்
கானதென்ன கருணையினால் வரங்கள்வாங்கி
கயிலாச ரருளாலே பிறந்தான்மைந்தன்
நானதென்ன உமையுடைய குலமேமைந்தா
நாகரீக மானதிவை நயந்துபாரே.

(இ-ள்) மேற்சொல்லிய விதங்களாய் தொண்டு செய்ததின் காரணத்தால் மேற்படி விஸ்வகர்மாவானவர் இவன்மீது கருணைகூர்ந்து இவனுக்கு பலாபலங்களைக் கொடுத்து போதித்து இவனை வானுலகில் வானவர்களிலொருவராய் மேற்படி வானவாம்சத்தில் போய் பிறப்பாயாக என்று வரங் கொடுத்தார். அவ்வாறே இந்த ஜாதகனும் வானவர் அம்சத்தில் ஸ்ரீசர்வேஸ்வரனது அருளால் பிறந்து வேண்டிய வரங்களையும் பெற்றான். மற்றும் இந்த ஜாதகன் மிக்க நாகரீகமமைந்த ஸ்ரீ உமாமயேஸ்வரியின் அம்சமாகுமென்று தெரிந்துகொள்வாயாக எ-று. 10

பார்க்கவே பராபரியும் வந்துதித்த
பத்தினியார் மைந்தர்களும் ஆவார்பாரு
ஏர்க்கவே யீஸ்வரியும் அரனுங்கூடி
ஏகாந்த மாயிருந்த வமிசமாகும்
கார்க்கவே பரசமயம் உண்டுசெய்து
கயிலாச பகவானும் வாக்கிட்டார்பார்
ஆர்க்குந்தான் இவ்வகையாம் பொருளேமைந்தா
அகப்படா தென்றுவுமை அருளினாளே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது விஷயங்களைக் கூறவேண்டுவ தெனில்? ஸ்ரீ சாக்ஷாத் பராபரிக்குப் பிறந்த புத்திரர்களுக்கு ஒப்பானவன் என்றும், இதுவுமன்றி ஈசனும் ஈஸ்வரியும் கூடி ஏகாந்தசொரூபத்திலிருந்த அந்த வஸ்துவின் அமிசமென்றும் கூறலாம். இதுவன்றி ஸ்ரீ கைலாசபதி யாகிய ஈசன் இந்த ஜாதகனுக்கு பரசமயமாகிய ஏகாந்த வாழ்விலிருப் பாய் என வரங்கொடுத்தும் உள்ளனர். ஓ முனிவர்களே! இவ்வகைப்பட்ட பெருமை பெற்ற பிறவியானது எவருக்கும் கிடைப்பது மிக்க அரிதென்று உமாமயேஸ்வரி கூறினாள் எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனது விஷயமாய் இதுவரையில் கூறிவந்ததால் இந்த ஜாதகன் முன்ஜன்மத்தில் தேவவம்சமும், ஈஸ்வர அம்சமும் ஆகு மென்றே குறிப்பிட்டுள்ளது. இதனாலேயே இச்செய்யுளின் இறுதியில் இவ்வாறு ஜன்மம் கிடைப்பது அரிதென்று கூறினார். 11

நாளென்ற இவ்வசனம் பிரம்மாவதிஷ்டர்
நலமான நந்திகேஸ்பரருங் கௌதமர்
ஆளென்ற வேதவியாசர் அகஸ்தியருந்தான்
அன்பான வாசவனும் தூர்வாசர்தானும்
வானென்ற வுமையவளுஞ் சொன்னமாத்திரம்
வரிசையா யிவர்களெல்லாம் வணங்கினார்கள்
தானென்ற தாழ்வில்லாத் தரணியாளத்
தங்கமுத்தைப் பெற்றெடுத்த தாய்சொல்வாளே.

(இ-ள்) இவ்வாறு மேன்மையாகக்கூறிய உமாமயேஸ்வரியை தன் அருகிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த பிரம்மா, வதிஷ்டர், நந்தீஸ்வரர், கௌதமரிஷி, வேதவல்லவரான வியாசர், அகஸ்தியமாமுனிவர், வாசவர், துருவாசர் முதலாயினோர் மேற்படி தேவியை வணங்கித் துதித்தனர். பின்னும் எந்நாளும் தாழ்வடையப்படமாட்டாததும், இவ்வுலகை ஆண்டு இரக்ஷிக்கத்தகுந்ததும் தங்கத்தையும் முத்தையும் ஒப்பிடத்தகுந்த ஸ்ரீ சண் முகக்கடவுளைப்பெற்ற எமது தாயாகிய உமாதேவியார் பின்னும் கூறத் தொடங்கினாள் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்நூலை ஸ்ரீஉமாதேவியார் தன்னை அடுத்த பிரம்மா முதலிய ரிஷிகள் முனிவர்கள் முதலாயினோர்க்குக் கூறுவதாய்த் தெரிகிறது. இதனை முன்னுரையில் காண்க. 12

சொல்லுவா யுலகமெல்லாம் படைத்தசோதி
சொற்பெரிய பத்தினியே சோதிமாதா
நல்லுவாய் நாரணியே வைகுண்டத்தாய்
நற்பதவி யீன்றருளும் நாயகியே
வெல்லுவாய்ப் புவனமெல்லாம் வேதரூபி
வேதாந்த வேதியம்மா விமலிரூபி
நல்லுவாய் மக்களைநீ ரட்சியம்மா
நலமாகப் பரகதியை நாட்டுந்தாயே.

(இ-ள்) மேற்சொன்ன முனிவர்கள் தேவர்கள், பிரம்மா முதலான பேர்கள் தேவியை வணங்கி, ஓ அம்மணி! இவ்வீரேழு பதினான்கு உலகத்தையும் படைத்தருளிய தாயே! கற்பென்பதையே ஆபரணமாய்ப் பூண்டு சுயஞ்சோதி பிரகாசமாய் நிறைந்துள்ள எனது தாயே! ஓ நாரணியே! எந்நாளும் வைகுந்தத்தி லமர்ந்திராநின்றவளும் அனைவர்க்கும் நற்பதவியைத் தரத் தகுந்தவளும், இப்புவனமெல்லாம் வேதமந்திரத்தால் துதிக்கத்தக்கவளும், வேதமுதல்வியும், விமலியும், சூலாயுதமும் பிடித்த எமது தாயே! உமது மைந்தர்களாகிய எங்களை இரக்ஷித்து பாகதியைக் கொடுப்பாய் எமது அம்மணி எ-று. 13

தாயென்று கனவிலுமென் மனதிலுந்தான்
    தார்குழலே யுன்திருத்தாள் தலைமேல்வைத்தோம்
ஆயியென்று அனுதினமும் போற்றுவோமே
    அன்பாக எங்களைநீ கார்க்குந்தாயே
வாயென்று சொல்லவுந்தான் போராதம்மா
    வங்கிசத்தைக் கார்க்குமுன் வராகித்தாயே
பேயென்றும் பித்தனென்றும் பிள்ளையைத்தான்
    பெற்றெடுத்த மாதாவே பெருமைசெய்ய.

(இ-ள்) ஓ எமது தாயே! உம்முடைய திருத்தாமரைபோன்ற பாதகமலங்களை எங்கள் சிரசிலணிந்து கனவிலும் மறவாமல் உம்முடைய திருநாமத்தையே பாராயணம் செய்யத்தகுந்த நீரே எங்களுக்கு தாயாகும். ஆனதால், உம்முடைய திருநாமங்களையே எந்நாளும் போற்றுவோம். இன்னும் உமது அளவிறந்த திருநாமங்களால் துதிப்பதற்கு முடியாது; எங்களது வங்கிசத்தைக் கார்க்கவே ஒருருவாய்ப்பிறந்த வராகித்தாயே! பேயனென்றும், பித்தன் என்றும், பிள்ளைகளைப் பெற்ற மாதாவே! எங்கள் மனத்திலுள்ள குறைகள் தீரும்வண்ணம் கடாக்ஷித்து அருள் செய்வாயாக எ-று. 14

செய்யவென்று முனிவர்களும் தொழுதுபோற்ற
    சேதிசொல்வா ளுத்தமியும் செப்பக்கேளீர்
வையகத்தில் சக்கரக் குலிசைகண்டால்
    வைகுண்ட நாரணனுர் மூச்சதாகும்
மெய்யனென்ற மெய்யனவன் வேதாந்தவேதன்
    மேன்மைபெற்று வந்துதித்தான் மேதினித்தான்
செய்யவுந்தான் திருமுடியில் புஷ்பஞ்சூடும்
    செகராஜன் குபேரனிவன் செலுத்தும்வாழ்க்கை.

(இ-ள்) இவ்வாறு தேவர்கள் முனிவர்கள் முதலாயினோர் மேற்படி தேவியை தொழுதுப் போற்றவே மேற்படி தேவியானவள் கருணைகூர்ந்து உரைத்ததைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இப்பூமியின்கண் சக்கரக்குலிச ரேகை என்பது தமது அஸ்தத்தின்கண் அமைந்திருக்கின் அந்த ஜாதகன் வைகுண்டத்தின்கண் எழுந்தருளி இராநின்ற ஸ்ரீ நாராயணனது மூச்சென்றே கூறவேண்டும். மெய்யன்புடையோர்க்கு மெய்யன்ப

ளுகியும், வேதாந்த வேதனுமான ஸ்ரீ சிவபிரானது கிருபையாலேயே இப் பூமியின்கண் மானிடனுய்ப் பிறந்தான். ஆயினும், இந்த ஜாதகன் ஸ்ரீ சிவ பிரானது திருமுடியின்கண் புஷ்பம்சூட்டித் தொழத் தகுந்தவனும், ஜெகத் தாசனும், குபேரன்போன்ற தனமுடையவனுகியும் வாழ்வான் என்று அறிவாயாக எ-று. 15

வாழ்க்கையடா யிவன்பிறந்த செனனயோகம்
வண்மையாய்ச் சொல்லுகிறேன் வரிசைகேளீர்
நாள்கையடா இவன்பிறந்த இல்லறந்தான்
நலமான புதுமனையு மிரண்டுவாசல்
ஆள்கையடா செவ்வாயில் இரவுதன்னில்
அன்பான நாழிகைதான் இருபத்தைந்தாம்
வாழ்க்கையடா ராகுவுட வுச்சமாகும்
வண்மையா லிவனுக்குக் கிரகம்ராசி.

(இ-ள்) இவ்வாறு ஜனித்த ஜாதகனது வாழ்க்கை விவரங்களையும், யோகம் முதலியனவற்றையும், விவரமாய்க் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகன் பிறந்த மனையானது இரண்டு வாசலுடைய தாயும், புதிய மனையாகவும் இருக்கும். மற்றும் இவன் பிறந்த வாரமானது மங்களவாரமாகிய செவ்வாய்க்கிழமை இரவில் 25-நாழிகையில் இராகு உச்சம் பெறவும், மற்றுமுள்ள கோட்கள் நல்ல ஸ்தானங்களிருக்கவும் பிறந் தான் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவன் பிறந்தது செவ்வாய்க்கிழமை இரவு 25-நாழிகையில் பிறந்தான் என்றும் கூறினுர். மற்றும் எந்த நக்ஷத்திரம் என்பதை பின்வரும் 18-ஆம் செய்யுளில் காண்க. 16

கிரகமென்ற இவன்பிறந்த வடவாசல்வீட்டில்
கிளையாலே மனிதர்களும் உரிமைமெத்த
துரகமென்ற சதுரங்க பலத்தினுலே
சுகம்பெற்று வாழலாஞ் சுசிகரந்தான்
அரகமென்ற அறத்தையிவன் பேணுவான்பார்
அன்பான பாலனுக்கு சிறுகுரலதாகும்
வரகமென்ற இவன்பிறக்கும் போதுமைந்தா
வாகான அவ்விடத்தில் பெண்கள்மூன்றே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகன் பிறந்த கிரகலக்ஷணங்களைக் கூறு மிடத்து மேற்செய்யுளில் கூறிய புதுமனையில் வடக்குவாயிலுடைய அறை யில் பிறந்தான் எனவும், அனேக பந்துவர்க்கங்களையுடையவன் என்றும், குதிரைகளும், சதுரங்கசேனையும் கூடிய பலமுடையவனும் எந்நாளும் தாழ்ச்சியடையப்படமாட்டாத வாழ்வுடையவனுகியும், சுசிகரமுடையவ னும், தெய்வங்களால் புகழத்தகுந்த தருமமார்க்கங்களைப் பலவும் செய்து வாழ்பவனுகவும், சிறுகுரல் உடையவன் என்றும் கூறலாம். இதுவன்றி இவன் ஜனித்த காலம் இவன் தாயுடன் இருந்த பெண்கள் மூவர் என்றும், கூறுவாயாக எ-று.

(வி-ரை) குதிரையும், சதுரங்கசேனைகளும் உடையவர் அரசர்களே யாதலால், இந்த ஜாதகன் அரசனாய்ப் பிறந்தான் என்பது கருத்து. 17

பெண்களென்ற மூன்றுபேர் பெண்கள்மைந்தா
பேணியே யிருக்கும்பபோ பூமிபார்த்து
அங்களென்ற மைந்தனிவன் பிறந்தானப்போ
ஆச்சரியஞ் சதையமதி லவதரித்தான்
கொங்குமுத லினம்வரைத் தேடினாலும்
கோளனைப்போல் குலிசமுடன் பிறப்பறிந்து
அங்கையிலே ரேகையைந்துண் டாகுமைந்தா
அதிகாரம் வாழ்வுண்டாம் ஆய்ந்துசொன்னேன்.

(இ-ள்) மேலே கூறியவண்ணம் இந்த ஜாதகன் பிரசவகாலத்தில் இவன் தாயுடனிருந்தவர்கள் 3 பெண்களாகும். அச்சமயம் இச்சாதகன் சிரோதயமாக பூமியைப் பார்த்துப் பிறந்தவனாவன். மற்றும் இந்த ஜாதகன் சதயநக்ஷத்திரத்தில் பிறந்தவன் ஆவன். மற்றும் இந்த ஜாதகனைப்போன்று யோகத்தில் பிறந்தவர்களை கொங்குநாடு முதல் இந்நாடு வரையில் தேடினாலும் கிடைப்பது அரிதாகும். மேலும் இந்த ஜாதகனது கையில் 5-ரேகை உண்டு. ஆதலால், இவன் எல்லோரையும் அதிகாரம் செய்யத்தக்கவனும் மேலான வாழ்வுமுடையவன் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) செல்வத்திற் சிறந்த சீமான்கள் வாழும் இடம் கொங்கு நாடாதலால், இந்த ஜாதகனைப்போன்ற சீமான் கொங்குதேயத்திலும் கிடைக்கான் என்பது இச்செய்யுளின் முக்கிய கருத்து. 18

ஆய்ந்துநான் இன்னமுந்தான் சொல்லக்கேளு
ஆகார இவன்கெர்ப்பம் ஆறும்நாளாம்
வாய்ந்துமுள்ள மனையாளும் மன்னன்தானும்
வரிசையாய் தென்பாலில் புணர்ச்சியானார்
சேர்ந்துமிக தரித்துகெர்ப்பந் திசையோகத்தில்
சேர்மானம் உச்சமது கெர்ப்பம்நாலாம்
ஏர்ந்துமிகப் பிறவியிலே ராகுஉச்சம்
என்சொல்வே னவமாண்டு இருப்பான்ராகே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது விஷயங்களைக் கூறவேண்டுவ தெனில்? இந்த ஜாதகன் தாய் மாதவிடாயாகிய 6-ஆம் நாள் தென் திசையிற் சிரம்வைத்து புணர்ச்சி செய்யுங்காலம் இந்த ஜாதகன் கர்ப்பந் தரித்து நல்ல பெருமைபெற்ற உச்சமாகி நல்ல யோகத்தில் பிறந்தான் எனக் கூறுவதுடன் இந்த ஜாதகன் நான்காவது பிறவி எனக் கூறுக. ஜனனகாலத்தில் இவன் கோசாரப்படி இராகு உச்சமானான் எனவும், மேற்படி இராகுதிசை கெர்ப்பத்தில் சென்றதுபோக நின்று பலன்தரும் வருஷம் 9 எனவும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் 4-ஆம் கெர்ப்பம் என்றதையும் அதன் விவரங்களையும் கீழ்வரும் செய்யுளால் அறிக. 19

இருக்கவும்தான் இவனுக்கு முன்னேமைந்தா
இயல்பாக மூன்றுபேர் பிறந்தார்பாரு
தருக்கவும்தான் இரண்டுபேர் இருப்பாரப்பா
தரித்துதப்பா கர்ப்பமொன்று தாழ்ந்துப்போச்சு
பருக்கவும்தான் மனையிலுள்ள பொருள்களெல்லாம்
பண்பான பணமுதலும் ஆரம்போகும்
திருக்கவுந்தான் ஆண்நான்கு பெண்தானைந்து
திரமாகப் பிறக்குமென்று செப்பினேனே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்கு ஜேஷ்டன் என்னும் முன் பிறந்தவர்கள் மூன்றுபேர் எனவும், அவற்றுள் 2-பிறவிகளே பூரண ஆயுளுடையவராய் இருப்பார் எனவும், ஒரு கெர்ப்பமானது பிறந்து இறந்து போனதென்றும், பிறந்த காலங்களில் இவனது மனையினுள் பொன்-பொருள் - பூஸ்திதி பூஷணம் முதலியன யாவும் களவுபோகும் எனவும், இந்த ஜாதகனுக்குப் புத்திரவர்க்கங்கள் ஆண் நான்கும், பெண் ஐந்தும் மிக்கமேன்மையுடன் பிறக்குமெனத் திண்ணமாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) பிறந்தவுடன் தன் பொருள் யாவும் களவுபோகும் என்றமையால், தன் கைப்பொருள் யாவும் நாசமாகும் என்றும் கூறலாம். இந்த ஜாதகனுக்கு 4-ஆணும், 5 பெண்ணும் பிறக்கும் என்றதைப் பின் வருவனவற்றால் அறிக. 20

செப்புகிறேன் இவனுக்குத் திசையோகம்தான்
சேயனுக்கு நவமாண்டில் வருகும்அப்பா
ஒப்புகிறேன் நிதியாலே யோகம்தானும்
ஓகோகோ வருகுமடா மைந்தனுக்கு
மெய்ப்புகிறேன் இவன்பிறந்த போதுமைந்தா
மேன்மையாய் கண்டாந்திரம் உண்டுகண்டாய்
தப்புகிற துண்டுமைந்தா தீட்சைசெய்ய
சற்குருவாம் ஈஸ்வரனைப் போற்றிசெய்யே.

(இ-ள்) இந்த ஜாதகனது திசை யோகம் முதலியனவற்றைத் தெளிவாய்க் கூறுகிறேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகன் பிறந்த ஒன்பதாம் ஆண்டில் சகல யோக சுகங்களும் உண்டாகும். அவை எவரும் கண்டு அதிசயப்படத் தகுந்த நிதிமுதலியன விசேஷமாய் உண்டாகுமெனவும், இந்த ஜாதகன் பிறந்தகாலத்திலேயே பிரபலகெண்டம் முதலியன உண்டாகும். ஆனதால் அக்காலம் ஸ்ரீசர்வேஸ்வரனைத் தொழுதால் அவை யாவும் நீங்கி பூரண ஆயுளுடன் இருப்பான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) பிறந்த வருஷத்திலேயே கெண்டமுண்டு. ஆயினும் ஈஸ்வர பிரதிட்டை செய்யின் நீங்கும் எனபதாம். 21

செய்யப்பா இவனுடைய யோகவாழ்க்கை
சேயனுக்கே திசையோகம் செப்பக்கேளு
வையப்பா ரிஷிகளெல்லாம் இதுபோல்தானே
வகையாகச் சொல்வதுண்டோ வையகத்தில்

மெய்யப்பா இந்நூலைப் பழித்தபேர்கள்
மீளாத நரகத்தில் வீழ்வார்பாரு
பையப்பா என்குருவாம் அரனார்பாலன்
பைங்கொடிக்கு ரகசியமாய்ப் பகர்ந்ததன்றே.

(இ-ள்) ஓ மாணிடர்களே! இன்னும் சொல்லுவேன் கேட்பீராக. என்னவெனில்? இந்த ஜாதகனுடைய திசை முதலியனவற்றையும், யோகமுண்டாகும் காலத்தையும் கூறுவேன். இவ்வாறு, இப்பூமியின்கண் எந்த ரிஷிகளும் கூறியதில்லை. ஆனதால், இந்நூலை எவரொருவர் பழித்தார்களோ அவர்கள் மீளா நரகத்தில் வீழ்வார் என்பதிற் சந்தேகமில்லை. ஏனெனில்? இந்த நூலை என்குருவாகிய அரனார் பாலன் தமது பத்தினிக்கு மிக்க ரகஸ்யமாய்க் கூறிய நூலாதலால் என்க எ-று. 22

பகர்ந்திடவே இன்னமும்தான் குலிசமார்க்கம்
பக்குவமாய்ச் சக்கரங்கள் பகரக்கேளு
நிகர்ந்திடவே இவன்வயதே ஆகுமுன்னே
நிட்சேபம் ரெண்டதுதான் கிடைக்கும்பாரு
அகர்ந்திடவே இவன்வயது இருபத்தாறில்
அகப்படுமே புதைத்துவைத்த தனம்தான்மைந்தா
மகிழ்ந்திடவே வாலைசொன்ன மைந்தற்கப்பா
வண்மையால் இன்னமுண்டு வரிசைகேளே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது அஸ்தரேகையால் உண்டாகிய சக்கரத்தின் மகிமையைக் கூறுவேன் கேட்பீராக. என்னவெனில்? இந்த ஜாதகன் மிக்க இளம்பிராயமாயிருக்கும் காலத்திலேயே நிக்ஷேபதனம் என்னும் இரண்டு புதையல் பொருள் கிடைக்குமென்றும், மற்றும் தன் வயது 26-ல் தனது முன் ஜன்மத்தில் புதைத்துவைத்த பொருள் கிடைக்குமெனவும், இன்னும் இந்த ஜாதகன் விஷயமாய் ஸ்ரீ வாலைதேவியார் திருவாய்மலர்ந்தருளிய விஷயத்தையும் கூறுவேன் கேட்பீராக எ-று.

(வி-ரை) முன்கூறிய 8-ஆம் செய்யுளில் இவன் பிராமணனாய்ப் பிறந்து சம்பாதித்த பொருளை தனது பந்துக்கள் மண்ணில் புதைத்துவிட்டனர் என்றதை, இச்செய்யுளால் இந்த ஜன்மமெடுத்த 26-ஆம் வயதில் மண்ணில் புதைத்துவைத்த பொருள் கிடைக்குமெனக் கூறினார். மற்றும் சிறுவயதில் நிக்ஷேபதனம் கிடைத்தது இவன் பிறந்த யோகத்தால் எனக்கொள்க. 23

கேட்கவே இவன்மாதா பிதாவுக்கப்பா
கேவலமாய் வைத்திருப்பான் கேள்வியாக
வாட்கவே இவன்வயது பத்துக்குள்ளே
வளமையாம் சிறிதுபொருள் போகும்பாரு
ஆட்கவே இவன்வயது எழுபத்தைந்தாம்
ஆயசிலே விதமென்று அன்பாய்ச்சொன்னேன்
தாட்கவே இவன்தானும் மிகவேவாழ்வான்
சந்தானம் கண்டமது நாலும்உண்டே.

(இ-ள்) இந்த ஜாதகனது தாய் தந்தையர்களது விஷயமாய்ச் சோதிக்குமிடத்து இவன் தாய் தந்தையர்கள் அற்ப பொருளுடையவர்கள் என்றே கூறுதல் வேண்டும். அப்பொருளிலும் சில பொருள் இவன் வயது 10 க்குள் நாசமாகும் என்றும், இந்த ஜாதகனது சக்கர அமைப்பால் இவனுக்கு ஏற்பட்ட வயது-75 எனவும் இவனது வாழ்நாட்களில் மிக்கமேன்மையும் பெருமையுடனும் வாழ்வான் எனவும், மேற்படி வயது 75-க்குள் 4-கெண்டாதி கெண்டங்கள் உண்டாகுமென்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) தாய் தந்தையர்கள் அற்ப பொருளுடையவர் என்றதால் விசேஷ தனம் படைத்தவர்கள் அல்லவென்பது கருத்தாகும். மற்றும் கெண்டாதி கெண்டங்களின் விவரம் பின்வருமாறு. 24

உண்டான கண்டந்தான் மைந்தாகேளு
உறுதியாய்ச் சொல்லுகிறாள் உமையாள்தானே
நன்றான இவன்வயது ஒன்பதுக்குள்
நலமான மாதமொரு நாளிலேதான்
குன்றான காலிலே விஷமுள்பட்டு
கொடியதொரு வியாதிகொண்டு ரோகமுற்று
வண்டான மாசமது ரெண்டுமாகும்
வண்மையாம் மைந்தனிவன் மெலிவான்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகனது கெண்டாதி கெண்ட விவரங்களைக் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இவன் ஜனித்த வருடம் ஒன்பதுக்குள் ஏதேனுமொரு மாததினத்தில் இவனது காலில் விஷமுள்ளானது தைத்து அக்காரணத்தால் இவனுக்குக் கொடிய வியாதியும் ரோகமும் உண்டாகி அதுமுதல் 2-மாதங்கள் வரையில் மேற்படி நோயால் கொடிய துன்பப்பட்டு மெலிவான் என ஸ்ரீஉமாமகேஸ்வரியாள் கூறினாள் எனக் கூறுவாய் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனுக்குண்டாகும் முதல் கண்டத்தையும் அதனது விருத்தாந்தத்தையும் கூறினார். மற்றுமுள்ள கெண்டங்கள் பின் வருமாறு. 25

பார்க்கவே தீட்சைகளைப் பின்காண்டத்தில்
பாகமதாய்த் தீர்க்கவும்தான் பாடினேன்பார்
ஏர்க்கவே இவன்வயது இருபத்துநாலில்
என்னசொல்வேன் கடினமுள்ள கண்டமப்பா
ஆர்க்கவே பதினெட்டு நாள்தான்மைந்தா
அதிகமுந்தான் வியாதியினால் மெலிவானப்பா
கார்க்கவே முன்சொன்னேன் பின்னும்சொன்னேன்
கருணையால் விரதத்தில் நிவர்த்திசெய்யே.

(இ-ள்) மேலே சொன்ன கெண்டாதி கெண்டங்களுக்காய்ச் செய்ய வேண்டிய பிரதிட்டையை பின்வரும் காண்டத்தில் மிக்க தெளிவாய்க் கூறியுள்ளேன். இதுவன்றி, இந்த ஜாதகனது வயது 24-ல் உண்டாகும் கெண்டமோ மிக்க கொடியதாகும் அதன் துன்பத்தைச் சொல்லமுடியாது.

அவையாவன: வியாதி தோன்றியதுமுதல் 18-நாள் வரையில் அளவிட முடியாத துன்பத்தால் மெலிந்துபோவான். இந்த கெண்டத்தையும் இதற்கு முன்சொன்ன கெண்டத்தையும் விரதம் முதலியவற்றால் தீர்த்துக்கொள்வாயாக எ-று.

(வி-ரை) 'முன்சொன்னேன் பின்னும் சொன்னேன்' என்றது முன் செய்யுளில் கூறிய கெண்டத்தையும், இச்செய்யுளில் கூறிய கெண்டத்தையும் என்பது அருத்தம். இவ்விரண்டு கெண்டத்தையும் விரதம் முதலியவற்றால் நிவர்த்திசெய்க என்றனர். 26

செய்யவே இவன்வயது நாற்பத்தாறில்
தீமையாம் சத்துருவால் வியாதியாலும்
வையவே வயிற்றிலே வாய்வுபோலும்
வளமான கெண்டையைப்போல் வளரும்பாரு
உய்யவே ஈசனைத்தான் பூசைசெய்து
உற்றதொரு கண்டத்தைத் தீர்க்கவேண்டும்
மெய்யவே பின்காண்டம் தனிலேசொன்னேன்
மேன்மையாய் உள்ளபடி நடத்துவாயே.

(இ-ள்) இன்னும் ஒரு கெண்டம் எக்காலத்திலெனில்? இந்த ஜாதகன் பிறந்த 46-ஆம் வயதில் துன்பத்தைத் தரத்தகுந்த தனது சத்துருவாலும், கொடிய வியாதியாலும், தனது வயிற்றில் வாய்வுபோலுண்டாகி கெண்டையைப்போன்று ஓர் கட்டியானது வளரும். ஆனதால், அக்காலம் மேற்சொன்ன கெண்டமானது நீங்க ஈஸ்வரனைத் தியானம்செய்து பூஜித்து வணங்கின் மேற்படி கெண்டம் தீரும். மற்றும் செய்யவேண்டிய பரிகாரங்களைப் பின்வரும் காண்டத்தில் கூறியபடி செய்து முடிப்பாயாக எ-று. 27

வாயென்று இவன்வயது எழுபத்துநாலில்
வருகுமடா பெரியகண்டம் வண்மையாக
சாயென்று ஒருவருஷம் ஒடுக்கிப்பின்னும்
சண்ணுமடா சக்கரத்தின் அமைப்பினாலே
காயென்று கருத்ததுபோல் நடக்கவேண்டிக்
கருணையால் சொல்லிவிட்டேன் கண்டுகொள்ளு
தாயென்று என்னைத்தான் தொழுததாலே
தயவுவைத்தேன் மனதிரங்கித் தண்மையாலே.

(இ-ள்) இன்னும் கூறவேண்டுவ தென்னவெனில் இந்த ஜாதகனது வயது 74-ல் இவனுக்குண்டாவது பிரபல கெண்டமாகும். மேற்படி கெண்டமானது நோய் தோன்றியது முதல் ஒரு வருஷம் வரையில் வாதித்து சரீரபலம் முதலியனவற்றை ஒடுக்கி இவனது அஸ்தரேகையினது சக்கரத்தின் அமைப்பால் மறுபடியும் குணமடையும் என்றறிவாயாக. ஓ முனிவர்களே! நீங்கள் என்னைத் தாயென்று உள்ளன்புடன் நினைத்துத் தொழுததின் காரணத்தால் உங்கள் மனோ எண்ணம் பூர்த்தி யடையவேண்டும் என்னும்

கருத்துகொண்டு உங்கள்மீது மனதிரங்கி உள்ளதை உள்ளவாறே கூறினேன் எ-று.

28

தண்மையப்பா இவன்வயது இருபத்தாறில்
தலைவனிடப் பிதாவும்தான் இறப்பான்பாரு
வண்மையப்பா இவன்வயது முப்பத்தாறில்
வகையாக மாதாவும் இறப்பாளப்பா
உண்மையப்பா யிவன்வயது நாற்பதுக்குள்
உற்றதொரு மூத்தாளும் இறப்பாள்பாரு
நன்மையப்பா இவன்வயது அறுபத்தெட்டில்
நலமான தமையனவன் இறப்பான்பாரே.

(இ-ள்) இன்னும் சொல்லுகிறேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகன் பிறந்த 26-ஆம் வயதில் இவனது பிதாவானவன் இறந்து போவான் எனவும், இதுவன்றி வயது 36-ல் இவனது அன்பார்ந்த தாயானவள் இறந்து போவாள் என்றும், வயது-40 இவனுக்கு முன்பிறந்தாளாகிய தமக்கையானவள் இறந்து போவாள் எனவும், இந்த ஜாதகன் வயது 68-ல் இவனது தமயனானவன் இறந்து போவான் என்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் 26-ல் பிதாவும், 36-ல் தாயும், 40-க்குள் தமக்கையும், 68-ல் தமயனும் இறந்து போவான் என்றனர். மற்றுமுள்ள விஷயங்களை பின்வரும் செய்யுளால் அறிக முன்கூறிய பெருங் கெண்டங்கள் போக ஏனைய கெண்டங்களையும் கீழ்வருவனவற்றால் அறிக.

29

பார்க்கவே யிவன்வயது எழுபத்தைந்தில்
பண்பாகப் புனலாறு கொள்வதுண்டு
ஏர்க்கவே இவன்வயது மூன்றுக்குள்ளே
ஏற்றதொரு மாரிகண்டம் ஆச்சுதன்றே
மார்க்கவே இவன்வயது ஆறேமுக்கால்
வண்மையால் அலகுகண்டம் ஆச்சுதன்றே
தீர்க்கவே இவன்வயது பதினைந்தப்பா
திரமான வியாதிகண்டம் ஆச்சுதன்றே.

(இ-ள்) இந்த ஜாதகன் தன் வயது 75-ல் எவரும் மதிக்கும்படி மரிப்பான் எனவும் கூறுவதுடன், தன் வாழ்நாட்களில் உண்டாகும் சிறு கெண்டங்களைக் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இவன் பிறந்த 3-ஆம் வயதில் மாரி என்னும் வைசூரி கெண்டம் உண்டாகும் எனவும், வருஷம்-6, மாதம் 9-ல் அலகு என்னும் ஆயுத முதலியவற்றால் கெண்டம் உண்டாகும் எனவும், 15-ல் கொடிய வியாதியால் கெண்டம் உண்டாகுமெனவுங் கூறுவாய் எ-று.

(வி-ரை) முன் கூறிய 27-ஆம் செய்யுளில் சொல்லிய கெண்டங்கள் பிரபல கெண்டம் எனவும், இங்கு கூறிய கெண்டாதி கெண்டங்கள் சிறு

கெண்டம் எனவும் கொள்க. மற்றும் வயது 75-என்பதையே நிர்ணயம் என்றனர். 30

அன்றெனவே இவனுக்கு வினவுமெத்த
ஆச்சரியம் உள்ளமைந்தன் வேதம்பார்ப்பான்
கொன்றெனவே விநோதவித்தை கணிதம்கற்பான்
கூறரிய சாஸ்திர வாதியாவான்
நன்றெனவே வைத்தியமுதற் கண்ணியாகும்
நலமான புராணங்கள் கீதைபார்ப்பான்
சென்றமிகு செல்வனிவன் லிபிதான்நாலு
திறமாகப் படித்திடுவான் செல்வன்தானே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது விஷயங்களைக் கூறவேண்டுவ தெனில்? இந்த ஜாதகன் பலவித ஆராய்ச்சியில் மிக்க மேம்பாடுடையவனும், எவரும் கண்டு ஆச்சரியப்படத் தக்கவனும், பற்பல வேதங்களை ஆராய்ந்தறி பவனும், அதிசயப்படத்தகுந்த அநேகவிதமான விநோத வித்தைகளைக் கற்பவனும், எல்லா சாஸ்திரங்களையும் அறிந்தவனும், வாதம் செய்யத் தகுந்தவனும், கணிதம் என்னும் சோதிடம் முதலியன கற்பவனும், புராணம் முதலிய வேதாகமங்களை அறிந்தவனும், மிகுந்த செல்வமுடையவனும், நான்கு வேதங்களையும் படித்து மேன்மையடையத் தகுந்தவனும் ஆவான் எனக் கூறுவாயாக எ-று. 31

தானமெனும் இவனுக்குத் தாரம்ரெண்டு
தன்மையுள்ள மக்களவர் ஏழுபேராம்
வானமெனும் ஆண்நாலு பெண்தான்மூன்று
வண்மையுள்ள மக்களிவன் பெறுவான்பாரு
கானமெனும் அமைப்பதுதான் ஒன்றதாகும்
கருணையால் தேவிமார் மூன்றுபேராம்
பானமெனும் பாலுடனே அன்னம் உண்ணல்
பைங்கிளிமார் மூன்றினிலே ஒன்றுபோமே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்குத் தாரம் என்னும் மனைவிமார்கள் இரண்டு பேர் என்றும், பெருமையையுடைய புத்திரர்கள் ஏழுபேர் எனவும், அவற்றுள் ஆண் நான்கும், பெண் மூன்றுபேர் என்றும், அவைகள் மிக்க மேன்மை யுடையவராய் இருப்பார் என்றும், இவர்களது யோகமும் வாழ்வும் எந்நாளும் ஏகமாகவே இருக்குமெனவும், இந்த ஜாதகனுக்குக் கலியாண ஸ்திரீகள் மூன்றுபேர் என்றும், அவற்றுள் ஒன்றுமறிந்து இரண்டு நிலைத்திருக்கும் எனவும், மேற்படி மனைவிகள் சகல சுகத்துடன் பால் அன்னம் முதலியன புசித்திருப்பார்கள் எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்து என்னவெனில்? கலியாண ஸ்திரீ-3, அதில் 2-நிலைக்குமென்றும், முன்கூறிய 20-ஆம் செய்யுளில் புத்திரர்-9 என்றும், இச்செய்யுளில் 7-என்றும் கூறியது ஜெனிப்பது-9 நிலைத்திருப் பது-7 எனக் கொள்க. 32

போகுமடா ஜென்மாந்திர வினைதான்ரெண்டு
பொல்லாத கண்டமது ரெண்டும்சொன்னேன்
ஆகுமடா கண்டமிவை அடித்துப்போடும்
அப்பனே பின்காண்டத் தரைந்தேன்மார்க்கம்
ஏகுமடா மார்க்கம்போல் செய்துக்கொள்ளு
என்னசொல்வேன் பிதாமகனை எடுக்கப்பார்க்கும்
தாகுமடா பொல்லாத துன்பம்வந்து
தனக்குமுதற் பிதாவையுந்தான் சார்வதாமே.

(இ-ள்) இந்த ஜாதகனது ஜனன சக்கர அமைப்பின்படி நிலைத்திருக்கும் மனைவி இரண்டேயாகும். மேற்படி மனைவிகளுக்கும், கொடிய கெண்டம் 2-உண்டாம். அவைதீர பரிகாரம் பின்வருங் காண்டத்தில் கூறியுள்ளேன். ஆதலால், அவ்வாறு செய்து நிவர்த்தி செய்துக்கொள்வீராகவும். அப்படிச் செய்யவில்லையேல் இந்த ஜாதகனுக்குப் பிறக்கும் பிள்ளைகளையும், பிதாவையும் சூழ்ந்து கொடிய துன்பமும், கெண்டாதி கெண்டங்களும் சூழும் என்று தெரிவாயாக எ-று. 33

ஆகவே யிவையறிந்து மைந்தாநீதான்
ஆச்சரியம் ஓமமும் தர்ப்பணமும்செய்து
பாகமாய்ப் பரமனிட பூசைசெய்து
பற்றிமன துறுதியிலே பாய்ந்துநிற்பாய்
போகவே முன்சாபம் உண்டுமைந்தா
பொல்லாத சாபமடா சொல்லப்போமோ
வாகவே விலகுமோ இந்தச்சாபம்
மனோன்மணித்தாய் கிருபைமிகு வாக்கியமாமே.

(இ-ள்) கெண்டாதி கெண்டங்களுண்டாகும் காலங்களைக் கூறியுள்ளேன். ஆதலால் அந்தக் காலத்தில் ஓமசாந்தி முதலியன செய்தும், தர்ப்பணம் செய்தும் ஏகமனதுடன் ஸ்ரீசர்வேஸ்வரனுக்கு பூஜைசெய்து வணங்குவாயாயின் மேற்படி தோஷம் நீங்கும். ஏனெனில்? இவன் முன்ஜன்மத்தில் கொடிய சாபமும் ஒன்றுண்டு. அவை பொல்லாத சாபமாகும். அவை நீங்குவது மெத்த கடினமாகும். அவை நீங்க வேண்டுமாயின் ஸ்ரீசாக்ஷாத் ஈஸ்வரியினது கிருபையே வேண்டும் என்பது நிச்சயமென்று அறிவாயாக எ-று. 34

வாக்கியமேன் என்வாக்கியம் மகாவாக்கியம்பார்
வசனிப்பேன் இன்னமுந்தான் மகிழ்ந்துகேளு
பாக்கியமென்ன மைந்தனுக்கு வேளையென்ன
பார்வதியாள் சொல்லுகிறேன் பரிந்துகேளு
ஆக்கியமென்ன இவன்வயது எண்பதேமுக்கால்
அன்பான பாலகனுக்குத் தர்மம்ஈந்தேன்
பாக்கியமென்ன இவனுக்குச் சென்மம்தொட்டு
பாகான வருஷம் ஒன்பதுதப்பாதே.

(இ-ள்) ஓ முனிவர்களே! யான் சொல்லும் மகா வாக்கியங்களில் யாதொரு சந்தேகமும் இல்லை. ஆதலால், இந்த ஜாதகனது விஷயங்களை இன்னும் கூறுவேன் கேட்பீராக. ஓ முனிவர்களே! இந்த ஜாதகனது ஆயுள் யோகம் முதலியனவற்றைக் கூறுவேன் கேட்பாய் எப்படியெனில்? இவனுக்கு ஸ்ரீசாக்ஷாத் பரமேஸ்வரியாகிய எனது கிருபையால் உண்டாகிய வயது 87-ம் 6-மாதமும் ஆகும். மற்றும் பாக்கிய முண்டாகும் காலமென்னவெனில் ஜனித்தது முதல் வருஷம் 9-ல் பிரபல பாக்கியம் உண்டெனவறிக எ-று.

(வி-ரை) முன்கூறிய செய்யுட்களால் வயது - 75 எனவும், இங்கு 87-வருஷம் 6-மீ என்றதால் மேற்படி 75-தப்பினால் 87-வருடமும் 6-மாதமும் வயதுண்டு. மற்றும் 9-ல் யோகம் என்றதைப் பின் வருவனவற்றால் காண்க 35

தப்பாதே ஒன்பதுடன் ஏழுமாதம்
தருவான கன்னியென்ற மாதமாகும்
மிப்பாதே இருபதுக்குள் மதியாம்வாரம்
மேன்மையாம் என்தமயன் வந்துதானே
ஒப்பாதே பிதாவினிடம் சொல்லினாலும்
ஓகோகோ தலங்காட்டி நின்றிட்டேனே
வைப்பான சொர்னமது மெத்தவாகும்
வரிசைபெற ஈந்திட்டேன் வண்மைகேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகன் பிறந்த ஒன்பதாம் வருடம் ஏழாம் மாதம் கன்னி என்னும் புரட்டாசி மாதத்தில் தேதி 20-க்குள் மதி வாரம் என்னும் திங்கட்கிழமையில் யான் எனது தமயனாகிய நாராயண மூர்த்தியை இவன் பிதாவிடம் சென்று தனக்குவியலிருக்கும் இடத்தைக் காட்டும்படி சொன்னேன். அந்த தனக்குவியலானது அமோகமாயிருக்கும். இவ்வளவு மேன்மையைக் கொடுத்ததுடன் இன்னும் உள்ள விஷயங்களையும் கூறுவேன் கேட்பீராக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தென்னவெனில்? இந்த ஜாதகன் ஜனித்த 9-ஆம் வருடம் 7-ஆம் மாதத்தில் இவன் பிதாவின் சொற்பனத்தில் நாராயணமூர்த்தி தோன்றிச் சொன்னவண்ணம் புதையல் கண்டெடுப்பான் என்பதேயாகும். 36

கேட்கவே இவன்வயது இருபத்தாறில்
கேவலமாம் மகரமென்ற மாதம்தன்னில்
ஆட்கவே இவன்உறங்கும் வேளைதன்னில்
அன்பான வாழிநந்தி சடையோன்போல
வாட்கவே இவனுக்குத் தம்பியொன்று
வகையாக ஈன்றிடவே முன்னோர்சொன்னார்
ஏட்கவே எம்பிரான் அருளினாலே
இயம்பிட்டேன் தன்மீயம் இணங்கத்தானே.

(இ-ள்) இந்த ஜாதகனது விஷயங்களை இன்னும் சொல்லுகிறேன் கேட்பாயாக. எப்படியெனில் இந்த ஜாதகன் வயது 26-ல் மகரமாதமாகிய

தைமாதத்தில் இவன் கனவில் சிரசில் சடாபாரத்தையுடைய சிவபிரான் தோன்றி இவனுக்கு தம்பி என்னும் இளையோன் ஒருவன் உண்டாகி வாழ்க வென்று ஆசீர்வதிப்பார். மேற்படி சகோதரனும் எம்பிரானது கிருபையால் சகல சம்பத்தும் நிறைந்து வாழும்படி யானும் களிகூர்ந்து உரைத்தேன் எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவது என்னவெனில்? இந்த ஜாதகன் பிறந்த வயது 26-ல் தைமாதத்தில் எம்பிரான் அருளாலும், சிவ பிரானது கடாக்ஷத்தாலும் ஓர் சகோதரன் பிறந்து ஸ்ரீ தேவியினது கிருபையால் சகல வைபவங்களும் நிறைந்து வாழ்வதேயாகும். 37

தானென்ற இவன்பிறந்த குலிசமாகும்
தருவாக இவன்யோகம் சக்கிரயோகம்
ஊனென்ற இவன்யோகம் கனத்தயோகம்
உண்மையாய்த் தனம்வந்து உதவிற்றன்றே
நானென்ற நன்மைமெத்த செய்தபேர்கள்
நல்லவர்கள் முன்செய்த பாக்கியத்தாலே
நானென்ற ஆணவங்கள் மெத்தமைந்தா
நான்சொன்ன கட்டளைபோல் நடக்கும்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த ரேகையானது குலிசரேகை என்னும் பெருமை வாய்ந்ததானதாலும், யோகமானது சக்கிரதார யோகமென்ப தாலும், இவனுக்கு எல்லாவற்றிலும் மேம்பாடான யோகமும் ஆனதால் இவனுக்கு சகல தனங்களும் தன்னால் வந்து சேர்ந்தது. எவ்வாறென்றெனின்? தனது முன் ஜன்மத்தில் சகலவிதமான நன்மைகளும் செய்து முத்தி பெற்றவனாதலால் இச்சென்மத்தில் யான் விதித்த கட்டளையைப்போல் சகல சம்பத்தும் உண்டாகும் எ-று.

(வி-ரை) இதன் கருத்து என்னவெனில்? முன் ஜன்மத்தில் பல புண்ணியம் செய்து முத்திபெற்றவர்களுக்கு இச்சன்மத்தில் ஸ்ரீ பரமேஸ்வரி சகல சம்பத்தும் ஈவாள் என்பதேயாகும். 38

பாரப்பா இவனுக்குத் திசையோகங்கள்
பண்பாகச் சொல்லுகிறேன் பலிதம்கேளு
காரப்பா இவன்வயது இருபத்துமூன்றில்
கட்டுவான் லாயத்தில் அசுவயோகம்
தாரப்பா இவன்வயது முப்பதுக்குள்
தருவான புதுமனைதான் எடுப்பான்பாரு
பேரப்பா இதற்குமேல் பதின்மூன்றுக்குள்
பேர்பெரிய பூமியிவன் கொள்வான்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகனது யோகங்களை இன்னும் சொல்லுகிறேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகன் பிறந்த 23-ஆம் வயதில் தனதில்லத்தில் குதிரையை வாங்கிக் கட்டிவைக்கும் யோகமும், மற்றும் வயது 30-க்குள் ஓர் புதுமனை ஒன்று எடுப்பித்துக் கட்டு

வான் என்றும் எனவும், தன் வயது 43-க்குள் பிரசித்திபெற்ற அநேக பூமி களைக் கொள்வான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) 23-ல் அஸ்வயோகம், 30-ல் புது இல்லம் கட்டல், 43-ல் அனேக பூமிகளை விலைக்கு வாங்கல் என்னும் யோகமுடையவன் என்பது கருத்து.

39

பாரென்ற புவனமதில் இவனைப்போலும்
பாக்கியங்கள் பெற்றவர்கள் ஒருவரில்லை
சீரென்ற திசையோகம் இந்தமட்டும்
செப்பினேன் பெருமைபெற்ற சேயனுக்கும்
காரென்ற கருணைவைத்தாள் உமையாள்தானும்
கருணைபெறப் பிறப்பித்தார் கடவுளர்தான்
வாரென்ற வையகத்தில் இவனைப்போலும்
வரிசைபெற்ற மக்களில்லை வண்மைகேளே.

(இ-ள்) பார் என்று சொல்லத்தகுந்த இப்புவனத்தின்கண் இவனைப் போன்ற செல்வத்தைப் படைத்த சீமான்கள் ஒருவரும் இல்லை யெனவும் கூறவேண்டும். இதுவரையில் பெருமையைப் படைத்த இந்த ஜாதகனது திசை யோகம் முதலியவற்றைக் கூறினேன். இவ்வளவுயோகம் உண்டா கியதற்குக் காரணம் என்னவெனில்? ஸ்ரீசர்வேஸ்வரனது கருணையாலும் உலகமாதாவினது அருளாலும் பிறந்தவன் ஆனதால் இப்பூமியில் இவனைப் போன்ற புண்ணியசாலிகள் ஒருவரும் இல்லையெனக் கூறுவாயாக எ-று. 40

கேட்கவே இவர்வழியில் பிதாமுதல்தான்
கேவலமாய்ச் சிறுவயதில் அலைவார்பாரு
வாட்கவே இவர்கள்தான் மீறிவந்தால்
வரிசைபெற்று நடந்துநன்றாய் வாழ்வார்மைந்தா
தாட்கவே யினிமேலுங் கெடுதியில்லை
சஞ்சலங்கள் இல்லையடா தரணிமீதில்
வீட்கவே யில்லாமல் திசையோகத்தால்
விண்ணிலவர் புண்ணியமாம் மைந்தாபாரே.

(இ-ள்) இந்த ஜாதகனது விஷயங்களை இன்னும் கூறுமிடத்து இந்த ஜாதகன் சிறுவயது காலத்தில் இவனது பிதா கேவலமான அந்தஸ்துடன் அலைந்து கஷ்டப்பட்டானாயினும், இந்த ஜாதகனுக்கு வயது ஆக ஆக மேன்மைபெற்று சகல சௌக்கியங்களும் உடையவனாகி வாழ்ந்து வந்தான் என்பது நிச்சயம். ஆனதால், அதுமுதல் எவ்வித கெடுதியும் இன்றி சஞ்சலமின்றி வாழ்வார் எனவும், திசை என்பதில்லாது கஷ்டப்பட்ட இவன் பிதா இந்த ஜாதகன் பிறந்த புண்ணியத்தால் சகல சௌக்கியங்களையும் உடையவன் ஆனான் என்று கூறுவாய் எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்தாவது என்னவெனில்? இந்த ஜாதகன் சிறுவயதில் இவன் பிதா யோகமின்றி தவித்தான் என்றும் பிற்காலத்தில் யோகம் உண்டாயின வென்பதும் கருத்தாகும். 41

மைந்தராய்ப் பிறந்த சக்கிரக்குலிசமாகும்
மகத்துவந்தான் வந்ததந்த மகிமையாலே
சொந்தமாய் இருந்திட்ட மனிதர்தானும்
தொல்லைமெத்த சமுசார வாழ்க்கையாலே
இந்தநல்ல பதவியது எதினாலென்றால்
ஈஸ்வரருக்குத் தொண்டுசெய்த இயல்பினாலே
கந்தருட அருள்மிகுந்து வந்ததென்று
காட்சியினால் உமையவள்தான் கருணித்தாளே.

(இ-ள்) பிரபலமாயிருந்த இவன் குடும்பம் தொல்லையும் சமுசாரத்தைத் தாங்கவொட்டாது கஷ்டப்பட்ட இந்தஜாதகனது குடும்பமானது இவ்வளவு கஷ்டநஷ்டங்களுக்கும் ஆளாகியதன் காரணம் என்னவெனில்? தனது முன் ஜென்மத்தில் ஈஸ்வரனுக்குத் தொண்டுசெய்த காரணத்தால் ஸ்ரீகுமாரப் பெருமான் கருணைகூர்ந்து சக்கரக்குலிச ரேகையானது தனது அஸ்தத்தி லமையப் பிறந்ததன் காரணத்தால் உமாமயேஸ்வரியானவள் சகல ஐஸ்வரி யத்தையும் கொடுத்து கடாக்ஷித்தாள் எ-று.

(வி-ரை) முன்ஜன்மத்தில் சிவனுக்குத் தொண்டுசெய்ததன் காரணத் தால் இச்சன்மத்தில் இவ்வாறு சக்கரக்குலிச ரேகை அமையப்பிறந்து சகல சம்பத்தும் உடையவனானான் என்பது கருத்து. 42

கருணையினால் இன்னமுந்தான் மைந்தனுக்குக்
காட்சிசொல்வேன் சக்கரக் குலிசைமைந்தா
கருணையால் இவன்சீவன் கொஞ்சசீவன்
தாஷ்டீகம்தான் இவனுக்குப் போதாதன்றோ
வருணையால் கிளைகோத்திரம் வாழ்த்துவார்பார்
வஞ்சனைகள் இல்லாத மைந்தனுக்கும்
பருணையால் பலஉபகாரங்கள் செய்வான்
பாக்கியவான் வீண்செலவு செய்வான்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! சக்கரக்குலிச ரேகை என்பது தனது அஸ்தத்தின்கண் அமையப் பிறந்தவனது பலாபலன்களை இன்னும் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகன் சரீரமானது தாட்டீகமில்லாத சிறு ஜீவனுடையவன் ஆவான். இந்த ஜாதகனாலேயே இவனது கிளை கோத்திரம் முதலியன வாழாநிற்கும், எனெனில்? இந்த ஜாதகன் வஞ்சகம் சூது முதலியவற்றை அறியாதவனாகும். ஆனதால் பலருக்குப் பல உபகாரம் செய்பவனும் தனது சுயபாக்கியத்தை எதிர்பாராது வீண்செலவு செய்யத்தகுந்தவனும் ஆவான் என நிச்சயமாய்க் கூறுவாயாக எ-று. 43

பாரப்பா இவன்தானும் பாஞ்சாலன்தான்
பத்தினியாள் பெற்றதொரு பாலகன்தான்
காரப்பா யிவன்வயிறு ஒட்டியாகும்
காத்திரமென்ற ஆக்கையது ஒல்லியாகும்

ஏரப்பா கழுத்திலே வரைதான்மூன்று
இயல்பான வயிற்றிலே மடிப்புநான்கு
கோரப்பா கோசமது அங்குலம்தான்மூன்று
கொற்றவன்தான் ஸ்திரீமுகம் சிவப்பதாமே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது சொரூபங்களைக் கூறவேண்டுவ தெனில், இப்பாலனை பாஞ்சாலதேசத்து அரசனிட மனையாள் பெற்ற பாலனுக்கு ஒப்பிடலாம். இதுவன்றி இவனது வயிருனது சிறுத்து ஒட்டியும், சரீரம் இளைத்து மெல்லியவனும், தனது கழுத்தில் மூன்றுவரையாகிய மடிப்புடையவனும், வயிற்றில் நான்கு மடிப்பு என்னும் வரைகளையுடையவனும், கோசமானது மூன்றங்குலம் உடையவனும், சிவந்ததேகமும் ஸ்திரீ முகமும் உடையவன் ஆவான் எனக் கூறுவாயாக எ-று. 44

ஆமென்ற பரம்பொருளும் உண்டுசெய்வான்
அன்பான பாலகனுக் கறிவுமெத்த
ஓமென்ற அகாரமுதல் உகாரமட்டும்
உத்தமன்தான் பிறந்ததொரு தசமியாகும்
ஏமென்ற அரசனிடச் சேவைசெய்வான்
என்னசொல்வேன் ஸ்திரீகூட்டம் மெத்தவுண்டாம்
காமியென்ற காமியங்கள் மெத்தவாகும்
கண்டிப்பு மெத்தவடா கோபியாமே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்கு ஸ்ரீபரம்பொருளான சிவபிரான் அகார இகார மென்னும் இரகஸ்யப் பொருளையும் அளவிறந்த அறிவு ஞானம முதலியவற்றையும் போதிப்பார். இதுவன்றி இவன் பிறந்தது தசமிதிதி எனபதறிவாயாக. மற்றும் இவனது வாழ்நாட்களில் அரசசேவை செய்யத் தக்கவனும், அளவிறந்த ஸ்திரீகளினது கூட்டமானது தன்னை சூழ்ந்திருக்கவும், பறபல காமியார்த்தங்களை யுடையவனும், கண்டிதவார்த்தையும், மிக்க கோபமுடையவனும் ஆவான் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனுக்கு அகாரப்பொருளையும், இகாரப்பொருளையும், நல்லறிவையும், ஸ்ரீசிவபிரானே அருள்செய்வார் என்றறு அறியத் தக்கது. மற்றும் முன்கூறிய 16-ஆம் செயயுளில் பிறந்த திதியைக்கூறப் படாமையால் இச்செய்யுளில இவன பிறநதது தசமி என்றனர். 45

கோபமென்றால் கடுங்கோபம் உள்ளமைந்தன்
கோத்திரத்தில் இவனைப்போல் யில்லையப்பா
தாபமென்றால் யிவன்தனக்குத் தாபம்மெத்த
தலைவன்தான் தட்சணத்தில் ஆள்வான்பாரு
ஆபமென்றால் யிவன்பிதா ஆக்கையொன்று
அறிவான மாதாவின் ஆக்கையொன்றும்
பாபமென்றால் பரிகரிக்கும் மைந்தனுக்கு
பக்குவமாய் அவதரித்த பாலனாமே.

(இ-ள்) கோபம் எனின் எப்படிப்பட்ட கோபம் உடையவன் என்றால் இவனது வங்கிசத்திலேயே இவனைப்போன்ற கோபமுடையவர்கள் இல்லை

எனவும், பரிதாபம் என்றால் இவனைப்போன்ற பரிதாபம் உடையவர்கள் இல்லை எனவும், இவன் பிறந்த சிலநாளுக்குள் (சீக்கிரத்தில்) அரசாளத் தகுந்தவன் எனவும், இவனது பிதாவும் சகோதரர் இன்றிய ஒருவனே என்றும், மாதாவும் சகோதரர் அற்ற ஒருவளே என்றும், இவ்விருவர்களுடைய பாபம் எல்லாவற்றையும் போக்கவே இந்த ஜாதகன் ஜனித்தான் என்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவன் பிதாவும், மாதாவும் சகோதரர் அற்றுத் தனித்திருப்பார் என்று கூறியதை கவனிக்கவும். 46

ஆமப்பா யிவனுக்குப் பஞ்சரேகை
ஆண்டவனே வந்ததிவன் அறிவாய்ப்பாரு
வாமப்பா வயிரவனார் அருளினாலே
வரமென்றார் மாயவனார் வறுமைநீங்க
காமப்பா காணிக்கை யாகமைந்தன்
கருணையால் வாழ்ந்திடுவன் கனிவுகூர்ந்து
வீமப்பா யிவன்வீட்டில் உள்ளமார்க்கம்
விபரமாய்ச் சொல்லுகிறேன் விரைந்துகேளே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்குக் கடவுளின் திருவருளால் தனது அஸ்தத்தின்கண் பஞ்சரேகை என்னும் சங்குசக்கரக் குலிசரேகை என்பது அமைந்தனவென்றும், இரவிற்கு அரசனாகிய சந்திரனென்னும் ஸ்ரீமகா லக்ஷிமியினது வேண்டுகோளால் இவனது வறுமையாவும் நீங்கிச் சுகித்திருக்கும் வண்ணம் ஸ்ரீ நாராயணமூர்த்தியே வரங்கொடுத்தனர். ஆனதால் இந்த ஜாதகன் அநேக திரவியங்கள் உடையவனாகியும், கருணையுடையவனாகவும் வாழ்வான் என்று அறிவாயாக. மற்றும் இவனில்லத்தின்கண் நடந்த விசேஷங்களையும் கூறுவேன் கேட்பாயாக எ-று. 47

கேளப்பா யிவன்வீட்டில் தெய்வக்காரி
கேவலமாய் அனல்மாய்ந்த கன்னிப்பெண்ணும்
வாளப்பா யிவனுடைய வங்கிஷத்தில்
வகையாக அனல்பாய்ந்து வறுமையாக
நாளப்பா நல்லதொரு கன்னிதானும்
நலமான வீட்டிலே விரோதமாகி
ஏளப்பா எம்பிரான் அருளாலேதான்
ஏற்றமாம் மனோன்மணியாள் யியல்பதாமே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்குக் குலதெய்வம் எவரெனில்? இவனது பிதுர் வங்கிசத்திலுள்ள ஓர் பெண்ணானவள் வெகு உத்தமியாய் இருந்து தனது வீட்டிலுள்ளவர்களால் விரோதமாகி வறுமைவாய்ப்பட்டு நெருப்பில் வீழ்ந்திறந்து போனாள். மேற்படி ஸ்திரீயானவள் வெகு நல்லவள் ஆதலால் அவளே தெய்வமாகியும் ஸ்ரீ எம்பிரானது கிருபையால் உலகமாதாவான மனோன்மணிக் கீடானவளாய் இருப்பாள் என்றும் கூறுக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனது வீட்டிற் குலதெய்வம் எவர் என்பதை விளக்கினார். எப்படியெனில் இவன் வம்மிசத்தில் மிகவும் கற்புடையவளாய் இருந்து நெருப்பில் வீழ்ந்து இறந்துபோனவள் என்பது கருத்தாகும். 48

ஆமடா ஞானகுரு உபதேசத்தால்
அளவற்ற பலகலைகள் படிப்பான்பாராய்
போமடா பொல்லாத பேர்களோடே
போயிவன் தான்கூடான் பொறுமையாளன்
வாமடா வஞ்சனைகள் நடத்தான்பாரு
வண்மையாம் புலைகளவு செய்யானப்பா
காமடா கனபண்டம் அநேகம்தானும்
கருணையாய்த் தேடுவான் கண்டுபாரே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது குணாதிசயங்களைக் கூறுமிடத்து இந்த ஜாதகன் ஞானமார்க்கத்தையுடைய சற்குருவினது உபதேசத்தால் அளவிட முடியாத சாஸ்திரமனைத்தையுங் கற்றுத் தெளிவன். இதுவன்றி பொல்லார் என்னும் தீயவருடன் சேராமலும், பொறுமையுடையவனும், எவரிடத்திலும் வஞ்சகமாகிய மோசநடத்தை இல்லாதவனும், ஜீவ இம்சை செய்யாதவனும், களவு என்னும் திருட்டுத்தனம் இல்லாதவனும், மிக்க கருணையுடையவனும் மேன்மைபெற்ற புண்ணியங்களை தேடிக்கொள்வான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இவை இந்த ஜாதகனது குணாதிசயங்கள் எனப்படும். மற்றும் சகல சாஸ்திரமும் கற்றுத் தெளிவான் என்றது வித்தையில் வல்லவன் எனக் கொள்க. 49

பாரப்பா யிவனுக்கு நாளுங்கோளும்
பக்குவமாய்ச் சொல்லுகிறேன் பண்பாய்மைந்தா
சீரப்பா யிவனுக்குப் பிள்ளையேழாம்
சிறப்பான ஆண்நாலு பெண்தான்மூன்று
காரப்பா காட்சியால் பிள்ளைரெண்டு
கனக்கவே பிழைத்திடுவார் பிள்ளைரெண்டாம்
வீரப்பா முன்பிறப்பில் ஓர்குழவியாகும்
விவரமதைச் சொல்லுகிறேன் வியந்துகேளே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது வாழ்நாளினது விசேஷங்களும், கிரகங்களினது அமைப்பு முதலியனவற்றையும் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகனுக்குச் சிறப்புபெற்ற புத்திரவர்க்கங்கள் ஏழு எனப்படும். அவற்றுள், 4-ஆண்குழவிகளும், 3-பெண்குழவிகளும் என்னப் படும். மேற்சொன்ன ஆண்குழவிகள் நான்கில், எவரும் மதிக்கத்தகுந்த வாழ்வுடன் இருப்பது 2-ஆண்கள் எனவுங் கூறுக. இதுவன்றி, இந்த ஜாதகனது முன் ஜன்மத்தில் இவனுக்குப்பிறந்த ஆண்குழவி ஒன்றேயாகும். மற்றும் இவனது விருத்தாந்தங்களைக் கூறுவேன் கேட்பீராக எ-று. 50

கேளடா யிவன்வயது யிருபத்துமூன்றில்
கெட்டியாய் ஆண்பிள்ளை பிறப்பதுண்டு
நாளடா நான்முகனார் அருளினாலே
நாயகன்தான் பிறந்திடுவான் நன்மையாக
கோளடா யில்லாமற் பிறந்தமைந்தன்
கொற்றவனாய்க் குபேரனாய் வாழ்வானன்றே
ஆளடா உத்திரத்தில் நாலும்கூடி
அன்பான பாலனவன் அவதரித்ததாமே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது பலாபலன்களைச் சொல்லுகிறேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகனது வயது 23-ல் ஓர் ஆண் குழவியானது நிச்சயமாய் பிறக்கும் எனவும், அக்குழவியானது நான்முகன் விதிப்படி சகல குணங்களும் பொருந்தி இருக்குமெனவும், எவ்வித குரூரமும் இல்லாது ஜனித்த மேற்சொன்ன பாலனானவன் குபேரனைப்போன்ற சம்பத்துடன் அரசனைப்போன்று வாழ்வான் எனவும், மேற்படி அருமை வாய்ந்த குழவியானது உத்திர நக்ஷத்திரம் 4-ஆம் பாதத்தில் பிறந்ததென்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனுக்கு வயது 23-ல் பிறந்த புத்திரனது யோகம் தன்மை முதலியவற்றைக் கூறினார். மற்றுமுள்ள விஷயம் பின் வருமாறு. 51.

ஆமப்பா யிவன்தானும் பிறக்கும்போது
அரனுடைய கடாட்சம்வந்து லபித்ததாகும்
வாமப்பா வயிரம்போல் உமையாள்சொல்லை
வகையாக கேட்டினிதாய் வருந்துவாய்நீ
ஏமப்பா இக்குழவி யோகம்தன்னில்
எம்பிரான் தேவியருள் இசைந்துபாரு
காமப்பா திசையோகம் பிதாவுக்கப்பா
காரணமாய்க் கண்டமது பெருகும்பாரே.

(இ-ள்) இன்னும் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? மேலே சொன்ன பாலனானவன் ஜனித்த கால லக்ஷணப்படி ஸ்ரீசர்வேஸ்வரனது கடாக்ஷமானது லபிக்கும என்பதில் ஐயமில்லை. ஓ முனிவர்களே! இந்த குழந்தையினது யோகம் முதலியனவற்றிற்கு ஸ்ரீமந்நாராயணமூர்த்தியும், லக்ஷ்மிதேவியும் அருள் செய்வார். ஆயினும், இனி இங்கு கூறும் வாக்கியத்தை (உமையாள் வாக்கை)க் கண்டு வருந்துவீர்கள். என்னவெனில்? இந்த குழவியால் இவன் பிதாவாகிய இந்த ஜாதகனுக்கு எல்லாயோகமும் உண்டு என்றும் கூறுவாயாக எ-று. 52

பார்க்குமது கண்டாந்தம் உண்டாமென்று
பைங்கொடியே சொன்னதென்ன பாவஞ்சொல்வாய்
ஏற்குமது திருவாக்கால் உரைத்ததென்ன
எம்பிரா னிடத்திருக்கும் கௌரிமாரி

கார்க்குமம்மா மாதாவே சூலிநீலி
சண்முகனைப் பெற்றெடுத்த எங்கள்தாயே
ஏர்க்கவே எங்களைத்தான் காக்குஞ்சோதி
ஏகாந்த மாதாவே இசைத்திடாயே.

(இ-ள்) ஓ எங்கள் அம்மணி! எவரையும் நிகரற்ற அழகும், எம்பிரான் வாஸஸ்தலமாகிய வைகுந்தத்தின்கண் எழுந்தருளியிராநின்ற தாயே! கௌரி! மாரி!சூலாயுதம் பிடித்தநீலி! சரவணபவனென்னும் சண்முகக்கடவுளைப்பெற்ற மாதாவே! உம்மை எந்நாளும் துதிக்காநின்ற எங்களை காக்கவே ஓர் உருவாய் வந்த எங்கள் ஈஸ்வரியே! மேற்படி குழவியால் இந்த ஜாதகனுக்கு கெண்டம் உண்டாகுமென்று உங்களினது திருவாக்கால் கூறியதற்குக் காரணமென்ன? ஓ உலகமாதாவே! அதனை யாங்கள் அறியும் வண்ணம் உரைத்தருள்வீராக வும் எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனுடைய வயது 23-ல் பிறந்த குழவியால் தனக்கு கெண்டம் உண்டெனக் கூறியதற்கு முனிவர் ரிஷிகள் முதலாயினோர் காரணம் கேட்கலாயினர். 53

மாதாவே யென்றுமிகத் தொழுதாரெல்லாம்
மனமகிழ்ந்து உமையவள்தான் வசனிப்பாளே
சீதரன்தான் பிறவியிலே வைத்தருட்சம்
சிறப்பாக நிவர்த்திசெய்யத் தீரும்பாராய்
வாதாடி வந்தவொரு பிணிதான்தீரும்
வண்மையுள்ள உமையவள்தான் வசனிப்பாள்பார்
போதான பொற்புடைய புண்ணியத்தாலே
பொல்லாத கண்டமெல்லாம் போகும்பாரே.

(இ-ள்) இவ்வாறு ஓ மாதாவே! என்று தொழுத முனிவர்கள் தேவர்கள் ரிஷிகள் முதலாயினோரைப் பார்த்து உலகமாதாவாகிய உமையவள் கூறு வாள். ஓ முனிவர்களே! இவை நாராயணனது செயலாகும். ஆனதால் அதற்கு வேண்டிய தோஷபரிகாரங்களைச் செவ்வனே செய்வாயேயாமானல் அவனது பூர்வ புண்ணிய வசமானது வந்தொத்து அவனது சரீரத்தை இம்சை செய்வதற்காக நாடிவந்த எல்லாவித பிணிகளும் கெண்டாதி கெண்டங்களும் நீங்கும் என்றறிவாயாக எ-று.

(வி-ரை) மேலேசொன்ன வயது 23-ல் உண்டாகும் கெண்டமானது பரிகாரம் செய்யில் நீங்கும் எனவும் ஆயுளுண்டாகும் என்பதும் கருத்து. 54

பார்க்கவே உமையவளே எந்தன்தங்கை
பத்தினியே உடன்பிறப்பே பரஞ்சோதியாளே
ஏர்க்கவே யேந்திழையே இன்னமுந்தான்
இயல்பாகச் சொல்லுமம்மா இளையாளேநீ
தார்க்கவே பராபரியே சொல்வாயென்று
சற்குணியே நிற்குணியே தயாளுவேநீ
சார்க்கவே வையத்தைப் படைத்தமாதா
தயாபரியே பராசத்தி தங்கைநீயே.

(இ-ள்) இவ்வாறுரைத்த உமாதேவியைப் பார்த்து நாராயணமூர்த்தியானவர் ஓ எனது தங்கையே! என் உடன்பிறந்தும் சோதிமயமாய் நிறைந்துமுள்ள கற்புடையாளே! அழகு நிறைந்த சகோதரியே! உலக பராபரியே! சற்குணி நிற்குணி தயாநிதி இவ்வுலகிலுள்ள சகல ஜீவர்களுக்கும் சக்தியைக் கொடுத்து ஆதரித்த பராபரியும் சத்தியும் எமது தங்கையுமானவளே! இன்னுமுள்ள ரகஸ்யங்களையும் சொல்வாய் எ-று.

(வி-ரை) ஈஸ்வரி சொல்லவும் அதனைக் கேட்டிருந்த மாயவரும் சந்தோஷசித்தராய் இன்னும் சொல்லவேண்டுமென வேண்டுகிறார். 55

தங்கையென்று மாயவனார் கேட்டபோதே
சாங்கமாய் உமையவளும் தயவுகூர்ந்து
பொங்கரவம் அணிந்துசங்கத் தோடணிந்து
புரமதனை நகைத்தெரித்த புங்கவன்தான்
கங்கைமுடி தரித்தவன்மான் மழுவிரண்டும்
கரத்தணிந்த கண்ணுதலோன் கருதக்கேட்டு
செங்கைதனில் திரிசூலி சொன்னமார்க்கம்
செப்பினேன் மக்களுக்குத் திரமாய்த்தானே.

(இ-ள்) இவ்வாறு தமது தங்கையிடம் உரைத்த மாயவனைப்பார்த்த ஸ்ரீதேவியார் மிகவும் கருணையோடு, ஓ சங்குசக்கரக் கதாயுதமும் பொங்கரவத்தையும் தாங்கி இராநின்ற எனது அண்ணாவே! திரிபுரங்களையும் அலக்ஷியமாய் தகனம் செய்தவரும், கங்கையைச் சிரசில் அணிந்திராநின்றவரும், மான்மழுவென்னும் அஸ்திரங்களை தமது அஸ்தத்தில் அணிந்திராநின்றவரும், முக்கண்ணுடையவரும், ஈஸ்வரருமாகிய எனது நாதன் எனக்கு உரைத்ததைக் கூறினேன் என்றனர். ஆனதால், ஓ மானிடர்களே! திரிசூலத்தை தாங்கி இராநின்ற ஈஸ்வரியாள் எனக்கு உரைத்த வாக்கானதால் இவை மானிடர்க்கு பிரயோசனமாகுமென்று எண்ணி யானும் கூறினேன் எ-று.

(வி-ரை) இந்த சாஸ்திரமானது ஈஸ்வரனால் ஈஸ்வரி கேட்டுக்கொண்டதாயும், அதனை மேற்படி ஈஸ்வரியால் ஸ்ரீ விஷ்ணுவும் கேட்டுக்கொண்டனர் என்றும், பின்பு மேற்படி சத்திதேவியாலேயே முனிவர், ரிஷிகள், தேவர்கள் முதலியோர் அறிந்துகொண்டனர் என்றதால், இந்நூலாசிரியரும் முனிவர் கூட்டங்களில் ஒருவருமான கமலமாமுனிவர் ஷை ஈஸ்வரியாளிடம் யான்கேட்டதை உலகோர் அறியும்வண்ணம் யான் கூறினேன் என்றனர். 56

தானென்ற சக்கரத்தின் குலிசயோகம்
தன்னையினி யென்சொல்வேன் தரணியோர்க்கு
மானென்ற மகுடமுடி மன்னர்போற்றும்
மகாபாக்கிய யோகமிது மஹேசர்பூசை
ஆனென்ற முதற்செனனம் முடித்ததாலே
ஆதிபரா பரப்பொருள்தான் அன்புகூர்ந்தார்
பானென்ற பாக்கியத்தால் வந்தரேகை
பண்பாக யினிசுருக்கிப் பகருவேனே.

(இ-ள்) மேலேகூறிய சங்கு சக்கரக் குலிச ரேகையில் பிறந்த இந்த ஜாதகனது விஷயங்களை இப்பூமியிலுள்ளோர் அறியும்வண்ணம் இன்னும் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? தனது முன் ஜனனத்தில் மயேஸ்வராது பூஜையை முடித்துவந்த காரணத்தால் மேற்படி பராபரப் பொருளாகிய ஈஸ்வரர் கருணைகூர்ந்து அவரது பாக்கியத்தால் இவ்வாறு ரேகை அமைந்து மகுடவர்த்தனர்களான மன்னாதி மன்னர்களும் போற்றத்தகுந்த மகாபாக்கியம் கிடைத்தது. ஆனதால், இன்னும் அதனது சுருக்கங்களைக் கூறுவேன் கேட்பீராக எ-று. 57

பகருவேன் இவனுக்கு வயதும்யோகம்
பலன்கள்தனை நன்றாகப் பகரக்கேளு
நிகருவேன் இவன்வயது ஆறுக்குள்ளே
நிட்சயமாய் வீட்டிலுள்ளபொருள் செலவேயாகும்
வகருவேன் இவன்வயது பத்துக்குள்ளே
வளமாக மூன்றுபேர் பெண்பிறப்பார்
தகருவேன் இவன்வயது பத்துக்குள்ளே
தனஞ்செயனாய் வாழ்வதுண்டு தன்மையாக.

(இ-ள்) இந்த ஜாதகனது வயது யோகம் முதலியனவற்றையும், மற்றுமுள்ள பலாபலன்களையும் கூறுவேன் கேட்பீராக. என்னவெனில்? இந்த ஜாதகன் வயது 6-க்குள் இவனது வீட்டிலுள்ள சகல திரவியங்களும் நாசமாகும். மற்றும் இவன் வயது 10-க்குள் 3-பெண் சகோதரிகள் ஜெனிப்பார்கள் எனவும், மேற்சொன்ன வயது 10-க்குள்ளேயே அநேக திரவியமுடையவனாகியும், பராக்கிரம முடையவனாகியும் வாழ்வான் எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்தாவது என்னவெனில்? வயது 6-க்குள் தனது திரவியம் யாவும் செலவழிந்தாலும், வயது 10-க்குள் சகல சம்பத்தும் உடையவனாகி வாழ்வான் என்பது கருத்து. 58

தண்மையப்பா இவன்வயது பதினாலாண்டில்
தருவான விவாகமது ஆகும்பாரு
உண்மையப்பா யிவன்வயது இருபத்திரண்டில்
உற்பனமாய் ஆண்புத்திரன் பிறக்குமன்றே
வண்மையப்பா யிவன்வயது இருபத்தாறில்
வரிசையுள்ள பிதாவுந்தான் இறப்பதுண்மை
பண்மையப்பா இருபத்தொன் பதிலேதான்
பண்பான மாதாவும் அடைவதாமே.

(இ-ள்) இந்த ஜாதகன் வயது 14-ல் நல்ல மேன்மையுடைய விவாகம் முதலியன நடக்குமென்றும், வயது 22-க்குமேல் 23-க்குள் அழகிய ஆண் குழவி யொன்று ஜனிக்குமென்றும், வயது 26-ல் இவனது அன்பார்ந்த பிதா இறந்து போவான் எனவும், இவை நிச்சயம் எனவும், வயது 29-ல் தனது அன்பார்ந்த தாயானவள் இறந்து போவாள் எனவும், திண்ணமாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவது 14-ல் விவாகம். 22-ல் புத்திரன் பிறத்தல். 26-ல் பிதாவும், 29-ல் மாதாவும் மரணமாவார் என்பதேயாகும். இரண்டாவது விவாகம் நடக்கும் காலமும் மற்றுமுள்ள விவரமும் கீழ்வரும் செய்யுளால் காண்க. 59

ஆகுமடா யிவன்வயது ஒன்பதாண்டில்
அன்பான பிதாவுந்தான் பூமிவாங்கும்
வாகுமடா யிவன்வயது மூப்பத்தாறில்
வளமான யிவனுக்கு விவாகமாகும்
தாகுமடா யிவன்வயது முப்பத்தாறில்
சகடையென்ற யோகம்வந்து தயங்கும்பாரு
ஆகுமடா அட்டசத்தி யிவனுக்கப்பா
அட்சணத்தில் திசையோகம் நடக்கும்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனித்த வயது 9-ல் இவன் பிதா விசேஷ பூமி முதலியன கிடைக்கும் எனவும், வயது 36-ல் விவாகம் என்னும் கலியாணம் நடக்கும் எனவும், மேற்படி வயது 36-ல் சகடையோகத்தால் சில கஷ்டநஷ்டங்கள் உண்டாகுமெனவும், பிற்காலம் அஷ்ட லட்சுமி வாசமுடையவனாய் சகல சம்பத்து நிறைந்து வாழ்ந்திருப்பான் எனவும் கூறுக எ-று.

(வி-ரை) 36-ல் விவாகம் என்றது இரண்டாவது விவாகமாகும். 36-ல் சகடையோடும் என்பது கஷ்டங்களும் நஷ்டங்களும் உண்டாகுமாயினும் 36-க்கு மேல் சகல ஐஸ்வரியமும் பொருந்தி இருக்கும் என்பது கருத்து. 60

## இரேணுகை ரேகையின் பலன்

ஆமப்பா சக்கரக் குலிசமார்க்கம்
அன்பாகச் சொல்லிவிட்டேன் அறிவுபாரு
ஓமப்பா இன்னமொரு ரேகைதானும்
ஓகோகோ சொல்லுகிறேன் உறுதியாக
வாமப்பா வகையுடனே சொன்னமார்க்கம்
வரிசைசொல்வேன் ரேகையிட வளமைப்பாராய்
ஏமப்பா ரேணுகையாம் ரேகைதானும்
எடுத்துரைப்பேன் இதனுடைய விபரங்கேளே.

(இ-ள்) இதுவரையில் கூறிவந்த செய்யுளால் சங்குசக்கரக் குலிச ரேகையினது விஷயங்களைக் கூறினேன். இன்னுமொரு ரேகையும் உண்டு ஆனதால் அதனது விருத்தாந்தங்களையும் உள்ளதை உள்ளவாறே கூறுவேன் கேட்பாயாக. அவையாவன:—ரேணுகை ரேகை என்பது ஒன்றுண்டு. ஆதலால் அந்த ரேகையின் விருத்தாந்தங்களையும் அதனது பலன் யோகம் முதலியனவற்றையும் விவரமாய்க் கூறுவேன் எ-று.

(வி-ரை) ரேணுகை ரேகையினது லக்ஷணங்களையும் யோக பாவபலன்களையும் கூறுவேன் என்றனர். 61

கேளப்பா ரேணுகையாம் ரேகைதானும்
கேவலமாய் நடுவேதான் ரெண்டுபுள்ளி
வாளப்பா அங்குலியாம் விரலுக்கிட்ட
வளமாக யிருக்குமடா வரிசைகேளு
தாளப்பா வாழ்வில்லாப் பெற்றமைந்தன்
தனஞ்செயனும் ஓர்தாயிக் கொரேமைந்தன்
கொள்ளப்பா இல்லாமற் பிறந்தான்மைந்தன்
கொற்றவனும் பிறந்ததொரு கீழ்வாசல்மனையே.

(இ-ள்) ஒ முனிவர்களே! ரேணுகைரேகையினது விருத்தாந்தங்களைக் கூறுவேன் கேட்பீராக. எவ்வாறெனில்? தமது அஸ்தத்தின்கண் உள்ள அங்குலிவிரல் என்னும் சுண்டுவிரலை யடுத்தாப்போல் கீழ்பாகத்தின் நடுவில் சின்னஞ் சிறியதாய் இரண்டு புள்ளிகள் காணப்படும். ஆனதால், அதன் விவரங்களைக் கூறுவேன். எப்படியெனில்? இந்த ஜாதகன் தனமென்பது கொஞ்சமேனும் இல்லாத மனையிற் பிறந்தாலும், தனஞ்செயனை யொத்த வாழ்வை அடைவான். இதுவன்றி, இவன் தாய்க்கு ஒரே மைந்தன் எனவும், இவன் பிறந்த வீடானது கிழக்குவாயிலுடைய தெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) தனமில்லா ஏழை வீட்டில் பிறந்தான் என்பதைப் பின் வருவனவற்றால் காண்க. 62

மனையான சிறுகூரை மனைத்தான்மைந்தன்
மகத்தான யிருமனையாந் தென்பால்வீட்டில்
துணையான இவன்பிறக்கும் போதேயப்பா
துப்பரவாய் ஒருவர்தான் இல்லையன்றே
வனையான இவன்பிதா மனையிலில்லை
வண்மையால் பிதாவுந்தான் தூலைவில்போனான்
கனையான இவன்பிறக்கும் போதேயப்பா
காட்சியாய் உண்ணுதற்கும் அன்னமின்றே.

(இ-ள்) மனையினது லக்ஷணம் என்னவெனில்? இரண்டு மனையாயும் தலைவாசலானது (மேற்செய்யுளில் கூறியபடி) கிழக்குவாயிலுள்ளதாயும் தென்புறவாயிலுடைய அறையில் பிறந்தான் என்றும், இந்த ஜாதகன் பிறக்கும் காலம் இவன் தாய்க்கு எந்த ஸ்திரீகளினது உதவியும் இல்லையெனவும், இவனது பிதாவும், தமது இல்லத்திலின்றி வெகுதூரம் சென்று விட்டான் எனவும், உண்ணுதற்கு அன்னமும் இல்லாத காலத்தில் இவன் பிறந்தவன் ஆவானென்று கூறுக எ-று.

(வி-ரை) உண்ணுதற்கு அன்னமும் இல்லாத காலத்தில் பிறந்தான் என்றதால், கொடிய வறுமைசூழ்ந்த குடும்பம் என்பது அர்த்தம். 63

இல்லையென்று இவன்பிறந்த எட்டாம்மாதம்
இயல்பான இவன்தாயும் மனையும்விட்டு
தொல்லையென்று தொல்லைபட்டு துயரத்தாலே
தோன்றுதலும் வெறுமைகொண்டு தூலைநடந்தாள்

அல்லையென்ற ஓரூரில் குடி இருந்து
அன்னவளும் பசிமயங்கி கீரைகிள்ள
நல்லையென்று ஓர்தலத்தின் பால்ஜெலத்தில்
நலமான கீரையது பறித்தாள்மங்கை.

(இ-ள்) இவ்வாறு அளவில்லா வறுமையிலாழ்ந்த குடும்பத்தில் இவன் பிறந்த 8-ஆம் மாதம் இவன் தாயானவள் அளவிடமுடியாத தொல்லையில் ஈடுபட்டவளாயும், வறுமையும், வெறுப்பாலும் மெத்த வருத்தத்துடன் ஓர் ஊரில் குடியிருந்து கஷ்டப்பட்டு பசியால் மயங்கினவளாய் தனது இல்லம் விட்டு வெளியிற் சென்று ஜலமுள்ள இடத்தில் கீரை பரிக்கச்சென்று கீரை பறித்துக்கொண்டு இருந்தனள் எ-று. 64

மங்கைதான் கீரையது பறிக்கும்போது
மகத்தான நிதிஒன்று குடந்தானப்போ
செங்கைநிற மானதிரு வாலைசோதி
சிவந்ததொரு திரவியந்தான் நிரையயீந்தாள்
பங்கயம்போல் நிதியெடுத்து மங்கைதானும்
பத்தினியாள் குபேரன்போ லானாள்பாரு
திங்கள்முக மீசனரு ளாலேமைந்தன்
திகழ்வாகப் பிறந்ததடா மாதமெட்டே.

(இ-ள்) மேற்படி மங்கையானவள் மேற்சொன்னபடி ஜலத்தருகில் கீரை அறிந்துகொண்டு இருக்கும்போது, செம்மை நிறத்தினையுடைய பிரகாசம் பொருந்திய ஸ்ரீ வாலைதேவியினது திருவருளால் சிவப்பு நிறத்தையுடைய பொருள் ஏராளமாய் கண்டெடுத்தாள். காண்பதற்கரிய மேற்படி திரவியத்தை எடுத்த உத்தமியாகிய இவன் தாயானவள் மேற்படி பொருளை தமது இல்லம் கொண்டுவந்து குபேரசம்பத்துடையவள் ஆனாள். சந்திரனைச் சடாபாரத்தில் அணிந்த ஈஸ்வரனது கிருபையால் இப்பாலன் பிறந்த 8-ஆம் மாதம் இவ்வாறு தனயோகம் உண்டாயிற்று எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்தாவது: இவன் பிறந்தது ஏழ்மைக் குடும்பமாயினும், இவன் பிறந்த 8-ஆம் மாதம் இவனது தாயானவள் கண்டெடுத்த பொன்னால் குபேரசம்பத்து உடையவர்களானார் என்பது கருத்து. 65

எட்டான மாதத்தில் பிதாவுந்தான்
எடுத்துரைப்பேன் முன்தலமே போய்ச்சேர்வார்கள்
மட்டான யிவன்பிதுர்த் துயரமப்பா
வண்மையாய் தீர்ந்ததப்பா வரிசையாக
இட்டான உறன்முறையார் பந்துசிவன்கள்
இயல்பாகப் புதுமனைதான் எடுத்தார்பாரு
முட்டான முட்டெல்லாம் தீர்ந்ததப்பா
மூளையான இளையவளும் குடியிருந்தாள்.

(இ-ள்) மேலே கூறியபடி இந்த ஜாதகன் பிறந்த 8-ஆம் மாதம் வெளியூரிலிருந்த இவன் பிதா மாதாவுடன் தனது சுய ஊருக்குப்போய்ச் சேர்வதுடன் இவனது பிதாவுக்குள்ள வறுமைத்துயரம் யாவும் நீங்கி சகல சந்தோஷங்களும் உடையவரானார்கள். அது முதல் இவனுக்கு உறவின் முறையார் சேர்க்கையும், சுயார்ச்சித நூதனகிரக கட்டடங்களும் உடையவராவது, தனது அளவில்லாத் துன்பம் யாவும் நீங்கியதுடன் லக்ஷ்மிகடாக்ஷம் உடையவர்கள் ஆனார்கள் எ-று.

(வி-ரை) வெளிதேயத்திலிருந்த இவனும், பிதா மாதாக்களும், மேற்கூறிய தனத்தை யடைந்ததும், தன் சுய ஊருக்குச் சென்று சகல சௌக்கியங்களும் உடையவரானார்கள் என்பதாம். 66

இருந்திடவே இவனுடைய நாளுங்கோளும்
இயல்பான மாதமுதல் கண்டமுதலான
பொருந்திடவே யிவனுடைய சக்கிரவாழ்வு
பொல்லாத வேளைக்கு எல்லாங்கேளு
வருந்திடவே யிவன்தானும் சுக்கிரவாரம்
வண்மையாம் பூரமது ரெண்டாங்காலம்
தருந்திடவே மகரமென்ற மாதந்தன்னில்
சார்வாக உதயத்திற் பிறந்தானன்றே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகன் பிறந்த நாள் நக்ஷத்திரம் கிரகம் முதலானவற்றையும், ஜனன மாதத்தையும், கெண்டாதி கெண்டங்களையும், இவனது சக்கர அமைப்பின் வாழ்வு முதலியவற்றையும் துன்பமுண்டாகும் காலம் முதலியவற்றையும் கூறுவேன் கேட்பீராக. இந்த ஜாதகன் மகாமாதமாகிய தைமாதத்தில் சுக்கிரவாரமும், பூரம் இரண்டாம் பாதமும் கூடிய நாளில் உதயகாலத்தில் பிறந்தான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் தைமாதம், சுக்கிரவாரம், பூரம் 2-ஆம் பாதம் உதயத்தில் பிறந்தான் என்றனர். மற்றுமுள்ள யோக வரலாற்றைப் பின் வருவனவற்றால் காண்க. 67

பிறந்திட்ட பாலகன்தான் அழகனப்பா
பிரபலமாய் நாளிலேதான் மிளிர்வானப்பா
மறந்திட்ட யிவன்தானும் ஏழாங்கர்ப்பம்
வண்மையாம் இருபேரும் ஒருமனதாய்நிற்பர்
சுறந்திட்ட நலமான கனியினங்கள்
சுயம்பெறவே தென்முகமாய்ப் புணர்ச்சியானூர்
கறந்திடவே அனுபோகம் செய்ததாலே
காசினியில் நால்கிரகம் உச்சமாமே.

(இ-ள்) இந்த ஜாதகன் மிக்க அழகு வாய்ந்தவனாகி இருப்பதுடன், நல்ல நேரத்தில் கெற்பம் தரித்தவனென்று கூறவேண்டுவதாகும். மற்றும் இந்த ஜாதகன் 7-வது கெற்பம் என்றும் கூறவேண்டுவதாகும். இதுவன்றித் தனது வாழ்நாட்களில் இருவரும் ஏகமனதாய் வாழ்வார் என்றும் கூறலாம்.

ஏனெனில்? இவனது தாய்தந்தையர்கள் நல்ல மேன்மையான கனிவர்க்கங்களைப் புசித்து தென்முகமாய் நோக்கி புணர்ந்ததன் பயனால் இவன் ஜனித்த காலத்தில் நான்கு கிரகங்கள் உச்சம் பெற்றதனால் என்க எ-று.

(வி-ரை) முன்கூறிய 62-ஆம்செய்யுளால் இவன் தாய்க்கு இவன் ஒரு மைந்தனே என்றும், இங்கு ஏழாங்கர்ப்பம் என்று கூறியதால் மற்றுமுள்ள 6-பிறவிகள் நாசமாயின என்பது கருத்து. 68

கறந்திட்ட காசியினால் கனத்தயோகம்
கருணையினால் பிறந்ததொரு தேவனாகும்
பறந்திட்ட இவன்தான்முற் செனனமப்பா
பாக்கியமாய் பிராமணனே ஆவான்மைந்தா
பிறந்திட்ட யிவனுக்குப் பாதபூசை
பிரபைமுதல் யிவனெடுத்து பூசைசெய்தான்
பறந்திட்டான் மிகநொந்து கேட்டதாலே
பரிவாக வரம்வாங்கிப் பாக்கியமாச்சே.

(இ-ள்) இந்த ஜாதகன் சாக்ஷாத் சிவபிரான் கருணையால் பிறந்தவனும், தேவவமிசத்தில் ஒருவனும் ஆதலால், பொருள் யோகம் பிரபலமுடையவனாக இருப்பான் என்றும் கூறலாம். எவ்வாறெனின்? இந்த ஜாதகன் தன் முன் ஜன்மத்தில் பிராமண குலத்தவனாய்ப் பிறந்து சிவபிரானுக்கு உச்சி முதல் பாதம் வரையில் இடைவிடாது பாதபூஜை செய்ததன் காரணத்தாலும், மேற்படி சிவபிரானை தனது வறுமை நீங்கவேண்டுமெனக் கேட்டுக்கொண்டதாலும், மேற்படி சிவனருளால் சகல வரமும்பெற்று இந்த ஜன்மத்தில் எல்லா பாக்கியமும் பெற்று வாழும்படிப் பிறந்தான் என்றுங் கூறுவாயாக எ-று. 69

ஆச்சென்ற யிவன்தானும் குருபத்தனப்பா
அன்பான சிவபூசை உள்ளமைந்தன்
வாச்சென்ற இவன்தானும் குபேரன்போலாம்
மகத்தான பல்லக்கு ஏறிவாழ்வான்
கூச்சென்ற வினுவித்தை படிப்பான்மைந்தன்
குவலயத்தில் எழுபிள்ளை பிறக்குமன்றே
வாச்சென்ற யிவனுக்கு தாரம்ரெண்டு
வண்மையாய் முடியுமென்று வகுத்திட்டேனே.

(இ-ள்) இந்த ஜாதகனது வாழ்நாட்களில் மிக்க குருபக்தியுடையவனாகவும், என்னாளும் நீங்காது சிவபூஜை செய்பவனாயும் வாழ்வதுடன் குபேரனைப்போன்ற சம்பத்துடையவனாகி, பிரபலமாகிய பல்லக்கிலூர்ந்து வாழத் தகுந்தவனாகவும், தர்க்கம் செய்யத்தகுந்த வித்தை யுடையவனாகவும் வாழ்வான். இத்துடன் இவனுக்கு மனைவிமார் இருவர் எனவும், 7-புத்திரர்களைப் பெற்று வாழத்தகுந்தவன் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவது என்னவெனில்? முன் சொன்ன 65-ஆம் செய்யுளிற் சொல்லியபடி குபேரசம்பத் துடையவனும், 2-மனைவியும், 7-பிள்ளைகளும் உடையவன் என்பதே யாகும். 70

வகுத்திட்ட ரேகைதான் இன்னம்மைந்தா
வண்மையைச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
இருத்திட்ட நீராலே இரண்டுகண்டம்
இனியதொரு மரத்தாலே கண்டமொன்று
நிருத்திட்ட சுரத்தினால் கண்டமொன்று
நிச்சயமாய்ச் சத்துருவால் கண்டமொன்று
சுருத்திட்ட சண்முகர்க்குப் பூசைதானும்
கருத்துவந்து செய்திடவே கண்டம்போச்சே.

(இ-ள்) இங்கு கூறிய இரேணுகைரேகையின் பலாபலன்களை இன்னும் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இவனுக்குண்டாகும் கெண்டங்கள் பல. அதனைக் கூறுவேன் கவனிப்பீராக. எப்படியெனில்? ஜலத்தால் இரண்டு கெண்டமும், மரத்தின்மீது நின்று கீழ்விழும் கெண்டம் ஒன்றும், கொடிய ஜுரவாதையால் ஓர் கெண்டமும், தனது கொடிய சத்துருவால் ஓர் கெண்டமும் உண்டாகும். ஆதலால், அக்காலம் ஸ்ரீசண்முக பெருமானுக்கு உள்ளன்புடன் பூஜைசெய்து வந்தால் மேற்படி கெண்டங்கள் யாவும் நீங்குமென்று கூறுவாயாக எ-று.

(வி-ரை) கெண்டாதி கெண்ட வயதுகளை கிரகசாரப்படி அறிக. மேற்படி கெண்டங்கள் யாவும் பரவசத்பக்தியாலன்றி வேறுமார்க்கத்தால் நீங்காதென்பதே இச்செய்யுளின் முக்கிய கருத்து. 71

கண்டமப்பா அஞ்சுகண்டம் கடினகண்டம்
கனத்ததொரு கண்டாந்தம் ஓமதீட்சை
வண்டமப்பா கண்டாந்தம் நீங்கும்பாரு
வரிசையாய்த் தீட்சைகளைச் செய்குவாய்நீ
இண்டப்பா யிவனுக்கு வயதுகூறில்
இயல்பாக அன்பத்து எட்டதாகும்
துண்டமப்பா யிவன்வயது திஷ்டாந்தரந்தான்
தூய்தாகச் சொன்னகுரு பலிக்கும்பாரே.

(இ-ள்) மேற்சொல்லிய கெண்டாதி கெண்டம் மிக்க கடின கெண்டமேயாகும். ஆனதால், அக்காலம் ஓமதீக்ஷைசெய்து பிரதிட்டை செய்யில் மேற்படி கெண்டங்கள் யாவும் நீங்குமாதலால் தவறாது மேற்சொன்ன ஓம தீக்ஷையை நடத்துவீராகவும். மற்றும் இவனது வயது திட்டங்களைக் கூறுமிடத்து பூரணவயது 58-என்றும் கூறுவாயாக. இவை நிச்சயமாகுமாதலால் மேற்படி வயது 58-என்று சொன்னவை தவராதென்று அறிவாயாக எ-று.

(வி-ரை) முன் சொன்னபடி இந்த ஜாதகனுக்குக் கெண்டாதி கெண்டங்கள்-5 ஆயினும், அந்தந்தகாலம் ஓமதீக்ஷை செய்யின் அவை நீங்கும் எனவும், வயது 58-எனவும் நிச்சயமாய்க் கூறியுள்ளனர். 72

பார்க்கவே யிவன்வயதோ ரிருபதுக்குள்
பண்பான பிதாவுந்தான் யிறப்பான்பாரு
ஏர்க்கவே யிவன்வயதோ ரிருபத்திரண்டில்
இயல்பான மாதாவும் மரணமன்றே

ஆர்க்கவே யிவன்குழந்தை ரெண்டுதானும்
அப்பனே போகுமென்று அறிந்துசொல்லு
வார்க்கவே குழவிதான் அஞ்சுஅப்பா
வகையாக நிலைக்குமென்று வகுத்திட்டேனே.

(இ-ள்) இந்த ஜாதகனது விஷயங்களை இன்னும் கூறவேண்டுவ தெனில்? இந்த ஜாதகன் பிறந்த வயது 20-க்குள் இவனது அருமைப் பிதா வானவன் இறந்துபோவான் எனவும், வயது 22-ல் தனது அன்பார்ந்த தாய் மரிப்பாள் என்றும், தனக்கு உண்டாகும் புத்திர புத்திரிகள் 7-ல் இரண்டு நசித்துப்போகும் எனவும், மிச்சமுள்ள 5-குழவிகளும் பூரண ஆயுளுடன் நிலைத்திருக்கும் என்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) முன்சொன்ன 70-ஆம் செய்யுளில் இவனுக்கு உண்டாகும் குழவி-7 என்றனை. அவற்றுள் இச்செய்யுளால் 2-நாசமாகும் என்றும், 5-நிலைத்திருக்குமென்றும் கூறியதை அறிக. 73

வகுத்திட்ட ரேணுகையின் யோகமெல்லாம்
வண்மையாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளும்
இருத்திட்ட யிவன்யோகம் சகடமென்னும்
இயம்பினேன் உமையவள் யியல்பினாலே
தொகுத்திட்ட திசைகர்மம் யோகவாழ்க்கை
சொல்லிவிட்டேன் வரலாறு சுருதியாலே
அகுத்திட்டேன் ஆயுசுடன் எல்லாந்தானும்
அப்பனே ரேகையின்னம் அறைகிறேனே.

(இ-ள்) தமது அஸ்தத்தின்கண் ரேணுகைரேகை என்பது அமைந் திருக்கப் பிறந்தவனது பலாபல விசேஷங்களை இன்னுங் கூறுவேன் கேட்பீராக. என்னவெனில்? உமாமயேஸ்வரியால் இவனுக்குண்டாகிய யோக அமைப்பானது சகடயோகம் எனப்படும். ஓ மானிடர்களே! ரேணுகை ரேகையிற் பிறந்தவர்களது பலாபலன்களையும் யோக முதலியவற்றையும் திசைமார்க்கங்களையும் கர்மாதி கர்மங்களையும் ஆயுள் விவரங்களையும் சாஸ்திர விதிப்படி யாவும் கூறிவிட்டேன். இன்னும் மற்றுமுள்ள ரேகையினது பலாபலன்களையும் கூறுவேன் கேட்பீராக எ-று. 74

### விஷ்ணுபந்த ரேகையின் பலன்

அறைகிறேன் ரேகையொன்று அருமையாக
ஆச்சரியம் ரேகையிட அருமைகேளு
விறைகிறேன் விஷ்ணுபந்த ரேகையொன்று
விகற்பமின்றி உண்டதனை விரும்பிக்கேளு
துறைகிறேன் மால்விரலில் ஏறிநின்றால்
துயம்பெறவே ஐந்துபுள்ளி ரெண்டுரேகை
மறைகிறேன் மால்விரலில் ஏறிநின்றால்
மகத்தான யோகமடா மைந்தாகேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! பற்பல ரேகைகளில் விஷ்ணுபந்த ரேகை என்பது ஒன்றாகும். மேற்படி விஷ்ணுபந்த ரேகையினது பலாபலன்களைக் கூறுவேன். அதனை வேறுவித சிந்தனை எதுவுமின்றி கவனமாய்க் கேட்பீராக. மேற்படி ரேகையானது மால்விரல் என்னும் நடுவிரலிலும் தாய் விரல் என்னும் கட்டைவிரலிலும் இரண்டு ரேகை வடிவமாயும் ஐந்து புள்ளி உருவமாயும் தோன்றும். மேற்படி ரேகையான நடுவிரலில் ஏறிச் செல்லுமேயாமானால் அந்த ஜாதகனுக்குப் பிரபலமாகிய யோக முண்டாகும். இன்னும் மற்றுமுள்ள விவரமும் கூறுவேன் கேட்பீராக எ-று. 75

கேட்கவே விஷ்ணுபந்த ரேகையானால்
கேள்வியால் புண்ணியங்கள் செய்தமைந்தன்
ஆட்கவே யிவன்தானும் பிறக்கும்போது
ஆச்சரிய மாகயிவன் பிறந்தான்மைந்தன்
நாட்கவே நன்மைபெற்ற மைந்தனப்பா
நலமான யோகத்தை நாட்டுவேனே
வாட்கவே யிவன்பிறவி ஐந்துபேராம்
வகையாகப் பிறந்திட்ட வண்மையாலே.

(இ-ள்) விஷ்ணுபந்தரேகை யென்பது தமது அஸ்தத்திலிருக்கப் பிறந்தவனது யோகங்களைக் கூறுமிடத்து இவன் மகா புண்ணியம் செய்தவன் என்றே கூறுதல் வேண்டும். இதுவன்றி, இவன் பிறக்கும் காலம் எவரும் கண்டு ஆச்சர்யப்படத் தகுந்ததாய்ப் பிறந்தவன் எனவும், சகல நன்மையும் உடையவன் என்றே கூறுதல் வேண்டும். ஆனதால், இவன் யோகம் முதலிய விவரங்களைக் கூறுவேன். மற்றும் இவனுடன் பிறந்தவர்கள் 5-பேர் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் ஆச்சர்யமாய்ப் பிறந்தான் என்றதை பின் வருவனவற்றால் காண்க. பிறவி-5 என்னும் விவரத்தைக் கீழ்வருவனவற்றால் காண்க. 76

வண்மையாய் யிவன்மூன்றும் பிறவியாகும்
வாகாக வடவாசல் வீட்டில்ஜென்மம்
உண்மையாய் யிவன்பிறக்கும் போதுமைந்தா
உற்றதொரு அவிடம்வுற்ற பெண்கள்நான்காம்
அண்மையா யப்பொழுது பிறவிபார்த்து
அடவான பாலன்யென அன்புகூர்ந்தார்
கண்மையா யிவன்பிதா வீட்டிலுற்றான்
காட்சியாய்த் தாய்மாமன் மூன்றுபேரே.

(இ-ள்) இந்த ஜாதகன் மூன்றும் பிறவி எனக் கூறுவதுடன் இவன் பிறந்தது வடக்குவாசலுடைய வீட்டில் ஜனனமானான் எனவும் கூற வேண்டும். மற்றும் இவன் பிறந்த காலத்தில் இவன் தாயுடன் இருந்த பெண்கள் நான்கு ஆகும். இந்த ஜாதகன் சரீரம் முழுதும் வெளிக்கண்ட பிறகே இவன் ஆண் எனக்கண்டு சந்தோஷமெய்தினார் எனவும், இவன்

பிதா இவன் ஜனிக்கும் காலத்தில் வீட்டிற்றுனே இருந்தான் என்று கூறுவதுடன் இவன் தாயுடன் பிறந்த அம்மான் மூன்று பேராகும் என்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இவன் பிறந்த பிறகு இவனை ஆண் எனக்கண்டு சந்தோஷித்தனர் என்றது. இவனுக்கு முன்பிறந்த இரண்டும் பெண் எனக்கொள்க. 77

78. பேரான மைந்தனிவன் பிறந்தபின்
பேணியே வீட்டிலே துயர்கள்போச்சே
காரான உமையவள்தன் கடாட்சத்தாலே
கனத்ததொரு யோகமது வந்ததப்பா
தூரான பிதாவுடைய துயரம்போச்சே
துன்பமென்ப தெல்லாமும் தூரம்போச்சே
தாரான சார்பதுதான் அனேகவாழ்க்கை
சாங்கமாய் யிவன்பெருமை சொல்லுவேனே.

(இ-ள்) பெருமையையுடைய இந்த ஜாதகன் ஜனித்ததற்குப் பின்பே இந்த ஜாதகனது இல்லத்தின்கண் உள்ள துன்பம் துயரம் யாவும் நீங்கினவென்றும், ஸ்ரீ உமாமயேஸ்வரியினது கிருபாகடாக்ஷத்தால் பிரபலமாகிய யோகம் வந்ததெனவும், தனது பிதாவினது மனத்துயரம் யாவும் நீங்கினவென்றும், தனக்குண்டாயிருந்த துன்பம் துயரம் யாவும் விலகிற்றென்றும், இவனது குடும்பத்தவரும் எல்லா நன்மையும் உடையவராய் வாழ்ந்தனர் என்றும் கூறுக. இன்னும் இவனது பெருமை முதலியனவற்றைக் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்து என்னவெனில்? இந்த ஜாதகனுடைய தாய்தந்தையர் பந்துவர்க்கத்தார் முதலியவர்களின் துன்பம் துயரம் யாவும் நீங்கி பூரணசுகத்துடன் வாழ்ந்தனர் என்பதேயாகும். 78

சொல்லவே யிவன்தானும் ஏழாங்கெற்பம்
சொல்லுமொரு முதற்சாமம் தரித்தகெற்பம்
அல்லவே யிவன்பிதா மாதாதானும்
அன்பான புணர்ச்சியும்நல் யோகமப்பா
மல்லவே யிவன்தானும் மகரமாதம்
வளமான ஓணம்நாலினிற் பிறந்தான்
நல்லவே தசமியோடு மதியின்வாரம்
நலமாகப் பிறந்ததிவன் நாடிக்கேளே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஏழாவது கெற்பம் எனக் கூறவேண்டுவதுடன் இரவு முதல் ஜாமத்தில் கெற்பம் தரித்தவனுமாகும். இதுவன்றி, இவன் தாய் தந்தையர்கள் புணர்ச்சி செய்த காலநேரமானது நன்மை பொருந்திய நேரமானதின் காரணத்தால் இவனுக்கு நல்லயோகம் உண்டாக ஏதுவாயிற்று என்றறிக. இவன் பிறந்த காலநேரமானது மகரமாதம் என்னும் தைமாதம் எனவும், திருவோண நக்ஷத்திரம் 4-ஆம் பாதத்தில் ஜனித்தான் எனவும்,

மதிவாரமாகிய திங்கட்கிழமையும், தசமி திதியும் கூடியநாளில் பிறந்தான் எனவும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் 7-ஆம் கெற்பம் என்பதைப் பின் வருவன வற்றால் காண்க. மற்றும் தைமாதம் திங்கட்கிழமை தசமிதிதி திருவோணம் 4-ல் ஜனித்தான் எனவுங் கூறுக. 79

கேளப்பா விஷ்ணுபந்தம் இன்னந்தானும்
கேவலமாய் இவன்பிறந்த நாலாமாதம்
கேளப்பா இதுவுமன்றி பத்தாமாதம்
வெய்யவன்போல் வீட்டிலே அனல்தான்கொள்ளும்
வீளப்பா வருமையினி பிடித்துக்கொண்டு
விற்பனமாய்த் தாயிறந்தாள் விழலதாக
ஆளப்பா உறன்முறையார் பகைவராகுர்
அன்பாக அதன்மேலே அருளுண்டாச்சே.

(இ-ள்) விஷ்ணுபந்தரேகை என்பது தனது அஸ்தத்திலமைந்த அமைப்பைப்பெற்றவனது பலாபலன்களைக் கூறுமிடத்து இந்த ஜாதகன் ஜனித்த நான்காவது மாதம் அல்லது 10-வது மாதம் இவனது சொந்த இல்லத்தில் நெருப்புபிடித்து சாம்பலாயிற்று எனவும், அன்றுதொட்டு இவன் குடும்பத்தில் அளவிட முடியாத வறுமைப்பிணியானது குடிகொண்டு வாட்டுவதுடன் மேற்படி மாதம்-4 அல்லது 10-ஆம் மாதம் தாய் இறந்து போவாள் என்றும், தனது பந்து வர்க்கத்தவருங்கூட கொடிய விரோதியானுர்கள் எனவும் கூறினும், மேற்படி காலத்திற்குப் பின் கடவுள் கிருபையால் நல்ல மேலான யோகம் உண்டாயின என்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இவன் பிறந்தது முதல் மாதம் 10-க்குள் வீடு நெருப்பினுல் சாம்பலாவதுடன் தாயும் இறந்து வறுமைக்காளாகி கொடிய கஷ்டப்படுவார் என்பது கருத்து. 80

ஆகவே இன்னமுந்தான் கேட்பாயப்பா
ஆச்சரியம் பெற்றமைந்தன் அதிகயோகம்
ஆகவே இவன்வயதோ ரெழுபத்தைந்தாம்
அப்பனே இவனுக்குத் தாரமூன்றும்
வாகவே யிவனுக்குப் பிள்ளை ஆறும்
வரிசையாய் ஆண்மூன்று பெண்தான்மூன்று
போகவே தேவிமா ரிரண்டுபேர்க்குள்
புகலவே பிள்ளையொரு தாரத்தின்றே.

(இ-ள்) விஷ்ணுபந்தரேகையில் பிறந்தவனது யோகங்களை இன்னும் கூற வேண்டுவதெனில்? இந்த ஜாதகன் மேற்சொன்ன மாதங்கள் 10-க்குப் பின் எவரும் ஆச்சர்யப்படத் தக்கவனுகவும் பிரபல யோகமுடையவனுகவும் வாழ்வதுடன் வயது-75 வரையில் சுகித்து வாழ்வான் எனவும், இந்த ஜாதகனுக்கு மனைவிமார் மூவர் எனவும், இதனுக்குண்டாகும் புத்திரர்கள் அறுவர் எனவும், அவற்றுள் 3-ஆண்களும், 3-பெண்களும் உண்டாகும் எனவும்,

மனைவி மூவரில் 2-மனைவிகளுக்கே புத்திரர் உண்டாவார் என்றும், ஒரு மனைவிக்குப் புத்திரர் இல்லையெனவுங் கூறுவாயாக எ-று. 81

இல்லையென்ற இன்னமுந்தான் சொல்லக்கேளு
இயல்பாகச் சொல்லுகிறேன் இயன்றமட்டும்
அல்லையென்று சொல்லுகிறேன் அறிவுள்ளோர்க்கு
அப்பனே யின்னமுந்தான் அறிந்துபாரு
கல்லையென்ற கண்ணுதலான் சொன்னமார்க்கம்
கருணையால் உமையவள்தான் கடாட்சிப்பாள்பார்
தொல்லையென்றும் இல்லையடா விஷ்ணுபந்தம்
சொல்லுகிறேன் இன்னமுந்தான் சுருதிகேளே.

(இ-ள்) விஷ்ணுபந்த ரேகை என்பது தமது அஸ்தத்தின்கண் அமைந்திருக்கப் பிறந்தவனது பலாபலன்களை என்னால் கூடியவரையில் இன்னும் கூறுவேன் கேட்பாயாக. அதிலும், முக்கியமான சிற்சில விஷயங்களை இப்பூமியிலுள்ள அறிவாளிகள் அறியும்வண்ணம் முக்கண்ணையுடைய ஈஸ்வரனால் உமா மயேஸ்வரிக்குக் கூறியிருந்த சாஸ்திரத்தைச் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் கேட்பீராக. பொதுவாய்க் கூறுமிடத்து விஷ்ணுபந்த ரேகை என்பது தமது அஸ்தத்தின்கண் அமையுமேயாமானால் ஈஸ்வரியாலுரைத்த சுருதியின்படி தொல்லையில்லாத வாழ்வுடையவன். ஆதலால் அதன் விருத்தாந்தங்களைக் கூறுவேன் கேட்பீராக எ-று. 82

கேட்கவே இவன்வயது பதினாலுக்குள்
கெணிதமுள்ள விவாகமுந்தான் முடியும்மைந்தா
ஆட்கவே இவனுக்கு அஞ்சுகண்டம்
அப்பனே உண்டாம்என் றுய்ந்துசொல்லு
வாட்கவே இவனுக்குப் பிள்ளைதானும்
வண்மையுள்ள பத்துப்பிள்ளை வரிசையாகும்
கோட்கவே இவன்யோகம் தனயோகம்தான்
கொற்றவன்தான் அதிகாரம் செய்குவானே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனித்த வயது 14-க்குள் எவரும் மெச்சத்தகுந்த விவாகமானது முடியும் எனவும், இவன் வாழ்நாட்களில் கெண்டாதி கெண்டங்கள் 5 உடையவன் எனவும் கூறுவாயாக. இதுவன்றி இவனுக்கு உண்டாகும் புத்திரர்கள்-10 எனவும், இவனுக்கு எவரும் மதிக்கத்தகுந்த மேலான யோகம் உண்டாகும் எனவும், அரசனைப்போன்று அதிகாரம் செய்யத்தகுந்தவனும் ஆவான் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) முன்கூறிய 81-ஆம் செய்யுளில் ஆண் மூன்று, பெண் மூன்று எனவும், இச்செய்யுளால் புத்திரர்கள்-10 எனவும் கூறியதால் பிறப்பது-10 எனவும், நிலைப்பது 6 எனவுங் கொள்க. 83

செய்யவே இவன்தான் சற்சனனேஆகும்
செப்புகிறேன் நீராலே இரண்டுகண்டம்
வையவே மிருகத்தால் கண்டம்ஒன்று
வரிசையாய்ச் சொல்லுகிறேன் சத்துருவால்ஒன்று

மெய்யவே வியாதியினால் இரண்டுகெண்டம்
மேன்மையாய் உண்டென்று விளம்பினேன்பார்
வெய்யவே கண்டமெல்லாம் தீரவேண்டி
வேதவருக் கருச்சனைதான் விரும்பினனே.

(இ-ள்) இந்த ஜாதகன் மிக்க சர்ஜன சற்குணம் உடையவனவன் எனவும், இவனது வாழ்நாட்களின் கெண்டாதி கெண்டங்களைக் கூறுமிடத்து ஜலத்தால் இரண்டு கெண்டமும், கொடிய மிருகத்தால் ஓர் கெண்டமும், தனது சத்துருக்களால் ஓர் கெண்டமும், கொடிய வியாதியால் இரண்டு கெண்டமும் உண்டாகும். ஆனதால், மேற்சொன்ன கெண்டாதி கெண்டங்கள் நீங்க ஸ்ரீசண்முக பெருமானுக்கு அருச்சனை செய்யில் மேற்படி கெண்டம் நீங்குமென நிச்சயமாய்க் கூறுக எ-று.

(வி-ரை) முன்கூறிய 83-ஆம் செய்யுளில் இவனுக்குண்டாகும் கெண்டங்கள்-5 எனக் கூறியும், இச்செய்யுளால் அவை இன்னின்ன கெண்டம் எனவும் கூறினர். மேற்படி கெண்டம் எவ்வாறு நீங்குமெனின் சண்முக பெருமானுக்கு அருச்சனை செய்யில் நீங்கும் என்பதை யறிக. 84

விரும்பிட்ட இவன்வினைத் தொழில்கள்சொல்வான்
விரிவான வேதத்தை விரும்புவான்பார்
அரும்பிட்ட சிவபூசை நாளும்செய்வான்
அப்பனே இன்னமுந்தான் அறையக்கேளு
பொரும்பிட்ட இவனுக்குப் பூமியோகம்
பொருந்துமடா மைந்தனே புண்ணியமாக
தரும்பிட்ட புதுமனையும் குதிரைலாயம்
சார்வாக அஸ்வம்உண்டாய் வாழ்குவானே.

(இ-ள்) எவரும் மதிக்கத்தக்க இந்த ஜாதகன் பற்பல விதமான கேழ்வித் தொழில் செய்பவன் எனவும், சகல வேதங்களையும் ஆராய்ச்சிசெய்ய விரும்புபவனாயும், எந்நாளும் இடைவிடாது சிவபூஜை செய்யத் தகுந்தவனாயும் வாழ்வான். இன்னும் கூறவேண்டுவதெனில் பெருமையையுடைய இந்த ஜாதகனுக்கு விசேஷ பூமி யோகம் உண்டாகும் எனவும், மேற்படி பூமியானது தனது ஆயுள் முடியும் வரையில் நிலைத்திருக்கு மெனவும், நூதன மனை மாளிகைகளும், குதிரைலாயம் முதலியன அமைந்த கட்டடமும் உடையவனாகி தனது இல்லத்தில் குதிரை முதலியன உண்டாக வாழ்வான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இவன் வாழ்நாட்களில் குதிரை முதலிய வாகனாதிகளும் உண்டென்பது கருத்து. 85

வாழ்வான விஷ்ணுபந்த ரேகைமைந்தா
மானிலத்தில் சொல்லிவிட்டேன் உள்ளதெல்லாம்
நாழ்வான நயமெல்லாம் மறைப்பொன்றில்லை
நலமான மனோன்மணியாள் நவின்றமார்க்கம்

ஆழ்வான ஆதியந்தம் கண்டுதேறு
அப்பனே இன்னமும்உண் டாய்ந்துகேளு
வீழ்வான தில்லாமற் சொல்வேன்மைந்தா
விகற்பமாய் ரேகையொன்று சொல்லுவேனே.

(இ-ள்) அளவிறந்த வாழ்வு முதலியனவற்றைக் கொடுக்கத் தகுந்த விஷ்ணுபந்த ரேகையினது விஷயங்களை, உமாதேவியாகிய எமது ஈஸ்வரி யாள் எமக்குக் கூறியவண்ணம் எல்லாவித பலாபலன்களையும் மறைவின்றி ஆதியோடந்தமாய் ஆய்ந்து இப்பூமியிலுள்ளோர் எவரும் இலகுவாய் அறியும் வண்ணம் தவறாது சொல்லிவிட்டேன். ஆயினும் மற்றுமொரு ரேகை யுண்டு. அதனது மார்க்கங்களையும் எல்லோரும் அறியும்வண்ணம் எல்லா வித பலாபலன்களையும் தெளிவாய்க் கூறுவேன் கேட்பீராக எ-று. 86

### வஜ்ரமணி ரேகையின் பலன்

சொல்லுகிறேன் ரேகைஒன்று இன்னம்கேளு
சொல்லரிய பழம்பொருள்கள் துலங்கத்தானே
அல்லுகிறேன் வச்சிரமணி ரேகைஒன்று
அப்பனே சொல்லுகிறேன் அடவாய்க்கேளு
ஒல்லுகிறேன் நடுக்கரத்தில் ஐவிந்தம்ரெண்டு
உற்பனமாம் வச்சிரமணி ரேகைமூன்று
மல்லுகுவேன் இரண்டுபுள்ளி மூன்றுரேகை
வளமாக இருக்குமப்பா வண்மைபாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! வஜ்ரமணி ரேகையென்பது ஒன்று உண்டு அதனை ஈஸ்வரனார் எனக்குக் கூறியவளவில் இலக்கமாய்ச் சொல்லுகிறேன் கேட்பாயாக. மேற்படி வஜ்ரமணி ரேகை என்பது எவ்வாறு இருக்கு மெனில்? தத்தமது அஸ்தத்தின்கண் ஐவிந்தம் போன்று 2-புள்ளி வடிவ மாயும், மூன்று ரேகைகளாயும் அமைந்திருக்கும். இவ்வாறு தமது நடுக் கரத்தில் இரண்டு புள்ளி வடிவமாயும் மூன்று ரேகை வடிவமாயும் இருப்பதே வஜ்ரமணி ரேகை எனப்படும். ஆதலால் இதனது பலன்களைக் கூறுவேன் கேட்பீராக எ-று.

(வி-ரை) மேற்படி வஜ்ரமணி ரேகை என்பது இதுவரையில் கூறிவந்த ரேகைகளைப்போன்று விரல்களில் இல்லாமல் நடுக்கரத்தில் இருக்கும் எனவும், இரண்டுபுள்ளிகளாய் காணப்படுவது ஐவிந்தரேகை எனவும்,ரேகை வடிவமாயிருப்பது வஜ்ரமணி ரேகை எனவுங் கொள்க.பலன் பின்வருவாறு.

பார்க்கவே வச்சிரமணி வைவிந்தம்ரெண்டு
பண்பாக இருக்கும்என்றால் குணத்தைக்கேளு
ஏர்க்கவே இவன்பிறவி நல்லயோகம்
இயம்புகிறேன் இவன்பிறவி மூன்றுபேராம்
கார்க்கவே இரண்டாணும் ஒன்றுபெண்ணும்
கருணையால் மூன்றுபேர் பிறவியாகும்
தார்க்கவே இவன்தானும் அஞ்சாங்கெர்ப்பம்
தாஷ்டீகந்தான் மகாளிற் பிறப்பான்றானே.

(இ-ள்) இரண்டு புள்ளி வடிவமாயுள்ள ஐவிந்த ரேகையும், 3-ரேகைக் கீற்று வடிவமாயுள்ள வஜ்ரமணி ரேகையும், நமது அஸ்தத்தின்கண் அமைந் திருக்குமேயாமானால் அதனது குணமாகிய பலாபலன்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இவன் பிறவிகால லக்ஷணப்படி நல்ல மேலான ராஜயோகம் உடையவன் எனவும், இந்த ஜாதகன் ஐந்தாம் பிறவி என்றும், மூன்று பிறவிகளே நிலைத்திருப்பதெனவும், அவற்றுள் இரண்டு ஆணும், ஒரு பெண்ணுமே நிலைத்திருக்குமெனவுங் கூறுவதுடன் இந்த ஜாதகன் மக நக்ஷத்திரத்தில் பிறந்தான் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் ஐந்தாம் பிறவி என்றும், பிறவி 3-என்றும் கூறியதால், ஜெனித்தது 5-என்றும், நிலைத்திருப்பது 3-எனவுங் கூறி வாயிற்று.

88

ஆனதொரு கிழக்கான வாசல்வீட்டில்
அடவாகப் பிறந்ததிவன் ஆண்மையாக
வானதொரு குருவாரம் மத்தியானந்தான்
வண்மையாம் சஷ்டியென்ற திதிதானாகும்
போனதொரு புரட்டாசி மாதத்தில்தான்
கொற்றவன்தான் பிறந்திட்டான் திசையினாலே
நானதொரு யிவன்பிறந்த போதுமைந்தா
நலமான தன்பிறவிக் காகாதன்றே.

(இ-ள்) மற்றும் இந்த ஜாதகன் பிறந்த காலத்தைக் குறிக்குமிடத்து புரட்டாசி மாதத்தில் குருவாரமென்னும் வியாழக்கிழமையில் மத்தியானம் 15-நாழிகையில் சஷ்டி கூடியநாளில் பிறந்தான் எனவும், இவன் பிறந்த வாசலானது கிழக்கு வாயிலுடைய வீட்டில் ஜனித்தான் என்றும், மிக்க திசையும் யோகமும் உடையவன் என்றும், இந்த ஜாதகன் ஜனித்த நேர தோஷத்தால் இவனது பிறவிக்கு ஆகாது (அவையாவன) தோஷம் உண் டென்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) பிறவிக்கு தோஷம் என்ற விவரம் கீழ்வரும் செய்யுளால் அறியலாம். மற்றும், காலநேரம் பகல் 15-நாழிகை என்றதால் பிறவிக்கு தோஷம் என்றதை அறிக.

89

அன்றெனவே தன்பிறவி அப்பாசொல்வேன்
அன்னவந்தான் பிறந்திட்டான் எட்டாமாதம்
குன்றெனவே ஒருபிள்ளை அடுப்பில்வீழ்ந்து
குறிப்பாக யிறந்ததென்று கூறினேநான்
நன்றெனவே யிவன்பிறந்த நாலாமாண்டு
நலமான பிதாவினிடத் துயரம்போச்சே
வன்றெனவே யிவனுடைய யோகவாழ்க்கை
வகையாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளே.

(இ-ள்) இந்த ஜாதகனது பிறவிக்குத் தோஷம் என்னும் விசேஷத்தைக் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகன் பிறந்த எட்டா

வது மாதம் இவனுடன் பிறந்த பலமான குழவியொன்று நெருப்பில் வீழ்ந்து இறந்து போயிற்றெனவும், இவன் பிறந்த நான்காம் வயது முதல் இவனது பிதாவுக்குண்டாகிய துன்பம் வறுமை முதலியன நீங்கி சுகித்தான் எனவும், பிரபல யோகமும், வாழ்க்கையும் விசேஷமாய் உண்டாகுமென்றும் கூற வேண்டும். மற்றும் இந்த ஜாதகனது குணவிசேஷங்களை இன்னும் கூறுவேன் கேட்பீராக எ-று.

(வி-ரை) பிறவிக்கு தோஷம் என்று கூறியதை விளக்கியதுடன் இவன் வயது 4-முதல் பிதாவுக்கு யோகம் என்றனர். அவ்விஷயங்களைக் கீழ்வருவனவற்றால் காண்க. 90

கேளப்பா யிவனுக்குத் தேவியொன்று
கிருபையுடன் வாழ்ந்திருப்பார் கீர்த்திகேளு
வாளப்பா வகையுடனே வாழ்ந்திருந்து
வரிசையாய்ப் பிள்ளைகள்தான் பதின்மூன்றும்
கோளப்பா யில்லாமல் பிறப்பார்மைந்தா
கொற்றவன்றன் பாக்கியமுற்று வாழ்வாரன்றே
வேளப்பா பிள்ளைதான் அஞ்சாம்பேறும்
வேதாந்த சற்குணன்பொன் கிடைக்கும்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! கேட்பீர்களாக. என்னவெனில்? இந்த ஜாதகனுக்கு மனைவி ஒன்றே யாகும். தனது வாழ்நாட்களில் மிக்க கீர்த்தியுடன் வாழ்வதுடன் நாளுக்கு நாள் மிக்க மேம்பாடுடையவராய் வாழ்வன், இவனுக்கு எவ்வித துன்பம் கோளாறு முதலியன இன்றி பதின்மூன்று மக்களைப் பெற்றும், அரசனைப்போன்று சகல பாக்கியங்களும் உடையவனாகி வாழ்வன். ஏனெனில்? இந்த ஜாதகன் ஐந்தாம் பிறவியானதால் சற்குண முடையவனும், வேதாந்த ஆராய்ச்சியுடையவனும், தனவந்தனுமாகி வாழ்வான் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) தனவான் என்ற விஷயத்தையும், தனம் வரும் விதத்தையும், பின்வரும் செய்யுளால் விளக்குவார். 91

கிடைக்குமென்று உத்தரவு சொன்னாய்தாயே
கிருபையுடன் ஏதாலே கிடைக்குமம்மா
படைக்குமென்று எந்தனுக்குப் பகர்ந்தசோதி
பார்வதியே பராபரியே சொல்லுமம்மா
அடைக்கலம் உன்பாதமெனப் பிரமதேவன்
ஆனந்த மதியமிர்த அம்பிகைத்தாய்
துடைக்கவே சாஸ்திரங்கள் அநேகங்கோடி
சொன்னஅம்பாள் இன்னமுந்தான் சொல்லுவாளே.

(இ-ள்) ஓ எனது அன்னையே! இவ்வுலகெங்கணும் போற்றத் தகுந்த சொரூபியாகியும், பார்வதியுமாகிய என் தாயே! சிருட்டி கர்த்தனான பிரமனும் உம்மிடம் வந்து அடைக்கலமெனத் தொழுது பணியத்தகுந்த சந்திரவதனமும்

அமுதமொழியும் ஆனந்தமயமாயும் விளங்காநின்ற எமது அம்பிகை தாயே எங்களுக்கு தாங்கள் மிக்க அன்புகூர்ந்து அனந்தகோடி சாஸ்திரங்களையும் சொல்லி அருள்செய்த மாதாவே! இந்த ஜாதகனுக்கு அநேக பொன் முதலியன விசேஷமாய்க் கிடைக்கும் என்று கூறியதால் அவை எதனால் கிடைக்கும் என்ற ரகஸ்யத்தை அடியேங்கள் அறிந்துகொள்ளும் வண்ணம் இன்னமும் சொல்வீராக எ-று.

(வி-ரை) தனம் அநேகம் உடையவன் என்றதால் அவை எக்காரணம் அதனைக் கூறுவீர் என முனிவர், தேவர், ரிஷிகள் முதலாயினோர் கேட்கலானார். 92

சொல்லுவாள் மனோன்மணியாள் என்னைப்பெற்ற
சுந்தரிதான் தனங்கிடைக்கும் வகையைத்தானே
மல்லுவாள் வாலைபரஞ் சோதியான
வச்சிரமணி நிகரான முறுவலாள்தான்
ஒல்லுவாள் உபதேசம் உறுதியாக
உத்தமனும் பிரமனுளம் உவகைபூப்ப
அல்லுவாள் அகிலாண்ட கோடிமாதா
ஆயிழையாம் சிற்பரிதான் அருள்செய்வாளே.

(இ-ள்) இவ்வாறு தொழுது கேட்டுக்கொண்ட தேவர்கள், ரிஷிகள், முனிவர்கள் முதலாயினோரைப் பார்த்து எமது அன்னையாகிய உலக மாதாவும், அழகுபொருந்திய ரூபலாவண்ய முடையவளும், உலகபரஞ்சோதி யானவளும், புன்சிரிப்புடைய முகமும், வச்சிரத்தாலாகிய மணிகளை அணிந்தவளும், சிற்பர சோபிதமானவளுமாகிய மனோன்மணித்தாய், தம் எதிரில் இருக்கும் பிரம்மன் சந்தேகம் தீர்ந்து சந்தோஷமடையும் வண்ணம் இந்த ஜாதகனுக்கு எக்காரணத்தால் தனம் உண்டாகுமெனக் கூறிய ரகஸ்யத்தை எல்லோரும் அறியும்வண்ணம் (கீழ்க்கண்டவாறு) உபதேசிப்பாள் எ-று. 93

செய்யவே யிவனுக்கு அஞ்சாம்பிள்ளை
செய்ததொரு தவத்தாலே மைந்தாகேளு
வையமே ஈஸ்வரர்க்குப் பாதபூசை
வண்மையாய்ச் செய்ததினால் எல்லாஞ்சித்தி
உய்யவே அதனாலே யிவன்தனக்கு
உற்றதொரு ரிஷபவாகன மீதேறும்
ஐயரவர் ஐயமில்லாப் பொருள்களீந்தார்
அனந்தயோகம் இதுவே அருளாமென்றே.

(இ-ள்) ஓ தேவர்களே! முனிவர்களே! ரிஷிகளே! கேளுங்கள் இந்த ஜாதகனுக்கு எதனால் தனம் உண்டாகும் எனக் கூறினேன் என்றால், இவன் தனது முன் ஜென்மத்தில் செய்த தவப்பேற்றாலும், எல்லாம்வல்ல ஈசனுக்கு பாதபூஜை செய்த விசேஷத்தால் அப்பலன் சித்தியாகும் பொருட்டு ரிடபாரூடரான சிவபிரான் இவன்மீது கிருபைகூர்ந்து இச்சென்மத்தில் இவன் ஐந்தாம் பிறவியாய் பிறந்து, எவ்வித கஷ்டமும் இல்லாமல் சகல

சௌபாக்கியங்களையும் அடையும்வண்ணம் சகல பொருள்களையும் கொடுத்து ஆனந்தமயமான யோகத்தை அடையும்வண்ணம் கடாக்ஷம் செய்தார் எ-று.

(வி-ரை) முன் ஜனனத்தில் சிவபிரானுக்குப் பாதபூஜை செய்த தவப் பேற்றால் இச்சென்மத்தில் தனவந்தனாய் வாழ்வான் என்பது கருத்து. 94

அன்றப்பா இக்குழந்தை அஞ்சாம்பேரும்
அருளான மகத்தில் நாலாங்காலாம்
குன்றப்பா குலமகனும் இவனைப்போலும்
குவலயத்தி லில்லையில்லை குபேரனொப்பு
மன்றப்பா மண்ணும்விண்ணும் வந்துபோற்றும்
மகாபாக்கிய யோகமிது மருவிக்கேளு
நன்றப்பா பூருவத்திற் செய்தபுண்ணியம்
நரேந்திரனாய் வந்துதித்தான் நயந்துபாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இன்னும் சொல்லுகிறேன் கேட்பீர்களாக. இந்த ஜாதகன் ஐந்தாவது பிறவியாகும். இதுவன்றி மகம் நாலாம்பாதத்தில் ஜனித்தவனாகும். மேலும் இவனைப்போன்றுநற் குலபுத்திரர்கள் எவரும் இல்லையெனவும், செல்வத்திலோ இப்பூமியில் எவரும் இணை சொல்லப்பட மாட்டாத குபேரசம்பத்துடையவனும், இம்மண்ணுலகத்தினரும், விண்ணுலகத்தினரும், போற்றத்தகுந்த மகாபாக்கியமும், யோகமும் உடையவனாகும். இன்னும் சொல்லவேண்டுவதெனில்? இவன் பூர்வ புண்ணியத்தினால் இப்பூமியில் நரேந்திரனைப்போன்று வந்துதித்தான் எனவுங் கூறவேண்டுவதாகும் எ-று. 95

பார்க்கவே யிவனுடைய யோகத்தாலே
பண்பான குழந்தைக்கு வயதுமூன்றில்
ஏர்க்கவே அக்குழந்தை தானேமைந்தா
இயல்பாக நிலத்திலே குழிதான்கெல்லி
வார்க்கவே விளையாடும் போதுதானே
வண்மையாய்ப் பணம்கண்டு பிதாவுக்குறைத்தான்
தார்க்கவே பிதாவும்போய்க் கண்டுதானே
சற்சனனாய் நிதியெடுத்து வாழ்ந்தான்அன்றே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்தயோக சக்கர அமைப்பால் இக்குழவியானது தான்பிறந்த மூன்றும் ஆண்டில் ஓர் பூமியில் பள்ளம் தோண்டி விளையாடிக் கொண்டிருக்கையில், அங்ஙனம் பெருத்த நிதிக்குவியல் ஒன்றைக் கண்டு அதனைத்தான் பிதாவிடம் போய்சொன்னான். இவன் பிதாவானவன் குழந்தைகாட்டிய நிதி இருக்கும் இடத்திற்குச் சென்று மேற்படி நிதியை எடுத்து வந்து சகல சுகபோகங்களுடையவனாய் வாழ்ந்தான் எ-று.

(வி-ரை) தனமுள்ளவனாகும் மார்க்கத்தை இங்கு கூறியுள்ளார். எப்படியெனில்? மூன்றும் வயதில் புதயல் கிடைக்கும் எனவும், மேற்படி புதை

யற் பொருளால் எவ்விதகுறைவும் இன்றி சுகித்து வாழ்வான் என்பதே யாகும். 96

அன்றெனவே அன்னமுந்தான் நிதியெடுத்து
ஆனந்த மகாயோகம் அணுகிற்றன்றே
குன்றெனவே இவனுடைய யோகவாழ்க்கை
குவலயத்தில் பிரமாவே எல்லாஞ்சொல்வேன்
நன்றெனவே நானுனக்குச் சொல்லுமார்க்கம்
நலமுடனே முடியுமென்று நாடிக்காண்பாய்
ஒன்றெனவே இருந்ததொரு சகலஜீவன்
உண்மையாய் ரட்சையதாம் உறுதிசொல்லே.

(இ-ள்) மேலே கூறியவண்ணம் 3-ஆம் வயதில் கிடைத்த நிதியால் எவராலும் அளவிட்டுச் சொல்லமுடியாத யோகம் பிரபலமாயுண்டாகி வாழ் வாராயினர். ஓ பிரமனே! இந்த ஜாதகனின் யோக வாழ்க்கையினது விசேஷங்களை இன்னும் சொல்லுவேன் கேட்பீராக. நான் உனக்கு இது வரையில் கூறிவந்த விஷயங்களில் எவ்வித சந்தேகமும் இன்றி சொன்னவை யாவும் உண்மையாகவே முடியும் என்றறிவதுடன், இவ்வுலகிலுள்ள சகல ஜீவர்களுக்கும் யான் உறைத்த வாக்கியம் மிக்க உண்மையாய்ச் சித்திக் கும் என்பதை யறிவாய் எ-று. 97

சொல்லவும்தான் தேவர்களும் முனிவோரெல்லாம்
சொற்பெரிய உமையவளைத் தொழுதுநின்றார்
வெல்லவுந்தான் மூவுலகு தன்னைவெல்ல
வேதாந்தம் உணர்ந்தபெரியோரும்வெல்ல
அல்லவும் அஷ்டதிக்கு பாலர்மெச்ச
அருளான கும்பமுனி வசிஷ்டர்மெச்ச
வல்லமையாய்ச் சொன்னசொற்கள் எல்லாம்கேட்க
வண்மையாய்த் தொழுதிறஞ்சி வழிகேட்பாரே.

(இ-ள்) இவ்வாறு கூறிய உலகமாதாவான உமாதேவியாரது அருள் மொழிகளைக் கேட்ட தேவர், முனிவர் முதலாயினோரும், பூலோகம், புவர் லோகம், சுவர்லோகம் என்னும் மூவுலகத்தையும் வெல்லத்தகுந்த வேதாந்த மறிந்த பெரியோர்கள் அதிசயப்படவும், அஷ்டதிக்கிலுமுள்ள துவார பாலகர்கள் மெச்சவும், வசிஷ்டர், விஸ்வாமித்திரர் முதலாயினோர்களும், மேற்படி உமாதேவியாரது வாக்கியங்களைக் கேட்டு சந்தோஷ சித்தராய்த் தொழுது வணங்கி, ஏ அம்மணி! இன்னுமுள்ள விஷயங்களையும் கூறுவீராக என வணங்கி நின்றனர் எ-று.

(வி-ரை) உமாதேவியார் உரைத்த மொழிகளைப் பலரும் கேட்டு இன்னுமுள்ள விஷயங்களையும் சொல்வீராக என்று கேட்டுக்கொண்டனர் என்பதாம். 98

கேட்கவே முன்சொன்ன மூன்றுகாண்டம்
கேவலமாய் யிக்காண்டம் ஒன்றுங்கூட
ஆட்கவே காண்டந்தான் நான்கதாச்சு
அப்பனே சகலமுந்தான் அன்பாய்ச்சொன்னேன்
வாட்கவே வம்சமுதற் கோத்திரமெல்லாம்
வண்மையாம் நடக்கைமுதல் பிறவிசொன்னேன்
ஏட்கவே யிந்நூலிற் சகலசெய்தி
எம்பிரா னருளாலே இயம்பிட்டேனே.

(இ-ள்) ஓ எனது அன்பிற்குரிய பிரம்மா முதலாயுள்ள தேவர், முனிவர், ரிஷிகள் முதலாயினோர்களே கேளுங்கள். இதற்கு முன்சொன்ன மூன்று காண்டங்களாலும், இங்கு கூறும் நான்காவது காண்டத்தாலும், எமது தமைய ஞகிய எம்பிரானது கிருபையால் அவ்வவர்களுடைய வம்ச விசேஷங் களையும், கோத்திர விவரங்களையும், தனது முன்பிறவி தற்கால பிறவி முதலியனவற்றையும், வருகால விசேஷங்களையும், இன்னும் மற்றுமுள்ள சகலத்தையும் இந்நூலால் எவரும் எளிதில் அறியும்வண்ணம் தெளிவாய்ச் சொல்லிவிட்டேன். இன்னும் கூறுவேன் கேட்பாயாக எ-று. 99

இயம்பிட்டேன் நாலாங்காண்டத்தை மைந்தா
இன்னமுந்தான் சுவாமிசொன்ன தியம்புவேன்யான்
நயம்பிட்டேன் நான்முகனே கைலாசர்சொன்ன
நலமுள்ள கேசரியின் நடத்தையெல்லாம்
வயம்பிட்டேன் மழுவிடையான் சொன்னமார்க்கம்
வஞ்சனைகள் இல்லாமல் வகுத்துச்சொன்னேன்
துயம்பிட்டேன் தூய்சடையோன் சொன்னமார்க்கம்
சுந்திரம்போல் இந்நூலைத் துலக்கிடாயே.

(இ-ள்) ஓ நான்கு முகங்களையுடைய பிரமனே! இங்கு கூறும் அஸ்க ரேகையாகிய கேசரியின் விசேஷங்கள் யாவும் அழகிய விடையிலேறிச் செல்லத்தகுந்தவரும், தமது சிரசின்கண் சந்திரனையும் சடைகளையும் உடையவரும், கயிலாயத்திற்கு அரசனுகியவருமான ஈசனுர் எமக்குரைத்த வரையில் இங்கு கூறிய நான்கு காண்டங்களாலும் தெளிவாய்க் கூறினேன். இன்னும் எம்மிடம் ஸ்ரீ சர்வேஸ்வரன் கூறிய விஷயங்களையும் கூறுவேன் ஆனதால், அழகு பொருந்திய இந்நூலில் சந்தேகமின்றி கேட்டுத் தெளிவா யாக எ-று. 100

துலங்கிட்ட இந்நூலைப் பழித்தபேர்க்கு
தொலையாத நரகம்வந்து எய்துங்கண்டாய்
அலங்கிட்ட அநேகநாள் ஈசனைவேண்டி
அன்பாகத்தவமது செய்தறிந்தேன் மார்க்கம்
நலம்பெறவே கயிலாச நாதர்பார்த்து
நயமாக எந்தனுக்கு உபதேசித்தார்
வலம்பெறவே மகாரிஷிகள் கேளுங்களென்று
வசனித்தாள் கேசரியை ஆதித்தாயே.

(இ-ள்) ஓ முனிவர் முதலாயுள்ளவர்களே! அஸ்தரேகை சாஸ்திரம் என்னும் இந்நூலை எவரொருவர் பழித்தார்களோ அவர்களுக்குத்தொலையா நரகம் வரும் என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில்? இந்த சாஸ்திரத்தை யான் அநேகநாளாய்த் தெரிந்துகொள்ள வேண்டுமென்னும் கருத்துகொண்டு ஸ்ரீ சர்வேஸ்வரனை வேண்டிப் பலநாள் தவம் செய்தவர்ததால் ஸ்ரீ கயிலாய பதியானவர் இந்நூலை எனக்கு உபதேசித்தார். ஆனதால், ஓ மஹாரிஷிகளே யான் சொல்லும் சாஸ்திரங்களில் யாதொரு சந்தேகமும் இன்றி கவனிப்பாயாக என்று ஸ்ரீசர்வேஸ்வரியாகிய பராசத்தி தேவியானவள் கூறலானுள் எ-று.

(வி-ரை) இந்நூல் ஸ்ரீதேவியார் முனிவர், தேவர், ரிஷிகள், பிரம்மா முதலியோருக்குச் சொன்னதாயினும், மேற்படி தேவியார் ஸ்ரீ சர்வேஸ்வரரிடம் உபதேசம் பெற்றதெனவும், இதனை அவமதித்தோர்க்கு மீளா நரகமே சித்திக்கும் எனவும் கூறினர். 101

நான்காவது காண்டம் முற்றிற்று.

---

ஆக காண்டம் 4-க்கு பாடல்-356.

---

# ஐந்தாவது காண்டம்

ஆதியே ஐந்தெழுத்தாம் உமையேதாயே
அற்புதமே மெய்ப்பொருளே ஆதிசோதி
நீதியே பரஞ்சுடரே நிர்மலத்தாய்
நீலவர்ண கலாபமயில் சாயலாளே
வாதியேவாலைபர மேஸ்வரியே அம்பாள்
வச்ரமணி மரகதப்பெண் உலகமாதா
சோதியே சொக்கர்மகிழ் மீனாட்சித்தாயே
சொல்லுவாய் நடனசபை துலங்குவாளே.

(இ-ள்) இப்புவனம் யாவற்றிற்கும் முதற்பொருளாயும், நமசிவாயவென்னும் பஞ்சாக்ஷர சொரூபியும், உலகமாதாவும் உமையவளும் ஆகிய எனது தாயே! சோதிமயமாய் நிறைந்துள்ள ஆதிப்பொருளே! நீதிமார்க்கம் அறிந்தவளும், பரஞ்சுடருமாகி நிர்மலமாகிய சொரூபமுடையவளும், நீலவர்ணத்தையுடைய கலாபம் என்னும் மயிலினது சாயலை யொத்தவளும், எல்லா சாஸ்திரங்களையும் அறிந்தவளும், எந்நாளும் வாலைவயதுடையவளாயும், பராபரவஸ்துவும், அழகிய வச்சிரமணிபதக்கத்தையும் அணிந்திரானின்ற உலகமாதாவென்னும் பரமேஸ்வரியே! ஓ அம்பா! சொக்கநாதர் மனமகிழ்ச்சியாகும் வண்ணம் மீனாக்ஷி என்னும் திருநாமத்துடன் சோதிமயமாய் நிறைந்துள்ள எனது தாயே! நடனசபையின்கண் பிரசித்திபெற்ற என் தாயே! இன்னுமுள்ள விஷயங்களையும் கூறுவாய் எ-று. 1

துலங்கவே யென்தாயே பரஞ்சோதிஅம்பாள்
துன்பவினை தீர்த்தருளத் துலங்குவாயே
அலங்கவே ஆதியந்தம் நிறைந்தசோதி
அற்புதமே சிற்பரியே ஆதிசத்தி
பலங்கவே பராபரியே பராசத்திதேவி
பகருமம்மா உள்ளதெல்லாம் பாவியோர்க்கு
நிலங்கவே நிமலிதிரி சூலியென்று
நின்றுதொழ ஐந்தாங்காண்டம் சொன்னாள்பாரே.

(இ-ள்) எங்களது துன்பமும் பூர்வவினையும் அகற்றும் வண்ணம் ஏக சோதியாய் நிறைந்து பரஞ்சோதியாயும், அம்பாள் என்னும் திருநாமமும் படைத்த எனது தாயே! ஆதியும் அந்தமும் இல்லாது சோதிமயமாய் நிறைந்த பரஞ்சுடரே! எவரும் அற்புதமெனக் கூறத்தகுந்த சிற்பரசொரூபமும், ஆதிப்பிரணவசொரூபமும் அமைந்த என் தாயே! எவரும் போற்றத்தக்கதாய் தனது அஸ்தத்தின்கண் திரிசூலம் பிடித்த எனது தாயே! இன்னும் உள்ள ஐந்தாங்காண்டத்தினது வரலாறும் அடியேங்கள் அறிந்து கொள்ளும் வண்ணம் கிருபைகூர்ந்து உரைத்தருள வேண்டுமாய்ப் பிரார்த்திக்கின்றனம் எ-று. 2

சொல்லவென்று முனிவர்களும் தேவர்கேட்க
சொல்லினாள் உமையவள் தான் சொல்லினாள்பார்
அல்லவென்று மகிமையுள்ள சிலதுரேகை
அன்பாக சொல்லிவைத்த அருமைகேளு
மல்லவென்று வண்மையினாற் சொல்லப்பட்ட
வாகான பிரமாவும் வணங்கிக்கேட்க
நல்லதென்று நாயகியாள் சொன்னமார்க்கம்
நான்சொல்வேன் கமலமுனி நன்றாய்க்கேளே.

(இ-ள்) இவ்வாறு வணங்கிக் கேட்டுக்கொண்ட தேவர் முனிவர் முதல் பிரம்மா வரையிலுமுள்ளவர்களைப் பார்த்து, உலகமாதாவும் எனது தாயுமாகிய ஸ்ரீதேவியானவர் அன்புடன் சொல்லிய சிற்சில ரேகையினது விருத்தாந்தங்களை கமலமுனியென்னும் நான் கேட்டுக்கொண்டிருந்தமையால் யான் கேட்டவாறு ஷை உமையவள் சொன்ன உண்மைமொழி தவராது மானிடர்களாகிய நீங்கள் அறியும் வண்ணம் எம்மால் இயன்றவரையில் கூறுவேன். ஆனதால், அதனை மிக்க சிரத்தையுடன் கேட்பீராக எ-று. 3

மால்விந்தரேகை சமலிரேகையின் பலன்

கேளப்பா மால்விந்த ரேகைகண்டால்
கேவலமாய்ச் சமலியென்பர் இரண்டுரேகை
வாளப்பா யிரண்டுபுள்ளி நான்குரேகை
வளமாக நடுவிரலில் யிருக்கும்பாரு
ஆளப்பா மால்விரலில் கீழேநிற்கும்
அன்பான ரேகைகண்டால் அறைகுவேன்கேள்
நாளப்பா யிவனுடைய யோகவாழ்க்கை
நலமாக நானுனக்குச் சொல்லுவேனே.

(இ-ள்) ஓ தேவர்களே! மால்விந்தரேகை சமலிரேகை என்னும் இரண்டு ரேகையுண்டு. அவற்றின் விவரங்களைக் கூறுவேன் கேட்பீராக. மேற்சொன்ன ரேகைகளில் ஒன்றானது நடுவிரலாகிய விஷ்ணு விரலில் நான்கு கீற்று ரேகையாயும், இரண்டு புள்ளி ரேகையாயும் அமைந்திருக்கும், மற்றும், மேற்கூறிய வண்ணமே மேற்படி நடுவிரலின் கீழ்ப்பக்கமும் அமைந்திருக்கும். ஆனதால், இவ்வாறான ரேகையானது தமது அஸ்தத்தின்கண் அமைந்திருக்குமேயாமானால் அந்த ஜாதகனது யோகம் வாழ்க்கை முதலிய விசேஷகுணங்களைக் கூறுவேன் கேட்பீராக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சமலிரேகை, மால்விந்தரேகை என்னும் இரண்டும் நடுவிரலிலும், நடுவிரலின் கீழ்பாகத்திலும், ஆக இரண்டிடத்திலும் நான்கு ரேகை வடிவமாயும், இரண்டு புள்ளி வடிவமாயும் அமைந்திருக்கும் என்பது கருத்து. 4

சொல்லுவேன் யிவன்பிறந்த யோகவாழ்க்கை
சொல்லரிது மைந்தாநீ சுருதிகேளு
அல்லுவேன் யிவன்பிறந்த மனைதான்மைந்தா
அப்பனே சிறுகூரை கிழக்குவாசல்

ஒல்லுவேன் யிவன்பிறக்கும் போதுமைந்தா
உத்தமனே பிதாவுந்தான் வீட்டிலில்லை
இல்லுவேன் யிவன்தானும் தலைச்சன்அப்பா
இயல்பாக யிவன்பிறவி ஏழுபேரே.

(இ-ள்) ஓ என் மைந்தனே! மால்விந்தரேகை, சமவிரேகை, என்பது தனது அஸ்தத்தினிடம் அமையப் பிறந்தவனது பலாபலன்களை சாஸ்திரவாயிலாய் எம்மால் அறிந்தவரையில் கூறுவேன் கேட்பீராக. என்னவெனில்? இவனது யோகத்தின் விசேஷங்களை எவராலும் கூறுதற்கரிது. என்னவெனில்? இவன் ஜனித்த வீட்டின் வாசல் கிழக்கு எனவும், மேற்படி கிழக்கு வாசலில் சிறுகூரையுள்ள மனையில் இவன் பிறந்தான் எனவும், இவன் ஜனித்த காலத்தில் இவன் பிதா ஷை வீட்டில் இல்லையெனவும், இந்த ஜாதகன் தலைச்சன் எனவும், இவனுடன் பிறந்த பிறவிகள் மொத்தம் ஏழுபேர் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்து என்னவெனில்? இந்த ஜாதகன் முதல் குழவி எனவும், இவனுடன் பிறந்தவர்கள் ஏழுபேர் எனவும் கூறுவதுடன் இவன் யோகம் பிரமாத யோகம் என்றனர். 5

போரான ஆண்நாலு பெண்தான்மூன்று
பெரியவனாய் யிவன்தானும் வாழ்வதற்கு
கூரான யிவன்பிறந்த நல்லயோகம்
குணமான யோகமொன்று கூறலாகும்
வாரான யிவன்பிறந்த போதேஅப்பா
வம்சமுதல் எல்லாமும் பிரபலமாச்சு
கோரான யிவன்குடிதான் பெருகிற்றப்பா
கூர்மையுள்ள மனிதர்கள்தான் உறவுகூறே.

(இ-ள்) (மேலே சொன்னபடி) இவன் பிறவிகள் ஏழில் ஆண் நான்கு எனவும், பெண் மூன்றுமாகும். மற்றும் இவனே பெரியவன் எனவும், இவன் வாழ்வை நல்வாழ்வாய் நடத்துவதற்கு நல்ல மேலான யோகமும், எந்நாளும் நீங்கப்படாத யோகமும் உண்டாகும் எனவும், இந்த ஜாதகன் பிறந்த காலந்தொட்டே இவனது வம்சத்தவரும் விருத்தியாயினர் எனவும், இவனது குடும்பமும் விருத்தியாயிற்று எனவும், இவனுக்கு நல்ல புத்திசாலியான சிநேகிதர்களை சேர்வார் எனவுங் கூறுவாயாக எ-று. 6

கூறியதோர் யிவன்பிறந்த அஞ்சாமாதம்
குணமான பிதாவுக்குச் சகடயோகம்
ஆறியதோர் யோகமெல்லாம் வந்ததப்பா
அரசர்களின் சன்மானம் அதிகம்ஆச்சு
தேறியதோர் தேவாலயப் பிரதிஷ்டை
செய்துவந்தான் சிதறிவிட் டதன்மேல்தானே
தாறியதோர் யோகம்வந்து வந்துமாறும்
தாழ்வில்லா திருந்தனன்பார் இருபத்தாண்டே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனித்த ஐந்தாம் மாதம் இவனது பிதாவுக்கு நன்மையும் தீமையுமாகிய (சகடயோகம்) உண்டாயின வென்றும், மேற்படி மாதங்கள் ஐந்துக்குமேல் எல்லாவிதமான யோகங்களும், அரசர்களால் சன்மானம் கீர்த்தி முதலிய பலன்களும் பிரபலமாய் உண்டாகும் எனவும், இந்த ஜாதகன் பிதா சிவாலய பிரதிட்டை செய்திருந்து அதனை விட்டு விட்டதன் காரணத்தால் இவனுக்கு உண்டாகும் யோகமானது அடிக்கடி மாறிக்கொண்டேபோகும் எனவும், வயது 20-வரையில் எவ்விதத்தாழ்வும் இன்றி சுகத்துடன் இருந்தனனென்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் பிதா சிவாலயப் பிரதிட்டை செய்திருந்து விட்டுவிட்டதால் அடிக்கடி யோகம் உண்டாவதும் மாறுவதுமாக இருக்கும் என்பது கருத்து. 7

ஆண்டப்பா யிவனுக்குத் தாரம்ரெண்டு
அப்பனே முடியுமென்று அன்பாய்ச்சொல்லு
தாண்டப்பா யிவனுக்கு நாலுபிள்ளை
தகைமையாய்ப் பிறந்தவரும் யோகமாவார்
நாண்டப்பா யிவன்வயது முப்பத்தாறில்
நலமில்லா அரவத்தால் அடைவான்பாரு
ஈண்டப்பா இவனுடைய யோகவாழ்க்கை
இயல்பாகச் சொல்லிவிட்டே னிசைந்துகேளே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்கு மனைவிகள் இரண்டு எனக் கூறுவதுடன் புத்திரவர்க்கங்கள் நால்வர் உண்டாவர் எனவும், அவர்கள் மிக்க யோகமுடையவருமாவர் என நிச்சயமாய்க் கூறுவதுடன், இவனுக்கு உண்டாகும் கெண்டாதி கெண்டங்களைக் கூறுமிடத்து இவன் வயது 36 ல் சர்ப்பத்தால் பிரபலகெண்டம் உண்டாகும் எனவும் கூறுவாயாக. இதுவரையில் சமலிரேகையிற் பிறந்தவர்களது யோகம் வாழ்க்கை முதலியனவற்றைக் கூறிவிட்டேனுனதால், இனிவரும் ரேகை மார்க்கங்களையும் கூறுவேன் கேட்பீராகவும் எ-று. 8

### வஜ்ரபங்கி ரேகையின் பலன்

கேளப்பா வச்சிரபங்கி ரேகைமார்க்கம்
கிருபையுடன் சொல்லுகிறேன் பெருமைமெத்த
நாளப்பா வச்சிரபாங்கி ரேகைதானும்
நன்றாகத் திரிகோண நடுமையத்தில்
ஆளப்பா ஆள்காட்டி விரலிலேதான்
அன்பாக இருக்குமடா ஆய்ந்துபாரு
கோளப்பா இருகோண மிரண்டுபுள்ளி
கொற்றதொரு ரேகையிடங் கோர்வைகாணே.

(இ-ள்) ஓ முனிவர்களே! வஜ்ஜிரபங்கிரேகை என்பது ஒன்றுள்ளது. அதன் விருத்தாந்தங்களை உள்ளது உள்ளவாறே கூறுவேன்! கேட்பீராக,

அதன் பெருமையை அளவிட்டுக் கூறமுடியாது. மேற்படி ரேகையானது தனது அஸ்தத்தின்கண் ஆள்காட்டி விரலில் திரிகோணம் என்னும் முக்கோண வடிவமுடையதாய் அமைந்திருக்கும். ஓ முனிவர்களே! இவ்வாறு ரேகையுடன் அமையப்பிறப்பது ஸ்ரீநெடுமாலினது கிருபையாலேயே மேற்கண்டபடி ரேகையை அமைந்துப் பிறப்பார் என்பதை அறிவாயாக எ-று.

(வி-ரை) வஜ்ஜிரபங்கிரேகை என்பது தனது அஸ்தத்திலுள்ள நடுவிரலில் முக்கோண வடிவமாய் அமைந்திருக்கும் என்பது கருத்து. 9

காணப்பா இவனுடைய வலதுகையில்
கனக்கவே வளர்ந்திருக்கும் ரேகைதானும்
ஆனப்பா வலப்பாக மிரண்டுபுள்ளி
அப்பனே யிருக்குமடா மச்சம்ரெண்டு
வாணப்பா வச்சிரபங்கி பெருமைதன்னை
வளமான குபேரியெனும் ரேகைரெண்டும்
தாளப்பா குருசீஷ னுகவேதான்
சார்ந்திருக்கும் மென்றுமையுஞ் சொன்னாள்தாயுந்தானே.

(இ-ள்) ஓ முனிவர்களே! மேற்படி வஜ்ஜிரபங்கிரேகை என்பது தனது வலதுகையில் முன் கூறியவண்ணம் விசேஷமாய் வளர்ந்திருப்பதோடு மேற்படி ரேகையினது வலது பக்கத்திலும் இரண்டு புள்ளிகள் காணப்படுவதுடன் இரண்டு மச்சங்களும் காணப்படும். ஓ பிரமனே! இந்த வஜ்ஜிரபங்கிரேகையானது மிக்க விசேஷமானதுடன், குபேரி என்னும் ரேகையுங்கூடி மேற்படி இரண்டு ரேகையும் குரு சிஷ்யனைப்போல் அமைந்திருக்கும். ஆதலால் அதன் பெருமையைக் கூறுவேன் கேட்பீராக எ-று. 10

சொன்னாள்தான் உமையவளும் வதிஷ்டர்க்கப்போ
துரிதமுடன் வதிஷ்டரவர் சுத்தமாக
அன்னாளில் ஆயிழையே உமையேஎன்று
அடிவணங்கி மிகத்துதித்து அன்பாய்க்கேட்க
முன்னாள்தான் முனிக்குறைத்த மார்க்கம்போல
முயற்சியுள்ள வுத்தமியும் வுளவாய்ச்சொன்னாள்
அன்னவள்தா னுரைத்தபடி சொல்வேன்யானும்
மகத்தானரேகையிட வண்மைகேளே.

(இ-ள்) இவ்வாறு கூறிய உமையவளது வார்த்தையைக்கேட்ட வசிஷ்ட மகாமுனிவர் மிகவும் பரிசுத்தமாகிய மனத்துடன், ஓ அம்மணி! உலகமாதா! உமையே! என்று வணங்கித் தோத்தரித்து இன்னுமுள்ள விஷயங்களையும் சொல்லும் எனது அம்மணி என்று கேட்க, இதற்குமுன் தன்னிடம் அடுத்த முனிவர்களுக்குக் கூறியதைப்போன்று ஓ வதிஷ்ட ரிஷியே! எனக்கு ஸ்ரீ சர்வேஸ்வரன் கூறிய இந்த ரேகை சாஸ்திரத்தின் மகிமையை உனக்கும் சொல்வேன் கவனமாய்க் கேட்பீராக என்று உரைக்கலானாள் எ-று.

(வி-ரை) வதிஷ்டமகாரிஷி மேற்படி தேவியை வணங்கி ரேகை சாஸ்திரத்தின் மகிமையையும் பலனையும் கூறவேண்டுமென வணங்கினார் எனல். 11

வண்மையென்ற வச்சிரபங்கி ரேகையோகம்
வகுத்திதனைச் சொல்லுகிறேன் வகையாய்க்கேளு
உண்மையென்ற இவன்பிறந்த யோகவாழ்க்கை
உறுதியாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
தண்மையென்ற இவ்விரண்டு ரேகையிற்றான்
சாற்றிடுவோந் தமயந்தி ரேகையொன்று
அண்மையென்ற நளச்சக்கிரவர்த்தி ராஜன்
அன்பான ரேகையொன்று மறிந்துசொல்லே.

(இ-ள்) ஓ வசிஷ்டமகா ரிஷியே! அழகுபொருந்திய இந்த வஜ்ஜிரபங்கி ரேகையினது திசை யோகம் முதலியனவற்றைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இவன் பிறந்த யோகத்தின் சிறப்பையும், வாழ்க்கையின் சிறப்பையும் கூறுவேன். மேற்சொன்ன இரண்டுவிதமான ரேகையும் ஒன்று. தமயந்திரேகை என்றும், மற்றொன்று நளச்சக்கரவர்த்திரேகை என்றும் பெயராகும். இதனை அறிவாயாக எ-று.

(வி-ரை) முன்கூறிய பத்தாம் செய்யுளில் இரண்டுவித ரேகையுண்டு என்றும், அதில் வஜ்ஜிரபங்கிரேகை யென்றும், குபேரிரேகை என்றும் கூறியதை இங்கு தமயந்திரேகை என்றும், நளன்ரேகை என்றும் கூறினார் பலன் விவரம் கீழ்வருமாறு. 12

சொல்லப்பா யிவ்விரண்டு ரேகைதானும்
சித்தமாய் இருக்குதென்றாற் றேவனவன்
அல்லப்பா வாச்சரிய மிவன்றானப்பா
அன்பான ஓர்தாய்க்கோர் மைந்தனாகும்
நல்லப்பா யிவன்யோக சாலிமெத்த
நலமுள்ள யோகவான் நன்றாய்க்கேளு
வல்லப்பா யிவன்பிறந்த நாளுங்கோளும்
வரிசையாய்ச் சொல்லுகிறேன் வண்மைகேளு.

(இ-ள்) மேலே சொன்னபடி இவ்விரண்டு ரேகைகளும் தமது அஸ்தத்தின்கண் அமையப்பெறின் அந்த ஜாதகன் தேவவமிசத்தான் என்றே கூற வேண்டும். இதுவன்றி, இந்த ஜாதகன் மிக்க ஆச்சரியம் உடையவனாகவும், தனது அன்பார்ந்த தாய்க்கு இவன் ஒரே மைந்தன் என்றும், வாழ்நாளில் எவரும் மதிக்கத்தகுந்த மேலான யோகமுடையவன் ஆவான் எனவும் கூற வேண்டும். ஓ வசிஷ்டரிஷியே! இன்னும் இவன் பிறந்த நாள் கோள் இவற்றின் இலக்ஷணமும் அடையாளம் முதலியவற்றையும் கூறுவேன் கேட்பீராக எ-று. 13

கேளப்பா யிவன்பிறந்த வீடுதானே
கேவலமாய் சிறுகூரை வீடதாகும்
ஆளப்பா பிறக்கையிலே யொருவரில்லை
அன்பான மதிவார மிரண்டாஞ்சாமம்

வாளப்பா மாசமது மகரமாகும்
வண்மையுள்ள துதிகையிலே பிறந்தான்பாலன்
நாளப்பா உத்திரந்தான் மூன்றதாகும்
நலமான கிரகநா லுச்சமாமே.

(இ-ள்) ஓ ரிஷிகளே! இவன் பிறந்த இல்லத்தின் லக்ஷணத்தைக் கூறுவேன் கேட்பீராக? எப்படியெனில்? இவன் பிறந்த வீடானது சிறிய கூரைவீடாகும். இதுவன்றி, இவன் பிறந்தகாலத்தில் இவன் தாய்க்கு எவரும் அருகிலில்லாத நேரத்தில் பிறந்தான் எனவும், இந்த ஜாதகன் பிறந்த மாதமானது மகரம் என்னும் தைமாதமும், எவரும் துதிக்கத்தகுந்த துதியை திதியும், உத்திரம் மூன்றாம்பாதமும் கூடியநாளில், திங்கட்கிழமை இரண்டாம் சாமத்தில், நான்கு கிரகங்கள் உச்சமாய் நிற்கப் பிறந்தான் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் தைமாதம் துதியை உத்திரம் மூன்றாம் பாதமும், திங்கட்கிழமையில் இரண்டாம் சாமத்தில் பிறந்தான் என்றனர். நான்கு கிரகங்கள் உச்சம் என்றதைப் பின் வருவனவற்றால் காண்க. திங்கள் இரண்டாம் ஜாமம் என்றதைப் பகலா இரவா என்பதையும் பின்வரும் செய்யுளால் அறியலாம். 14

உச்சமென்ற யிவன்பிறந்த ராசிக்குத்தான்
உறுதியுள்ள நவக்கிரக ஒன்பதுக்குள்
மச்சமென்ற சுக்கிரனும் புதனுமின்னம்
பாங்கான சனியுடனே வியாழனுச்சம்
அச்சமென்ப தொன்றுக்கு மில்லையப்பா
அன்பான விரவுதனிற் பிறந்தான்மைந்தன்
நிச்சமென்ற நிதியெடுத்து வாழவந்தான்
நீணிலத்தி லிவன்யோக மில்லையன்றே.

(இ-ள்) உச்சம் என்னும் விவரத்தைக் கூறுவேன் கேட்பீராக. என்னவெனில்? மகாபலம் பொருந்திய நவகோட்கள் ஒன்பதுள் மச்சத்தையுடைய சுக்கிரனுடன் புதன்-சனி என்னும் நால்வரும் உச்சகோட்களாய் நிற்பர். இதில் எவ்வித சந்தேகமும் இல்லை. மற்றும் மேற்கூறிய திங்கட்கிழமை இரவு இரண்டாம் சாமத்தில் பிறந்தவன் எனக்கொள்க. இதுவன்றி, இவன் வாழ்நாளில் புதையல் பொருள் முதலியன உடையவனாகி எவனாலும் ஈடு சொல்லப்படமாட்டாத வாழ்வும் யோகமும் உடையவனாய் வாழ்ந்திருப்பான் 15
எனக் கூறுவாயாக எ-று.

இல்லையென்ற யிவன்றாய்தான் அமங்கிலிஸ்திரீ
இயல்பான சிறுவயதிற் கணவன்மாண்டான்
அல்லையென்ற மற்றொரு மாப்பிள்ளைக்குத்தான்
அவதரித்த பாலனிவ னாய்ந்துசொன்னேன்
நல்லையென்ற அக்கணவன் றாய்க்கோர்பாலன்
நலமுள்ளான் றனக்கிவன்றான் பிறந்தான்காணும்
வல்லையென்ற சூதக நாளிற்கூடி
வரிசையா யனுபோகம் செய்ததாலே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது தாய் விஷயங்களைக் கூறுமிடத்து மேற்படி தாயானவள் அமங்கலி எனவும், அவைபாவன? இவன் தாய் சிறு வயதாய் இருக்கும்போதே தனது கணவன் மாண்டுபோனான் எனவும், பின்பு மேற்படி தாயானவள் வேறொரு மாப்பிள்ளையை அடைந்து, அந்த கணவனுக்கே இந்த ஜாதகன் பிறந்தான் எனவும், மேற்படி பிதாவானவன் தமது தாய்க்கு ஒரே மைந்தன் என்றும், மிக்க நன்மார்க்கமுடையவன் எனவும், அதாவது இவன் தாயானவள் மாதவிடாயாகி சூதகமாய் இருக்கும் காலம் கூடிப் புணர்ந்தார்கள் எனவுங் கூறுக எ-று. 16

நாலெனவே ஸ்திரீபுருஷா ளிரண்டுபேரும்
நன்மையுடன் றென்முகமாம் முதற்சாமத்தில்
ஆலெனவே நலமுள்ள வாசஞ்செய்து
அன்பாக ஒருமனதாய் கூடினார்கள்
நாலெனவே நல்லமுகம் விழித்ததாலும்
நன்மையுள்ள மைந்தனிவன் றரித்தான்பாரு
பாலெனவே பைங்கிளியாள் பெற்றபாலன்
பாக்கியங்கண் மிகப்பெறவே பிறந்திட்டானே.

(இ-ள்) மேலே கூறியபடி இவன் தாயானவள் மாதவிடாயாகிய நான் காம்நாள், ஸ்திரீ புருஷர்கள் இருவரும் நல்லோர் முகத்தில் விழித்ததுடன் நல்ல க்ஷேத்திரவாசம் செய்து (அல்லது நல்லோர் வாசம்செய்து) இருவரும் ஏகமனதாய்க் கூடிய காலத்தில் இப்புத்திரன் கருவாய்த் தோன்றினன். பால் போன்ற பரிசுத்தமாகிய இவன் தாய் வயிற்றில் இவன் உதித்து அநேக பாக்கியங்களைப்பெற்று வாழவே இப்பூமியில் பிறந்தான் என்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவன் தாய் முதலில் ஓர் புருஷனுக்கு விவாகம் செய்துக்கொடுத்தவள் என்றாலும், தனது சிறு பிராயத்திலே இறந்துவிட்டமையால் வேறொரு புருஷனை அடைந்து இவனைப்பெற்றாள் என்று கருத்தாகிறது. 17

பிறந்திட்ட இவன்றாய்தா னுத்தமிப்பெண்
பிரியமுள்ள பிதாவுந்தான் பாஞ்சாலன்போயன்
அறிந்திடவே வாஸ்தியில்லை இவனுக்கப்பா
அன்பான சிவனுந்தான் கூலிநாலி
வறிந்திடவே பொய்சொல்லா பிதாவுமாதா
வஞ்சனைகள் கொலைகளவு செய்யமாட்டார்
சறிந்திடவே சற்சனரா முத்தமியாமங்கை
சாபத்தான் முன்கணவ னிறந்தான்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகனைப் பெற்ற தாயானவள் மகா பதிவிரதை எனவும், இப்படிப்பட்ட சற்குணமும் உத்தமியுமான இவனது தாய்க்கு தனது முன் ஜன்மத்திலுண்டாகிய சாபத்தின் பயனாய் இவளின் முதல் கணவன் இறந்தான் என்றும், பின் புருஷனான இவன் பிதா பாஞ்சாலதேயத் தாசனைப்போன்ற உத்தமனும், எவ்வித ஆஸ்த்தியும் இல்லாதவன் எனவும்

கூலிவேலை செய்து ஜீவிப்பவன் எனவும், பொதுவாய் இவன் தாய் தந்தையர்கள் பொய் சொல்லாதவர்களும், வஞ்சனை பொய் கொலை களவு முதலியன செய்யாதவராயும் இருப்பார் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தென்னவெனில்? இவன் தாய் தந்தையர்கள் எல்லாவித உத்தமும் பொருந்தியவர் என்பதாகும். 18

பாரடா வச்சிரபங்கி ரேகைமைந்தா
பராபரத்தின் கிருபையினு லவதரிப்பான்
காரடா உமையவளை யநேகநாளாய்
காட்சிபெறக் காத்திவன்றான் றொழுததாலே
கூறடா குணமுள்ள பாலனென்று
கொடுத்தான்பார் பாக்கியங்கள் கூர்மையாக
வாரடா பூலோகந் தன்னிற்சென்று
வண்மையுள்ள பாலகனைப் பிறப்பித்தாளே.

(இ-ள்) ஓ ரிஷிகளே! இங்கு கூறும் வஜ்ஜிரபங்கிரேகை என்பது தனது அஸ்தத்தினிடமாக அமையப் பிறப்பதென்றால், அவன் ஸ்ரீசர்வேஸ்வரனது கிருபையாலேயே பிறந்தவன் எனக் கூறவேண்டும். எப்படியெனில்? இவனது முன் ஜன்மத்தில் ஸ்ரீஉமையவளை நோக்கி அனேகநாள் தொழுது தன்னைக் காக்கும் வண்ணம் வணங்கியதால், இச்சாதகனை மிக்க நற்குணமுடையவன் எனக்கருதி, இப்பூவுலகிற் பிறந்து சகல நற்குணங்களும் உடையவனாய் சகலபாக்கியமும் உடையபாலனைப் பிறப்பாய் என்று ஆசீர்வதித்தாள் எ-று. 19

பிறக்கவுந்தான் பிதாவினிடத் துயரம்போச்சு
பிரபலமாய் மாதாவும் வாழலாச்சு
உறக்கவுந்தா னிவனுடைய யோகந்தன்னை
உண்மையாய்ச் சொல்லுகிறே னுகந்துகேளு
பறக்கவுந்தான் பாடுமிகப் படவுமாட்டான்
பார்வதியாள் தான்கொடுத்த பாக்கியத்தாலே
சிறக்கவுந்தா னரிமாலுங் கடாட்சம்வைத்து
சிதம்பரத்திற் பிறப்பித்தார் சீராய்த்தானே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகன் எப்போது ஜெனித்தானோ அப்போதே இவன் பிதாவின் துன்பம் யாவும் நீங்கியும், இவன் மாதாவுக்கு நல்வாழ்வும் உண்டாச்சுதென்க. ஏனெனில்? இந்த ஜாதகன் ஸ்ரீ உமாதேவியார் கொடுத்த வரத்தால் உலகளந்த மாயனாகிய நாராயணன் கிருபை கூர்ந்து இவ்வாறு தனது கையில் பிரபல ரேகை அமைந்துப் பிறந்தான். ஆனதால் இவன் வாழ்நாளில் மிக்க யோகமுடையவனாகியும், கஷ்டப்படாமலும் மிக்க யோகசாலியாய் வாழ்வான் எனக் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் மிக்க பிரபலமுடையவனும், தன் வாழ்நாளில் மேலான யோகமும், உண்மையும் உடையவன் எனக் கூறியுள்ளனர். இதுவன்றி இவனது தாய்தந்தையர்களும் இந்த

ஜாதகன் பிறந்தனுமுதல் எவ்வித கஷ்டமும் இல்லாதவர்களாய் சுகித்திருந்து வாழ்வர் என்றும் கூறப்பட்டன. யாதுபற்றியெனின்? இவனது முன் ஜன்மத்தில் ஈஸ்வரியை இடைவிடாது தொழுது தன்குறை அகலும் வண்ணம் வேண்டிக்கொண்டமையால் இச்சென்மத்தில் மேற்படி ஈஸ்வரியாளும் நல்ரேகை அமைந்துப் பிறக்கும்படி செய்ததால் சகல சுகபோக சௌக்கியங்களையும் அனுபவிப்பான் என்பது இதன் முக்கிய கருத்தாகும் மற்றுமுள்ளவைப்பின் வருமாறு 20

ஆகவே யிவனுருவஞ் சிவந்தவர்ணம்
அன்பான விவன்றலையிற் தனஞ்சியனென்று
பாகவே இரண்டுசுழி கூடிநிற்கும்
பண்பாக இடகண்ணுஞ் சிறுத்திருக்கும்
வாகவே வலக்கால்தா னுயர்ந்துகாணும்
வண்மையுள்ள யிவன்தேக மொல்லியாகும்
தாகவே யிவன்தேகம் தூக்கமைந்தா
தருவான பலமதுதா நூற்றறுபதாமே.

(இ-ள்) இந்த ஜாதகனது உருவம் சிவந்த நிறமுடையதாகும். இதுவன்றி, இவனது சிரசில் தனஞ்சி என்னும் சுழிகள் இரண்டும் அமைந்திருக்கும். மேலும் தனது இடது விழியானது சிறுத்தும், வலது காலானது சற்று உயர்ந்தும் இருப்பதுடன் இவன் உருவமானது சற்று இளைத்துக் காட்டுமாயினும் இவன் உடலை நிறுத்துப் பார்க்குமிடத்து நூற்றறுபது தூக்கம் குறையாதிருக்கும் என்று அறிவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் இவனது அங்க லட்சணங்களைக் கூறியுள்ளார். எப்படியெனில்? இடதுகண் சிறுத்தும், வலதுகால் உயர்ந்தும் இளைத்த சரீரமுடையவனும், மிக்க பலமுடையவனும் ஆவன் என்பது கருத்து. 21

ஆமெனவே யிவனுடைய வலதினிடைத்துடையில்
அன்பான மச்சமென்ற ரூபமாகும்
வாமெனவே மேனியெங்கும் பூமயிர்தானப்பா
வற்பமாய்ச் சனம்வளருந் திடவான்பாரு
காமெனவே புலாலுடனே போஜனந்தான்
கருதியிவ னருந்தான்பார் கருணையுள்ளோன்
நாமெனவே யிவன்முன்பார் பழங்கடன்னை
நலமாகப் புசித்திடுவர் னன்மையாமே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது அடையாளங்களைக் கூறுமிடத்து இந்த ஜாதகனது வலது துடையில் மச்சம் ஒன்று அமைந்திருக்கும் எனவும், தனது சரீரமெங்கும் பூமயிர் வளர்ந்திருக்கும் எனவும், அனேக பந்துஜனக் கூட்டுறவையுடையவன் எனவும், இவனது வாழ்நாட்களில் புலால் முதலிய மாமிசாதிவகைகளை அருந்தான் எனவும், மிக்க கருணையுடையவன் எனவும், பால், பழம் முதலியனவற்றைப் புசித்து காலம் கழிப்பான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தென்னவெனில்? மாமிசாதி வகைகளைப் புசியாது பால், பழம் முதலியனவற்றை யருந்தி சகல ஜீவர்களிடமும் கருணையுடையவனாகி வாழ்வான் என்பதாகும் கருத்து. 22

நன்மையப்பா இவன்விர்த்தி கோபியாகும்
நலமுள்ளான் சீலமுட னடப்பான்பாலன்
அம்மையப்பா வரனாரைப் போற்றிசெய்வான்
அன்பான சிவபூசை மறக்கான்பாரு
வன்மையப்பா யிவன்கோத்திரம் விளங்கச்செய்வான்
வம்மிசத்தை மறக்காம னடத்திடுவானப்பா
இன்மையப்பா யிவன்பிறவி முதற்சனனந்தன்னில்
இகத்திலன்ன பட்சியதாய்ப் பிறக்கின்றானே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது விஷயங்களைக் கூறுமிடத்து நாளுக்குநாள் மிக்க விருத்தியுடையவனாயும், முன்கோப முடையவனாயும், நன்மைபொருந்திய சீலமாய் நடந்துகொள்ளுவோனும், எந்நாளும் சிவனைப் போற்றுவதும், எக்காலத்தும் மறவாது சிவபூஜை செய்யத்தகுந்தவனும், தமது வம்சத்தை விளக்கச்செய்து, மேற்படி பந்துக்களை மறவாது காப்பாற்றத் தகுந்தவனும், இவனது பின் பிறவியில் அன்னப்பக்ஷியாய்ப் பிறப்பான் என்றுங் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தென்னவெனில்? நற்குணம் வாய்ந்தவன் என்பதேயாகும். இதுவன்றி, இவன் பின்ஜனனம் அன்னப் பக்ஷியாய் ஜனிப்பான் என்றனர். 23

பிறக்கவே யன்னமொழிந் திவன்றானப்பா
பிரபலமாய் வச்சிரபங்கி ரேகையோடு
திறக்கவே யிவன்பிறந்தான் யோகசாலி
தீரமுள்ளான் யிவன்யோகம் செப்பக்கேளு
துறக்கவே யிவன்பிறந்த நான்காமாதம்
தூரவான யிவன்பிதா வோரிடத்தில்
கறக்கவே மலபாதை செய்யும்போது
கண்டெடுத்தான் னிதியொன் று செம்புதானே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகன் விஷயங்களை இன்னும் கூற வேண்டுவதெனில்? இந்த ஜாதகனது அஸ்தத்தின்கண் வச்சிரபங்கி ரேகை என்பதும் அமைந்திருக்கும். ஆதலால் இவன் சகல யோகபோக சுகங்களும் உடையவன் ஆவான். மற்றும் மகாதீரமும் உடையவன் என்றுங் கூறுவதுடன், எவ்விதத்தால் போகமுண்டாகும் எனக் கூறப்புகின் இந்த ஜாதகன் பிறந்த நான்காம்மாதம் இவனது பிதா இவன் இல்லத்திற்கு நெடுந்தூரத்தில் மலபாதை செய்யும்போது ஓர் நிதியொன்றைக் கண்டெடுத்தான் எனவும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இங்கு கூறிய யோகமானது முன்சொன்ன ரேகையுடன் வச்சிரபங்கி ரேகையும் கூடியிருக்கும் காரணத்தால் கூறியதாகும். ஆதலால்

மேற்படி ரேகையானது இருக்கின்றதா என்பதை கவனித்துக் கூறவேண்டுவது அவசியம். 24

தானென்ற யிவனுடைய சகோதரங்கள்
தயவாக வைந்துபேர் பிறப்பாரப்பா
வானென்ற ஆண்மூன்று பெண்ணிரண்டு
வரிசையாய்ப் பிறப்பார்கள் வண்மையாக
ஊனென்ற இவன்பிறவி நல்லபேர்கள்
உத்தமர்க ளாய்ப்பிறந்தார் துணைவரப்பா
ஏனென்ற வில்லறத்தின் துயரம்போச்சு
என்னசொல்வே னிவனுடைய பெருமைதானே.

(இ-ள்) இந்த ஜாதகனது சகோதர பாகங்களைச் சொல்லுமிடத்து இந்த ஜாதகனுடன் பிறந்த மொத்த சகோதரர்கள் 5-எனவும், அவற்றுள் ஆண்-3, பெண்-2 ஆக ஜெனித்து வாழ்வார்களெனக் கூறுவதுடன், மேற்படி சகோதர சகோதரிகள் யாவரும மகா உத்தமர்களாகவும், நல்லவர்களாகவும், எக்காலும் நீங்காத துணையாளர்களாகவும் இருப்பதுடன், இந்த ஜாதகன் ஜனித்தவுடன் இவனது இல்லத்திலுண்டாகிய துன்பம் துயரம் யாவும் நீங்குமெனவும், இவனது பெருமையை எவராலும் கூறமுடியாதெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தென்னவெனில்? இவனுக்கு சகோதரர்-3, சகோதரி இரண்டும் உத்தமரும் நல்லவருமாய் இருப்பர் என்பதேயாகும். 25

தானடா யிவன்பிறந்த பத்தாமாதம்
தயவான விவன்மாதா புஞ்சைகொய்ய
வானடா வவள்சென்ற விடத்தில்வாய்க்கால்
வளமாக வுண்டதிலோர் செம்புகண்டாள்
ஊனடா மங்கையது யெடுத்துநல்ல
உற்பனமாம் புஞ்சைகொய் துடனேவந்தாள்
ஆனடா அவளெடுத்த செம்பிற்சொர்னம்
அதிகமா யிருந்ததைக்கொண் டழகாய்வாழ்ந்தார்.

(இ-ள்) இந்த ஜாதகனது யோகம், வாழ்க்கை முதலியனவற்றை இன்னும் கூறவேண்டுவதெனில்? இந்த ஜாதகன் பிறந்த 10-ஆம் மாதம் இவனது தாயானவள் புஞ்சை பயிருக்கு வேண்டிய வேலைகளைச் செய்யச் செல்லும்போது ஓர் வாய்க்கால் பள்ளத்தில் ஓர் செம்பைக்கண்டு அதனை எடுத்துக்கொண்டு, தான் சென்ற புஞ்சைப் பயிர்வேலையை முடித்துக் கொண்டு வீடுவந்து மேற்படி சொம்பைக் காணுமிடத்து அதனுள் சொர்ணம் இருப்பதைக் கண்டு மிகுந்த சந்தோஷத்துடன் வாழ்ந்தனர் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) இவை இந்த ஜாதகனது 10-ஆம் மாதம் உண்டாகும் யோகமாகும். அவையாவன: இவன் தாய் ஓர் செம்பில் தனம் கண்டெடுப்பாள் என்பதாகும். 26

வாழ்ந்திடவே மைந்தனுக்கு கன்னிகாயோகம்
வளமையான் மிகவாழ்வன் மைந்தனப்பா
ஆழ்ந்திடவே இவனுடைய யோகவாழ்க்கை
அறிந்தமட்டுஞ் சொல்லுறேன் பிர்மதேவர்
தாழ்ந்திடவே தலைவனிவ னனேகம்பேர்கள்
தாள்வணங்கி தொழுதுநிற்பார் தலைவனுக்கு
நாழ்ந்திடவே யிவன்வயதோ ரைம்பதுக்குள்
நலமான மனைநாலு வெடுத்திட்டானே.

(இ-ள்) இந்த ஜாதகனது யோகமானது கர்ணிகா யோகமென்றும், அவையாவன: மிகுந்த செல்வாக்குடையவனும், விசேஷ யோகமும் உடையவனெனக் கூறவேண்டுவதாகும். அவையாவன: பிரம்மதேவரால் இவனுக்கு விதிக்கப்பட்ட யோக வாழ்க்கையை என்னால் அறிந்தவரையில் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இவனது வாழ்நாளில் இவனைத் தலைவணங்கித் தொழத்தகுந்த அரசனைப்போன்று வாழ்பவனும், இவனது வயது 50-க்குள் நான்கு வீடுகளைக் கட்டி வாழத்தகுந்தவனும் ஆவன் எ-று.

(வி-ரை) பொதுவாய் இந்த ஜாதகன் அரசனைப்போன்று வாழ்வான் என்பது இச்செய்யுளின் முக்கிய கருத்து. 27

எடுத்திடவே குதிரைகட்ட மைந்தன்தானும்
ஏகமுள்ள லாயந்தான் கட்டும்போது
வடுத்திடவே மண்வாங்கி வெட்டும்போது
வளமான வம்மனையிற் காதுவைத்த
தொடுத்திடவே கொப்பரையுள் மைந்தன்தானும்
துகையுளறு பத்துலட்சம் பொன்னெடுத்தான்
அடுத்திடவே யிளையவளும் மாலையிட்டு
அன்பான விவன்வீட்டி லிருந்திட்டாளே.

(இ-ள்) இந்த ஜாதகனது யோகத்தின் விசேஷங்களை இன்னும் கூறுமிடத்து தனது அரண்மனைக்குள் தனது குதிரைகளைக் கட்டும்பொருட்டு லாயம் கட்ட அஸ்திவாரம் செய்தற்கு மண்வெட்டியால் பூமியில் குழிதோண்டும்போது மேற்படி பள்ளத்தில் காதுவைத்த கொப்பரையொன்றிருக்கவும், அதனைக் காணுமிடத்து அதனுள் 10-லக்ஷம் பொன்னிருந்தன. அன்று முதல் இவனது வீட்டில் இளையாள் என்னும் லக்ஷ்மியானவள் குடிகொண்டு வாழ்ந்திருந்தாள் எனவுங் கூறுவாயாக எ-று. 28

இருந்திடவே யிளையவளும் பிரியாமற்றான்
இவனில்லை யறுபத்தெட் டாண்டிருந்தாள்
வருந்திடவே வாலையுமை யீந்தபாக்கியம்
வம்மிசத்தை மெத்தவும்பெருகி வாழ்ந்திட்டார்கள்
பொருந்திடவே பூலோகந் தன்னிலேதான்
போகமுட னிவன்றானும் வாழ்வதாகும்
சரிந்திடவே சாயுச்சியம் பெற்றபாலன்
சற்குணவான் பெறும்போகந் தனைச்சொல்வேனே.

(இ-ள்) மேலே கூறியவண்ணம் இவன் இல்லத்தின்கண் மேற்படி லக்ஷிமிதேவியானவள் இவன் வயது-68 வரையில் வாசம் செய்வாள் எனவும், இவை உலகமாதாவாகிய வாலைதேவியானவள் இவனுக்குகொடுத்த பாக்கியமெனவும், இந்த ஜாதகனும், ஜாதகனது வம்சத்தவர்களும் மிக்க யோக போகங்களுடன் வாழ்ந்தனர் எனவும், இவன் இப்பூமியில் உள்ளநாள் வரையில் மிக்க யோகபோக பாக்கியங்களுடன் வாழ்வான் எனவும், சற்குணமும், சாயுச்சியப்பதவியும் அடையத்தகுந்த இந்த ஜாதகனது போக பாக்கியங்களை இன்னும் எம்மால் அறிந்தவரையில் கூறுவேன் கேட்பீராக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் தன் ஆயுள்முடிவுவரையில் இவனது இல்லின்கண் லக்ஷிமிவாசம் உடையவன் ஆவன் எனவும், இந்த ஜாதகனால் இவனது வம்சத்தவர்களும் யோக போகம் உடையவர் ஆவர் என்பது கருத்து. 29

சொல்வனப்பா வச்சிரபாங்கி ரேகையாகும்
 செகத்திலே பெரிதப்பா துலங்கக்கேளு
அல்லுவேன் அஷ்டசித்தா டிடுவான்மைந்தன்
 அன்பனிவன் சிவன்பூசை செய்வானப்பா
நல்லுறவா யிவனுக்குத் தாரம்ரெண்டு
 நலமாகப் பன்னிரண்டு ஆண்டிலாச்சு
இல்லவே யிவன்வயதோ பதினாறுக்குள்
 இயல்பான தாரமிரண் டாச்சுபாரே.

(இ-ள்) வச்சிரபங்கி ரேகை என்பது தனது அஸ்தத்தின்கண் அமைந்திருக்கப் பிறந்தவனது யோகத்தை எவராலும் அளவிட்டுக் கூறமுடியாத மகா பிரபல யோகமென்றும் கூறுவாயாக. எப்படியெனில்? இவன் வாழ்நாளில் அஷ்டமாசித்தையும் அறிய வல்லவன் எனவும், எந்நாளும் நீங்காத சிவபூசை செய்யத்தகுந்தவனும், இவனது வாழ்க்கைத் துணைவியான மனைவிமார் இரண்டு எனவும், அவற்றுள் முதல் விவாகம் 12-ஆம் வயதிலெனவும், இரண்டாம் விவாகம் 16-ஆம் வயதிலெனவும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவன: அஷ்டமாசித்தும் அறிந்தவன், சிவபூசையை மறவாதவன், மனைவி இரண்டுடையவன் என்பதாகும். 30

பாரடா விவனுக்குப் புத்திரபாக்கியம்
 பக்குவமா யன்பதொன்பா ணுண்டுக்குள்ளே
ஆரடா பிள்ளைகளைந்துண் டாச்சுதப்பா
 அதிலேமூன் றிறந்திரண்டே வாழாநிற்கும்
காரடா வவையிலொன்றாண் பெண்ணொன்றாகும்
 கனக்கவே நிலைத்ததப்பா கருணையாக
சீரடா வவனுக்கு கண்டாந்திரமைந்தா
 சிறப்பாக வேழுகண்ட நடக்கும்பாரே.

**(இ-ள்)** இந்த ஜாதகனது புத்திரபாக்கிய விவரங்களைக் கூறுமிடத்து இந்த ஜாதகனது வயது 59-ஆண்டுகளுக்குள் 5-பிள்ளைகள் ஜெனிக்கு மெனவும், மேற்படி புத்திரர்கள் 5-ல் மூன்று பிள்ளைகள் இறந்துபோம் எனவும், 2 நிலைத்திருக்கும் எனவும், மேற்படி 2-ல் ஆண் ஒன்றும், பெண் ஒன்றுமே ஈசனருளால் பூரண ஆயுள் உடையதாகும் எனவும், இவனது வாழ்நாளில் உண்டாகும் கெண்டாதி கெண்டங்கள்-7 எனவும் நிச்சயமாய்க் கூறுவாயாக எ-று.

**(வி-ரை)** இவனுக்கு பிறக்கும் சந்ததிகள்-5 எனவும், அவற்றுள் 3-நாசமாகி 1-ஆண் 1-பெண் நிலைத்திருக்கும் என்பது இச்செய்யுளின் முக்கிய கருத்து. 31

பாரப்பா யிவனுக்கு கண்டம்வந்த
பருவத்தைச் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளு
சீரப்பா யிவன்வயதோ ராறிலேதான்
சிறப்பாக வக்கினியிற் கண்டமொன்று
காரப்பா வயதிருபத் திரண்டிலேதான்
கணக்கவே நீராலே கண்டமொன்று
வீரப்பா யிவன்வயதோ ரிருபத்தாறில்
வியாதியால் மெத்தவுந்தான் மெலிவான்பாரே.

**(இ-ள்)** மேலே சொல்லிய கெண்டாதி கெண்டங்கள் உண்டாகும் வயது விவரங்களைக் கூறுவேன் கேட்பீராக. எவ்வாறெனில்? இவன் ஜனித்த 6-ஆம் வருஷம் அக்கினி என்னும் நெருப்பால் ஓர் கெண்டம் உண்டாகும் எனவும், வயது 22-ல் நீர் என்னும் ஜலத்தாலோர் கெண்டம் உண்டாகும் எனவும், வயது 26-ல் பிரபல நோயால் கெண்டமுண்டாகி மெலிவான் எனவுங் கூறுக எ-று.

**(வி-ரை)** முன்கூறிய 31-ஆம் செய்யுளின் இறுதியில் இவனுக்கு கெண்டாதி கெண்டங்கள்-7 என்று கூறியமையால் அவற்றின் விவரமும், எந்தெந்த வயதில் எப்படிப்பட்ட கெண்டம் என்பதை இச்செய்யுளால் விளக்கிக் காட்டினர். மற்றும் விவரம் பின் வருவனவற்றால் அறிக. 32

பார்க்கவே யிவன்வயதோர் நாற்பத்தாறில்
பண்மையுள்ள மரப்பலகை மேலேவீழும்
ஆர்க்கவே யுடலிலே காயம்பட்டு
அன்பான மாசமூன் றிளைப்பான்பாரு
ஏர்க்கவே யைம்பத்தி னாலிலேதான்
இயல்பான குதிரைமே லேறிவீழ்ந்து
கார்க்கவே சற்புத்திரன் மாதமூன்று
சகசமாய் மைந்தனிவன் மெலிவான்பாரே.

**(இ-ள்)** இன்னுமுள்ள கெண்டாதி கெண்டங்களைக் கூறுமிடத்து இந்த ஜாதகன் வயது 46-ல் ஓர் உயரமான மரப்பலகையின் மேலிருந்து கீழே விழுந்ததன் காரணத்தால் இவனது சரீரத்தில் பிரமாதமான காய

மூண்டாகி மாதங்கள் மூன்று வரையில் மகாகஷ்டப்பட்டு சரீரம் மெலிவான் எனவும், வயது 54-ல் தான் குதிரை சவாரி செய்கையில் மேற்படி குதிரைமீதிருந்து கீழே விழுந்ததன் காரணத்தால் மாதம்-3 வரையில் மகா துன்பமும் நோய்க்கும் ஆளாகி மெலிந்து வாதைப்படுவான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் பிரபல கெண்டங்கள் இரண்டைக் கூறினர், அவையாவன:—46 ல் உயரத்திலிருந்து கீழ் வீழ்ந்ததாலும், 54-ல் குதிரை மீதிருந்து வீழ்ந்ததாலும் கெண்டம் உண்டாயின வென்பது கருத்து. 33

பாரென்ற விவன்வயதோ ரறுபத்தெட்டில்
பாங்கான சக்கரத்தி னமைப்பால்மைந்தா
வீரென்ற வயதிருபத் தெட்டிலேதான்
விதிமுறையாய்ப் பிதாவினுக்கு கருமஞ்செய்வான்
காரென்ற வயதப்பா முப்பத்தொன்றில்
கனக்கவே மாதாவின் கருமமாகும்
ஊரென்ற விவன்வயதுபத்தி ரெண்டாமாண்டில்
உற்றதொரு விவாகமது வாகும்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகனது அஸ்தத்திலுள்ள ரேகையின் அமைப்புப்படி இவனுக்கு வயது-68 என நிச்சயமாய்க் கூறுவதுடன் இவன் வயது 28-ல் இவனது பிதாவுக்கு அயன் விதித்த விதியின்படி கருமம் செய்வான் எனவும், மற்றும் இவன் வயது 31-ல் இவனது அன்பார்ந்த தாய்க்குக் கருமம் செய்வான் எனவும், இவனது வயது 12-ல் சகலரும் அறிய விவாகம் நடக்கும் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) முன் கூறிய 30-ஆம் செய்யுளில் இவனுக்கு வயது 12-ல் விவாகம் நடக்கும் என்று கூறியதையே இங்கும் கூறியுள்ளதை யறிக, மற்றும் இவனுக்கு வயது-68 எனவும், 28-ல் பிதாவும், 31-ல் தாயும் மரிப்பார் என்றது கவனிக்கத் தருந்தது. 34

பாரடா முற்சனனந் தன்னிலப்பா
பக்குவமா யன்னமென்ற பறவையாகும்
காரடா வதின்பின் வேதியனாய்வந்தான்
காட்சிபெற விப்பிறப்பிற் சூத்திரனானன்
கூரடா விவன்மைந்தர் குபேரன்போலே
கூர்மையாய்ப் பிறந்தவரும் வாழ்வார்பாரு
ஊரடா விவன்யோகம் மயேந்திரயோகம்
உத்தமனாய்வாழ்வனிவ னுறுதிசொன்னேன்.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகனது முன் ஜனன விசேஷங்களைக் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இவனது முதல் ஜனனமானது அன்னப்பக்ஷி எனவும், அதன் பிறகு பிராமணனாய்ப் பிறந்தான் எனவும், இந்த ஜனனம் சூத்திரனாய்ப் பிறந்தான் எனவுங் கூறுவாயாக. ஆனதால், இச்சென்மத்தில் இவனது மைந்தர்கள் குபேரனையொத்த சம்

பத்துடையவராய் வாழ்வதுடன் நல்ல யுக்தி புக்தியும் கூர்மையான அறிவும் உடையவர்களாவார். இந்த ஜாதகனது யோகத்தைக் கூறுமிடத்து இந்த ஜாதகனுக்கு மயேந்திரயோகம் எனவும், மிக்க உத்தமனும், யோகமுடையவனுமியும் வாழ்ந்திருப்பான் என நிச்சயமாய்க் கூறுவாயாக எ-று. 35

சொன்னேனப்பா விவன்றானும் அனேகபூமி
சொர்னமதைக் கொடுத்திவனும் வாங்குவான்பார்
அன்னப்பா விவன்றேவி மயில்போலுள்ளாள்
அழகுள்ள ஸ்திரீயாகு மறத்தைப்பேணும்
வன்னப்பா குயின்மொழிதான் முதலாஞ்சாதி
வங்கிஷமு நல்லதப்பா வறிந்துசொன்னேன்
கன்னதப்பா தருமத்தை மறவாச்சீலன்
காட்சிபெற்ற மைந்தனென்றே கருதுவாயே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இவனுடைய வாழ்நாட்களில் அநேக தனத்தைக்கொடுத்து அளவிடமுடியாத பூமிகளை வாங்கி வாழ்வான் எனவும், இவனுக்குக் கிடைக்கும் மனைவியானவள் மயில்போன்ற சாயலும், எந்நாளும் தருமத்தைத் தவறாது செய்து வருபவளும், மிக்க அழகுடையவளும், குயிலினது குரலையொத்த மொழியை யுடையவளும், முதற்சாதி என்னும் கற்புடையவளும், நல்ல வங்கிசத்தில் பிறந்தவள் எனவுங் கூறுவதுடன், இந்த ஜாதகனும் எல்லோராலும் நன்குமதிக்கத் தகுந்தவனும், தன் ஆயுளுள்ள வரையில் தருமத்தை மறவாது செய்து வருபவனும் ஆவான் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் இவனது மனைவியைக் குறித்துக் கூறுகையில் முதற்சாதி என்றமையால் கற்புடையவள் எனக் கூறவேண்டியதாயிற்று. 36

வாயென்ற விவனுடைய வம்சமூன்றும்
வண்மைபொரு ளழியாமல் வாழ்வாரப்பா
ஆயென்ற வற்புதம்போ லுமையாள்தந்த
அன்பான பாக்கியமிதென் றறிந்துபாரு
சாயென்ற விவனுடைய தம்பிமார்கள்
சற்சனராய் வாழ்ந்திருப்பார் தயவுள்ளோர்கள்
ஏயென்ற வெம்பிரா னருளினாலே
எய்திடும்பார் சகலசௌ பாக்கியந்தானே.

(இ-ள்) இந்த ஜாதகன் தலைமுறை முதல் பின்வரும் மூன்றுதலைமுறை வரையில் இவனுக்கு உண்டாகிய செல்வம் என்றும் அழியப்படாமல் வாழ்வன் எனவும், இவை உலகமாதாவாகிய உமையவள் கொடுத்த சிலாக்கியமாகிய பாக்கியம் எனவும் கூறுக. மற்றும் இவனது சகோதர விஷயமாய்க் கூறுமிடத்து இவன் பிறவியாவரும் சர்ஜனராயும், கருணையுடையோராயும் வாழ்ந்திருப்பதுடன், ஸ்ரீ நாராயணமூர்த்தியினது கிருபையால் சகல சுகபோக சௌபாக்கியங்களும் உடையவர்களாய் வாழ்வார் எனவுங் கூறுவாயாக எ-று. 37

தானென்ற தத்துவங்கள் படிப்பான் மைந்தன்
தயவாக சகலகலைக் கியானம்பார்ப்பான்
வானென்ற வச்சிரபங்கி ரேகையாலே
வண்மையாய் மாடமாளிகையுங் கட்டி
ஊனென்ற தண்டிகை மேலேறிமைந்தன்
உற்பனம்போற் பெரியவனாய் வாழ்ந்திருப்பான்
ஆனென்ற வரசர்முத லுலகத்தோரும்
அற்புதமாய்க் காத்திருப்ப ரடிமையென்றே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஸ்ரீ சர்வேஸ்வரனது கிருபையால் சகல தத்துவ சாஸ்திரங்களையும் வாசித்தும், சகல கலைக்யானங்களையும் வாசித்தறிவான் என்றும் கூறவேண்டுவதுடன், இவனது அஸ்தத்தின்கண் வச்சிரபங்கிரேகை யென்பது அமைந்த விசேஷத்தால் அழகிய மாடமாளிகை கட்டி வாழ்பவனும், தண்டிகையின் மீதேறிச் செல்லத்தகுந்தவனும், எவரும் மதிக்கத் தகுந்த பெரியவனாகி வாழ்வதுடன் அரசர் முதலாகிய இப்பூமியிலுள்ள சகலரும் இவனிடம் பயபக்தியுடன் அடிமை செய்பவரைப்போன்று காத்திருப்பார் எனவுங் கூறுவாயாக எ-று. 38

என்றெனவே இவன்பிதா யோகத்தாலே
ஏற்றமுள்ள மகனிவன்றான் பிறந்தானப்பா
குன்றெனவே இவன்றானும் ஈஸ்வரனைநோக்கி
குணமாகக் குறித்திவன்முன் றவசுசெய்தான்
வன்றெனவே ஈசனருட் பெற்றுமைந்தன்
வரம்வாங்கிப் பிறந்ததினால் பாக்கியம்பெற்றான்
இன்றெனவே யீஸ்வரியாள் கிருபையாலே
இகத்திற் குபேரனைப்போல் வாழ்ந்திருப்பான்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகனது பிதா செய்த யோகத்தாலும், புண்ணியத்தாலுமே இந்த ஜாதகன் பிறந்தான் எனவும், இந்த ஜாதகன் தனது முன் ஜன்மத்தில் ஈஸ்வரனை நோக்கி அநேக தவங்களைச் செய்துவந்ததின் காரணத்தால், மேற்படி ஈசனது அருளும் வரமும்பெற்றுப் பிறந்தவன் ஆனதால், இச்சென்மத்தில் சகல ஐஸ்வரியமும் உடையவன் ஆனான் எனவும், ஸ்ரீ சர்வேஸ்வரியினது கிருபையால் இச்சென்மத்தில் குபேரனைப்போன்ற தனங்களையுடையவனாகி பெரிதும் வாழ்வான் எனவும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்தென்னவெனில்? இவன் தனது முன் சென்மத்தில் ஈஸ்வரனை நோக்கித் தவம்செய்த காரணத்தால் இச்சென்மத்தில் குபேர சம்பத்துடன்வாழ வரம்பெற்றான் என்பது முக்கிய கருத்து. 39

பாரென்ற வச்சிரபங்கி ரேகையின்றன்
பலனெல்லாம் விபரமுடன் பகர்ந்தேனனும்
காரென்ற காட்சிகளும் யோகவாழ்வும்
கைமுறையாய் வேதம்போற் சொன்னேன்மைந்தா

சீரென்ற ஜகந்தனிலே யறிந்துநீயும்
செப்புவீர் கும்பமுனி செப்புமென்று
ஆரென்ற வைம்புலன்க ளறிந்தஞான
அகஸ்தியரென் றம்மையவ ளருளினளே.

(இ-ள்) இங்கு இதுகாறும் கூறிய செய்யுளால் வஜ்ஜிரபங்கிரேகையில் பிறந்தவனது பலாபலன்கள் யாவும் சாஸ்திரமுறையாலும், அனுபவத்தாலும், இவனது வாழ்நாளினது விசேஷங்களையும், யோகங்களின் விவரங்களையும், நன்றாய் ஆராய்ந்து அறிந்து சொல்லினேன். ஓ அகத்தியமாமுனியே! இவ்வாறே இவ்வுலகத்திலுள்ள சகலருக்கும் உமது ஐம்புலனது ஆராய்ச்சியாலறிந்து உலகோர்க்குப் பலன் சொல்வாய் என எமது தாயாகிய உமாமயேஸ்வரியாள் அருளிச்செய்தனர் எ-று. 40

பூதபாண்டி ரேகையின் பலன்

அருளுகிறே னின்னமொரு ரேகைமைந்தா
ஆச்சரிய முள்ளதிந்த ரேகையப்பா
வருளுகிறேன் பஞ்சவர்ண குடோரியொன்று
வகையான நடுக்கரத்தி லிரண்டுகீறு
பொருளுகிறேன் பூதபாண்டி ரேகையொன்று
பெருமையாய்ச் சிறுவிரலிலேறி நிற்கும்
திருளுகிறேன் பஞ்சவர்ண குடோரியப்பா
திரிகோண மைந்திதழா யிருக்கும்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இன்னுமொரு ரேகையுண்டு அவை மிக்க ஆச்சர்யமுடையதாகும். அவையாவன:—பஞ்சவர்ணக்குடோரிரேகை என்றும் பெயராகும். அவை எவ்வாறிருக்குமெனில்? அவ்வவர்களுடைய அஸ்தத்தின் நடுப்பாகத்தில் இரண்டு கீறுடையதாகும். தமது சிறுவிரல் என்னும் சுண்டுவிரலில் மேற்படி நடுக்கரத்தினின்று ஏறிச்செல்லும் அதற்கு பூதபாண்டிரேகை என்றும் பெயராகும். மற்றும், பஞ்சவர்ணக்குடோரி என்னும் ரேகையானது மூன்றுகோணங்களாயும், ஐந்து இதழ்களாயும் அமைந்திருக்கும் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) மேற்படி பஞ்சவர்ணகுடோரிரேகை யென்பது முக்கோணமாய் ஐந்து இதழ்களுடன் இருப்பதுடன் நடுக்கரத்தினின்று இரண்டு ரேகையுண்டாகி சுண்டுவிரலில் ஏறிச்செல்லுமெனவும், அவற்றிற்கு பூதபாண்டி ரேகை யென்றும் பெயராகும் என்பது இதன் கருத்தாகும். 41

பாரப்பா நடுவிரலின் முழுதுமேறி
பாங்கான விதமுடனே நிற்கும்பாரு
காரப்பா பஞ்சவர்ணக் குடோரிகண்டால்
கருத்துறவே யிவன்யோகக் கருணைகேளு
சீரப்பா இவனுடைய திசையும்யோகம்
சிறப்பாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
ஆரப்பா என்னைப்போலே உங்களுக்கு
அறிவுதனைச் சொல்லிடுவா ராய்ந்துகேளே.

(இ-ள்) மற்றும் மேற்கூறிய பஞ்சவர்னக் குடேரிரேகை என்பது அஸ்தத்தில் நடுக்கரத்தில் உண்டாயினும், நடுவிரலில் ஏறிச் செல்லும் தன்மையுடையதாய் இருக்கும். இவ்வாறு பஞ்சவர்னக் குடேரிரேகை என்பது தமது அஸ்தத்தின்கண் அமையப் பிறந்தவர்களது பலாபலன் களையும் திசை, யோகம் முதலிய வாழ்வினது சிறப்பையும் கூறுவேன் கேட்பாயாக. ஓ முனிவர்களே! என்னைப்போல் உங்களுக்கு இவ்வுலக ரகஸ்யத்தை எவர் சொல்ல வல்லவர்? ஆனதால் மிக்க கவனமாய்க் கேட்பீராக எ-று.

(வி-ரை) ஸ்ரீ தேவியானவள் தன்னருகிலுள்ள தேவர் முனிவர்களைப் பார்த்து ஓ முனிவர்களே! என்னைப்போன்று இவ்வுலக ரகஸ்யத்தை வேறு எவரும் கூறமாட்டார். ஆனதால் கவனமாய்க்கேளுங்கள் என்றுகூறி மேற்படி ரேகையின் பலனைக் கூறத்தொடங்கினள். 42

கேளடா இவன்றானும் பிறக்கும்போது
கேவலங்க ளிவன்வீட்டிற் கெடுதிரொம்ப
நாளடா இவன்றாய்க்குச் சிறுபருவந்தன்னில்
நலமாக விவாகமவட் கானதப்பா
வாளடா வக்கணவ னிறந்தான்பின்பு
வளமாக மற்றொருவன் விவாகஞ்செய்தான்
ஆளடா அவனுக்கே பிறந்தானிந்த
ஆச்சரிய முள்ளமைந்த னருமையாமே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகன் ஜனிக்கும்போது இவனது குடும்பமானது பலவித தொல்லைக்கு உடன்பட்டிருந்தன. மற்றும் இவன் தாய் விஷயத்தைக் கூறுவேன் கேட்பீராக. இவனது தாய்க்குச் சிறுவயதிலேயே விவாகம் நடந்தனவாயினும் அக்கணவன் இறந்துபோனான். ஆனதால் வேறு புருடனை மணந்துகொண்டாள். மேற்படி இரண்டாவது கணவனுக்கே இங்கு கூறும் ஆச்சர்யமுடையவனும் தன் தாய்க்குப் பிரியமுடையவனுமான இச்சாதகன் ஜனித்தானென்றும் கூறுவாயாக எ-று. 43

ஆமென்ற அத்தாயின் வயிற்றிலப்பா
அவதரித்த பாலனிவ னன்பாய்ச்சொல்லு
ஊமென்ற இவன்பிறக்கும் வேளைதன்னில்
உற்றபிதா இவன்வீட்டி லிருந்தான்பாரு
காமென்ற ஓர்தாய்க்கோர் மைந்தனாகும்
காணிக்கை யோகமுள்ள கனவானப்பா
வாமென்ற வானோரிற் கெந்துருவரேகை
வகையான இவன்பிறவி யறிந்துபாரே.

(இ-ள்) மேற்கூறிய வண்ணம் மறுபுருடனை யடைந்த தாய்க்கு இப் பாலன் பிறந்தான் என நிச்சயமாய்க் கூறுவதுடன், இந்த ஜாதகன் ஜனித்த காலத்தில் இவனது பிதாவும் வீட்டிலேயே இருந்தான் எனவும், இந்த ஜாதகன் தனது தாய்க்கு ஒரேமைந்தன் எனவும், அளவிறந்த தனமும்,

யோகமும் உடைய செல்வன் எனவும், இந்த ஜாதகன் வானோர் என்னும் கெந்தருவ வம்சம் எனவும், கெந்தருவரேகையும் இவனது அஸ்தத்தின்கண் அமைந்திருக்கு மெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) தாய்க்கு ஒரேமைந்தன் என்பதை பின்வரும் செய்யுட்களால் காண்க. 44

பார்க்கவே இவன்பிறந்த நான்காம்மாண்டில்
பண்பான பிதாவுந்தா னிறந்தான்பாரு
ஏர்க்கவே இவன்பிறந்த வீராறாண்டில்
இயல்பான மாதாவைக் கொன்றான்மைந்தன்
சார்க்கவே இவன்தலைதா னெடுக்காமுன்பே
சரியுறவே எல்லாருஞ் சாய்ந்திட்டார்கள்
மார்க்கமுள்ள இவன்றன்றன் வீட்டிலுள்ள
மகத்தான பொருளைக்கொண் டலைவான்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனித்த நான்காவது ஆண்டில் இவனது அருமைப் பிதா இறந்து போவான் எனக் கூறுவதுடன், இந்த ஜாதகன் ஜனித்த 12-ஆம் வயதில் அருமைத்தாயானவள் இறந்துபோவாள் எனவும், இந்த ஜாதகனுக்கு இளம்பருவம் நீங்கா முன்பே எல்லோரும் மரணமடைந்து விட்டனர் எனவும், அழகுபொருந்திய இவனது இல்லத்தின்கண் அளவிறந்த செல்வம் இருக்கினும், இந்த ஜாதகன் எவரும் உதவியின்றி அலைந்து கொண்டிருப்பான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவதென்னவெனில்? 4-ஆம் வயதில் பிதாவையும், 12-ல் தாயையும் பரிகொடுத்தவனாகி அலைவான் என்பதே யாகும். மற்றும் பொருள் உண்டாகிய விவரம் கீழ்வருமாறு. 45

பாரப்பா விப்பொருள்தான் வந்தமார்க்கம்
பண்பான தாய்தந்தை இறக்காமுன்பு
வீரப்பா இவன்றாய்செய் பாக்கியத்தாலே
விளங்கவே யோர்தலத்தி னிதியைக்கண்டு
ஆரப்பா அந்தரங்க மாகவேதான்
அன்பான புருஷனிடஞ் சொன்னாள்பாரு
பேரப்பா வத்தலத்திற் சென்றுமைந்தா
பேணியே வெட்டியவர் பார்த்தபோதே.

(இ-ள்) மேற்கூறியவண்ணம் இந்த ஜாதகனுக்கு அளவிறந்த பொருள் உண்டாகிய மார்க்கம் என்னவெனில்? இந்த ஜாதகனது தாய் தந்தையர்கள் இறக்காமுன்பே இவனது தாயானவள் செய்த பாக்கியத்தின் பெருமையால் ஓர் இடத்தில் புதையற் பொருள் ஒன்றைக்கண்டு எவரிடத்தும் சொல்லாது தனது புருஷனிடம் சொல்லவும், மேற்படி புருஷனாகிய இவன் பிதா மேற்படி புதையல் உள்ள இடத்தில் சென்று அவ்விடம் பூமியை வெட்டிப் பார்த்தான் என்றும் கூறுவாயாக எ-று. 46

பொழுதான வத்தலத்திற் காதுவைத்த
போதமுள்ள சொர்னபுட்ப மதிலேகண்டார்
வழுதான வந்தநல்லப் பொருளைக்கொண்டு
வண்மையுள்ள ஊரைவிட் டகன்றான்பாரு
செழுதான வப்பொருளைக் கொண்டுநல்ல
திசைதிசையாய் மூன்றூரிற் குடியிருப்பான்
பழுதில்லா வவனிருக்குங் குடிகடோறும்
பாக்கியமுடன் செல்வனாய் வாழ்வான்பாரே.

(இ-ள்) மேலே சொன்னபடி பூமியை வெட்டிப்பார்க்கு மிடத்து அவ்விடம் அளவிறந்த நிதியிருக்கக்கண்டு, மேற்படி நிதியாவும் கைகொண்டு அவ்வூரைவிட்டு வெளியூர் சென்றார்கள். இவ்வாறு மேற்படி நிதியைக் கையில் வைத்துக்கொண்டு மூன்று ஊர்களில் குடியிருப்பார் எனவும், இவர்கள் வாசஞ்செய்யும் மூன்று ஊர்களிலும் மிக்க தனவந்தராய் வாழ்வார் எனவுங் கூறுவர்யாக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன இரண்டு செய்யுட்களாலும் கூறியது என்ன வெனில்? இந்த ஜாதகனது தாய் தந்தையர்களே புதையல் நிதியொன்றைக் கண்டெடுப்பார் எனவும், அவர்கள் மரணகாலத்தருள் மேற்படி பொருளை வைத்துக்கொண்டு மூன்று ஊர்களில் குடியிருப்பார் எனவும், மிக்க செல்வம் உடையவராகவே வாழ்வார் எனவும், மேற்படி புதையற் பொருளே பிற்காலம் இந்த ஜாதகனும் யோகமாய்வாழ ஏதுவாயிற்று என்பதேயாகும். 47

பாரடா இவனுடைய செல்வயோகம்
பர்வதம்போல் வளர்ந்ததடா குபேரன்போலே
காரடா கர்ன்னிகா யோகத்தாலே
கருணையுடன் நல்லவனாய் வாழ்ந்தான்பாரு
கூரடா இவனுக்கோர் புத்திரன்றான்
கூர்மையுள்ள பாலகன்றான் பிறந்தான்பாரு
பேரடா இவனுடைய மூன்றுதலைமுறையும
பேணியே ஒருபிள்ளை நிலைக்கும்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகனது வருகால யோக வாழ்க்கையானது செல்வம் யோகம் முதலியவற்றில் குபேரன்போல் மலைபோன்று வாழ்வான் எனவும், ஸ்ரீ உமாதேவியாரது கிருபையால் மிக்க யோகமுடையவனாயும், கருணை யுடையவனுமாகவே வாழ்ந்திருப்பான் எனவும், இந்த ஜாதகனுக்கு ஓர் அருமைப் புதல்வன் உண்டு எனவும், இந்த ஜாதகன மூன்று தலைமுறைக் கும ஒவ்வொருவரே நிலைப்பார் எனவும் திண்ணமாய்க் கூறுக எ-று.

(வி-ரை) இச் செய்யுளால் இந்த ஜாதகன் முதல் மூன்று தலைமுறைக் கும் ஒவ்வொரு புத்திரர்களே நிலைப்பர் என்று கூறினார். இதன் விவரம் பின் வருவனவற்றால் அறிக, 48

பாரப்பா இவன்றேடுந் தனந்தான்மைந்தா
பரிவான இவன்மகனுக் குதவாதப்பா
சீரப்பா இவனுக்கு முன்னேதானும்
சிறப்பான மகனுந்தா னிறந்துபோவான்

காரப்பா பிராமணன் கையிலேதான்
கடன்முறைகள் வாங்கியிவ னிறப்பான்பாரு
ஊரப்பா உலகமதில் தனத்தையிவன்தான்
உற்பனமாய் மண்மறைவிற் போச்சுதன்றே.

(இ-ள்) இந்த ஜாதகன் புத்திரன் தான் சுயார்ச்சிதமாய்த் தேடும் தனமானது இவனது பிள்ளைக்குதவாது என்றுங் கூறுக. இத்துடன் இந்த ஜாதகனுக்கு நிலைத்திருப்பான் என்று கூறிய புத்திரனுக்கு முன் ஓர் புத்திரன் பிறந்து பிராமணர்கள் முதலியவர்களிடம் கடன் முதலியனவற்றை வாங்கி இறந்து போனான் எனவும், இந்த ஜாதகனது செல்வமும், எவர்களும் அனுபவிக்காது மண்ணில் மறைந்து போயின வென்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவனுக்குப் புத்திரன்-2 எனவும், அவற்றுள் ஒருவன் இந்த ஜாதகனுக்கு முன்பே இறந்துபோவான் எனவும், மற்றுமொருவனும் இவன் தனத்தை அனுபவியான் என்றனர். விவரம் பின் வருமாறு. 49

அன்றெனவே யிவனிறக்கும் போதேமைந்தா
அன்பான நாவுதனை யெழாமற்றானும்
நன்றெனவே மகனுக்குச் சொல்லாமற்றானும்
நாவுக்கிடங் துயிரிழந்து போவான்பாரு
குன்றெனவே கூட்டமுடன் விவகாரத்தில்
குவலயத்தில் வெகுபொருள்க ளழிந்துதப்பா
வின்றெனவே சகடமென்ற யோகந்தானும்
வெகுவான ராஜாதி காரமாமே.

(இ-ள்) இந்த ஜாதகனது மரணகாலத்தினது விஷயங்களைக் கூறுமிடத்து, தான் மரணமடையும் சமயத்தில் பேசுவதற்கும் நாவுவராமல் எவ்விஷயங்களையும் தனது மகனிடம் சொல்ல வாய்வராமல் மறித்துபோவான் என்றும், இவன் தனமானது தன் வாழ்நாட்களில் தனது வர்க்கத்தவராலும், விவகாரம் வழக்கு முதலியவற்றாலும், அநேக பொருள் அழிந்தனவென்றும், இவன் உயிர் உள்ளளவும், சக்கரம்போன்ற யோகமும், ராஜாக்களுக்கும் மேலான ராஜாதிகாரம் உடையவனாகவே வாழ்வான் என்றுங் கூறுக எ-று.

(வி-ரை) முன்கூறிய செய்யுளில் இந்த ஜாதகனது பொருளை இவன் மைந்தன் அனுபவியான் என்றும், மண்ணில் மறைந்துபோம் என்றும் கூறியுள்ளதை இச்செய்யுளில் அவனை விளக்கியுள்ளார். எப்படியெனில்? இந்த ஜாதகன் மரணமாகும்போது எவ்விஷயத்தையும் தமது மைந்தனிடம் சொல்லான் என்றதாலேயாகும். 50

ஆமப்பா இவன்பிறந்த மனைதான்மைந்தா
அன்பான சிறுமனைதான் கூரையாகும்
ஓமப்பா தென்வாச லுள்ளவீட்டில்
ஒருவரில்லை யிவன்பிறக்கும் வேளைதன்னில்

வாமப்பா இவன்பிறந்த நாளுங்கோளும்
வகையாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
வீமப்பா வைப்பசியிற் கதிரோன்வாரம்
விரிவான அவிட்டநாள் மைந்தன்றானே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த மனையானது சிறு கூரைவீடெனவும், மேற்படி வீடானது தென்புறம் வாசலுடைய வீடென்றும், இவன் பிறந்த காலத்தில் இவன் தாயுடன் ஒருவரும் இல்லை எனவும் கூறவேண்டுவதுடன், இந்த ஜாதகன் பிறந்தநாள் கிரகம் முதலியவற்றைக் கூறுமிடத்து வைகாசி மாதமும், ஞாயிற்றுக்கிழமையும், அவிட்ட நக்ஷத்திரமும் கூடிய சுபயோக தினத்தில் ஜனித்தான் எனவுங் கூறுவாயாக எ-று. 51

மைந்தனவிட்டம் முற்கா லேகாதேசி
மகத்தான லக்கினத்தில் வியாழன்சந்திரன்
ஐந்தனப்பா இரவுதனிற் பிறந்தான்பாலன்
அற்புதமாய் இவன்மெத்த யோகசாலி
பந்தனெனும் பலபேர்கட் குபகாரித்தான்
பாக்கியத்திற் பெரியவனாய் வாழ்வானப்பா
இந்தனப்பா இல்லறத்திற் சற்றுநேரம்
இருக்கவுந்தான் மாட்டானென் றியம்பிட்டேனே.

(இ-ள்) மேலேசொன்ன அவிட்டம் முதற்பாதமும், ஏகாதசியும் கூடிய நாளில் ஜென்மலக்கினத்தில் குரு·சந்திரன் இவர்களிருக்கவும் கூடியநாள் இரவில் ஜனித்தான் எனவும், எவரும் மெச்சத்தக்க யோகமுடையவனாகவும், சகல ஜனங்களுக்கும் உபகாரம் செய்யத்தகுந்தவனாகவும், அளவில்லாத பாக்கியமுடையவனாகவும் வாழ்வான் எனவுங் கூறுக. இதுவுமன்றி இந்த ஜாதகன் தனதில்லத்தில் சற்றுநேரமும் தங்கான் என்றும் கூறுக எ-று.

(வி-ரை) தனதில்லத்தில் சற்றுநேரமும் தங்கான் என்று கூறியது அடிக்கடிவெளிதேச சஞ்சாரம் செய்வான் என்பது கருத்து. 52

இயம்பிட்டேன் வயதிவனுக் கெழுபத்தெட்டாம்
இயல்பாக இவனுந்தான் சிங்கக்கூறும்
துயம்பிட்ட வதிககற்கோட கந்தானப்பா
துப்பரவாம் நலமுள்ள வசனஞ்செய்வான்
அயம்பிட்டே னிவனதிக பலவான்பாரு
ஆண்மையுள்ள புருடரைப்போல் வாழ்வானப்பா
நியம்பிட்டே னனேகம்பே ரிவனுக்கப்பா
நித்தமுமே ஏவல்விடை செய்வார்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகனது விஷயங்களை இன்னும் கூறுமிடத்து இவன் சிங்கக்கூறில் பிறந்தவனெனவும், மேற்படி ராசியில் கற்கோடகன் இருப்பான் எனவும், தன் வயது-78 வரையில் சகல பாக்கியங்களும் உடையவனாகி நற்விஷயங்களில் பிரீதியுடையவனுவன். மற்றும் இந்த ஜாதகன்

தனது வாழ்நாட்களில் மகா பலம்பொருந்தியவனும், ஆண்மை யுடையவனாகியும் வாழ்வதுடன், இந்த ஜாதகனுக்கு எந்நாளும் அனேகர் ஏவல் செய்யத்தகுந்த தன்மையுடையவனாகி வாழ்வான் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்து என்னவெனில்? இவனது வாழ்நாளில் மிக்க தீர வீர சூர பராக்கிரமமும் உடையவனாகி சகல பாக்கியமும் பொருந்தியவனாய் வாழ்வான் என்பதேயாகும். 53

பாராயே இவன்மேனி பருத்தகூடாம்
பக்குவமாய் இவனுக்குக் கண்டமெட்டாம்
வாராயே வந்தகண்ட மிவனுக்கப்பா
வரிசையாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
தோராயே வயதிவனுக் கைந்திலேதான்
தோன்றுமப்பா வக்கினியாற் கண்டமொன்று
சீராயே வயதிவனுக் கேழிலேதான்
சிறப்பாகச் சலந்தனிலே கண்டமொன்றே.

(இ-ள்) இந்த ஜாதகனது சரீரமானது மிக்க ஸ்தூல சரீரமாயும், இவனுக்கு கெண்டங்கள் 8-எனவுங் கூறுக. மற்றும், கெண்டாதி கெண்ட விவரங்களைக் கூறுமிடத்து, தோராயமாய் வயது 5-ல் இந்த ஜாதகனுக்கு அக்கினியால் ஓர் கெண்டமுண்டாகும். அதற்குப்பின் வயது 7-ல் பிரபலமாகிய நீரால் ஓர் கெண்டம் உண்டாகும் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) முன் சொல்லிய 43-ஆம் செய்யுளால் இந்த ஜாதகனுக்கு கெண்டாதி கெண்டங்கள் 5-எனக் கூறினார். ஆயினும் இங்கு கூறும் செய்யுளால் இவனுக்கு கெண்டாதி கெண்டங்கள் 8-எனக் கூறியும் அவை எந்த வயதில் என்பதையும், எவ்விதத்தால் என்பதையும் இங்ஙனம் கூறுவாராயினர். 54

ஒன்றான இவன்வயது பன்னிரண்டில்
ஓகோகோ நாற்காலி லேறிவீழ்ந்தான்
நன்றாக இவன்வயதோர் பதினெட்டிற்றான்
நலமில்லா சர்ப்பங்கண் டரண்டான்மைந்தன்
குன்றான வயதிருபத் தாறிலேதான்
குடிபோனா னிராச்சியத்தை விட்டுமைந்தன்
வின்றான விவன்முப்பத் தாறாமாண்டில்
வெகுவான சத்துருவால் மெலிந்திட்டானே.

(இ-ள்) இன்னுமுள்ள கெண்டாதி கெண்டங்களைக் கூறுமிடத்து இந்த ஜாதகன் வயது 12-ல் நாற்கால் ஜீவனென்னும் ஓர் வாகனத்தின் மீதேறி வீழ்ந்து கெண்டமுண்டாயின என்று வயது 18-ல் விஷத்தையுடைய சர்ப்பம் தீண்டுதலால் ஓர் கெண்டமும், வயது 26-ல் தனது சுயத்தலத்தைவிட்டு அந்நிய ஸ்தலங்களுக்குச் சென்று விட்டான் எனவும், வயது 36-ல் தனது பகைவரிட்ட வைப்பு சூனியம் முதலியவற்றால் நோய்வாய்ப்பட்டு மெலிவு அடைந்தான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) வயது 26-ல் வேறு தேசம்போனான் என்பது தனது சுய தேசத்தைவிட்டு அன்னிய இடம் போனான் என்று ஏற்படுவதால் தனது சுக வாழ்விற்காகவே சென்றான் எனக்கொள்க. 55

மெலிந்திடவே யிவனாற்பத் தாறுமாண்டில்
வியாதியினா லுடல்வருந்தி வேட்கையானான்
அலிந்திடவே வருடநான் கவதிப்பட்டான்
அன்பான வழக்கதனை வென்றான்மைந்தன்
வலிந்திடவே யிவனைம்பத்தி ரண்டாமாண்டில்
வாகான கலாகதியினா லோடினான்பார்
கலிந்திடவே யதனாலே பொருளனேகம்
காரணமில்லாச் செலவு செய்வான்பாரே.

(இ-ள்) இன்னு மூண்டாகும் கெண்டாதி கெண்டங்களைக் கூறுமிடத்து இந்த ஜாதகன் வயது 46ல் அளவிடமுடியாத வியாதியால் தனது உடல் மெலிந்து வருத்தப்பட்டான் எனவும், மேற்படி வயது 46 முதல் 4-வருடங்கள் வரையில் ஓர் வழக்குமூலமாய் மகாசிரமமும் கஷ்டமும் உண்டாயினவாயினும், கடைசியில் மேற்படி வழக்கை ஜெயித்து விட்டான் எனவும், வயது 52-ல் வாகனம் என்று சொல்லும் நாற்கால் ஜீவன் விஷயமாய் பலவிடங்களிலும் ஓடியாடியும், அதன் மூலமாய் அனுவசியமாகிய பொருட்செலவு முதலியன உண்டாகும் எனவுங் கூறுவாயாக எ-று. 56

பாரப்பா வயதெழுபத் தெட்டிலேதான்
பரமபதமடைந்திடுவான் சக்கரநேர்மை
காரப்பா பஞ்சவர்னன் குடோரிரேகைக்
கருத்தையெல்லா மறிந்துரைத்தேன் கண்டுகொள்ளு
சீரப்பா விவனுடையத் திசையும்யோகம்
சிறப்பாகச் சொல்லிவிட்டேன் மைந்தாகேளாய்
ஊரப்பா உலகதனிற் கண்டறிந்து
உற்பனமா யறிந்துரைப்பாய் மைந்தாதானே.

(இ-ள்) பஞ்சவர்ணக்குடோரிரேகை என்பது தனது அஸ்தத்தின்கண் அமைந்திருக்குமேயானால் அந்த ஜாதகனுக்கு வயது-78 எனவும் கூறுவாயாக. ஓ முனிவர்களே! இங்கு கூறும் பஞ்சவர்ணக்குடோரிரேகை என்பதின், திசை, யோகம், வாழ்வு முதலிய விசேஷங்கள் யாவும் உள்ளதை யுள்ளவாறே கூறிவிட்டேன். ஆனதால், இவ்வுலகிலுதித்த மாந்தர்களுக்கு இவ்வித ரேகைமார்க்கங்களை உங்களது யுக்திசாதுர்யத்தால் இன்னும் தெளிவாய்க் கண்டறிந்து கூறுவாயாக எ-று.

(வி-ரை) முன்கூறிய 53-ஆம் செய்யுளில் இந்த ஜாதகனுக்கு வயது-78 என்றதையே இச்செய்யுளாலும் நிலைபடக் கூறியுள்ளனர். ஆதலால் இதனை வெகு சூக்ஷமாய்க் கண்டறிந்து கூறுக. 57

**கமலரேகை கமலிரேகையின் பலன்**

தானெனவே இன்னமப்பா ரேகையொன்று
தருவான ரேகையதைச் சாற்றக்கேளு
ஆனெனவே யஷ்டமா கமலரேகை
அப்பனே கமலியுமொன் றிரண்டுரேகை

கானெனவே கைநடுவிரலி லிருக்குதப்பா
கனத்ததோ ரிரண்டுபுள்ளி மூன்றுகீறு
வானெனவே யிந்தநல்ல ரேகையானால்
வரிசையுள்ள பாலகனு மாவான்பாரே.

(இ-ள்) ஒ முனிவர்களே! இன்னுமொரு ரேகையுள்ளன. அதன் பலனையும் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? அஷ்டம கமலரேகை என்றும், கமலிரேகை எனவும் இருவகை யுடையதும், மேற்படி ரேகை யானது எவ்விடம் இருக்குமெனின்? தமது அஸ்தத்தின் நடுவிரலில் மூன்று கீற்று ரேகையாகவும், இரண்டு புள்ளிகளாயும் அமைந்திருக்கும். இவை நல்ல மேன்மையையுடைய ரேகையாகும். இவ்வாறு ரேகை அமையப் பிறந்தவன் நல்வாழ்வும், யோகமும் உடையவன் ஆவான் எனக் கூறுவா யாக எ-று.

(வி-ரை) மேற்படி கமலரேகை, கமலிரேகை என்பது நடுவிரலில் கீற்றுரேகை மூன்றும், புள்ளிரேகை இரண்டாயும் அமைந்திருக்கும் என்பது கருத்து. மற்றும் யோகவான் என்று கூறிய விவரங்களைப் பின்வருவன வற்றால் காண்க. 58

பாரடா இவன்பிறந்த வாரஞ்செவ்வாய்
பரணியிலே மூன்றாங்கா லாகுமைந்தா
சீரடா விவன்றான்றா னு நவமிதன்னில்
செல்வனுமே பிறந்திட்டா னாடிமாதம்
காரடா விவனுந்தான் கீழ்வாசல்வீட்டில்
கனக்கவே கன்னியிற்றான் பிறந்தான்பாலன்
கூரடா இவன்பிறக்குங் காலையிற்றான்
குணமுள்ள செல்வமுள்ள பாலனாமே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்தகாலம் எதுவெனில்? கடகமாதம் என்னும் ஆடிமாதத்தில், செய்வாரமாகிய செவ்வாய்க்கிழமையில், சிறப்புபெற்ற நவமி திதியும், பரணி மூன்றாம்பாதமும் கூடியநாளில் கன்னியாராசி யுதயமாகவும், கிழக்கு நோக்கிய வாசலுடைய வீட்டில் ஜெனித்தான் எனவும், இந்த ஜாதகன் ஜெனித்த காலத்திலேயே இவனது இல்லத்தின்கண் அனேக செல்வம் ஐஸ்வரியம் முதலியன உடையவனாவன் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் ஆடிமாதம், செவ்வாய்க் கிழமை, நவமிதிதி, பரணி 3 ஆம் பாதமும், கன்னியாராசியும் கூடியநாளில் பிறந்தான் எனக் கூறினர். விவரம் கீழ்வருமாறு. 59

பாலனாய் இவன்பிறக்கும் போதிற்றானும்
பாக்கியங்கள் வளர்ந்தேறி இருக்கும்வீட்டில்
சீலமுட னுடன்பிறந்தார் மூன்றுபேர்கள்
செல்வமுட னல்வரப்பா தெரிந்துகொள்ளு
ஆலமாய்ப் புத்ரமித்ர களத்திராதி
அவர்களுடன் வாழ்வனில்வன் மூன்றாமைந்தன்
தாலமதிற் றனஞ்சயனும் பிறந்தானப்பா
தன்மையுடன் செல்வனாய் வாழ்ந்திடுவன்றானே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த காலத்திலேயே இவனது இல்லின்கண் அளவிறந்த பாக்கிய யோக்கிய சிலாக்கிய முடையவராய் இருப்பார் எனவும், இந்த ஜாதகனின் உடன் பிறந்தோர்கள் மூவர் எனவும், இந்த ஜாதகனுடன் நால்வர் என கூறுவதுடன், மேற்படி சகோதரர்கள் சகல சௌக்கியங்களும் உடையவராகி புத்திர மித்திர களத்திராதிகளுடன் பிரபலமாய் வாழ்வ ரெனவும், இந்த ஜாதகன் மூன்றும் பிறவி எனவும், இந்த ஜாதகன் மிகுந்த செல்வம், வீரம், பராக்கிரமம் முதலிய மேம்பாடுடன் பிரபலமாய் வாழ்வார் எனவும் நிச்சயமாய்க் கூறுக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனுடன் நால்வர் என்பது சகோதரர் மொத்தத் தையே கூறியதாகும். மற்றும் இவனது சகோதரர்களின் விஷயங்களைக் கீழ் வருவனவற்றால் காண்க. 60

வாழ்ந்திடவே இவனுடைய பெரியஅண்ணன்
வண்மையாய்க் குளத்திலவன் வீழ்ந்திறப்பான்
ஆழ்ந்திடவே அவர்க்கிளைய வண்ணன்றானும்
அக்கினியுள்ள வடுப்பினில் வீழ்ந்திறப்பான்பாரு
நாழ்ந்திடவே இவர்க்கிளைய தம்பியப்பா
நலமான காட்டிலவன் செல்லும்போது
தாழ்ந்திடவே புலிதின்று போட்டதப்பா
தயவாக மூன்றுபே ரிறந்திட்டாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் மேற்கூறிய வண்ணம் மிக்க யோக பிரபல முடையவராகி வாழ்வார் எனினும், இவனுக்கு முன் பிறந்த பெரிய தமயன் ஜலத்தையுடைய குளத்தில் வீழ்ந்து இறந்துபோவான் எனவும், அதற்கு அடுத்த சிறிய தமயனானவன் நெருப்பையுடைய அடுப்பில் வீழ்ந்து இறந்து போவான் எனவும், அவனுக்கு இளையோனான சகோதரன் பயங்கர மாகிய காட்டில் செல்லுகையில் புலியானது கொன்று புசித்துப்போட்டது. ஆனதால், மூவர் மரித்தார்கள் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) மேற்காட்டிய செய்யுளில் சகோதரர் மூவர் என்றமையால் அவர்களது மரண விவரத்தை இச்செய்யுளால் விரித்துக் கூறினர் எனக் கொள்க. 61

இறக்கவே யிவன்வயதோர் பதினெட்டுக்குள்
இயல்பான மூன்றுபேர் பிறவிபோனார்
பறக்கவே இவன்வயதைந் தாண்டிற்றானும்
பண்பான மாரிகண்டத்தால் மெலிந்தான்
கறக்கவே இவன்வயது இருபதுக்குள்
கனத்ததோ ரிவன்பிதா இறந்தான்பாரு
துறக்கவே வயதிருபத் திரண்டிலேதான்
துரவான மாதாவு மிறந்தாள்பாரே.

(இ-ள்) மேலே கூறியவண்ணம் இவனது மூன்று சகோதரர்களும் மேற்காட்டிய விதத்தால் இந்த ஜாதகன் வயது 18-க்குள் இறந்துபோனார்

சன் எனவும், இவன் வயது 5-ல் மாரி என்னும் வைசூரி உண்டாகி அவ் வியாதியால் மிக்க மெலிந்தான் எனவும், இவன் வயது 20-க்குள்ளேயே இவன் பிதா இறந்துபோனன் எனவும், இருபத்திரெண்டாம் வயதில் தாயும் இறந்துபோவாள் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் 20-க்குள் பிதாவும், 22-ல் தாயும் இறந்து போவாள் என்றதுடன், 5-ஆம் வயதிலுண்டாகிய வைசூரிவாதையால் இந்த ஜாதகனுக்குப் பிரபல கெண்டம் எனவுங் கூறுக. 62

பார்க்கவே வயதிருபத் தெட்டிலப்பா
பலமான வியாதிகண்டத் தால்மெலிந்தான்
ஏர்க்கவே இருபத்து மூன்றுமாண்டில்
பயில்வான விவாகமுந்தா ளுகும்பாரே
பார்க்கவே வயதிருபத் தாறின்மைந்தா
கனகம்போற் புத்திரனும் பிறப்பானப்பா
தீர்க்கமாய்க் குழந்தையது பிறந்தயோகம்
திரமாக வதிகாரஞ் செலுத்துவானே.

(இ-ள்) இந்த ஜாதகன் வயது 28-ல் கொடிய வியாதி உண்டானதாலும் மேற்படி வியாதியால் தனது தேகம் மெலிந்து கஷ்டமும் கெண்டமும் உண்டாயினவென்றும், வயது 23-ல் அழகிய விவாகாதி சுபசோபனுதிகள் நடக்கும் எனவும், வயது 26-ல் அற்புதமாகிய புத்திரரும் உண்டாவார் எனக் கூறுக. மேற்படி குழந்தையானது பிறந்தது மிக்க யோகம் தரவல்லது. ஆதலால் மேற்படி குழவியானது அரசனைப்போன்று அதிகாரம் செய்யத் தகுந்ததாகும் எனக் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்து என்னவெனில்? 23-ல் விவாகமும், 26-ல் புத்திரரும் பிறப்பார் என்றும், மேற்படி புத்திரன் பிறந்ததுமுதல் யோகம் உண்டாகும் என்பது கருத்தாகும். 63

வானென்ற விவன்றனக் காறுபிள்ளை
வளமையாய்ப் பிறக்குமடா மக்கடானும்
ஆனென்ற நாலுபேர் நிலைப்பாரப்பா
ஆகாம விரண்டுபேரி றப்பாறன்றே
ஊனென்ற இவனுக்குக் கண்டம்நாலு
உற்பனமாய் முடியுமென் றுரைத்தேன்மைந்தா
கானென்ற சத்துருவாற் கண்டமொன்று
கனமிருகத் தாலுமொரு கண்டந்தானே.

(இ-ள்) இந்த ஜாதகனுக்குப் பிறக்கும் புத்திரர்கள் மொத்தம் 6-எனவும், மேற்படி 6-புத்திர புத்திரிகளில் நான்குபேரே நிலைத்திருப்பார் எனவும், மற்றுமுள்ள இரண்டு புத்திரர்கள் நசித்துப்போவார் எனவும் கூறுக. இதுவன்றி, இந்த ஜாதகனது ஆயுள் முடிவுக்குள் இவனுக்கு உண்டாகும் கெண்டாதி கெண்டங்கள் நான்கு என நிச்சயமாய்க் கூறுக. அவையாவன?

சத்துரு என்னும் பகைவரால் ஒரு கெண்டமும், மிருக வாதையால் ஒரு கெண்டமும் உண்டாகும் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனுக்குப் பிறக்கும் சந்ததிகள் 6-எனவும், அவற்றுள் நான்கே நிலைத்திருக்கும் என்று கூறியமையால், அவற்றுள் ஆண் பெண் என்னும் விவரங்களை அவரவர்களுடைய கிரக ஆராய்ச்சியால் கண்டுதெளிக. மற்றும் கெண்டாதி விவரம் பின்வருமாறு. 64

கண்டமப்பா ஆயுதத்தால் வருமோர்கண்டம்
கருணையால் மாரிகண்டங் கதிக்கத்தீரும்
அண்டமப்பா புவனங்கண் மெய்க்கவாழ்வன்
ஆச்சரியந் தொழின்முறையு மந்திரவாதி
பண்டமப்பா பலதொழிலுஞ் செய்வான்பாரு
பாக்கியவான் புண்ணியங்கள் செய்வானப்பா
கொண்டதோ ரிவன்விடந்தான் குபேரன்போலாம்
கொற்றவர்கள் சார்புள்ளான் மிகவுநன்றே.

(இ-ள்) மேற்செய்யுளில் கூறிய கெண்டாதி கெண்டங்கள் 2-போக, ஆயுதங்கள் என்னும் கத்தி பாலா முதலியவற்றால் ஓர் கெண்டமும், மாரி என்னும் வைசூரி வாதையால் ஓர் கெண்டமும் உண்டாகும் என்க. மற்றும் இந்த ஜாதகன் இப்பூமியெங்கும் புகழத்தக்க வாழ்க்கையும், எவரும் ஆச்சரியப்படத்தகுந்த மந்திரமும், பற்பல தொழில்முறைகளையும் ஆராய்ந்து செய்யத்தகுந்தவனும், பற்பல புண்ணியச் செயல்களை உடையவனும், குபேரனைப்போன்ற பாக்கியம் உடையவனும், அரசர்களது உதவியும் சிநேகமும் உடையவன் ஆவான் எனக் கூறுவாய் எ-று. 65

நன்றெனவே விஞ்வித்தை படிப்பான்பாலன்
நலமுள்ள தொழின்முறைகள் படிப்பான்பாரு
அன்றெனவே விவனுனு நாளின்கெற்பம்
ஆச்சரியம் கீழ்முகமாய் புணர்ச்சியாகி
வன்றெனவே முதற்சாமந் தரித்தகெற்பம்
வளமையுள்ள பாலனென்றே மதித்தேன்பாரு
குன்றெனவே லக்கினத்திற் கிரகம்ரெண்டு
குணமாக விருந்ததப்போ தமைந்தான்றனே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது விஷயத்தைக் கூறுமிடத்து, பற்பல விதமான தர்க்க சாஸ்திரம் முதலியனவற்றை வாசிப்பான் எனவும், அநேக விதமான தொழில்முறை சாஸ்திரங்களை வாசித்து அறிவான் என்றும் கூறுக. மற்றும் இவன் பிறந்த காலத்தைக் கூறுமிடத்து, இவன் தாயானவள் மாதவிடாயாகி நான்காம்நாள் கிழக்குநோக்கி முதல் சாமத்தில் புணர்ந்த காலத்தில் கெர்ப்பம் தரித்தவன். ஆதலால், இந்த ஜாதகன் எவரும் கண்டு ஆச்சர்யப்படத்தக்கவனும், நாளுக்குநாள் மிக்க யோகமுடையவனும் ஆவான் எனக் கூறுக. இவனது ஜெனன லக்கினத்தில் இரண்டு கிரகங்கள் பலம் பெற்றிருந்தன வென்றும் கூறுவாயாக எ-று. 66

தானடா விவன்வயதோ ரறுபத்தெட்டில்
தான்கீழே விழுந்திவனு மடிவானப்பா
வானடா யான்சொன்ன மொழிதான்மைந்தா
வையகத்தி லுமையவடான் சொன்னவாக்கியம்
ஊனடா வுலகமெல்லாம் பிழைக்கவேண்டி
உத்தமியும் பாடிவைத்தாள் கடாட்சம்வைத்து
யானடா வடமொழியைத் தமிழாற்பாடி
ஆச்சரிய மாகவைத்தே னறிவினாலே.

(இ-ள்) இந்த ஜாதகனது வயது 68-ல் ஓர் உயரமாகிய இடத்தி லிருந்து கீழே வீழ்ந்ததின் காரணத்தால் இந்த ஜாதகன் உயிர்துறந்தான் எனவும் கூறுக. ஓ மாணிடர்களே! உலகபராபரியாகிய உமாதேவியார் சொன்ன இந்த சாஸ்திரத்தை இவ்வுலகிலுள்ள அனைவோரும் அறிய வேண்டும் என்னும் விருப்பம் கொண்டு, வடமொழியாய் இருந்த இந்த நூலை தமிழால் எவரும் ஆச்சரியப்படும் வண்ணம் என்னால் அறிந்தவரையில் கூறியுள்ளேன் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனது வயதும் மாணகால விதத்தையும் கூறினர். அவையாவன:—தன் வயது 68-ல் உயரத்திலிருந்து கீழே வீழ்ந்து இறந்து போவான் என்பதாகும். 67

தனஞ்சேய ரேகையின் பலன்

நாலென்ற வின்னமொரு ரேகைமைந்தா
நலமான ரேகையதைச் சொல்லக்கேளு
தாலென்ற தனஞ்சியனென்ற ரேகையப்பா
தாழ்வில்லா ரேகையடா சொல்லக்கேளு
ஆலென்ற ஆச்சரிய முள்ளரேகை
அப்பனே சந்தரவுதைய ரேகையொன்று
காலென்ற சௌபாக்கிய ரேகையொன்று
கண்டிப்பாய் ரேகையிரண் டிருக்கும்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இன்னுமொரு ரேகையுண்டு. அவையாவன: தனஞ்செய ரேகை என்றும் பெயராகும். மேற்படி ரேகையானது எந்நாளும் தாழ்ச்சி அடையப்படமாட்டாத மேலான ரேகையாகும். ஆனதால் மேற்படி ரேகையினது விருத்தாந்தங்களைக் கூறுவேன் கேட்பாயாக. மேற்படி தனஞ்செய ரேகை என்பது, சந்திரோதய ரேகை எனவும், சௌபாக்கிய ரேகை எனவும் இரண்டுவிதமாய் அமைந்திருக்குமென அறிக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சந்திர ரேகை, சௌபாக்கிய ரேகை என்னும் இரண்டு ரேகைக்குமே பொதுப்பெயராய் தனஞ்செய ரேகை எனக் கூறுதலானர். மேற்படி ரேகைகள் இருக்கும் இடத்தைக் கீழ்வரும் செய்யுளால் அறிக. 68

பாரப்பா நடுக்கரத்தில் மால்விரலில்தான்
பக்குவமாய் யிரண்டுகணு வேறிநிற்கும்
சீரப்பா இரண்டுவட்டங் திரிகோணந்தான்
சிறப்பாக வைந்துபுள்ளி இருக்கும்பாரு



காரப்பா ரேகையெல்லாஞ் சிவந்துகாணும்
காரணமா மிந்தநல்ல ரேகைகண்டால்
பேரப்பா சந்திரகுல ராஜர்கையில்
பெருமையுள்ள ஸ்ரீரேகை இருக்கும்பாரே.

(இ-ள்) மேற்சொல்லிய ரேகையானது நக்கரம் என்னும் உள்ளங் கையில் உண்டாகி, மால் விரல் என்னும் நடுவிரலின் இரண்டு கணுக் களிலும் ஏறிச் செல்லும் தன்மையுடையதாகும். எவ்வாறிருக்குமெனில்? இரண்டு வட்டத்திரிகோணமாயும், 5-புள்ளி வடிவங்களாயும் இருக்கும் எனக் கொள்க. மேலும் மேற்சொன்ன ரேகைகள் சிவப்பு நிறமுடைய தாயும் இருக்கும் இந்த ரேகை அமைந்தவர்கள் சந்திரகுலத்தரசர் எனில், இதனுடன் ஸ்திரீ ரேகையும் அமைந்திருக்குமென அறிக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவ்வாறான ரேகைகள் வெகுவாய் சந்திர குலத்தரசர்களுக்கே காணும் என்று ஏற்படுகிறது. இதன் பலாபலன்கள் பின் வருவனவற்றால் அறிக. 69

பாரடா ரேகையுள்ள மைந்தனோடு
பதினாறு பிள்ளைகள்தான் பிறப்பார்பாரு
காரடா இவன்றாய்க்கு முதலாம்பிள்ளை
கனக்கவே யிவன்பிறந்த நாளுங்கோளும்
தீரடா இவனிடத் திசையும்வாழ்வும்
தீர்க்கமாய் பெருமைமுத லெல்லாஞ்சொல்வேன்
ஊரடா உலகதனிற் பெருமையுள்ளான்
உத்தமிதன் வயிற்றிலிவன் பிறப்பானென்றே.

(இ-ள்) மேற்கூறிய வண்ணம் ரேகை அமையப் பிறந்த ஜாதகன் பதினாறு சகோதர சகோதரிகளுடன் பிறக்கத் தகுந்தவன் எனவும், இந்த ஜாதகனே முதல்பிள்ளை எனவுங் கூறுவாயாக. மற்றும் இந்த ஜாதகன் பிறந்தநாள் முதலியனவையும் கிரக அடவியும் இவனது வாழ்நாட்களின் திசை முதலியனவற்றையும், பெருமை முதலிய விவரங்கள் யாவும் பிழை யின்றிக் கூறுவேன் கேட்பீராக. இந்த ஜாதகன் இவ்வுலகின்கண் மிக்க பெருமை வாய்ந்தவன் எனவும், மெச்சத்தகுந்த உத்தமியினது வயிற்றில் பிறந்தான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் முதல்குழவி எனவும், இவ னுடன் பிறவி 16-எனவும், உத்தமியின் வயிற்றில்பிறந்தவன் எனவுங் கூறி யுள்ளார். மற்றும் பலாபலன் பின்வருவனவற்றால் அறிக. 70

அன்றெனவே இவன்மாதா மைந்தர்கேளு
ஐசுவரிய முள்ளவளாம் முதலாஞ்சாதி
நன்றெனவே இவன்றாயுந் தந்தையுந்தான்
நன்மனதாய்ப் பாலுடனே அன்னமுண்டு

குன்றெனவே மதிவாரம் இரண்டாஞ்சாமம்
குணமாக இருவருமே கூடினார்கள்
வன்றெனவே கீழ்முகமாய்த் தலையைவைத்து
வலியசதா சிவத்தையெண்ணி சேர்ந்திட்டாரே.

(இ-ள்) இந்த ஜாதகனது தாய் விஷயங்களைக் கூறுமிடத்து மேற்படி தாயானவள் மகா ஐஸ்வர்ய முடையவள் எனவும், முதற்சாதியாகிய பதி விரதை எனவும், இவனது தாயும் தந்தையரும், மதிவாரமென்னும் திங்கட் கிழமை இரவில் பால் அன்னமுண்டு, கீழ்த்திசையாய்த் தலைவைத்து ஸ்ரீசிவபிரானை நினைத்து ஏகமனதாய் கூடிய காலத்தில் கெர்ப்பந்தங்கி இந்த ஜாதகன் பிறந்தான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவனது தாய் மகாபதிவிரதை எனவும், நற்காலத்தில் புணர்ந்தனர் எனவுங் கூறப்பட்டன. மற்றும் விவரம் பின் வருவனவற்றால் அறிக. 71

சேர்ந்தவர்கள் இருபேரு மனிதராவர்
செம்மையுள்ள முற்சனனந் தேவராகும்
ஆர்ந்தவிவ் விருவரிட கணமொன்றப்பா
அப்பொழுதில் கிரகமைந் துச்சந்தானும்
வார்ந்திருவர் வாலைவய ததனிற்கூடி
வண்மையுள்ள லீலையினால் வகித்தமைந்தன்
ஊர்ந்ததோ ருற்பனத்தா லுமையாள்மாலும்
உபசரித்தா ரிவன்செய்த பாக்கியத்தாலே.

(இ-ள்) மேற்சொன்ன இருவராகிய இவனது தாய்தந்தையர்கள் இச் சனனத்தில் மனிதர்களேயன்றி, இவர்களது முன் ஜனனத்தில் தேவர்கள் எனக்கொள்க. ஆனதால், இவ்விருவர்களின் கணமும், தேவகணம் என்பதில் ஐயமில்லை. ஆகையினாலேயே இந்த ஜாதகன் பிறந்த காலத்தில் ஐந்து கிரகங்கள் உச்சமாயும் நின்றன. இதுவன்றி, இவனது தாய் தந்தையர்கள் தமது வாலீப பருவத்தில் கூடிக்கலந்த காலத்தில் உற்பவித்த மைந்தன் ஆனதாலும் என்க. இக்காரணத்தாலும் இவன் தனது பூர்வத்தில் செய்த பாக்கியத்தாலும், ஸ்ரீ மகாவிஷ்ணுவும் உமையவளும் இவனுக்கு உபகாரமாய் இருந்தனரென்றுங் கூறுக எ-று. 72

பாக்கியந்தான் இவன்பிறவி யானதப்பா
பண்பான நவநாளிற் கெற்பமானான்
நாக்கியந்தா னவமுகமு மளித்தகெற்பம்
நலமுள்ள மைந்தனுக்குப் பத்துமாதம்
சாக்கியம்போ லிவன்றானுஞ் சதையுந்தன்னில்
சர்ச்சனனும் பிறந்திட்டான் செவ்வாய்ராவில்
சோக்கியந்தான் றசமியிலே பிறந்தான்பாலன்
சுதன்பிறந்த வேளைமிக நல்லதென்றே.

(இ-ள்) இந்த ஜாதகன் தனது தாயானவள் மாதவிடாயாகிய 9 ஆம் நாளில் கெற்பமாயினதாலும், நவசக்திகளாலும், சுபயோகத்தைத் தரும் நாளில் ஜனித்தவனானதாலும், இந்த ஜாதகன் தனது தாய்வயிற்றில் பத்து மாதமும் நிறைந்து பிறந்தவன் ஆவான் எனக் கூறுவதுடன் இவன் ஜனித்தது சதய நக்ஷத்திரத்தில் பிறந்தவன் ஆவன். மற்றும் செவ்வாய்க் கிழமையும், தசமியும் கூடியநாளில் இரவு காலத்தில் மகா சுபயோகத்தில் பிறந்தவன் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் செவ்வாய்க்கிழமை இரவில், தசமிபடம், சதய நக்ஷத்திரமும் கூடியநாளில் சகல நன்மையும் அடையத் தருந்தவனாய்ப் பிறந்தான் என்பது கருத்து. 73

நல்லதென்ற விவன்பிறக்கும் போதேஅப்பா
நலமான கிரகமதி லைந்துச்சந்தான்
அல்லவேகே ளிவன்பிறந்த லக்கினத்தில்
அன்பான மாலவனும் இருந்தான்பாரு
வல்லதென்ற வண்மையினுற் பிறந்தமைந்தன்
வரிசைதனைச் சொல்லுகிறேன் வகைபாக்கேளு
மல்லதென்ற இவனுடைய ரூபத்தோடு
மகத்தான யோகமது மருவிக்கேளே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனித்த பிறவிகால லக்னத்தின்படி இவனுக்கு 5-கிரகங்கள் உச்சமாய் அமைந்தன. அதிலும் இவன் ஜனன லக்கினத்தில் புதனும் நின்றான். இவ்வாறு கூடிய சுபயோக திசையில் பிறந்தவன் ஆதலால், இவனது வருவினையினது அளவையும், இவனது ரூபலாவண்யங்களினது சிறப்பையும் யோகம் முதலியனவற்றைப் பற்றியும் கூறுவேன் கேட்பீராக எ-று.

(வி-ரை) முன்சொன்ன 72-ஆம் செய்யுளில் கூறிய வண்ணமே இச்செய்யுளாலும் இவனது ஜனனகால கிரக அடவியில் 5-கிரகங்கள் உச்சம் என்றனர். இத்துடன் ஜன்மலக்கினத்திலும் புதன் நின்றான் எனக் கூறியதால் இவனது ரூபலாவண்யங்களையும் யோகம் முதலியவற்றைப் பற்றியும் கூறுவார். 74

கேளப்பா இவன்ருனு மழகன்மெத்த
கேவலமாய்த் திசையோக முள்ளமைந்தன்
நாளப்பா கிரீடியடா வடிவிலேதான்
நலமுள்ள பாலகனும் பிறந்தான்பாரில்
வாளப்பா இவன்ருனும் வில்லின்வித்தை
வளமானவேதமுத லெல்லாங்கற்பன்
ஆளப்பா இவனைப்போ லுலகந்தன்னில்
அன்பான பாலகனும் இல்லைபாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! கேட்பீராக இந்த ஜாதகன் மிக்க ரூபலாவண்யங்கள் உடையவனும், கிரீடி என்னும் அர்ச்சுனனைப்போன்ற வடிவ

29

முடையவனும், தனுர்வேதமாகிய வில்வித்தையில் மிக்க பயிற்சியுடையவனும், சகல வேதாகமங்களையும் கற்றுத் தெளிபவனும், இப்பூமியின்கண் எவரும் இணைசொல்லப்படமாட்டாத அன்பும் அழகும் உடையவனும், இசையும் யோகமும் பிரபலமுடையவனும் ஆவான் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் மிக்க ரூபலாவண்யமும், மேம்பாடும் அழகும் உடையவன் எனக் கூறியதுடன், பிரபல யோகமும் உடையவன் எனக் கூறியதால் யோகத்தின் விவரம் முதலியவற்றைக் கீழ் வருவனவற்றால் காண்க. 75

பாரடா இவன்ரூப முப்பத்திரெண்டு
பண்பான லக்ஷணத்தோ டிருப்பான்பாரு
சீரடா இவனுக்குற் றப்பாமற்றுன்
சிறப்பாக லக்ஷணங்க ளதிரமாய்க்காணும்
கூரடா முன்பிறப்பி லிவனுக்குத்தான்
குறிப்பான சாபமொன் றுண்டுபாரு
தீரடா வந்தநல்ல சாபந்தானும்
திறமாக பதினெட்டாண் டிருக்குங்காலே.

(இ-ள்) இந்த ஜாதகனது ரூபலாவண்யங்களைக் கூறுமிடத்து முப்பத்திரண்டு லக்ஷணங்களும் பொருந்தியவன் எனவும், சிறப்புடைய அங்கங்கள் யாவும் அழகுபெற இருப்பவன் எனவும் கூறுவதுடன் இவனது முன் சன்மத்தில் இவனுக்கோர் சாபமுண்டு எனவும், மேற்கூறிய முன் ஜனன சாபமானது இவன் வயது-18 வரையில் பாதிக்குமெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனுக்குத் தனது முன் சன்மத்தில் ஓர் சாபமுண்டு எனவும், அவை இவன் வயது-18 வரையிலிருக்கு மெனவுங் கூறியதால், அவற்றின் விவரம் பின் வருவனவற்றால் அறிக. 76

காலமென்ன வெகுவறுமைப் பட்டார்மைந்தா
கண்கலங்கி வறுமையினால் வளர்க்குங்காலம்
சீலமெனுஞ் சிவனிடச் சோதனையாலே
சிவசிவா அன்னமவர்க் கில்லாததாலே
பாலனென்ற பிள்ளைகள்தான் பசியால்நொந்து
பதைபதைத்து மயங்கிமிகக் கிடக்கும்போது
ஆலமுண்ட வருணகிரி யாரைநொந்து
அற்புதமாம் பிள்ளைகளை வீட்டிவிட்டே.

(இ-ள்) மேலே கூறிய வண்ணம் முன் சன்மத்தில் நேர்ந்த சாபத்தால் மிக்க வறுமையடைந்து கண்ணீர் விட்டதுடன், இவனது வாழ்க்கையானது பிற்காலத்திலும் ஸ்ரீசிவபிரானது சோதனையால் அன்னத்திற்கும் வழியில்லாத காரணத்தால், இவனது மக்கள்முதலாயினோரும் மிக்க பசியால் நொந்து மனம் பதைத்து மயங்கிக் கிடக்கும்போது, விஷத்தை பானம்செய்த சிவ

பிரானை இவனும் இவனது மனைவியும் நொந்து தன் மைந்தர்களை வீட்டில் விட்டுப் போனான் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவனது பிற்கால வாழ்வினது சுகதுக்காதிகளைக் கூறுகிறார். மற்றுமுள்ள வாழ்க்கை விசேஷங்கள் பின்வருமாறு. 77

இட்டிடவே பிள்ளைகளை மனையிலிட்டு
இயல்பான தேவியுடன் ரானுமப்போ
கட்டிடவே குழந்தைகளை மனையிலிட்டு
காரணத்தால் வாசலைத்தா னடைத்துமூடி
விட்டிடவே பசியினாற் குழவியெல்லாம்
மெலிந்துமிக விகாரமதாய் மயக்கமாகி
மட்டிடவே மனமெல்லாஞ் சோர்ந்துபாலர்
வாய்விட்டுக் கதறியங்கே வீழ்ந்ததன்றே.

(இ-ள்) மேற்சொல்லிய வறுமை கஷ்டம் முதலியன தாங்காத காரணத்தால் இவனும் இவனது மனைவியும் தமது மைந்தர்களை வீட்டிலிட்டு வாசற் கதவுகளை அடைத்து மூடிக்கொண்டு, முன் கூறியவண்ணம் சிவனை நொந்து ஏக்கமிட்டு அழுதுகொண்டிருந்தார். அக்காலம் மேற்படி குழவிகள் எல்லாம் அளவிடமுடியாப் பசியால் மனம்நொந்து வாடி மெலிந்து தாங்கமுடியாத பசியால் அழுது மெய்சோர்ந்து மயக்கமாகி இருந்தனர் என்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனது முன் சென்மத்திலுண்டாகிய சாபத்தால் இவனது வாழ்நாளில் அடையப்போகும் கஷ்டங்களைக் கூறுவாராயினர் மற்றுமுள்ள விஷயம் பின் வருமாறு. 78

வீழ்ந்திடவே வழுதழுது மயங்கிவீழ
வியல்பாகப் பிள்ளைகடான் சோர்ந்திருக்க
தாழ்ந்திடவே தருமமே செயமென்றெண்ணி
தன்றேவி தானுமவ ரிரண்டுபேரும்
ஆழ்ந்திடவே வரனுமைக்கே அபயமென்று
ஆசரித்தா ரன்னேர மபையஞ்செய்ய
வாழ்ந்திடவே இவர்முறையை உமையாள்கேட்டு
வருத்தமுற்றுச் சிவன்பதத்தில் வணங்கினாளே.

(இ-ள்) மேற்கூறிய வண்ணம் தனது பசிப்பிணியைத் தாங்கமாட்டாது கண்ணீர்விட்டு மயங்கி சோர்ந்திருப்பதை இந்த ஜாதகனும் இவனது மனைவியுங்கண்டு அளவில்லாத் துன்பத்தில் ஆழ்ந்தவர்களாகி தருமமே ஜெயம் என்று எண்ணி, உலக ரக்ஷகர்களாகிய ஈசனையும் ஈஸ்வரியையும் அபயமென முறையிட்டு அழுதனர். இம்முறையைக்கேட்ட உலகமாதாவாகிய உமாதேவியானவள் தன் அருகிலுள்ள சிவபிரானை வணங்கினாள் எ-று.

(வி-ரை) தயர்படும் கொடுந்துயரைக்கண்டு தாங்கமாட்டாத பிதா, மாதா இவர்கள், சிவபிரானையும் ஈஸ்வரியையும் வணங்கி அபயமென்று முறையிட மேற்படி ஈஸ்வரியானவள் ஈசனைவணங்கிக் கீழ்க்கண்டவாறு வினவுவாள். 79

ஆதியே பராபரனே கைலைமூர்த்தி
அற்புதமே வானோரே வையாசாமி
சோதியே பரஞ்சுடரே மகாதேவாநீர்
சொல்லுகிறேன் மைந்தரையுங் காக்கவேணும்
நீதியோ செய்யுமொரு காரணந்தான்
நிர்ணயமாய்ப் பிள்ளைகளைக் காருமென்ன
நாதனுமை இருபேரு மன்னம்பாலு
நலமுடனே கொண்டுவந் தீந்திட்டாரே.

(இ-ள்) மேற்சொல்லியவாறு உலகமாதாவானவள் ஈசனைத் தொழுது வணங்கி, ஓ பராபரவஸ்துவே, கயிலாயத்தில் அமர்ந்திரானின்ற மூர்த்தியே! வானோரெல்லாம் வணங்கத் தகுந்த தெய்வமே! பரஞ்சோதிமயமாய் விளங்கா நின்ற தேவாதிதேவா! இவ்வாறு பார்த்திருப்பது நீதியல்ல. ஆதலால் அடியாள் குறைக்கிறங்கி மேற்படி குழவிகளைக் காப்பாற்றுவது உமது பார மென்று கூறவும், மேற்படி பரமேஸ்வரரும் ஈஸ்வரியும் மேற்படி குழவிக ளிருக்குமிடத்திற்குப் பால்சோறு கொண்டுவந்து தந்தனர் எ-று. 80

ஈந்தவுட னெல்லவரும் பசிகள்தீர்ந்து
இளைப்பாற்றிக் குழந்தைகளை காத்தாரப்போ
வாந்தமுள்ள சகலசவு பாக்கியந்தான்
வண்மையாய்க் கொடுத்தார்க ளப்போதானே
சாந்தமுட னீஸ்பரனும் உமையாளுந்தான்
சலியாத வரங்கொடுத்துப் போனாரப்போ
ஏந்தவுடன் வாழ்ந்திருந்தா ரிவர்களுக்கு
எம்பிரான் னருளாலே இன்னங்கேளே.

(இ-ள்) மேற்கூறியவண்ணம் ஈசனும் ஈஸ்வரியும் பாலன்னங் கொண்டு வந்து மேற்சொன்ன குழவிகளுக்குக் கொடுத்து பசியாற்றி இளைப்பாற்றிய துடன், அவர்களுக்கு வேண்டிய சகல சௌபாக்கியங்களையும் அளவில்லாமல் கொடுத்து, எந்நாளும் தீமை என்பதையே அணுகவொண்ணாத வரத்தையுங் கொடுத்துப் போயினர். அதுமுதல் மேற்படி குழவிகளும் தாய் தந்தையர் களும் சிரமமற்று வாழ்ந்திருந்தனர். ஓ முனிவர்களே! ஸ்ரீ நாராயண மூர்த்தியினது கிருபையால் இந்த ஜாதகனது விஷயங்களை இன்னும் கூறுவேன் கேட்பீராக எ-று.

(வி-ரை) வறுமை வாய்பட்டு தாங்கொணாத் துன்பத்திலாழ்ந்திருந்த இந்த ஜாதகனையும், இவனது மைந்தர்களையும் ஸ்ரீ தேவியும் ஈசனும் காப் பாற்றினார் என்பது கருத்து. 81

கேளப்பா சந்திரோதய ரேகைமைந்தா
கேவலமாய்க் குபேரனைப்போல் வாழ்ந்தானப்போ
நாளப்பா இவனுக்குத் தாரம்ஒன்று
நலமாக இருபத்தோ ராண்டிலாச்சு

வாளப்பா மைந்தர்களு மிரண்டுபேராம்
வளமாகப் பிறப்பார்காண் மைந்தனுக்கு
ஆளப்பா இவனுக்கே யனேகபாக்கியம்
ஆச்சரியம் வந்ததுவு மருமையாலே.

(இ-ள்) சந்திரோதயரேகை யென்பது தனது கையிலிருக்கும் காரணத்தால் மேற்படி தேவியானவள் கருணைகூர்ந்து இந்த ஜாதகன் குபேரனைப்போன்ற சம்பத்துடையவனுகி வாழ்ந்தான். இதுவன்றி இந்த ஜாதகனுக்கு மனைவி ஒன்று எனவும், 21-ல் விவாகம் நடக்கும் எனவும், அழகிய புத்திரர்கள் இரண்டுபேர் நிலைத்திருப்பார்கள் எனவும், இவனது வாழ்நாளில் இவனை எவரும் கண்டு அதிசயப்படத் தகுந்த மேலான பாக்கியம் கிடைத்தன வென்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தென்னவெனில்? இந்த ஜாதகனுக்கு மனைவி ஒன்று எனவும், ஆயுளுடைய புத்திரர்-2 எனவும், சகல பாக்கியமும் உடையவனுகி வாழ்வான் என்பது கருத்தாகும். 82

அருமையென்ற இவனுடைய யோகவாழ்க்கை
ஆச்சரிய மெத்தவப்பா சொல்லக்கேளு
வருமையென்ற வறுமையெல்லா மோடிப்போச்சு
வளமையாய் இவன்றானும் வாழ்வதாச்சு
பெருமையென்ற பெருமைமெத்த இவன்வாழ்வுத்தான்
பொல்லாத காரியங்கள் செய்யமாட்டான்
விருமையென்ற வருமைபட மயேந்திரயோகம்
விரிவான வஷ்டசித்தும் வசமதாமே.

(இ-ள்) இந்த ஜாதகனது யோகம் வாழ்க்கை முதலிய விசேஷங்கள் இவனது பிற்காலத்தில் எவரும் கண்டு ஆச்சரியப்படும் வண்ணம் வெகு விநோதமாகவே இருக்குமெனவும், இவனுடைய வறுமைத் துன்பங்கள் யாவும் பாந்துபோய் மிக்க மேம்பாடுடையவனுகி வாழ்வான் எனவும், பெருமையிலும் மிக்க பெருமையுடையவனுகவே வாழ்வான் எனவும், தன் வாழ்நாளில் துற்காரியங்கள் என்பதை கிஞ்சிற்றேனும் செய்யக்கூடாதவனுகி சகலத்தையுமுடைய மயேந்திரயோகம் என்பதுடையவனுகி, அஷ்டமாசித்தும் அறிந்த பெரியோனுகி வாழ்வான் எனவுங் கூறுவாயாக எ-று. 83

ஆகுமப்பா இவன்வயதோ ரிருபத்தெட்டில்
அன்பான பிதாவுந்தான் இறப்பான்பாரு
காகுமப்பா இவன்வயது முப்பதுக்குள்
கருணையுள்ள மாதாவு மிறப்பதாகும்
வாகுமப்பா இவன்வயது இருபத்திமூன்றில்
வண்மையுள்ள மைந்தனுக்கே விவாகமாகும்
பாகுமப்பா பராபரனு முமையாள்வாக்கியம்
பண்பாக நடக்குமென்று பகருவீரே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது விசேஷங்களைக் கூறுமிடத்து இந்த ஜாதகனது வயது 28-ல் இவன் பிதா இறந்துபோவான் எனவும், வயது 30-க்குள் இவனது அருமைத் தாயானவள் இறந்துபோவாள் எனவும், வயது 21-ல் விவாகாதி சுபசோபனாதிகள் நடக்கும் எனவும் கூறுக. இவை ஸ்ரீ சர்வேஸ்வரியினது திருவாய்மொழியானதால் தவறாமல் நடக்கும் எனத் திண்ணமாய்க் அறிவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்து என்னவெனில்? 21-ல் கலியாணமும், 28-ல் பிதாவும், 30-ல் தாயும் இறந்துபோவாள் என்பதேயாகும். 84

பகருவேன் இன்னமொரு ரேகைமார்க்கம்
பக்குமாய்ச் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளு
நிகருவே னதினுடைய பெருமையெல்லா
நிச்சயமாய்ச் சொல்லுகிறே னினைவாய்க்கேளு
அகருவே ளுதிபொருள் ரேகையொன்று
அப்பனே யதின்பெருமை யறியச்சொல்வேன்
வகருவேன் வாலைமனோன் மணித்தாய்சொன்ன
வாக்கியத்தின் படிச்சொல்வேன் மைந்தாகேளே.

(இ-ள்) ஓ மானிடர்களே! இன்னும் ஒரு ரேகை உண்டு, அதனது விஷயத்தையும் ஸ்ரீ உலகமாதாவாகிய மனோன்மணித்தாயார் கூறியவண்ணம் உள்ளதை உள்ளவாறே கூறுவேன் கேட்பீராக. ஸ்ரீ சர்வேஸ்வரனது ஆக்கினையால் உண்டாகிய ரேகையினது பலாபலன்களையும், அதனது பெருமை முதலிய யோகபோகங்களையும், சகலரும் அறியும்வண்ணம் கூறுவேன் கவனமாய்க் கேட்பீராக எ-று.

(வி-ரை) இதுவரையில் சந்திரோதய ரேகையினது விஷயங்களைக் கூறிவந்தமையால் இங்கு மற்றொரு ரேகையினது பலாபலன்களைக் கூறுவேன் கேட்பீராக என்றனர். அதனது விவரங்கள் கீழ்வருமாறு. 85

### விற்பன்ன ரேகையின் பலன்

கேளப்பா விர்ப்பன்ன ரேகையொன்று
கேவலமாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
நாளப்பா வங்குஷ்ட விரலிலேதான்
நலமாக இருபுள்ளி இரண்டுகீறு
வாளப்பா வதின்கீழே வைசுவரியரேகை
வண்மையாய் முக்கோண மாயிருக்கும்
வாளப்பா விர்ப்பன்ன ரேகையோகம்
வண்மையாய் நடக்குமதின் பலன்சொல்வேனே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இன்னமொரு ரேகையுண்டு. அதனது விருத்தாந்தங்களையும் கூறுவேன் கேட்பாயாக. மேற்படி ரேகையானது அங்குஷ்ட விரல் எனக்கூறும் சுண்டுவிரலில் இரண்டு கீற்று ரேகையாக

வும், இரண்டு புள்ளிகளாயும் காணப்படும் மேற்படி ரேகைக்குக் கீழ் புறத்தில் ஐஸ்வரிய ரேகை என்பது முக்கோண வடிவமாயிருக்கும். அதன் பெயரே விர்ப்பன்ன ரேகையென்றும் பெயராகும். ஆனதால் அதனது பலாபலன்களைக் கூறுவேன் கேட்பீராக எ-று.

(வி-ரை) விர்ப்பன்ன ரேகை என்பது சுண்டுவிரலில் இரண்டு கீற்று ரேகையாயும், இரண்டு புள்ளியாயும் இருக்குமெனவும், அதற்குக் கீழ் முக்கோணவடிவாய் ஓர் ரேகையிருக்கும் எனவும், அதன்பெயர் ஐஸ்வரிய ரேகை என்னும் பெயருடையதெனவும், இவ்விரண்டும் சேர்ந்தே விர்ப்பன்ன ரேகை என்னும் பெயருடையதெனவுங் கொள்க. 86

சொல்லுவே னிவன்பிறந்த யோகவாழ்க்கை
சுகமுள்ள இவனுடைய திசையுஞ்சொல்வேன்
அல்லுவே னிவன்பிறந்த மனைதான்மைந்தா
அன்பான அசல்வீட்டிற் பிறந்தபாலன்
நல்லுவே னிவன்பிறவி மூன்றுபேராம்
நலமுள்ள பிதாவுக்கிவன் மூத்தபிள்ளை
இல்லுவே னிரண்டு பெண்ணொன்றப்பா
இயல்பாகப் பிறக்குமென்றே சொன்னேனென்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! மேற்கூறிய விர்ப்பன்ன ரேகை என்பது தமது அஸ்தத்தின்கண் அமையப் பிறந்த ஜாதகனது திசை முதலியன வற்றையும், யோகங்களையும் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இவன் பிறந்தது தன் சுயவீடல்லவென்றும், அயல் வீட்டில் பிறந்தான் என்றுங் கூறவேண்டுவதுடன், இவனுடன் பிறந்த பிறவிகள் மொத்தம் மூவர் எனவும், இந்த ஜாதகன் ஒருவனே மூத்தபிள்ளை எனவும் மேற்கூறிய மூன்றினுள் ஆண்பிறவி இரண்டு எனவும், பெண் ஒன்றே சனிக்குமெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் முதல் பிறவியும் இவனுக்குப்பின் 2-ஆணும் 1-பெண்ணும் ஜெனிக்குமென்பது கருத்து. 87

சொன்னப்பா இவன்பிறக்கும் போதுமைந்தா
சொற்பெரிய பிதாவுமவன் வீட்டிலில்லை
அன்னப்பா தன்னுடைய தாய்மாமன்றான்
அன்பாக வன்னேர மிருந்தானங்கே
வன்னப்பா இவன்பிறந்த போதுமாதா
வண்மைமெத்த விசனமுடன் பெற்றாள்பாரு
மன்னப்பா இவன்பிறந்த உடனேகேளு
மாடதுவும் பிதாவினைத்தான் குத்துமன்றே.

(இ-ள்) மேலேகூறிய ஜாதகன் பிறந்த காலத்து அவனது தந்தையானவன் வீட்டில் இல்லையெனவும், இவன் தாயுடன் பிறந்த மாமனே இவன் ஜனித்தகாலத்தில் அவ்வில்லத்தின்கண் இருந்தவன் எனவும், இந்த ஜாதக

னைப் பிரசவிப்பதற்கு இவன் தாயானவள் மிக்க வருத்தத்துடன் பெற்ற னள் எனவும், இந்த ஜாதகன் ஜனித்த சிலகாலத்துக்குள் இவனது பிதாவை மாடானது குத்தி காயத்தை யுண்டுபண்ணும் எனவுங் கூறுவா யாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவதென்னவெனில்? இவன் ஜனித்த சிலகாலத்துக்குள் இவன் பிதாவை மாடு பாய்வதால் கெண்டம் உண்டு என்றும், இவனைப்பெற்ற காலத்து இவனது தாய் பிரசவவேதனை அதிகமாய் அடைந்தாள் என்பதுங் கருத்து. 88

குத்திடவே இவன்பிறந்த நாலாமாண்டில்
குணமுள்ள பிதாவினுக்கே அலைச்சலாகும்
பத்திடவே பாலகன்றான் பிறந்தநாள்தான்
பரியனவே வசுபதியின் முதற்காலப்பா
நத்திடவே திதியேகா தசியதாகும்
நலமாகப் பிறந்திட்ட னுடிச்சொன்னேன்
முத்திடவே இவன்மூன்று நாளின்கெர்ப்பம்
முதற்சாமப் புணர்ச்சியிலே பிண்டமாச்சே.

(இ-ள்) மேற்கூறிய வண்ணம் இவனது பிதாவை மாடானது குத்திப் பாய்வதுடன், இவன் ஜனித்த நான்காம் ஆண்டில் இவனுடைய பிதாவுக்கு மெத்த அலைச்சலும் கஷ்டமும் உண்டாகும் எனவும், இந்த ஜாதகன் பிறந்த காலத்தைக் கூறுமிடத்து ஒன்பதாம் மாதமாகிய மார்கழிமாதமும் ஏகாதசியும் கூடிய நாளில், அசுவினி ஒன்றும்பாதம் உதயமாகப் பிறந்த வன் எனவும் கூறுவதுடன், இவன் தாயானவள் மாதவிடாவாகிய மூன்றாம் நாள் இரவு முதல்சாமத்தில் புணர்ச்சிசெய்ததின் காரணத்தால் கர்ப்பமுண் டாகி ஜனித்தவன் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) மார்கழிமாதம் ஏகாதசியும் அஸ்வனி 1-ஆம் பாதத்தில் பிறந்தான் என்பது கருத்து. 89

பிண்டமடா பாலனிவன் பிறந்ததாலே
பிரியமாய் லக்கினத்திற் செவ்வாய்சுக்கிரன்
அண்டமடா சனியுடனே மூன்றுபேர்கள்
அன்பாக விருந்தார்க ளந்நேரத்தில்
விண்டனடா விர்ப்பனனு யிருந்துவாழ்வான்
விருதான விவன்வயதின் விபரங்கேளு
கண்டமடா இவனுக்கோ ஆறுகண்டம்
கருணையால் வந்ததென்றே கருதிச்சொல்லே.

(இ-ள்) இந்த ஜாதகன் தனது தாய் கற்பத்திலிருந்து பிறந்த காலத்தில் ஜென்ம லக்கினத்தில் செவ்வாயும், சுக்கிரன்-சனி என்னும் இம்மூவரும் இருந்தனர் எனவும், இவ்விதத்தால் இந்த ஜாதகனானவன் தனது வாழ்நாளில் மிக்க விர்ப்பனனாய் வாழ்வானெனவும், இவனது ஆயுள் முடிவுக்குள் ஆறு கெண்டாதி கெண்டங்கள் உண்டாகுமெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இவன் ஜன்ம லக்கினத்தில் சனி-செவ்வாய்-சுக்கிரன் என்னும் மூவரும் நின்றதன் காரணத்தால் வெகு விற்பனனாகி வாழ்வான் என்பது கருத்து. 90

சொல்லவே இவனுக்கு வயதுமைந்தா
சொல்லுகிறே னறுபத்தெட் டாகுமப்பா
நல்லுமேன் இவன்வயது பதின்மூன்றுக்குள்
நலமாக விவாகமது முடியுமன்றே
அல்லுமே வினிவனுக்குப் பிள்ளைநான்காம்
அன்பான ஆணிரண்டு பெண்ணிரண்டு
உல்லுமே வினிவன்மைந்தர் யோகசாலி
உத்தமர்க்கே நல்லிடத்தில் விவாகமாமே.

(இ-ள்) இந்த ஜாதகனது ஆயுள் விவரத்தைக் கூறுவேன் கேட்பீராக. எவ்வளவெனில்? இவனுக்கு தீர்க்க வயது 68-எனக் கூறுவதுடன், இவன் ஜனித்த வயது 13-க்குள் கலியாண சுபசோபனாதிகள் நடக்கும் எனவும் கூறுக. இவனுக்கு உண்டாகும் புத்திர புத்திரிகள் மொத்தம் 4-எனவும், அவற்றுள் ஆண் புத்திரர் 2-எனவும், பெண்கள் 2-எனவுங் கூற வேண்டுவதாகும். இவனது புத்திரர்களோ வெனில்? அளவிறந்த யோக முடையோராகவும், நல்ல மேலான இடத்தில் விவாகம் செய்துக்கொள்வோராகவும் இருப்பார் எனக் கூறுக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனுக்கு வயது 68-எனவும், 2-ஆண்களும், 2-பெண்களும் நிலைத்திருப்பார் எனவும், 13-ல் கலியாண சுபசோபனாதிகள் நடக்கும் என்பதும் கருத்து. 91

ஆகவே இவன்வயது பதினாறுக்குள்
அன்பான பிதாவுந்தான் இறப்பான்பாரு
தாகவே இவன்வய திருபத்தாறில்
தனைப்பெற்ற தாயாருஞ் சாவாள்பாரு
பாகவே பனிமொழியா ளிவன்றேவியாகும்
பைங்கொடியாள் பத்மினிப்பெண் ணாகும்பாரு
ஆகவே ஆச்சரிய முள்ளமைந்தன்
அதிகார முடையபிர பல்லியத்தோரே.

(இ-ள்) இந்த ஜாதகனது வயது 16-க்குள்ளேயே இவனது அன் பார்ந்த பிதாவானவன் இறந்துபோவான் எனவும், வயது 26-ல் இவனைச் சுமந்து பெற்ற தாயானவள் இறந்துபோவாள் எனவும், இந்த ஜாதகனுக்குக் கிடைக்கும் மனைவியானவள் மிக்க அழகுடையவளாயும், பத்தினியாயும் இருப்பாள் எனவும், இந்த ஜாதகனது வாழ்நாளானது எவரும் கண்டு வியக்கத்தக்கதாயும் எவரையும் அதிகாரம் செய்யத்தகுந்த பிரபல்ய முடையவராயும் இருப்பார் எனக் கூறுவாயாக எ-று. 92

30

**சதுர்ப்பந்த ரேகையின் பலன்**

தேறவே சதுர்ப்பந்த ரேகையொன்று
தோன்றுதலைச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
ஆறவே மால்விரலிற் கீழேயப்பா
அன்பான ருத்திரவரை கீழேநிற்கும்
சாறவே சதுர்ப்பந்த ரேகைதானே
சற்சனனாய் இறுகீறு ரெண்டுபுள்ளி
கூறவே திரிகோணத் தூடனேமைந்தா
குணமாக இருக்குமது கூறக்கேளே.

(இ-ள்) ஓ மானிடர்களே! சதுர்ப்பந்தரேகை யென்பதொன்றுள்ளது. ஆதலால், அதனது விருத்தாந்தங்களைக் கூறுவேன் கேட்பீராக. எப்படி யெனில்? மேற்படி ரேகையானது மால்விரல் என்னும் நடுவிரலில் ருத்தி ரவரையாகிய அடிக்கணுவில் கீழ்ப்பக்கம் இருப்பதே சதுர்ப்பந்தரேகை எனப் படும். மேற்படி ரேகையானது எவ்வாறிருக்குமெனின்? இரண்டு கீற்று வடிவமும், இரண்டு புள்ளி வடிவமாய் முக்கோணச்சதுரத்துடன் அடைந் திருக்குமெனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) நடுவிரலின் கீழும் உள்ளங்கைக்கு மேலும் உள்ளகணுவுக்கே ருத்திரவரை எனப்படும். இந்த ரேகையானது இரண்டு ரேகை வடிவ மாயும், இரண்டு புள்ளி வடிவமாயும் இருக்கும் என்றும். அவை முக்கோண வடிவமாய் இருக்கும் எனவுங் கூறியதையறிக விவரம் பின்வருமாறு. 93

கேளப்பா பாஞ்சாலன் நாலாஞ்சாதி
கேவலமாய்க் கரிமுகவன் வர்ணமாகும்
நாளப்பா விகாரமுங் குத்தரூபம்
நலமாக விருக்குமடா நாடிக்கேளு
ஆளப்பா இவன்பிறந்த பிறவியோகம்
அன்பாகச் சொல்லுகிறே னைய்ந்துகேளு
வீளப்பா இல்லாமற் றிசையோகத்தில்
விகற்பமாய் வாழ்ந்திருந்த விபரங்கேளே.

(இ-ள்) இந்த ஜாதகன் பாஞ்சாலதேசத்தோன் எனவும், நான்காம் சாதியாகிய சூத்திரசாதி யெனவுங் கூறுவதுடன், இவனது ரூபமானது (கரிமுகன் ரூபம்) கருத்து நீலமாகிய சொரூபமும், வில்போன்ற கரங்களும், குட்டையான சரீரமும் உடையவன் ஆவான் எனக் கொள்க. ஆனதால் இவனது வரும்வினையாகிய யோகா வயோகங்களையும், எக்காலத்தில் யோகம் உண்டாகும் என்பதையும், எக்காலத்தில் விகற்பமுண்டாகி அலைவர் என் பதை ஆராய்ந்து கூறுவேன் கேட்பீராகவும் எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் ஜனனதேயம் பாஞ்சாலம் எனவும், சூத்திர சாதி என்றும், குட்டையான சரீரமும் நீலவர்ணமும் உடையவன் என்பது இச்செய்யுளின் முக்கிய கருத்தாகும். 94

கேளடா இவன்பிறவி பத்துபேராம்
　　கேவலமாய் ஆணெட்டு பெண்ணிரண்டாம்
வாளடா இவன்ருனும் நாலாம்பேரும்
　　வண்மையாய்ப் பிறந்தனடா பூரந்தன்னில்
நாளடா நன்மையுள்ள மைந்தன்ருனும்
　　நலமான போகவான்ரு னுடிப்பாரு
தாளடா இவன்றனக்குக் குடியூர்மூன்ரும்
　　தாரமிரண் டிவனுக்கு யாகுந்தானே.

(இ-ள்) இந்த ஜாதகனது சகோதர சகோதரிகளைக் கூறுமிடத்து மொத்தம் 10-பேர் எனவும், அவர்களுள் ஆண்பிறவி-8, பெண்பிறவி 2 என்றும் கூறுவதோடு, இக்ஜாதகன் நான்காம் பிறவியெனவும் அறிவாயாக. மற்றும் இந்த ஜாதகன் பூர நக்ஷத்திரத்தில் பிறந்தவன் ஆனதால், எல்லா விதமாகிய நன்மைகளையும் அடையத்தகுந்தவனும், சகலவித யோகங்களையும் உடையவன் ஆவதுடன், இவனுக்கு மனைவிமார் இரண்டு எனவும், இவனது ஆயுள் முடிவுக்குள் மூன்று ஊர்களில் வாசம் செய்யத்தகுந்தவன் எனவும் திண்ணமாய்க் கூறுக எ-று 95

ஆகுமப்பா விவாகமது இரண்டதாகும்
　　அன்பாக முடியுமென் ருய்ந்துசொல்லு
வாகுமப்பா இவனுக்கு பிள்ளையாரும்
　　வண்மையாய்ப் பிறக்குமென்றே வசனித்தேன்நான்
பாகுமப்பா பலபொருள்கள் சேரும்யோகம்
　　பாங்கான இவன்பெருமை பகரக்கேளு
ஆகுமப்பா இவன்ருனு மேழாங்கெர்ப்பம்
　　ஆச்சரிய முள்ளமைந்த னறிவுகூறே.

(இ-ள்) மேற்கூறிய செய்யுளின்படி இந்த ஜாதகனுக்கு விவாகம் இரண்டு கட்டாயமாய் முடியுமென்று கூறுவதுடன், இவனுக்குண்டாகும் புத்திரர்கள் மொத்தம் 6-பேர் என நிச்சயமாய்க் கூறவேண்டுவதாகும். இவனது வாழ்நாட்களில் பற்பல பொருள்களை சேர்த்து சகல யோகங்களையும் அனுபவிக்கத் தகுந்தவன் எனக் கூறுவதோடு, இந்த ஜாதகனது பெருமை முதலியனவற்றையும் கூறவேன் கேட்பீராக. மற்றும் இந்த ஜாதகன் தாயானவள் மாதவிடாவாகிய 7-ஆம் நாள் கர்ப்பந்தரித்தவள் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் ஏழாம் கர்ப்பம் என்னும் விஷயத்தைக் கீழ் வரும் செய்யுளால் அறிக. 96

கூறுகிறே னிவன்மாதா தலைகுளித்து
　　குறிப்பாகப் புருஷனுடன் குலாவியேதான்
தீறுகிறேன் மாமிசபட் சணங்கள்செய்து
　　திறமாகத் தென்முகமாய்ப் புணர்ச்சியானு

மாறுகிறேன் முதற்சாம நித்திரைசெய்து
மருவியவ ரிருபேரும் லீலையானார்
சாறுகிறே லக்கினத்திற் சுங்கன்புந்தி
சற்சனராய் சனிமூவ ரிருந்திட்டாரே.

(இ-ள்) இந்த ஜாதகனின் தாயானவள் மாதவிடாயாகி ஸ்நானம்செய்து (7-ஆம் நாள்) தனது புருஷனுடன் இன்பவார்த்தைகளால் குலாவி சந்தோஷத்துடன் மாமிசாதிவகைகளைப் புசித்து உறங்கிய முதல் சாமத்தில் தெற்கு முகமாய் நோக்கி லீலாவினோதம் என்னும் புணர்ச்சிசெய்த காலத்தில் இந்த ஜாதகன் ஜனித்தான். ஆனதால், இவன் பிறந்த காலத்து தான் ஜெனித்த லக்கினத்தில சுக்கிரன் சனி புதன் என்னும் மூவரும் பலம் பெற்று நின்றனர் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவன் ஜனித்த லக்கினத்தில் சனி புதன் சுக்கிரன் என்னும் மூவர் இருந்தனர் என்றது அறியத்தகுந்தது. 97

இருந்திடவே இவன்பிறந்த மனைதான்மைந்தா
இயல்பாக வடவாச லொற்றைக்கூரை
பொருந்திடவே இவன்பிறக்கும் போதுமைந்தா
போதமுள்ள பிதாவுமவன் வீட்டிலில்லை
அறிந்திடவே யாச்சரிய முள்ளபாலன்
அன்பான கர்க்கடக லக்கினத்தில்வந்தான்
வறிந்திடவே பூரநா ளிரண்டாங்காலம்
வண்மையுடன் பிறந்தனடா மைந்தன்றனே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனித்த வீட்டினது லக்ஷணங்களைக் கூறுமிடத்து ஒற்றை வாசலமைந்த கூரைவீட்டில் ஜனித்தவன் எனவும், இவன் ஜனித்தகாலத்து இவன் பிதாவானவன் இவனது வீட்டிலில்லாது வெளியிற் சென்றிருந்தனன் எனவும், எவரும் இந்த ஜாதகனைக்கண்டு ஆச்சரியப்படத்தகுந்தவன் எனவும், தான் ஜனித்தது பூரநக்ஷத்திரம் இரண்டாம் பாதத்தில் கடகலக்கினம் உதயமாக ஜனித்தான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) முன்கூறிய 95-ஆம் செய்யுளில் பூரநக்ஷத்திரத்தில் பிறந்தவன் என்று மாத்திரம் குறிப்பிட்டனரே ஒழிய, எத்தனையாவது பாதம் எனக் குறிப்பிடவில்லை. ஆதலால் இச்செய்யுளில் பூரம் இரண்டாம் பாதத்தில் பிறந்தான் என்றது, அறியத்தகுந்தது. 98

தானமெனு மிவனுக்கே வயதுமைந்தா
தன்மையா யெழுபத்தைந் தாகும்பாரும்
ஞானமெனு மிவனுக்குக் கண்டமெட்டு
நலமாக நடக்குமென நன்மைகூறு
வானமெனும் வண்மையுள்ள மைந்தனுக்கும்
வகுத்துரைப்பே னிவனுடைய வளமையெல்லாம்
கானமெனுங் கருணைபெற்ற மைந்தனப்பா
கடாட்சிக்கப் பிறந்தான்காண் உமையாற்றனே.

(இ-ள்) இந்த ஜாதகனது வயது விவரங்களைக் கூறுமிடத்து இந்த ஜாதகனுக்கு வயது 75-எனவும், இவனது ஆயுள் முடிவதற்குள் கெண்டாதி கெண்டங்கள்-8 உண்டாகும் எனவும், மேற்படி கெண்டாதி கெண்டங்கள் யாவும் நீங்கி நன்மையையே அடைவான் என்றும், இப்பூமியில் இச்சாதகன் மிக்க சுகம் மேவிட்டவன் எனவும் கூறுக. எதனாலெனில்? அதன் விருத்தாந்தங்களைக் கூறுவேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகன் ஸ்ரீ உமாதேவியாருடைய கடாக்ஷத்தாலும், கருணையாலும் பிறந்தவன் எனக் கூறுவாயாக எ-று. 99

உமையென்ற இவன்றானு முன்னுடன்னில்
உத்தமனு நந்தியைத்தான் பூசைசெய்து
அமையென்ற வனேகவர முத்திபெற்றான்
அதனாலே நிதிகிடைக்க யோகம்பெற்றான்
வமையென்ற இவன்வயது முப்பத்தெட்டில்
வாகான நிதிகிடைக்கும் வகையதாக
பமையென்ற இருதாரம் விவாகஞ்செய்வான்
பாலரைப்பெற் றெடுத்திடுவார் பாருபாரே.

(இ-ள்) எக்காரணத்தால் உமையவளுடைய கடாக்ஷம்பெறப் பிறந்தான் எனில்? இந்த ஜாதகனது முன் ஜன்மத்தில் இந்த உத்தம புருஷனானவன் நந்திதேவரைப் பூஜித்துவந்து! அநேக வரங்களையும், நிதி, செல்வம் முதலியன உண்டாக அருள்பெற்று முத்திபெற்றவன். ஆதலால் இந்த ஜாதகனது வயது 38-ல் சகல நிதியையும் உடையவனாகி இரண்டு மனைவிகளை அடைந்து அநேக புத்திரர்களையும் பெற்றெடுத்தான் எனவுங் கூறுவாயாக எ-று. 100

ஐந்தாவது காண்டம் முற்றிற்று.

---

ஆக காண்டம் 5-க்கு பாடல்-456.

---

# ஆறுவது காண்டம்

## சசிவர்னன் சம்புராதிரேகையின் பலன்

பாரப்பா சசிவர்னஞ் சம்புராதி
பாங்கான அணிவிரலி லிருக்கும்பாரு
காரப்பா இருகூறு மைந்துபுள்ளி
கருணையாற் சதுர்க்கோண மிருக்கும்பாரு
சாரப்பா சற்சனமா யைந்துரேகை
சார்வாக இருக்குமப்பா மைந்தாகேளு
கூரப்பா இவன்கையி லிருக்குமாகில்
கூறுகிறே னிவன்பெருமை கூறக்கேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! சசிவர்ணசம்புராதிரேகை யென்று ஒன்றுண்டு. அவை எங்ஙனமிருக்குமெனின்? அணிவிரல் என்னும் மோதிர விரலில் இரண்டு கீற்றுரேகைகளும் ஐந்து புள்ளி ரேகைகளுமாகி, சதுர் கோணம் என்னும் நாற்கோண வடிவமாய் இருப்பதுடன் மேற்படி விரலிலேயே ஐந்து ரேகைகளும் ஓர் யிடத்தில் அமைந்திருக்கும் எனவும் கூறுவாயாக. இவ்வாறான ரேகையானது இவனது அஸ்தத்தின்கண் அமைந்திருக்குமேயானால் இந்த ஜாதகனுடைய யோகம் முதலிய பெருமைகளைக் கூறுவேன் கேட்பாயாக எ-று. 1

கேளடா இவன்பிறவி யோகம்வாழ்வு
கேவலமாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
நாளடா இவன்பிறந்த மனைதான்மைந்தா
நலமான கீழ்வாசல் மனைதானாகும்
ஆளடா ஒத்தநல்ல கூரையாகும்
அன்பான பாலகனுங் கன்னிமூலை
வீளடா இல்லாமல் பிறந்தான்மைந்தன்
விபரமதைச் சொல்லுகிறேன் வியந்துகேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகனது யோகம் வாழ்வு முதலிய விசேஷங்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகன் பிறந்த மனையானது கீழ்வாசல் உடைய வீடு எனவும், கூரைவீடு எனவுங் கூறுவதுடன், மேற்படி இல்லத்தின்கண் கன்னி மூலை என்னும் தென்மேற்கு திக்கில் பிறந்தவன் எனவும், இவன் பிறந்த காலத்து எவ்வித உதவியும் இன்றி சுகத்துடன் பிறந்தான் எனவும் கூறுக. அவற்றின் விருத்தாந்தங்களைக் கூறுவேன் கேட்பாயாக எ-று. 2

கேளப்பா இவன்பிறந்தான் மதியின்வாரம்
கேவலமாய் லக்கினத்தில் வியாழன்மைந்தா
வாளப்பா இவன்பிறக்கும் போதிற்றானும்
வண்மையா யந்நேரம் பெண்கள்மூன்றும்

தாளப்பா இவன்பிறக்கும் போதிலன்று
தன்மையுள்ள பிதாவுந்தான் வீட்டிலில்லை
ஆளப்பா வாச்சரியம் பிறந்தபாலன்
ஆராலும் இவனைவெல்ல முடியாதன்றே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்தது மதிவாரம் என்னும் திங்கட்கிழமை எனவும், ஜென்ம லக்கினத்தில் வியாழன் என்னும் குரு இருந்தான் எனவும் இவன் ஜனன காலத்தில் இவனது தாயுடன் மூன்று பெண்கள் இருந்தனர் எனவும், ஜனனகாலப்போது இவனது தந்தை இவன் வீட்டில் இல்லை எனவும், எவரும் ஆச்சரியப்படத் தகுந்தவன் எனவும், இவனை வெல்ல எவராலும் முடியாதெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவனது ஜனனவாரம் திங்கள் எனக் கூறி னோயன்றி, வேறு நக்ஷத்திரம் திதி முதலியவற்றைக் கூறவில்லை. ஆதலால் அதன் விவரம் கீழ் வருமாறு. 3

அன்றெனவே இவன்பிறந்தான் சித்திரைமாதம்
அன்பான பௌரணையு மதியின்வாரம்
நன்றெனவே இவன்பிறவி ஏழுபேராம்
நலமுள்ள ஆண்நாலு பெண்கள்மூன்று
வின்றெனவே இவன்றானு நாலாம்பேராம்
விகற்பமுள்ள மைந்தனிவ னேழாங்கெர்ப்பம்
சென்றெனவே இவனுடைய செயல்தான்மைந்தா
செம்மையுள்ள மைந்தனடா திடவான்றானே.

(இ-ள்) இந்த ஜாதகன் பிறந்த காலத்தைக் குறமிட்டது, சித்திரை மாதமும் பௌரணையுங்கூடிய திங்கட்கிழமையில் ஜனித்தான் எனக் கூறுவதுடன், இவனுடன் பிறந்தோர் மொத்தம் 7-பேர் எனவும், அவற்றுள் நான்கு ஆணும், மூன்று பெண்ணும் ஆகுமெனவும், அவற்றுள் இந்த ஜாதகன் நான்காம் பிறவி எனவுங் கூறவேண்டுவதாகும். மேலும் இந்த ஜாதகன் மாதாவானவள் மாதவிடாயாகி ஸ்நானம் செய்த ஏழாம்நாள் கெர்ப்பம் தரித்தாள் எனவும், இவனது வருநாளின் வாழ்க்கையானது மிக்க பிரமாதமானதாய் இருக்குமெனவும், மேலான வாழ்க்கையையே நடத்தத் தகுந்தவன் எனவும், திறமையுடையவனும் ஆவான் எனக் கூறு வாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இவன் ஜனித்தது சித்திரை எனவும், பௌர்ணமி எனவும், திங்கட்கிழமை எனவுங் கூறியதுடன், இந்த ஜாதகன் நான்காம் பிறவி எனக் கூறியது கவனிக்கத் தக்கதாகும். 4

தானடா இவனல்ல சாஸ்திரவாதி
தருவான வஷ்டசித்துங் கைக்குள்ளாகும்
வானடா வையகத்தி லிவனைப்போலே
வரிசையுள்ள பாலகன்றான் யோகமெத்த

தானடா சற்சனனுஞ் சமர்த்தனுவன்
　　தயவுள்ள சிவபத்த னுரும்பாரு
ஊனடா இவன்வயது தொண்ணூற்ருறு
　　உத்தமனுந் தவசியாய்ப் போவானன்றே.

(இ-ள்) இந்த ஜாதகனது தன்மை முதலியவற்றைக் கூறுமிடத்து இவன் சகல சாஸ்திரங்களிலும் வல்லவனுயும், அஷ்டமாசித்தையும் அறிந்தவனுயும், இப்பூமியின்கண் எவரும் இணைசொல்லப்படமாட்டாத மேம்பாடு உடையவனுகி நாளுக்குநாள் யோகம் முதலியவற்றில் சிறப்புடையவனுய் சற்குணமுடையவனும், சமர்த்துடையவனும், தயவுடையவனும், சிவபிரான் மீது அன்புடையவனும், இந்த ஜாதகனுக்கு வயது-96 எனவும், தன் வாழ்நாளில் தவசியாய்ப் போவான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் வயது 96 என்றும், சிவ கடாக்ஷமும் சாஸ்திரவல்லவனும் ஆவன் என்பது கருத்து. 5

அன்றெனவே இவன்வயது பதினேழுக்குள்
　　அன்பான பிதாவுந்தா னிறப்பானப்பா
இன்றெனவே இவன்வயது முப்பத்தாறில்
　　இயல்பான மாதாவும் இறப்பதாகும்
குன்றெனவே குவலயத்தி லிவனைப்போலே
　　குணமுள்ள மைந்தனில்லை கூறினேம்பார்
நன்றெனவே நான்முகனுல் விதித்தபடியப்பா
　　நன்மையுடன் முடியுமென்றே நான்சொன்னேனே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனனுதி வயது 17-க்குள்ளேயே இவனது பிதா இறந்து போவான் எனவும், வயது 36-ல் தனது அன்பும் அழகும் வாய்ந்த தாயானவள் இறந்து போவாள் என்றும், இவ்வுலகின்கண் இவனைப் போன்ற மைந்தர்கள் வேறு எவரும் இல்லையெனவும், இவை நான்முகனுகிய பிரம்மதேவன் விதித்த கட்டளைபாகையால் இவை யாவும் உண்மையாயும், நன்மையாயும் முடியுமென திண்ணமாய்க் கூறுக எ-று.

(வி-ரை) இச்சாதகன் தபசியாய்ப் போவான் என்றமையால், இவனது யோகபாகங்களை கூறவில்லை. மற்றும் வயது முதலியவற்றைத் தெளிவாய்க் கூறியதை யறிக. 6

கார்மேகவருணவிந்தை ரேகையின் பலன்

சொன்னனப்பா இன்னமொரு ரேகைதானும்
　　சொல்லுகிறேன் மைந்தனே துரிதமாக
வன்னப்பா சிராக்கினியு முள்ளரேகை
　　வண்மையாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
அன்னப்பா ஐஸ்வரிய முள்ளரேகை
　　அன்பான உமையவளும் மருளிச்செய்வாள்
கன்னனப்பா கார்மேக வர்னவிந்தம்
　　காசினியிற் காண்கிறது கனத்ததாமே.

(இ-ள்) ஓ தேவர்களே! இன்னுமொரு ரேகையுள்ளன, அதன் விவரத்தையும் கூறுவேன். எவ்வாறெனின்? மேற்சொன்ன ரேகையானது வச்சிராக்கினிரேகை யாதலால் அதன் விவரம் சொல்லுவேன் கேட்பாயாக. எவ்விதமெனின்? இந்த ரேகை யுடையவனுக்குச் சகல அயிஸ்வர்யத்தையும் ஸ்ரீஉமாமயேஸ்வரியானவள் அருளிச்செய்வாள் எனவும், இவ்வாறு கார்மேகவர்ணவிந்தரேகை என்பது அமைவது மிக்க கடினம் எனவும், அவ்வாறு அமையப்பெற்றவர்கள் சகல சௌபாக்கியங்களையும் உடையவர் எனக் கூறுவாயாக எ-று. 7

கனத்ததொரு வருணவிந்தம் பாஞ்சாலித்தான்
காரணமாய் ஸ்திரீபுருஷ னிரண்டுரேகை
வனத்ததோ ராள்காட்டி விரலிலேதான்
வாகான மகுடத்தி லிண்டுகிறு
தனித்ததொரு மகுடத்தின் கீழேமைந்தா
தாரணமாய்ச் சக்கரம்போ லிருக்கும்பாரு
பனத்ததொரு வதின்கீழே திரிகோணமப்பா
பாராளக்காட் டும்விரலிற் காணும்பாரே.

(இ-ள்) மேலே சொன்ன ரேகையினது விவரங்களைக் கூறுமிடத்து மேற்படி வருணவிந்த பாஞ்சாலிரேகை யென்பது ஸ்திரீரேகை எனவும், புருஷரேகை எனவுங் கூறப்படுவதாகும். மேற்படி ரேகையானது ஆள்காட்டிவிரல் என்னும் விரலின் கீழ்க்கணுவில் இரண்டுகீற்று ரேகைகளும், மேற்படி ரேகைக்கு கீழ்சக்கரம்போன்ற ரேகையும், மேற்படி ரேகைக்கு கீழ்பக்கத்தில் திரிகோண வடிவமாய், மேற்படி ஆள்காட்டி விரலிலேயே அமைந்திருக்குமெனவும் கூறுக. எ-று.

(வி-ரை) மேற்கூறிய பாஞ்சாலி வருணவிந்தரேகை என்பது ஆள்காட்டி விரலின்கீழ் கணுவிலும், கணுவின் கடைசியிலும் அமைந்திருக்கும் என்பது கருத்து. 8

காணுகின்ற சக்கரமு மூகிலுங்கூடி
காரணமா யிருக்குமது மைந்தாகேளு
தோணுகின்ற மயேந்திரம் ஏறிநிற்கும்
தோன்றுதலே இதன்பெருமை சொல்லக்கேளு
ஆணுகின்ற யிவன்பிறந்த யோகவாழ்க்கை
ஆச்சரியம் சொல்லுகிறே னன்பாய்க்கேளு
வாணுகின்ற யிவன்மாதா ஆறுமாதம்
மங்கையிவள் பெருமைதனை வழுத்தக்கேளே.

(இ-ள்) மேலேசொன்ன வருணவிந்தரேகை என்பது சக்கரம்போன்று ஓர் வடிவமாயும், முக்கோண வடிவமாய் ஒன்றாக மயேந்திரமாகிய ஆள்காட்டி விரலில் ஏறிச்செல்லும் எனவும் கூறவேண்டுவதால், இந்த ஜாதகனது யோக வாழ்க்கை முதலிய பெருமைகளைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. எப்படியெனில்? இவனது தாய் விஷயமானது மாதம் 6-க்குள் எவரும் ஆச்சரியப்படும்படியிருக்கும் ஆனதால் இவனது தாயின் விஷயத்தையும் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) மேற்படி ரேகையானது இரண்டுவிதமாய் இருக்குமெனவும், உள்ளங்கையினின்று நடுவிரலில் ஏறிச்செல்லும் தன்மை உடையதெனவுங் கொள்க. 9

கேளடா யிவன்மாதா விவாகமில்லை
கேவலமாய்த் தாய்தந்தை சுற்றமற்றும்
வாளடா மனையுமில்லை மனிதரில்லை
மங்கையவள் வறுமைகொண்டு மறையோன்வீட்டில்
நாளடா வேதியற்குப் பணிவிடைசெய்து
நலமாகத் தொழில்செய்து நடக்குங்காலம்
ஆளடா வாச்சரிய மிவளைப்பெற்ற
ஆரணங்கு ருதுவாகி வாழுங்காலே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகனது தாய்க்கு விவாகம் இல்லை எனவும், தாய் தந்தை முதலிய சுற்றத்தாரும் இல்லை எனவும், தனக்கு சொந்தமாகிய வீடும், உறவினர் முதலியவர்கள் இல்லாதவளாய் வெறுப்பு வறுமை முதலியவைகளுள்ளவளாய், ஓர் பிராமணன் வீட்டில் வேலை செய்துகொண் டிருப்பவளாகும். இவ்வாறு இந்த ஜாதகனது தாயானவள் மேற்படி பிராமணனுக்குச் சகல பணிவிடைகளும் நடத்தி தொழில் செய்துக் கொண்டிருக்கும்போது இந்த பெண்ணானவள் ருதுவாகி இருந்தாள் எனக் கூறுக எ-று. 10

வாழுகின்ற நாளையிலே மறையோன்றானும்
வண்மையாய் முற்சனனம் நந்தியாகும்
ஆழுகின்ற மறையவனுஞ் சாஸ்திரவாதி
அன்பான ஸ்திரீயுடனே சேரவேண்டி
நாழுகின்ற லக்கினமு நாளும்பார்த்து
நலமான நட்சத்திர வாரம்பார்த்து
தாழுகின்ற தட்சணமே கூடவேண்டி
தண்மையா யெண்ணியிவன் கூடுங்காலே.

(இ-ள்) மேற்சொல்லிய வண்ணம் பணிவிடை செய்துக்கொண் டிருக்கும்போது, முன் ஜன்மத்தில் நந்தியாய் இருந்த மேற்சொன்ன பிராமணன், தனது குலபத்தினியிடம் நல்ல முகூர்த்தகாலத்தில் புணர்ச்சிசெய்ய வேண்டும் என்னும் கருத்துடையவனாய், வாரம், லக்கினம், திதி, நக்ஷத்திரம், முதலிய சுத்தமானதினம் பார்த்து அக்காலத்திலேயே தன் மனைவியுடன் கூட வேண்டும் என்னும் விருப்புற்றவனாய், மேற்சொன்ன சாஸ்திரீக ஞானமுடைய பிராமணன் மேற்படி நாளை எதிர்பார்த்துக்கொண் டிருந்தான் எனக் கூறுக எ-று. 11

கூடவப்பா நாள்வரும்போ தவன்பெண்சாதி
கூர்மையுள்ள மாதவள்தா னில்லறத்திலில்லை
நாடப்பா நாயகியு மில்லாவேளை
நலமான இந்தநல்ல மங்கையைத்தான்

தாடப்பா பிராமணனு மாதுமாகத்
　　தன்மையுட னந்நேரம் கூடினார்பார்
வீடப்பா விமலர்தனை நினைத்துபார்ப்பான்
　　வெகுலீலை செய்துவிந்தை விட்டிட்டாரே.

(இ-ள்) மேற்சொல்லிய வண்ணம் முகூர்த்தம்வைத்து எதிர் பார்த்திருந்தபோது, மேற்படி நாளும் கோளும் கூடியவன்று, இவன் மனைவியானவள் வீட்டில் இல்லை. தனது மனைவியானவள் வீட்டில் இல்லாக் குறையால் தன்னிடம் பணிவிடை செய்துகொண்டிருந்த இந்த ஜாதகனுடைய தாயும், மேற்படி பிராமணனும் கூடும்படி நேர்ந்தது. மேற்படி பிராமணனே ஸ்ரீ சிவபிரானை நினைத்து இந்த ஜாதகனுடைய தாயிடம் வெகுவாய் லீலா விநோதங்கள் செய்து முடித்தான் எ-று. 12

விட்டிடவே யிவளுக்குக் கெற்பமாச்சு
　　வியாப்ப திகளுண்டாய் படைத்தாரீசன்
தொட்டிடவே யிவளுக்குக் கெற்பமுத்தி
　　தோன்றுதலை முன்சனனஞ் சொல்லுவேன்கேள்
பட்டிடவே பால்மொழி தங்கையப்பா
　　பாங்கான தோழியிவள் மங்கையாகும்
விட்டிடவே முற்சனன சாபத்தாலே
　　விண்ணைவிட்டுப் புவியில்வந்தாள் மங்கைதானே.

(இ-ள்) மேற்கூறிய வண்ணம் பிராமணனும் இவனுடைய தாயும் கூடிக் கலந்த காரணத்தால், இவன் தாய்க்கு கெற்பமுண்டானதென்றும், அக்கெற்பத்தில் உதித்தவனே இந்த ஜாதகன் என்றும் கூறுக. இவ்வாறு நாளுக்கு நாள் கெற்பம் வளர்ந்துவந்தன. ஆனதால் இவளுடைய முன் ஜனனத்தின் விசேஷத்தைக் கூறுவேன் கேட்பாயாக. இந்த ஜாதகனின் தாயானவள் தனது முன் ஜன்மத்தில் ஸ்ரீமகாவிஷ்ணுவின் தங்கையாகிய கங்காதேவிக்குத் தோழியாய் இருந்தவள் ஆதலாலும், அச்சென்மத்தில் கிடைத்த சாபத்தின் பயனாய் மேற்படி விண்ணுலகைவிட்டு இம்மண்ணுலகில் மானிட ஸ்திரீயாய் பிறந்தாள் என்றறிவாயாக எ-று. 13

மங்கையிவள் தன்வயிற்றிற் கஞ்சன்பாலன்
　　மகத்துவமாய்ப் பிறப்பனடா சிசுபாலன்றுன்
தங்கையிவ ளதிகமடா யோகசாலி
　　தாரணியிற் குபேரனைப்போல் வாழ்வாள்மங்கை
அங்கையிவள் மைந்தனைத்தான் பெற்றபோது
　　ஆச்சரிய முள்ளவளாம் ஆய்ந்துகேளு
நங்கையிவள் பெற்றெடுத்த மைந்தன்தானும்
　　நலமான பிள்ளையென்று நாடிச்சொல்லே.

(இ-ள்) இவ்வித காரணத்தாலேயே இவளின் வயிற்றில் கஞ்சன் மைந்தனுக்கொத்தவனும், சிசுபாலனுக்குத் தக்கவனுமாகிய இப்பாலன் பிறந்து மிக்க யோகமுடையவளாயும் குபேரனைப்போன்ற சம்பத்துடையவளாயும்

வாழ்வாள் எனக் கூறலாம். இதுவன்றி, இந்த ஜாதகனை இவள் பெற்ற போது எவரும் கண்டு வியப்படையத் தகுந்ததாயும், இப்பிள்ளையானது சகல நன்மையும் பொருந்தியவன் ஆகுமெனக் கூறவேண்டியதாகிறது எ-று.

சொல்லுகிறே னிவன்பிறந்த இடந்தான்மைந்தா
　　சொற்பெரிய வாற்றருகின் மங்கைதானும்
நல்லுவே னிவள்தானுங் கீரைகிள்ளி
　　நலமாகக் கொண்டுவந் தருந்தவேண்டி
அல்லுவே னுதித்த னுதையநேரம்
　　அழகான மங்கையிவள் வேதனையேபட்டு
உல்லுவே னுத்தமியு மைந்தனைத்தான்
　　உத்தமியு மாற்றருகில் பெற்றதன்றே.

(இ-ள்) ஓ மானிடர்களே! இவன் பிறந்த இடத்தினது விவரத்தைச் சொல்லுகிறேன் கேட்பீராக. எப்படியெனில்? இந்த ஜாதகனுடைய தாயானவள் ஓர் ஆற்றங்கரையின் அருகில் கீரை முதலியவற்றைப் பறித்து வந்து சமைத்து புசிக்க விருப்பமுடையவளாய், சூரியோதய நேரத்தில் அவ்விடம் சென்றுகொண்டிருக்கும் சமயத்தில், கெர்ப்ப வேதனைப்பட்டு மேற்படி ஆற்றின்கரை அருகிலேயே இவனைப் பெற்றாள் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் ஆற்றங்கரையருகில் பிறந்தவன் எனக் கூறப்பட்டது. மற்றும் மேற்சொன்ன 13-14-ஆம் செய்யுட்களில் குபேரசம்பத்தாய் வாழ்வார் என்று கூறிய விருத்தாந்தங்களைக் கீழ் வருவனவற்றால் அறிக. 15

அன்றெனவே யிவள்தானுங் கங்கைக்கப்பா
　　அன்பான தோழியிவ ளாகுமுன்பு
நன்றெனவே யிவன்றானும் வருணன்சீடன்
　　நலமாக வனேகநாள் விடையேசெய்து
குன்றெனவே குவலயத்திற் கஞ்சனுக்குக்
　　குணமாகப் பிறந்ததிவன் சிசுபாலன்றான்
சென்றெனவே யிரண்டாவ திந்தஜென்மம்
　　செப்புகிறேன் வேதியர்க்கே தரித்தான்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகனது தாயானவள் முன்ஜன்மத்தில் கங்காதேவிக்குப் பணிவிடைசெய்த தோழி எனவும், இந்த ஜாதகனே அருணன் என்னும் ஈசனுக்கு அனேகநாள் தொண்டுசெய்தவன் எனவும், கஞ்சனுடைய திருச்செல்வனாகிய சிசுபாலனுக்குச் சமமானவன் எனவும், இரண்டாவது ஜென்மமாய் மேற்சொன்ன வேதியனுக்கு பிள்ளையாய் இப் பூமியில் பிறந்தான் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) மூன் செய்யுளால் இந்த ஜாதகனுடைய தாயானவள் தேவலோகத்தில் கங்கைக்குப் பணிபெண் எனவும், இந்த ஜாதகனே கஞ்சன் மைந்தன் சிசுபாலனையொத்தவன் என்று கூறியதையே இச்செய்யுளாலும் விரித்துக்கூறப்பட்டன. இவை இரண்டாம்ஜன்மம் என்பது அறியத்தக்கது.

பாரப்பா இவன்பிறக்கும் போதுமைந்தா
பக்கமதி லந்நேர மொருவரில்லை
காரப்பா வத்தலத்தின் னேரந்தான்
கனமாக வானோரு முனிவோரெல்லாம்
சீரப்பா யிவன்பிறக்கும் போதிலேதான்
சிவசிவா சிவகலையுந் திரமதாச்சு
ஆரப்பா வாயுசுதா னுள்ளமைந்தன்
அன்பான விவனதிக யோகவானே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகன் பிறந்த காலத்து இவன் தாயுடன் ஒருவரும் இல்லை யெனவும், மற்றும் இவன் பிறந்த தலத்தின்கண் இவன் பிறந்தகாலத்தில் வானோர் முனிவோர் முதலியவர்கள் சிவசிவா என்று ஆரவாரித்தார்கள் என்றும், இந்த ஜாதகனனவன் மிகுந்த ஆயுள் உள்ளவனும், அமோகமான யோகமும் உடையவன் ஆவன் எனக் கூறுவாயாக எ-று. 17

யோகமப்பா விவன்பிறந்த போதிலேதான்
ஓகோகோ அன்னேரம் மாதாவுக்கு
வாகமப்பா ஆயாசங் களையுமாகி
வண்மையுள்ள குழந்தையது அழுகுங்காலை
ஆகமப்பா ஆயாசங் களையுந்தீர
அந்நேர நாகமது குடைபிடிக்க
பாகமப்பா பாம்பதுவுங் குடைபிடித்து
பாலகனைக் காத்ததனற் படாமற்றானே.

(இ-ள்) யோக முதலியன பிரபலமாயுண்டாகும் ஆயினும், இந்த ஜாதகன் பிறந்தகாலத்து விசேஷங்களைக் கூறுமிடத்து இந்த ஜாதகன் பிறந்தகாலத்தில் இவன் தாய்க்கு மிக்க ஆயாசமும் களைப்பும் உண்டாகிக் கீழேவிழவும், இந்த ஜாதகனும் வெகுவாய் அழுது களைத்துவிட, அக்காலம் நாகராஜனே தனது படத்தால் குடைபிடிப்பதுபோல் நிழலைக்கொடுத்து இவர்கள்மீது அனல்படாவண்ணம் நிழல்கொடுத்துக் காப்பாற்றினான் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் பிறந்த கால லக்ஷணங்களைக் கூறப்பட்டன. மற்றும் உள்ள விசேஷங்கள் பின்வருமாறு. 18

தானென்ற வன்னேர மாதுதானும்
தயவாக வெழுந்திருந்து பார்க்கும்போது
வானென்ற குழவியைத்தா னரவம்வந்து
வண்மையுடன் குடைபிடித்து நிற்கக்கண்டு
ஊனென்ற மங்கையவ ளலறிவீழ்ந்தாள்
உற்றதொரு குழவிமேற் பாம்புகண்டு
ஆனென்ற மங்கைமுகம் பார்த்துச்சர்ப்பம்
ஆச்சரியம் சொல்லுகின்ற வறிவுகேளே.



(இ-ள்) மேற்கூறிய வண்ணம் இந்த ஜாதகனுக்கு மேற்படி நாகமானது குடைபிடித்துக்கொண்டு இருக்கையில், இவன் தாயானவள் மூர்ச்சைத் தெளிந்து எழுந்து பார்க்கும்போது தன்னுடைய குழவியை பாம்பானது சுற்றிக்கொண்டிருக்கவும், நாகராஜன் குடைபிடித்துக்கொண்டு இருப்பதை பார்த்தவுடன் அலறி வீழ்ந்துவிட்டாள். இதனைக்கண்ட பாம்பானது இந்த ஜாதகன் தாயினுடைய முகத்தை நோக்கி மேற்படி சர்ப்பமானது ஓ மாதே உங்களது விஷயமானது மிக்க ஆச்சர்யமானது. ஆனதால், அந்த விருத் தாந்தம் சொல்லுகிறேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் தவப்புத்திரன் எனவும், இதனுலேயே நாகமானது காப்பாற்றியதெனவுங் கூறவேண்டியதாகிறது விவரம் கீழ் வருமாறு. 19

கேட்கவே பெண்ணரசே மாதேகேளு
கேவலமாய் முன்பிறப்பின் செய்தியெல்லாம்
வாட்கவே யுன்னுடைய ஜனனவாழ்க்கை
வண்மையாய்ப் பிறந்திட்ட வரலாறுசொல்வேன்
ஆட்கவே நீதானுங் கங்கைதோழி
ஆரணங்கே உன்னுடைய வதிசயங்கேள்
தாட்கவே நீசெய்த தவத்தினாலே
தனம்பெற்ற மாதரசே தயவாய்க்கேளே.

(இ-ள்) ஓ பெண்பாவாய்! உங்களது முன் ஜனனச்செய்தி விசேஷங் களையும், ஜனன வாழ்க்கையின் குணகுணங்களையும், இனிமேல் வரப் போகும் வருங்கால குணகுணங்களையும் கூறுவேன் கவனிப்பாயாக. உன் விஷயமானது மிக்க அதிசயமுடையதாகும். எப்படியெனில்? நீ உனது முன் ஜன்மத்தில் கங்காதேவிக்குத் தோழியாய் இருந்து, நீ செய்த தவப் பேற்றால் இச்சென்மத்தில் எவரும் அடையமுடியாத தனத்தைப்பெற்றனை ஆதலால் அதனது விஷயங்களைக் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளானது இவனது தாயானவள் பயந்து நிற்கையில் மேற்படி நாகமானது இவன் தாய்முகம் நோக்கிக் கூறுவதாகும். 20

கேளேநீ பெண்கிளியே யுன்வயிற்றில்
கேவலமாய்ப் பிறந்ததொரு மைந்தன்றானும்
வாளேநீ கஞ்சன்மகன் சிசுபாலன்றான்
வண்மையா யுன்வயிற்றிற் பிறந்தான்பெண்ணே
ஆளேநீ பாலனைத்தான் பெற்றபோதே
ஆரணங்கே வறுமையெல்லா மோடிப்போச்சு
தாளேநீ யொருநாளுந் தாழ்வதில்லை
தரணியாள ராசனுமா மைந்தன்றானே.

(இ-ள்) ஓ கிளியையொத்த பெண்பாவாய்! உன் வயிற்றிற் பிறந்த பாலனானவன் கஞ்சனது திருச்செல்வனாகிய சிசுபாலன். ஆயினும் நீ முன் ஜென்மத்தில் செய்த தவப்பேற்றால் இச்சென்மத்தில் உன் வயிற்றினிடமாக

இவன் ஜனித்தான். ஆனதால் ஓ பெண்பாவாய்! இச்சாதகனை நீ பெற்ற போதே உன் வறுமை முதலிய கொடியபிணி முதலியனவெல்லாம் பறந்து போயிற்று. ஆனதால் நீ எந்நாளும் தாழ்வடையாது மிக்க மேம்பாடுடையவளாகி வாழ்வாய். இம்மைந்தனும் இப்பூமியை அரசாளத் தகுந்தவனாகி இருப்பான் என்பதை அறிவாய் எ-று.

(வி-ரை) மற்றும் மேற்படி நாகமானது இவள் செய்தியை கீழ்க்கண்டவாறு வினவுகின்றன. 21

மைந்தனம்மா வுந்தனிட வாழ்வுதானும்
மகத்துவங்க ளனேகமுண்டு வாழ்வுமெத்த
ஐந்தனம்மா ஆயுசுதா னுள்ளபாலன்
அன்பாகத் தவஞ்செய்து பிறந்தபாலன்
வந்தனம்மா பாலனுக்குச் சூரியகாந்தி
வளமாகப் படாமலேநான் குடைபிடித்தேன்
இந்தனம்மா விந்தநல்லத் தலத்திலேதான்
இப்பாலன் பிறக்குங்கால் வந்ததன்றே.

(இ-ள்) ஓ பெண்பாவாய்! இவ்வாறான விசேஷத்தால் பிறந்த மைந்தனானதால், உன் வாழ்வானது மிக்க விசேஷமுடையதாயும் மகத்துவமுடைய வாழ்வையே நடத்துவாய். மற்றும் இந்த ஜாதகன் பூரண ஆயுள் உடையவனாகவே வாழ்வான். மேலும் இந்த ஜாதகன் மிக்க தவத்தால் பிறந்தவன் ஆனதாலும், மகா உத்தமத் தலமாகிய இந்நதிக்கரையில் பிறந்த விசேஷத்தாலும், உனது மைந்தன்மீது சூரியனது உஷ்ணம் படாவண்ணம் யாங்கள் குடைபிடித்துக் காப்பாற்றவே யான் இவ்விடம் வந்தேன் என்றறிவாயாக எ-று. 22

வந்தனம்மா விந்தவிடந் தன்னிலேதான்
வண்மையுடன் எவ்வெவர்கள் வந்தாரென்றால்
உந்தனிட கிருபையினால் வானோரெல்லாம்
உண்மையுடன் வந்தருகில் னிற்கின்றார்கள்
சிந்தனைக ளில்லையினி யுந்தனுக்கு
சீக்கிரத்தில் யோகமது வருகும்பாரு
அந்திசந்தி சிவனைமற வாமலின்று
அன்பான குழந்தையைநீ வளர்த்துவாராய்.

(இ-ள்) மேற்சொல்லிய காரணங்களால் யாங்கள் இங்கு வந்தவுடன் இன்னும் எவ்வெவர்கள் வந்தனர் என்றால்? நீ செய்த புண்ணியத்தால் வானோர் முதலிய யாவரும் இதோ அருகில் நிற்கின்றனர். இது உண்மையானவார்த்தை யாகும். ஆனதால் ஓ பெண்பாவாய்! இது நாள் முதல் உனக்கு எவ்விதக் குறைவும் இல்லை. கூடிய சீக்கிரம் உனக்குச் சகல யோகங்களும் தானே வந்தடையும். ஆனதால் ஓ மாதரசே! காலை மாலை என்னும் இருவேளையும் ஸ்ரீசிவபிரானை மறவாது துதித்து இக்குழந்தையையும் காப்பாற்றுவாய் எ-று.

(வி-ரை) வானோர் முதல் யாவரும் வந்திருக்கின்றனர் என்றதால், வானோருள் எவர் எவர் வந்திருக்கின்றனர் என்பதைக் கீழ்வரும் செய்யு ளால் காண்க. 23

வாயென்ற வித்தலத்தில் வருணன்வாயு
வளமான வாசவனுங் குபேரன்றானும்
ஆயென்ற சதாசிவனுங் கிருபையோடு
அந்தரத்தி னிற்கின்றா ரம்மாபாரு
பாயென்ற பராபரனு முமையாள்தாயும்
பைங்கிளியு நிற்கிறதைப் பரிவாய்பாரு
சேயென்ற சிறுகுழந்தை பெற்றாய்மாதே
சீர்மையுள்ள கண்ணரசே செயலைக்கேளே.

(இ-ள்) இங்கு வானோருள் எவரெவர்கள் வந்திருக்கிறாரெனில்? வைகுந்த வாசராகிய ஸ்ரீமந்நாராயணரும், வருணபகவான், வாய்வுபகவான், முதலியோரும், குபேரனும், ஆதிப்பொருளாகிய சதாசிவமூர்த்தியும், அதோ அந்தரமாகிய ஆகாயத்தின்கண் இருப்பதை காண்பாயாக. மற்றும் பராபர வஸ்துவாகிய சர்வேஸ்வரனும், உலகமாதாவாகிய உமாமயேஸ்வரியும் அதோ அந்தரத்தில் இருப்பதைக் காண்பாயாக. இப்படிப்பட்ட அருமைவாய்ந்த குழவியைப்பெற்ற ஓ பெண்பாவாய்! இந்த ஜாதகனது அதிசயத்தை இன்னும் சொல்லுகிறேன் கேட்பாயாக எ-று. 24

கேட்கவே பைங்கிளியே நீதான்கேளு
கேவலமாய்க் குசபிரமா வம்மிசத்தில்
வாட்கவே நீபிறந்த ஐந்தாமாதம்
வளமான மாதாவு மிறந்துபோனாள்
ஆட்கவே ஏழாந்தன் மாதந்தன்னில்
அன்பான பிதாவுந்தா னிறந்தான்பாரு
நாட்கவே நன்மையுட னீபிறந்து
நலமாக வாழ்வையம்மா நாடிக்கேளே.

(இ-ள்) ஓ பெண்பாவாய்! இன்னும் சொல்லுவேன் கேட்பாயாக. எப்படி யெனில்? நீ குசப்பிரம்ம வம்சத்தில் பிறந்தவள் ஆயினும், நீ பிறந்த 5-ஆம் மாதம் உனது அருமைத் தாயானவள் இறந்துபோனாள். அதுவன்றி, நீ பிறந்த ஏழாம் மாதத்தில் உனது தந்தையும் இறந்துபோனான். ஆயினும் நீ பிறந்த விசேஷத்தால் இனி சகல சுகங்களையும் உடையவளாய் வாழ்வாய் என்றறிக எ-று.

(வி-ரை) இவன் தாயிடம் மேற்படி நாகமானது மேற்கண்டவாறு அவளது அந்தரங்க விசேஷங்களைக் கூறிற்று என்பதாம். கீழ்வரும் செய்யுளால் இந்நூலாசிரியர் இவர்களது வருகால விசேஷங்களைக் கூறுவார். 25

கேளடா இவள்நல்ல மங்கையப்பா
கேவலமாய் இவள்மைந்தன் ராஜயோகன்
ஆளடா வரசதுதான் முப்பத்தாறு
ஆண்டிவனுஞ் செத்தபின்பு தவசுசெய்வான்

நாளடா என்னசொல்வேன் ரேவதிநாள்மைந்தன்
நலமாகப் பிறந்தவன்று னடிக்கேளு
ஊளடா உட்பொருளு மறிவான்மைந்தன்
உத்தமனு மிவனல்ல மைந்தனுமே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இம்மங்கையானவள் மகா உத்தமி யாகும், இவள் மைந்தனாகிய இந்த ஜாதகனே இராஜயோகத்தை அடைபவன் ஆவன். மேற்படி மாதாவானவள் சகல இராஜயோகங்களுடன் இந்த ஜாதகன் வயது-36 வரையில் அரசுசெய்யத் தகுந்தவள் ஆவாள். இவன் தாயானவள் இறந்த பின்பு இந்த ஜாதகனே தவம் செய்யச் செல்வன். மேலும் இந்த ஜாதகன் ரேவதி நக்ஷத்திரத்தில் பிறந்தவனாகும். ஆனதால் சகல ரகஸ்ய சாஸ்திரங்களையும் அறியத் தகுந்தவனும், மகா உத்தமனும் பலமுடையவனும் ஆவன் எ-று.

(வி-ரை) பின்வரும் செய்யுளால் முன்கூறிய நாகமானது இவன் தாயிடம் இன்னும் சில வார்த்தைக் கூறுவதை அறிக. 26

மைந்தனாய்ப் பிறந்தவுந்தன் மகனுக்குள்ள
மகத்துவத்தைச் சொல்லவுந்தான் முடியாதம்மா
ஐந்தனாய்க் குழவியைத்தா னம்மாநீயும்
அன்பாகச் சிவபூசை செய்யச்சொல்லு
கந்தனும் இவனையறு முகவனைத்தான்
கருணையுடன் பூசைநீ செய்யவைப்பாய்
மைந்தனாய் வாலைபர மேஸ்வரியை
வண்மையாய் பூசைசெய்ய வறிவைச்சொல்லே.

(இ-ள்) ஓ பெண்பாவாய்! உனது மைந்தனது பெருமையை என்னால் கூறமுடியாது. ஆகையால் உனது அருமைக் குமாரனைச் சிவபிரான் பூஜை செய்யும்படி கூறுவாயாக. மற்றும் கந்தனையொத்த உமது அருமைச் செல்வனை, ஆறுமுகக் கடவுளினது பூஜை செய்யும்படிக் கூறுவாயாக. இதுவுமன்றி, உலகமாதாவாகிய வாலைதேவியை இடைவிடாது பூஜை செய்யும் படிக்கும் கூறுவாயாக எ-று. 27

சொல்லென்று நாகமது சிவபூசைசெய்ய
சொல்லுதையா உபதேசஞ் சொல்லக்கேளு
அல்லென்று சிவதோத்திரம் ஓங்ரீங்கென்று
அப்பலனைச்சொல்லியது மைந்தனுக்கு
நல்லதென்று குழவிக்கி துபதேசித்து
நாகமது நாகரேஷ்டங் குழவிவாயில்
உல்லென்று உண்மையுடன் வாயிற்றுக்கி
உற்றவாறு வெல்லாஞ் சொல்லிற்றன்றே.

(இ-ள்) மேற்கூறிய வண்ணம் இக்குழவியை சிவபூஜை செய்யும்படி சொல்லிய நாகமானது, மேற்படி சிவபூஜை செய்ய உபதேசமும் செய்தருளியது. எப்படியெனில்? ஓங் ரீங் என்னும் உயிரக்ஷரத்தால் சிவபிரானைத்

தோத்திரம் செய்வாயாக வென்று இச்சாதகனுகிய குழவிக்கு உபதேசம் செய்து, உண்மை மார்க்கங்களை வாயால் பரிசிக்கத்தகுந்த மார்க்கத்தையும், அவ்வாறு சிவபிரானைத் துதிப்பதால் உண்டாகும் பலனையும் கூறியது எ-று.

(வி ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவதென்னவெனில்? மேற்படி நாகமானது இக்குழவிக்கு சிவபூஜை செய்வதற்கு வேண்டிய மந்திரோபதேசம் செய்தது என்பதே யாகும். 28

சொல்லிடவே நாகமது எல்லாஞ்சொல்லி
சொற்பெரிய வாழ்வுமுத லெல்லாங்காட்டி
நல்லிடவே நான்முகனு முமையாள்வாக்கியம்
நலம்பெறவே சொல்லியது நாகம்போச்சு
வெல்லிடவே அன்னையவள் விரைந்துதானே
வேள்விடையான் செயலென்று விருப்பமுற்று
அல்லிடவே மைந்தனையு மெடுத்துக்கொண்டு
அம்மையவ டன்மனைக்குச் சென்றாளன்றே.

(இ-ள்) நான்முகக்கடவுளாலும், ஸ்ரீஉமாதேவியாலும் விதிக்கப்பட்ட இந்த ஜாதகனது வருங்கால விசேஷங்கள் யாவையும் சொல்லியதுடன், இவர்களுக்கு உண்டாகப்போகும் வாழ்க்கை முதலியனவற்றையும், சரியாய்ச் சொல்லி மேற்படி நாகமானது போயிற்று. இதன் பின்பு, மேற்படி அன்னையானவள் விரைந்து எழுந்து எல்லாம் சிவபிரானது செயலென்று சந்தோஷப்பட்டு மேற்படி குழவியைக் கையில் எடுத்துக்கொண்டு தனது இல்லம் வந்து சேர்ந்தாள் எ-று.

(வி-ரை) நாகம் கூறிய சிவபிரான் கருணையைக்கேட்ட தாயானவள் மிக்க சந்தோஷசித்தமாய் வீடுவந்து சேர்ந்தாள் என்பது கருத்து. 29

சென்றிடவே களிப்புடனே மனையிற்சென்றாள்
செயலான பத்தினியை புருஷன்கண்டு
நன்றிடவே யவன்மனையி லழைத்துஅப்போ
நலமாக மனைச்சார்பிர் மனைகொடுத்து
வின்றிடவே வந்தநல்ல மனையிலேதான்
விகற்பமில்லா வம்மனையில் வீற்றிருந்தார்
அன்றிடவே வந்தநல்லக் குழந்தைதானும்
அன்பான ரத்னமது வாயிற்கண்டாளே.

(இ-ள்) இவ்வாறு மிக்க சந்தோஷத்துடன் வீடு திரும்பியதும், இம்மங்கையை இவள் புருஷனான பிராமணன் கண்டு தன் மனைக்கு அழைத்துச் சென்று தனது இல்லத்தின் ஓர் புறத்தில் இவர்களுக்கு இடங்கொடுத்தான். இவ்விருவரும் யாதொரு விகற்பமும் இன்றி மிக்க சந்தோஷத்துடன் மேற்படி மனையிலேயே வாழ்ந்திருக்கும் சமயம், ஓர்நாள் இச்சாதகனுகிய குழவியின் வாயில் எவரும் மெச்சத்தகுந்த ரத்தினம் ஒன்றைக் கண்டனள் எ-று.

(வி-ரை) மேற்படி பிராமணனது இல்லத்தில் ஓர் பக்கம் வாழ்ந்து கொண்டிருக்கும் சமயம், இக்குழவியின் வாயில் ரத்தினம் ஒன்றைக்கண்டாள் என்பதாம். 30

கண்டவுடன் ரத்னமது எடுத்துமங்கை
கனத்ததொரு மணியதனை எடுத்துப்போயி
விண்டவுடன் கடவுளர்தங் கடாட்சத்தாலே
மெல்லியர்க்குக் கிடைத்ததென்று வியந்துதானே
கொண்டவுடன் கோமுட்டி கையிலேதான்
கொற்றவனுந் தான்கொடுத்துத் தனத்தைவாங்கி
நிண்டவுடன் றனமதுதா னனேகபாக்கியம்
நிகழ்ச்சியில்லாக் காட்சிபெற வாழ்ந்தாள்மங்கை.

(இ-ள்) மேற்கூறிய வண்ணம் தமது குழவியின் வாயில் ரத்தினம் ஒன்றைக்கண்ட இக்குழவியினது தாயானவள், மேற்படி ரத்தினமணியைக் கையிலெடுத்து, இவை கடவுளது கிருபா கடாக்ஷத்தால் கிடைத்ததென மிக்க சந்தோஷமுடையவளாகி, மேற்படி ரத்தினத்தைக் கொண்டுபோய் கோமுட்டியாகிய வியாபாரியிடம் கொடுத்து அதற்குரிய தனத்தை வாங்கிக் கொண்டுத் தனது வீடுவந்து சேர்ந்தாள். அதுமுதல் இச்சாதகனுடைய தாயானவள் அநேக பாக்கியமுடையவளாய் எவரும் தனக்கிணை சொல்லப்படமாட்டாத வாழ்வுடையவளாகி சகல சுகத்துடன் வாழ்ந்திருந்தாள் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) மேற்படி ரத்தினத்தை விற்று பொருள் வாங்கி வந்ததுமுதல் சகல யோகமுடையவளாய் வாழ்வாள் எனவுங் கருத்தாகும். 31

மங்கையிவ ளிப்படியே சிவபூசைசெய்து
வளமாக வாழ்ந்திவளு மிருக்கும்போது
அங்கையுடன் ரத்னமதை யரசன்கிட்டே
அன்புடனே கோமுட்டி யீந்துமிக்க
செங்கையினல் அனேகமப்பா நிதிகள்வாங்கி
செப்பமுள்ள இவன்மனைக்கே கொண்டுசென்றான்
சங்கமில்லாப் பொருள்போலே மனையில்வைத்தார்
சுத்தபொரு ளவன்மனையில் இல்லைத்தானே.

(இ-ள்) மேற்கூறியவண்ணம் ரத்தினத்தை விற்ற பொருளைக்கொண்டு சகல சுகபோகங்களுடனே வாழ்ந்தும், எந்நாளும் சிவபூஜையை மறவாமலும், இவனின் தாயானவள் வாழ்ந்திருந்தாள். இப்படியிருக்க மேற்சொன்ன கோமுட்டியானவன் மேற்படி ரத்தினத்தை அரசனது சமூகம் கொடுத்து தமது கையில் அனேக திரவியங்களை வாங்கி தன் மனைக்கு வந்து அப்பொருளைத் தனது இல்லத்தில் வைத்திருந்தான். ஆயினும் அவன் வைத்த பொருளானது கொஞ்சமேனும அவனது மனையில் இல்லை எ-று.

(வி-ரை) மேற்படி கோமுட்டியானவன், இவன் தாய்விற்ற ரத்தினத்தை அரசனிடம் கொடுத்து அளவற்ற திரவியத்தைக்கொண்டு வந்தானாயி

னும் அப்பொருளானது தான் வைத்திருந்த இடத்தில் காணப்படவில்லை என்பது கருத்து. மற்றும் விவரங்களைக் கீழ்வரும் செய்யுளால் அறிக. 32

இல்லையப்பா மனையில்வைத்த பொருளோயில்லை
இயல்பான மைந்தனிட வீட்டிற்போச்சு
அல்லையப்பா அந்ததனம் முழுவதுந்தான்
அன்பான இவன்வீட்டி லில்லாதுகண்டு
தொல்லையென்ன என்றரசன் பக்கற்சென்று
தோன்றுதலே நீர்கொடுத்த தனமொன்றில்லை
அல்லையிதை நாமறிய வேண்டுமென்ன
அன்பான ராசனவன் மலைத்தான்பாரே.

(இ-ள்) முன்சொன்னபடி கோமுட்டி தனது வீட்டில் வைத்தபொருள் இல்லையென்றால் எங்கே சென்றனவென்றால்? இச்சாதகனுடைய இல்லம் வந்து சேர்ந்தன. ஆனதுபற்றி, தான் தனது வீட்டில் வைத்த தனமானது கொஞ்சமேனும் தனது வீட்டில் இல்லாதிருப்பதைக்கண்டு, இது என்ன கஷ்டம் என்று நினைத்த கோமுட்டியானவன், மேற்படி அரசனிடம் சென்று ஓ அரசே! தாங்கள் கொடுத்த தனம் கொஞ்சமேனும் எனது வீட்டில் இல்லை. ஆனதால் இதனை நாம் கண்டறிய வேண்டும் என்று கூறவே மேற்படி அரசனும் திகைத்து நின்றான் எ-று. 33

பாரென்ற அரசனுந்தா னனேகமெண்ணி
பாங்கான இவன்மனையிற் பார்க்கும்போது
சீரென்ற தனங்காணு தேங்கிமன்னன்
சித்தமது வேறாகிச் செப்புகின்றார்
தாரென்ற மணிவாங்கி நான்கொடுத்த
தனத்தையெல்லா மாருக்கோ ஈந்தாய்பிள்ளாய்
ஊரென்ற உன்மனையில் வைத்தபொருளெல்லாம்
உத்தமனே யாருக்கீந் திட்டாயன்றே.

(இ-ள்) இவ்வாறு கூறிய கோமுட்டியினது வார்த்தையைக் கேட்ட அரசன பற்பலவிதமாய் ஆலோசித்து, மேற்படி கோமுட்டியின் மனைக்குச் சென்று பார்க்கும்போது மேற்படி தனமானது எதுவுங் காணப்படாததால் தன் மனத்துள் பற்பல எண்ணம் உடையவனாகி, ஓ வைசியனே! என்னிடம் ரத்தினத்தைக் கொடுத்து வாங்கிய பொருள் யாவையும் யாருக்கோ கொடுத்துவிட்டாய். ஆனதால் உன் மனையில் உள்ளபொருள் யாவையும் யாருக்குக் கொடுத்தாய் சொல்லுகவென அரசன் கேட்டான் எ-று.

(வி-ரை) அரசன் கோமுட்டியினது வீடு சென்று சோதிக்கும்போது பொருள் இல்லையாதலால், என்னிடம் ரத்தினத்தைக் கொடுத்து வாங்கிய பொருளை யாரிடம் கொடுத்தாய் சொல் என்றனன் என்பது கருத்து. பின்னும் அரசன் கேட்கும் வரலாறு. 34

ஈந்தபொரு ளொன்றுமுன் மனையிலில்லை
இயல்பாகப் போனதெங்கே சொல்லுவாய்நீ
சாந்தமுள்ள தர்மதே வதையினாலே
தவஞ்செய்த பாக்கியத்தாற் கிடைத்ததன்றோ

ஆய்ந்தபொருள் போனவிடங் காணேனென்று
அன்பான கோமுட்டி சொல்லும்போது
வாய்ந்திடவே உனக்கிந்த ரத்தினத்தை
வந்தவகை சொல்லுபின்னே வகைசொல்வேனே.

(இ-ள்) ஓ வைசியனே! யான் கொடுத்த திரவியங்களில் ஒன்றையும் உன் மனையின்கண் காணப்படவில்லை. அவை எங்கே சென்றன? அதனை விவரமாய்ச் சொல்லுகவென அரசன் கேட்டான். ஓ முனிவர்களே! மேற்படி இரத்தினமான தருமதேவதையின் கிருபையால் கிடைத்த பொருளன்றோ? இவை இவ்வாறிருக்க, கோமுட்டியானவன் அரசனைப் பார்த்து ஓ அரசே! இப்பொருளானது எங்கு போயிற்று என்று எனக்குத் தெரியாது (யான் எவரிடமும் கொடுக்கவில்லை) என்றுரைத்த வணிகனை அரசன் பார்த்து உனக்கு இந்த ரத்தினமானது எங்ஙனம் கிடைத்தது. அதனைச் சொல் பிறகு அவை போனவகையைச் சொல்லுகிறேன் என அரசன் சொல்லினான் எ-று. 35

சொல்லுவே னீவிற்ற ரத்தினந்தான்
சொற்பெரிய வன்னியர்கள் ரத்நமாகும்
அல்லுவே னதனாலே வந்தபொருளெல்லாம்
அன்பான உன்மனையி லில்லாமற்போச்சு
நல்லுவே னுள்ளபடி சொல்லுமென்ன
ரத்தினம்வந்த வகையதனை நலமாய்ச்சொன்னான்
வல்லுவே னவ்விடத்தின் மாதைத்தானும்
வரவழைத்து உனக்குரத்ன மேதுசொலென்றான்.

(இ-ள்) ஓ வணிகனே! நீ விற்ற ரத்தினமானது உன்னுடையதல்ல. அவை அந்நியருடையதேயாகும். இதனாலேயே நீ விற்ற ரத்தினத்தின் பொருளானது உன்னிடம் இல்லாமற் போய்விட்டது. ஆனதால் உள்ளதைச் சொல்லுவாய் என்று கேட்கவே, வணிகனானவன் ரத்தினம் வந்த வரலாற்றை விவரமாய் சொன்னான். அதன்பின்பு மேற்படி ரத்தினத்திற்குடைய இச்சாதகனின் தாயை அழைத்துவந்து உனக்கு ரத்தினம் ஏது என அரசன் கேட்டான் எ-று.

(வி-ரை) ரத்தினம் வந்த வரலாற்றை வணிகன் சொல்லவே, அரசன் இச்சாதகன் தாயை அழைத்துவந்து ரத்தினம் வந்த வகையேது என வினவினான் என்பது கருத்து. 36

சொல்லுகிறேன் குழவியிட வாயிலேதான்
சோதனையாய் கிடைத்ததென அரசன்கண்டு
நல்லுகிறேன் நான்கொடுத்த பாக்கியமெல்லாம்
நலமான குழவியிடஞ் சேர்ந்திருக்கும்
வல்லுகிறேன் வண்மையினா லரசன்றானும்
வாகான வக்குழவிக்கு அரசுஈந்து
வல்லுகிறேன் வாழ்வெல்லா மவனுக்கீந்து
வரிசையுடன் பட்டமது சூட்டினாரே.

(இ-ள்) இவ்வாறு கேட்ட அரசனைப் பார்த்த இந்த ஜாதகனது தாயானவள், ரத்தினமானது எனது மைந்தனது வாயிலிருந்து கிடைத்தன என்று கூறவே இதனை அரசன்கண்டு ஓஹோ நாம் கொடுத்த பொருள்யாவும் அப்பிள்ளையிடமே சேர்ந்திருக்கும் என்னும் கருத்து கொண்டவனாகி, அப்பிள்ளையை அழைத்துவந்து, தனது பட்டம் அரசு வாழ்வு முதலிய யாவற்றையும் மேற்படி பிள்ளைக்கு தத்தம்செய்து பட்டமும் சூட்டிவைத்தான் எ-று.

(வி-ரை) என் பிள்ளையின் வாயிலிருந்து கிடைத்தன என்று சொல்லவே நான் கொடுத்த திரவியமும் அப்பிள்ளையிடமே சேர்ந்திருக்கும் என நினைத்து பட்டம் சூட்டிவைத்தான் என்பது கருத்து. 37

சூட்டியதோர் பட்டாபி ஷேகஞ்செய்து
சூழ்ந்திருந்த மந்திரியை யருகிருத்தி
நாட்டியதோர் விவாகமது உடனேசெய்து
நலமாக நளச்சக்ர வர்த்திபோலே
கூட்டியதோர் குவலயத்தி லிவன்றானப்பா
குணமுள்ள பாலனிவன் வாழ்ந்தானன்றாய்
பூட்டியதோர் பூட்டெல்லாஞ் செல்வயோகம்
புகலுகிறே னிவன்வயது முப்பதுக்குள்ளாமே.

(இ-ள்) மேற்கூறிய வண்ணம் இச்சாதகனுக்குப் பட்டாபிஷேகம் முதலியவற்றை நிறைவேற்றி வைத்தும் விவாகாதி சுபசோபன முதலியவற்றையும் குறைவற நடாத்தித் தன்னிடமிருந்த மந்திரிமார்களையும் இச்சாதகன் அருகிருத்தினான். அது முதல் இச்சாதகனும் நளச்சக்கரவர்த்தி போன்று தருமபரிபாலனம் செய்துக்கொண்டு இப்பூமியின்கண் இவனே மிக்க குணவானாயும், தருமமுடையவனாயும் வாழ்ந்து வந்தான். அதுமுதல் சகல கட்டுக்காவலுடையவனாய் செல்வம் யோகம் முதலியவற்றில் மேம்பட்டவனாயும் வாழ்ந்திருப்பான். இவ்விதமான விசேஷங்கள் யாவும் இவன் வயது 30-க்குள்ளே யாகுமெனக் கூறுவாயாக எ-று. 38

உள்ளென்ற இவனிட யோகத்தினாலே
உத்தமனே குபேரனைப்போல் வாழ்ந்தான்மைந்தன்
அள்ளென்ற வயிஸ்வரிய முள்ளபாலன்
அன்பான பிள்ளைகளை நாலுபெற்று
கொள்ளென்ற பிள்ளைகட்குப் பட்டங்கட்டி
கொற்றவனுந் தவசுக்குப் போனானப்பா
விள்ளென்ற நானூறு வருஷந்தானும்
விமலர்பதம் பணிந்துமைந்தன் தவம்பூண்டானே.

(இ-ள்) இந்த ஜாதகனது பூர்வபுண்ணியத்தால் இவ்வாறான செல்வம் முதலியவற்றை அனேகமாய் அடைந்து, அன்றுமுதல் குபேரசம்பத்துடையவனாய் சகல ஐஸ்வர்யங்களும் உள்ளவனாய் வாழ்வதுடன், பிற்காலத்தில் இவனும் தன் மனையாளிடம் நான்கு பிள்ளைகளைப் பெற்றும், மேற்படி பிள்ளைக்குத் தனது பதவி பட்டம் முதலியனவற்றை ஈந்துத் தானும்

சன்னியாசிவேடமாகித் தவக்கோலத்துடன் சென்று, நானூறுவருடம் வரையிலிருந்து பரகதியை எய்தினன் எனவுங் கூறுவாயாக எ-று. 39

பூண்டிடவே இந்தநல்ல ரேகைமார்க்கம்
புகழாகச் சொல்லிவிட்டேன் மைந்தாகேளு
ஆண்டிடவே இன்னமொரு ரேகைமைந்தா
அன்பாகச் சொல்லுகிறே னறிவாய்க்கேளு
தாண்டிடவே தண்மையினால் ரேகையொன்று
தாழ்வில்லா ரேகைபடா தண்மையப்பா
ஈண்டிடவே இந்தநல்ல ரேகைமார்க்கம்
இயல்பாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இதுகாறுங் கூறிவந்த செய்யுட்களால் பாஞ்சாலிரேகை என்பது தமது அஸ்தத்தின்கண் அமையப்பெற்றவர்களது வருகாலகுண விசேஷங்களைச் செவ்வையாய் கூறிவிட்டேன். ஆயினும், இன்னுமொரு ரேகையுண்டு. அந்த ரேகையானது எல்லோராலும் புகழத்தகுந்ததும் எக்காலத்தும் தாழ்வடையப் படாததுமாகிய உத்தம ரேகையாகும். ஆனதால் அந்த ரேகையினது வருகாலவினைகளைச் சொல்லுகிறேன் கவனமாய்க் கேட்பீர்களாக எ-று.

(வி-ரை) இனி பின்வரும் செய்யுட்களால் மற்றுமொரு ரேகையினது பலாபலன்களையும் யோகங்களையும் கூறுவேன் என்றனர். 40

### சகடவிந்தரேகை சாந்தபாஷ்பரேகைகளின் பலன்

கேளப்பா சகடவிந்தஞ் சாந்தபாஷ்பம்
கேவலமா யணிவிரலி லிருக்கும்பாரு
ஆளப்பா ருத்திரவரைக் கீழேநிற்கும்
அன்பாக அதன்விபரம் அறையக்கேளு
வாளப்பா இருபுள்ளி இரண்டுகீறு
வளமாக இதழாறு இருக்கும்பாராய்
நாளப்பா இவன்பிறந்த நாளுங்கோளும்
நன்றாகச் சொல்லுகிறே னடிக்கேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! சகடவிந்தரேகை, சாந்தபாஷ்பரேகை என்னுமவை அணிவிரலாகிய மோதிரவிரலில் ஏறிச் செல்வதுடன், பிரம்மவரை நடுவிரலுக்குக் கீழ்பக்கமும் அமைந்திருப்பதாகும். ஆனதால் அதன் விவரங்களைக் கூறுவேன் கேட்பாயாக. எவ்வாறிருக்குமெனின்? இரண்டுகீற்று ரேகை வடிவமாயும், இரண்டு புள்ளி வடிவங்களாயும், இரண்டு இதழ்களாயும் அமைந்திருக்கு மென்க. ஆனதால், இவ்வாறானரேகை யமைந்தவன் பிறந்த நாள், கிரகம், முதலியவற்றின் விவரங்களைத் தெளிவாய்க் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) சகடவிந்தரேகை, சாந்தபாஷ்பரேகை என்பது மோதிர விரலின் கணுவிலும், நடுவிரலின் கீழ்பக்கத்திலும், இரண்டு இதழ்களாய்

இரண்டுகீற்று ரேகையாயும் புள்ளிகளாயுங் காணப்படும் என்க. ஆனதால் இதன் பலன், யோகம், பிறந்த நாள், கோள் முதலியனவற்றைக் கூறுவார். 41

கேளடா இந்தநல்ல ரேகையானால்
கேவலமாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
ஆளடா இவன்பிறக்கும் போதுமைந்தா
அன்பான புதுமைமெத்த வாய்மைகேளு
நாளடா நன்மைபெற்ற மைந்தனப்பா
நலமான பிள்ளையிவன் பிறந்தயோகம்
ஆளடா ஆச்சரிய மெத்தவுண்டு
அன்பான மருத்துவத்தை யறிவாய்க்கேளே.

(இ-ள்) மேற்கூறிய ரேகையானது தமது அஸ்தத்தின்கண் அமையப் பிறந்தவனது வருகால யோகா வயோக முதலியவற்றைக் கூறுமிடத்து, இந்த ஜாதகன் பிறந்தகாலத்து மிக்க புதுமையாகிய கார்யா கார்யங்கள் எல்லாம் நடந்திருக்குமெனவும், தனது வாழ்நாட்களில் சகல நன்மையும் அடையத்தகுந்தவன் எனவும், இவன் ஜனனகால லக்ஷணங்களானது எவரும் கண்டு ஆச்சர்யப்படத் தகுந்தவன் எனவும் கூறவேண்டுவதாகும். ஆனதால் இந்த ஜாதகனது மருத்துவ விசேஷங்களைக் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) பொதுவாய் இவ்வாறு ரேகை அமையப் பிறந்தவன் எவரும் அதிசயிக்கத் தகுந்தவன் எனவும், பிரபலயோக முடையவன் என்றும் கூறியதால், அதன் விவரங்களைக் கீழ் வருவனவற்றால் கூறுவார். 42

கேட்கவே யிவன்பிறக்கும் போதுமைந்தா
கீழ்வாசல் வீட்டிலிவன் பிறந்தான்பாரு
தாட்கவே இவன்பிறக்கும் போதுமைந்தா
தன்மையுள்ள இவன்பிதா இறந்தான்பாரு
மீட்கவே வறுமைவந்து மூடிக்கொண்டு
மேதினியிற் பறவைபோல் துணைவேறின்றி
தாட்கவே சற்சனனுந் துயரமுற்றான்
தண்மையில்லா திவன்பிறந்த சார்புதானே.

(இ-ள்) இச்சாதகன் ஜனித்தகால விசேஷத்தால் இச்சாதகன் பிறந்த வீட்டின் வாசலானது கீழ்வாசலுடைய வீட்டில் ஜனனமானான் எனவும், இந்த ஜாதகன் பிறந்தபின் இவனது பிதாவானவன் இறந்துபோனான் எனவும், மேற்படி பிதாவானவன் இறந்துபோனதின் காரணத்தால் இச்சாதகனானவன் வறுமை வாய்ப்பட்டு எவரும் துணையற்றவனாய் பறவைப் போன்று அலைந்து திரிந்து துயரம் உற்றவனாகி கஷ்டப்படுவான். இவை இவன் ஜனித்தகால லக்ஷணமாகும் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இச்சாதகன் பிறந்தவுடன் இவன் பிதா இறந்துபோவான் என்றனரே யொழிய, எந்த காலத்தில் என்பதை விளக்கவில்லை. ஆதலால் அவற்றின் விவரங்களைப் பின்வரும் செய்யுட்களால் அறியலாம். 43

தானென்ற இவன்பிறந்த மூன்றுமாண்டில்
தயவான மாதாவு மிறந்தாள்பாரு
வானென்ற இவன்பிறந்த மூன்றுண்டுக்குள்
வளமான மாதாவும் பிதாவும்போனார்
ஊனென்ற இவன்பிறந்த பத்தாண்டுக்குள்
உண்மையுள்ள இவன்பாட்டன் பாட்டிமாண்டார்
ஈனென்ற இல்லறத்தி லனேகஞ்செல்வம்
இருந்தழிந்து போனதென்று இயல்பாய்ச்சொல்லே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனித்த மூன்றும் ஆண்டில் தயவுதாக்ஷண்யம் முதலிய நற்குணம் அமைந்த இவன் மாதாவானவள் இறந்து போவாள் எனவும், மேற்கூறிய வருடம் மூன்றுக்குள்ளேயே இவனது பிதாவும் இறந்து போனான் எனவும், மற்றும் இவன் ஜனித்த வயது 10-க்குள்ளேயே இவனது பாட்டன் பாட்டி முதலியோரும் இறந்துபோனார் எனவும், இவனது இல்லத்தின்கண் அனேக செல்வம் முதலியன இருந்தும் இந்த ஜாதகன் ஜனித்தபின் அழிந்துபோயின வென்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் மூன்றும் வயதில் மாதாவும், மூன்றும் வயதுக்குள் தந்தையும், வயது 10-ல் பாட்டன் பாட்டியும் இறந்து போவார் எனவும், இவனது பிதுர் செல்வம் யாவும் நாசமாகும் என்றனர். மற்றும் விவரம் கீழ்வருமாறு. 44

சொல்லவே இவன்செல்வ மெல்லாம்போச்சு
சொற்பெரிய விதனமொடு பாடுபட்டான்
அல்லவே அனேகமிவன் பாடுபட்டு
அன்பான பாலகனு மெலிந்தானப்பா
வல்லவே வண்மையினுற் பொருளனேகம்
மைந்தனப்பா தோற்றுவிட்டான் வரிசையாக
நல்லவே இவன்வயது பதினெட்டுக்குள்
நன்மைவந்து கிடைத்ததென நாடிச்சொல்லே.

(இ-ள்) இந்த ஜாதகனது செல்வம் யாவும் நசிந்துபோனபின்பு இந்த ஜாதகன் அளவிடமுடியாத பாடுபட்டான் எனவும், மேற்படி கஷ்டம் முதலியவற்றுல் இம்சையுற்ற இந்த ஜாதகன் தனது சரீரமும் மெலிந்து போனான் எனக் கூறுவதுடன், தன் செல்வம் யாவும் தோற்று எவ்வித துணையும் இல்லாதவனாகியும், தன் வயது 18-ல் சகல செல்வமும் வந்தடைந்தன வென்றுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) தனது பிதுரார்ச்சித செல்வம் யாவும் விரயமாயினும், வயது 18-ல் நன்மையும் யோகமும் உண்டாயினவென்று கூறியதைப் பின்வரும் செய்யுட்களால் அறிக. 45

சொன்னனப்பா இவனுக்குத் திசையோகந்தான்
சொல்லுகிறேன் இவனுடைய வரலாறெல்லாம்
வன்னனப்பா இவன்றுனும் வறுமையாகி
வாகான வாற்றருகே விரகெடுக்க

அன்னனப்பா அவ்வாற்றின் கரையிலேதான்
அன்பான நிதிகுடந்தா னென்றெடுத்தான்
கன்னனப்பா காட்சிபெற்ற மைந்தன்வாழ்வின்
காரணத்தை யென்சொல்வேன் கருதிக்கேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகனது வாழ்க்கை யோகம் முதலிய வரலாற்றை விவரமாய்க் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகன் முன்கூறிய வண்ணம் பற்பல கஷ்டங்களால் வறுமை மேலிட்டு, தனது ஜீவியத்தின் பொருட்டு ஓர் ஆற்றங்கரையினது அருகில் விறகு எடுக்கச் செல்லுகையில், அவ்விடம் பொருள் நிறைந்தகுடம் ஒன்றைக்கண்டு எடுத்தான் எனவும், அந்த நாள்முதல் இச்சாதகனுனவன் எவரும் மதிப்பிடக்கூடிய வாழ்க்கையை நடத்துவான். ஆனதால் அதுமுதல் இவன் வருங் கால வாழ்வினது விசேஷங்களைக் கூறுவேன் கேட்பீராக எ-று.

(வி-ரை) வறுமை மேலிட்ட இச்சாதகன் விறகு எடுக்க ஆற்றங்கரைக்குச் செல்லுகையில் நிதிக்குடம் ஒன்று இவனுக்குக் கிடைத்தன வென்பது கருத்து

46

கருதியதோர் இவன்றானுந் தனமெடுத்து
காட்சிபெற வீடுகட்டி விவாகஞ்செய்தான்
உருதியாய் இவனுக்குத் தாரம்ரெண்டு
உண்மையாய் முடியுமென்று உருதிசொல்லு
சருதியாய்ச் சற்சனர்க ளனேகம்பேர்கள்
தகுதியுட னட்புமிக வாழ்வார்பாரு
விருதியதோர் விமலர்பதம் பணிந்துமைந்தன்
வெகுவாக திசையோக நடக்குமன்றே.

(இ-ள்) மேற்கூறிய வண்ணமாய் இந்த ஜாதகனுக்கு நிதிக்குடம் கிடைத்தபிறகு, இச்சாதகன் தனக்குச் சொந்தமாகிய புதிய அரண்மனைக் கட்டித் தானும் விவாகம் செய்துகொண்டனன் எனவும் கூறுக. மற்றும் கூறவேண்டுவது என்னவெனில்? இச்சாதகனுக்கு விவாகம் இரண்டு எனவும் நிச்சயமாய்க் கூறுவதுடன், இவனது வாழ்நாட்களில் அநேக நல்லோர் என்னும் சர்ஜனர்களது சவகாசம் உள்ளவனும், நல்லோர் நட்புடையவன் எனவும், கடவுளிடம் நீங்காத பக்தியுடையவன் எனவும், பிற்காலம் மேலான திசையும் யோகமும் மேன்மேலும் உண்டாகும் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகனுக்கு விவாகம் 2-எனவும், நல்லோர் நேசம் உடையவனும், வாழ்வு மேம்பாடுடையவன் எனவுங் கூறி யுள்ளனர். மற்றும் விவரம் கீழ்வருமாறு.

47

அன்றெனவே இவனுடைய வயதோமைந்தா
அன்பான யோகமுள்ள மனிதனுக்கும்
என்றெனவே இவன்வயதோ எழுபதாண்டு
இயல்பான சக்கிரத்தி னமைப்புமைந்தா

குன்றெனவே குவலயத்தில் இவனைப்போலே
குணமுள்ள பாலனில்லை கூறக்கேளு
நன்றெனவே இவனுக்குக் கண்டமேழு
நலமாக உண்டப்பா நாடிக்கேளே.

(இ-ள்) ஓ மாந்தர்களே! மேலேகூறிய வண்ணம் இந்த ஜாதகனுக்குத் தனது அந்தியகாலம் வரையில் மேலான ராஜயோகம் உண்டெனவும், இவனுக்கு தீர்க்கவயதானது இவன் கையில் அமைந்திருக்கும் ரேகையினது அம்சப்படி வயது-70 எனவும், இப்பூமியின்கண் இவனைப்போன்ற குணவான் வேறு எவரும் இல்லையெனவும், இவனது வயது முடிவுக்குள் கெண்டாதி கெண்டங்கள் ஏழு உண்டாகும் எனவும், மேற்படி கெண்டாதி கெண்டங்களின் விவரங்களைக் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) கெண்டாதி கெண்டங்கள்-7 என்றனர். அவற்றின் விருத்தாந்தங்களைக் கீழ்வரும் செய்யுளால் விளக்குவார். 48

கேளப்பா இவனுக்கு கண்டமாறும்
கேவலமாய் நடந்துவிடுங் கெடுதியில்லை
ஆளப்பா நீராலே கண்டமொன்று
அப்பனே சத்துருவால் வருமோர்கண்டம்
மாளப்பா வியாதியினால் கண்டமொன்று
மகத்தான விடத்தாலே வருமோர்கண்டம்
வீளப்பா கண்டமொன்று நாற்காலாலே
விகற்பமுள்ள ஸ்திரீயாலே கண்டமொன்றே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகனுக்குண்டாகிய கெண்டாதி கெண்டங்கள் 7-ல், ஆறு கெண்டாதி கெண்டங்கள் சுலபமாய் நீங்கும் எனவும், அவை எவ்வாறெனில்? நீர் என்னும் ஜலத்தால் ஓர் கெண்டமும், தனது பகைவராகிய சத்துருவால் ஓர் கெண்டமும், கொடிய வியாதிவாதையால் ஓர் கெண்டமும், துன்பத்தைத் தரத்தகுந்த விஷத்தால் ஓர் கெண்டமும், நாற்கால் ஜீவன் என்னும் ஆடு மாடு முதலியவற்றால் கெண்டம் ஒன்றும், துற்பழக்கமும் கெட்ட எண்ணத்தையும் உடைய ஸ்திரீயால் ஓர் கெண்டமும் உண்டாகும் எனத் திண்ணமாய்க் கூறுக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன கெண்டாதி கெண்டங்கள் யாவும் சுலபமாய் நீங்கி 7-வது கெண்டத்தால் உயிர்விடுவான் என்பது கருத்து. 49

கண்டமடா இவன்வாழ்வுக் குள்ளேயப்பா
கனத்ததொரு கண்டமெல்லாம் வந்துபோச்சு
பண்டமடா பலபொருள்கள் தேடுவான்பார்
பாக்கியங்கள் மெத்தவுந்தான் வந்துசேரும்
விண்டமடா இவன்வயது முப்பத்தாறில்
வியாப்பதியா யனேகமடா நிலங்கள்கொள்வான்
கண்டமடா தனஞ்செயன்போற் பத்துபிள்ளை
தண்மையுடன் பிறக்குமென்றே சாற்றுசொல்லே.

(இ-ள்) இந்த ஜாதகனது ஆயுள் முடிவதற்குள் மேலே சொன்ன கெண்டாதி கெண்டங்கள் உண்டாகி யாவும் நீங்கிவிடும் எனவும், இவனது வாழ்நாளில் அநேகவிதமான பண்டு பதார்த்தங்களையும் சகல பாக்கியங் களையும் அடைவான் எனவும், இவன் வயது 36-ல் அநேகவிதமான நிலம், பூமி முதலியனவற்றைக் கைக்கொள்வான் எனவும், தனஞ்செயனை யொத்த வாழ்வும் யோகமும் உடையவனுவன் எனவும், இவனுக்குப் புத்திரர்கள் 10-பேர் எனவுந் திண்ணமாய்க் கூறுக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனுக்கு புத்திரர்கள் 10-பேர் என்றனர். இதனுள் ஆண் எவ்வளவு, பெண் எவ்வளவு என்பதை அவ்வவர்கள் சக்கர அமைப் பால் ஆராய்ந்து கூறுக. 50

சொல்லவே இவனுடைய யோகவாழ்வை
சொல்லிவிட்டேன் ரேகையிட மார்க்கமெல்லாம்
அல்லவே இவனுண்மை வறுமைவாழ்வும்
அன்பாகச் சொல்லிவைத்தேன் மைந்தாகேளு
நல்லவே நன்மையுள்ள பாலகன்றான்
நலம்பெற்று வாழ்ந்திருக்கும் நடத்தைசொன்னேன்
அல்லவே ஆச்சரிய மானதெல்லாம்
ஆனந்தமாகவே நானறிவித்தேனே.

(இ-ள்) ஒ முனிவர்களே! சகடவிந்த ரேகை, சாந்தபாஷ்ப ரேகை என்பது, தனது அஸ்தத்தின்கண் அமையப் பிறந்தவனது யோகத்தின் பெரு மையும், வாழ்க்கையினது விசேஷங்களையும், வறுமை உண்டாகும் காலத் தையும் விவரமாய்ச் சொல்லிவிட்டேன். இன்னும் எவரும் கண்டு ஆச்சரியப் படத்தகுந்த இந்த ஜாதகன் எக்காலத்தில் சுகம்பெற்று வாழ்ந்திருப்பான் என்னும் விசேஷங்களையும் சரிவரக் கூறிவிட்டேன் எ-று.

(வி-ரை) மேற்படி ரேகையில் பிறந்தவர்களது வாழ்வு யோகம் முதலி யனவற்றை யாவும் உண்மையாய்க் கூறினேன் என்பது கருத்து. 51

அறிவித்தேன் இன்னமொரு ரேகைமைந்தா
ஆச்சரிய முள்ளதது சொல்லக்கேளு
சறிவித்தேன் சற்சினமாம் ரேகையொன்று
சாற்றுகிறேன் இன்னமொன்று மைந்தாகேளு
பொறிவித்தேன் புலமையுள்ள ரேகையொன்று
பொருதுவேன் பிரிவித்தேன் ரேகைமைந்தா
பிறிவித்தேன் இன்னமொரு ரேகைதானும்
பிரிவாகச் சொல்லுகிறேன் இன்னங்கேளே.

(இ-ன்) ஒ முனிவர்களே! சகடவிந்த ரேகையில் பிறந்தவர்களது பலா பலன் யாவும் விவரமாய்க் கூறிவிட்டேன். இன்னும் ஒரு ரேகையுண்டு, அவை சற்குணமுடையதும், எவரும் மதிக்கத்தகுந்ததும், வித்துவான்கள் யாவரும் மதிக்கத்தகுந்ததும் ஆகும். ஆனதால், அந்த ரேகையினது விவரங்

## படம் நெ-4.


நேத்திரரேகை


கெதரேகை


பெருவிரல் சக்கரம்

நடுவிரல் கணுவிரலி
லிருக்கப்பட்ட
எவரேகை

நாற்கோணரேகை


ஆள்காட்டி விரல்
சக்கரரேகை

கைவிரல்கணுவிரலி
லிருக்கப்பட்ட
எவரேகை

நீட்டு கீத்துரேகை


நடுவிரலிலிருக்கும்
சங்கு எவரேகை

நீட்டு கீத்துரேகை


பவுத்திரவிரல் சக்
கரரேகை

நீட்டு கீத்துரேகை

ஆயுள்ரேகை


சிறியவிரல் பவுத்திர
ரேகை

நீட்டு கீத்துரேகை

உள்ளங்கைஇடப்பக்கரேகை

புத்திரரேகை

உள்ளங்கை வலப்பக்
கம் ஸ்திரீசின்ன
ரேகை

சீபசுவஸ்திக ரேகை

களையும், அவற்றின் பலாபலன் யோகம் முதலியனவற்றையும் தெளிவாய்க் கூறுவேன் கேட்பாயாக எ-று. 52

### திரிகண்ட ரேகையின் பலன்

கேளப்பா திரிகண்ட ரேகையொன்று
கேவலமா இருக்குமப்பா மைந்தாகேளு
ஆளப்பா ஆள்காட்டி விரலிலேதான்
அன்பான மால்வரைக்கு கீழேநிற்கும்
நாளப்பா நன்மையுள்ள ரேகைமைந்தா
நலமாக இருவரையும் மூன்றுகோணம்
வாளப்பா திரிகோணத் திருக்கும்பாரு
வண்மையுள்ள ரேகையின் வகைசொல்வேனே.

(இ-ள்) ஓ முனிவர்களே! திரிகண்டரேகை என்பது ஒன்றுளது. அதனது விருத்தாந்தங்களையும் கூறுவேன் கேட்பாயாக. மேற்படி ரேகையானது எவ்விடம் இருக்குமெனில்? தத்தமது அஸ்தத்திலுள்ள ஆள்காட்டி விரலிலும், மால்விரலாகிய நடுவிரலுக்கு கீழ்பாகமுமாய் இரண்டு விரலுக்கு மத்தியில் திரிகோண வடிவமாய்க் காணப்படுவதாகும். ஆனதால், அந்த ரேகையினது விருத்தாந்தங்களைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? மேற்படி ரேகையானது மிகவும் நன்மையைத் தரத்தகுந்த ரேகை என்று அறிவாயாக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன ரேகையானது நடுவிரலின் கீழ்பாகத்தில் உண்டாகி, ஆள்காட்டி விரலில் முக்கோணம்போன்று ஏறிச்செல்லும் தன்மையுடையதெனக் கொள்க. 53

சொல்லுவே னிந்தநல்ல ரேகைதானும்
சொல்லுவதற் கிதன்பெருமை துலங்கக்கேளு
அல்லுவேன் இவன்பிறந்த யோகவாழ்வு
அன்பாக சொல்லுகிறேன் அறிவாய்க்கேளு
நல்லுவேன் இவன்பிறக்கும் போதுமைந்தா
நலமான இவன்மாதா வருத்தப்பட்டு
இல்லுவேன் ஆறுநாள் துயரப்பட்டாள்
இயல்பான மைந்தனிவன் பிறந்திட்டானே.

(இ-ள்) ஓ முனிவர்களே! மேற்கூறியவண்ணம் ரேகை அமையப் பிறந்தவர்களது யோகத்தின் அளவையும், பெருமை முதலியனவற்றையும், எவரும் அறியும்வண்ணம் தெளிவாய்ச் சொல்லுவேன். கவனமாய்க் கேட்பீர்களாக. எப்படியெனில்? இந்த ஜாதகன் பிறந்த காலத்தில் இவன் தாயானவள் 6-நாள் வரையில் வெகுவாய் கஷ்டப்பட்டு இந்த ஜாதகனைப் பெற்றாள் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இவன் தாயானவள் இச்சாதகனைப் பெறுவதற்கு 6-நாள் வரையில் வெகுவாய் கஷ்டப்பட்டு இந்த ஜாதகனைப் பெற்றாள் என்பது கருத்து. 54

பிறந்திடும்போ திவன்பிதா வீட்டிலில்லை
பின்னைபதி னெட்டுநாள் கழித்துவந்தான்
அறிந்திடும் பிறந்தவெட்டா நாளிற்பாம்பு
ஆண்மையுள்ள பாட்டனைத்தான் கடித்துமாண்டான்
பொறிந்திடும்போதி லிவன்பிறந்த பின்னையப்பா
போதமுள்ள பிதாவுக்கே அலைச்சலாச்சு
சறிந்திடும்போ திவனுக்கு மூத்தபேர்கள்
சற்சனரா யாணொன்று பெண்ணொன்றுமே.

(இ-ள்) இந்த ஜாதகனானவன் பிறந்த காலத்தில் இவனது பிதா தன் வீட்டில் இல்லையெனவும், இந்த ஜாதகன் ஜனித்த 8-ஆம் நாளில் இவனது பாட்டன் பாம்பு கடித்து இறந்துபோனான் என்றும், இந்த ஜாதகன் பிதாவுக்கு, இவன் பிறந்த பிறகே பல அலைச்சலும் கஷ்டங்களும் உண்டாயின வென்றும், இவனது மூத்த பிறவிகள் 2-எனவும், அவற்றுள் ஆண்-1, பெண்-1 எனவும், அவர்கள் மிக்க சற்சனர்கள் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்து என்னவெனில்? இவன் பிறந்த 8-ஆம் நாள் பாட்டனைப் பாம்பு கடித்து இறந்துபோனான் எனவும், பிதாவுக்கும் கஷ்டம் உண்டாயினவென்றும், முன் பிறந்தவர்கள் ஆண்-1 பெண்-1 எனவுங் கூறுவாராயினர். 55

ஒன்றானே இவன்பிறவி ஏழுபேராம்
ஓகோகோ இவன்வாழ்வு உகந்துசொல்வேன்
நன்றான நான்முகவனார் வகுத்தபடியே
நன்மையாய் நானுரைப்பேன் னன்றாய்க்கேளு
வன்றான வகையுடனே சொல்வேன்மைந்தா
வண்மையாய் இவன்வீட்டிற் பொருள்பெருக்கும்
குன்றாத குவலயத்தி லிவனைப்போலே
குலமான கோத்திரத்தின் பலத்தினாலே.

(இ-ள்) இந்த ஜாதகனது பிறவி என்னும் சகோதர சகோதரிகள் மொத்தம் ஏழுபேர் எனவும் கூறுக. மற்றும் இந்த ஜாதகனுக்கு பிரம்மதேவனால் விதிக்கப்பட்ட யோகம் முதலியவற்றைக் கூறுவேன் கவனமாய்க் கேட்பீர்களாக. எப்படியெனில்? இந்த ஜாதகன் இப்பூமியின்கண் மிக்க மேம்பாடுடைய கோத்திரத்தில் பிறந்தவனான விசேஷத்தால் இவன் இல்லத்தின்கண் அனேக பொருள்கள் நாளுக்குநாள் உண்டாகும் எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன் பிறந்த குணவிசேஷத்தால், இவன் இல்லத்தின்கண் நாளுக்குநாள் பொருள் மேம்பாடுண்டு என்பது கருத்து. 56

பலனென்ன இந்தநல்ல ரேகைகண்டால்
பக்குவமாய் ஸ்திரீயாகப் பிறப்பதாகும்
நலமென்ன இவன்பிறந்த போதுமைந்தா
நன்மையுள்ள பிதாவுக்கு நாசமாகும்

குலமென்ன கூட்டுதலைச் சொல்லக்கேளு
குவலயத்திற் சொல்லுகிறேன் குணத்தைமைந்தா
வலமென்ன வண்மையினால் வரலாறெல்லாம்
வண்மையுடன் சொல்லுகிறேன் வரிசைகேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! திரிகண்டரேகை என்பது தமது அஸ்தத்தின்கண் அமையப் பிறந்தவர்களது பலனாவதென்னவெனில்? மேற்படி ரேகை யமையப் பிறந்தவர்கள் ஸ்திரீயாய் ஜனிக்கவேண்டியவர்களென்றும், பிறந்தகாலத்தில் இவனது தந்தைக்குப் பற்பல பொருள் நாசமாகும் எனவும், மற்றும் எக்காலத்தில் யோகங்கூடும் என்பதையும், வருங்காலங்களில் அனுபவிக்கவேண்டிய பலாபல விசேஷங்களையும் உள்ளதை உள்ளவாறே கூறுவேன் கவனிப்பீர்களாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ரேகையில் பிறந்தவர்கள் ஸ்திரீகள் எனவும், ஸ்திரீயாய் பிறக்கவேண்டியதே ஆணாய்ப் பிறந்தான் எனவும், முதலில் பிதாவுக்கு பல நஷ்டமுண்டெனவும், பிற்காலம் யோகமுண்டெனவும் கூறினர். யோக விவரம் பின் வருமாறு. 57

கேட்கவே திரிகண்ட ரேகைமைந்தா
கேவலங்க ளுள்ளதின் கெடுதிசொல்வேன்
தாட்கவே தாரணியில் மனிதர்காணூர்
தயாபரியாள் மனோன்மணித்தாய் தயவாய்சொல்வேன்
வாட்கவே வண்மையுள்ள மைந்தனுக்கு
மகத்தான கண்டமெட்டு யோகம்நாலு
பாட்கவே இவன்வயதோ றெழுபத்தைந்தின்
பாங்கான சக்கரத்தி னமைப்புகேளே.

(இ-ள்) ஓ மாந்தர்களே! திரிகண்டரேகை என்பது தமது அஸ்தத்தின்கண் அமையப் பிறந்தவர்களது நன்மை தீமை என்னுமவற்றை, ஸ்ரீ உமாதேவியாரது கருணையால் கூறுவேன் கேட்பாயாக. என்னவெனில்? இந்த ஜாதகன் தன் வாழ்நாளில் தனக்குச் சொந்தமாகிய பந்துக்கள் எல்லோரையும் துலைத்துவிட்டுத் தனியாய் நிற்பன். மற்றும் இவனது ஆயுள் முடிவுக்குள் 8-விதமாகிய கெண்டாதி கெண்டங்கள் உண்டாகும். மற்றும் யோகங்களிலோ நான்கு விதமான யோகமுண்டு. இதுவன்றி இவனது அஸ்தத்தின்கண் உள்ள ரேகை சக்கரத்தின் அமைப்புப்படி வயது-75 எனவும் நிச்சயமாய்க் கூறுவாயாக எ-று. 58

அமைப்பான இவனுக்குத் தாரந்தானும்
அன்பான பதினேழில் முடியும்பாரு
இமைப்பான இவன்வயது முப்பதுக்குள்
இயல்பான குழவிகளு மூன்றுண்டாமே
வமைப்பான இவன்வயதோ ரிருபத்தெட்டில்
வண்மையுள்ள பூமிகொள்வான் மைந்தன்றானும்
உமைப்பான இவனுடைய வாழ்வனேகம்
உண்மையுடன் வாழ்ந்திருப்பா னுறுதிபாரே.

(இ-ள்) மேற்கூறிய வண்ணமே இவனது அஸ்தச் சக்கரத்தின் அமைப் பின்படி இவனுக்கு மனைவிமார் இருவர் எனவும், விவாகமானது இவன் வயது 17-ல் நடக்கும் எனவும், வயது 30-க்குள்ளேயே மூன்று பிள்ளைகள் உண்டாவார் எனவும், வயது 28-ல் தனக்குச் சுயார்ச்சிதமாகிய பூமி முதலியன அநேகமாய்க் கொள்வான் என்று கூறுவதுடன், பற்பல விதமான யோக விசேஷங்கள் உடையவனும், உண்மை உடையவனுகவும் வாழ்ந் திருப்பான் எனத் திண்ணமாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் வயது 28-முதல் யோகமுண் டாகும் எனக் கூறியதையறிக. 59

### கபிலேசிந்து ரேகையின் பலன்

பாரப்பா இன்னமொரு ரேகைதானும்
பாங்கான ரேகையதைப் பகரக்கேளு
ஆரப்பா கபிலேசிந்து ரேகையொன்று
அன்பாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
கூரப்பா குணமுள்ள ரேகைதானும்
குணமாகச் சொல்லுகிறேன் கூறக்கேளு
காரப்பா கபிலேசிந்து ரேகைதானும்
கனமாகச் சொல்லுகிறேன் கவனம்கேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இன்னுமொரு ரேகையுண்டு, அவை எல்லா வற்றிலும் சிறந்ததாகும். என்னவெனில்? மேற்படி ரேகையின் பெயர் கபிலேசிந்துரேகை எனப்படும். மேற்படி கபிலேசிந்துரேகை என்பது தனது அஸ்தத்தின்கண் அமையப் பிறந்தவர்களது குணகுணத்தையும், யோகம், திசை முதலியவற்றையும் தெளிவாய்க் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் கபிலேசிந்துரேகை என்பது மிக்க நன்மை யுடையதென கூறினர். அதன் விவரங்களைக் கீழ்வரும் செய்யுளால் விளக்குவார். 60

கேட்கவே மால்விரலின் கீழேநிற்கும்
கேவலமாய் கபிலேசிந்து ரேகைமைந்தா
ஆட்கவே யாறுபுள்ளி இரண்டுரேகை
அன்பாக இருகோண மாயிருக்கும்
வாட்கவே யிவன்கையி லிருக்குமாகின்
வளமான வாலேசன் னியாசியாவான்
தாட்கவே தயவுள்ள சீஷனப்பா
தன்மையுள்ள மைந்தனிவன் தயவாய்க்கேளே.

(இ-ள்) மேலே சொன்ன கபிலேசிந்துரேகை என்பது எவ்விடம் இருக்குமெனின்? மால்விரல் என்னும் நடுவிரலுக்குக் கீழ்பாகத்தில் இரண்டு ரேகை வடிவமாயும், ஆறுரேகை வடிவமாயும், இருகோண வடிவமாய் அமைந் திருக்கும். இவ்வாறு தமது அஸ்தத்தில் அமையப் பிறந்தவர்கள் வாலிபகால

சன்னியாசியும் மேம்பட்டவன் எனவுங் கூறவதுடன், தனது குருவிடம் அடங்கிநடக்கத்தகுந்த சீஷனும், தயவுதாக்ஷண்யமுமுடையவனும் ஆவான் எனத் திண்ணமாய்க் கூறுக எ-று.

(வி - ரை) நடுவிரலுக்குக் கீழ்பாகத்தில் ஆறுபுள்ளிகளும், இரண்டு ரேகையும், இருகோண வடிவமாய் அமைந்திருப்பதே கபிலசித்துரேகை எனவும், இவ்வாறு ரேகையுடையவர்கள் வாலிப சன்னியாசி என்றனர். விவரம் கீழ்வருவனவற்றால் அறிக. 61

கேளடா இவன்றனு முன்னேமைந்தா
கேவலமா முற்சனனந் தாரோவென்னில்
நாளடா தேவரிலே ஒருவனப்பா
நலமாக மானிடனாய்ப் பிறந்தான்பாரு
ஆளடா ஆண்மையுள்ள மைந்தனாகும்
அப்பனே இவன்பிறவி யடுத்துசொல்வேன்
வாளடா வண்மைதனை எல்லாமைந்தா
வண்மையாய்ச் சொல்லுகிறேன் வரிசைகேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! மேற்கூறிய ரேகை அமையப் பிறந்தவன், தன் முன்ஜென்மத்தில் எவரெனில்? தேவர் கூட்டங்களில் ஒருவனாகி இருந்து இச்ஜென்மத்தில் மானிடனாய்ப் பிறந்தான் என்பதை அறிவாயாக, இந்தசென்மத்தில் இந்த ஜாதகனானவன் மிக்கவண்மையுடையவன் எனவும் கூறுக. ஆனதால் இந்த ஜாதகனது வருகால விசேஷ வாழ்க்கை, யோகம், முதலியனவற்றைத் தெளிவாய்க் கூறுகிறேன் கேட்பீராக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜதகன் தேவர்களில் ஒருவனாகி இருந்தான் என்றும், இச்சனனம் மானிடனாய்ப் பிறந்தான் என்றும் கூறினார். வருவினையின் விசேஷங்களைக் கீழ்வருவனவற்றால் அறிக. 62

கேளப்பா இவனுடைய யோகமைந்தா
கேட்பதற் கிவன்சன் னியாவான்
தாளப்பா தாரணியில் ரிஷிகள் மெச்சும்
சாதுரிய முள்ளதொரு சதுர்த்தனாகும்
வாளப்பா வண்மையுள்ள மைந்தனப்பா
வரிசைகளைச் சொல்லவுந்தான் முடியாதாகும்
ஊளப்பா உண்மைபெற்ற மைந்தனாகும்
உறுதியாய் இவனேழாங் கெற்பமாமே.

(இ-ள்) ஓ முனிவர்களே! கேளுங்கள். இந்த ஜாதகனானவன் தனது வாழ்நாட்களில், இப்பூமியின்கண் உள்ள மேலான தவசிரேட்டர்களான ரிஷிக்கூட்டங்கள் மெச்சத் தகுந்த பெரியசந்நியாசியும், சாதுரியம், அழகு, முதலியன உள்ளவனாவான். இதுவன்றி, மற்றெல்லோரும் மெச்சத் தகுந்தவனும் ஆவன். மற்றும் இவனது வாழ்க்கை விசேஷங்கள் எவருங் கூறவியலாத மேலான வாழ்க்கை யுடையவனாவன். இந்த ஜாதகன் மிக்க

உண்மை யுடையவனும் இருப்பான். மேலும் இந்த ஜாதகன் ஏழாவது கெர்ப்பம் என்றுந் தெரிவாயாக எ-று. 63

கெர்ப்பமடா இவன்றானு மேழாங்கெற்பம்
கேவலமாய் இவன்பிறந்தான் சதையந்தன்னில்
மெர்ப்பமடா மேன்மையுட னிவன்றானப்பா
மேன்மையாம் மதிவார மகரமாதம்
விர்ப்பமடா இவன்யோகம் ராசயோகம்
விவேகமுள்ள சற்குணனும் பெரியோர்மெச்சும்
உர்ப்பமடா உயற்சியுள்ள பாலனப்பா
உத்தமனும் வெகுநாளாய் வாழுவானே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகன் ஏழாவது கெற்பம் என்று கூறுவதுடன், மகரமாதமாகிய தைமாதத்தில், மதிவாரமாகிய திங்கட்கிழமையில் சதய நக்ஷத்திரம்கூடிய சுபதினத்தில் பிறந்தான் எனவும், இவனுக்கு மேலான ராஜயோகம் உண்டாகும் எனவும், விவேகமுடையவனும், பெரியோர் மெச்சத்தகுந்தவனும், யுக்தி, புத்தி முதலியவற்றில் மிக்க மேம்பாடு உடையவனும், உத்தமகுணம் உடையவனும், அநேகநாள் வாழத்தகுந்தவனும் ஆவான் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன், தைமாதம், திங்கட்கிழமை, சதய நக்ஷத்திரம் கூடிய நாளில் பிறந்தான் என்றனர். யோக விவரம் பின் வருமாறு. 64

வாழுகின்ற இவன்வயது பதினேழுக்குள்
வண்மையுடன் பிதாவுந்தா னிறந்தான்பாரு
நாழுகின்ற நாயகனு நன்மைபெற்று
நலம்பெறவே வாழுவான் நன்மையாக
ஆழுகின்ற இவன்தானும் வாலசன்யாசி
அன்பான யோகீஸ்பர னாகிப்போவான்
தாழுகின்ற சற்சனர்கள் தயவினாலே
தங்கைபெற்ற மைந்தனிட சார்புகேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகன் பிறந்த வயது 17-க்குள் இவனது அருமைப் பிதாவானவன் இறந்துபோவான் எனவும், மேற்படி வயது 17-க்குமேல் சகல சௌபாக்கிய யோகங்களும் உடையவனாகி வாழ்வான் எனவும், இந்த ஜாதகனானவன் வால சந்நியாசி எனவும், யோகீஸ்வரனாகித் திரிவன் எனவும், நல்ல மேலான சர்ஜனர்களுடைய உதவி தயவு முதலியன உடையவனாகி வாழ்வான். ஸ்ரீ லக்ஷ்மிதேவியினது கிருபையால் உண்டாகிய இப்பாலனது விஷய யோகங்களை இன்னும் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் வயது 17-ல் மறிப்பானாயினும் 17-க்குமேல் யோகமுடையவனும், யோகீஸ்வரனாயும், சந்நியாசியாயும் இருப்பான் என்றனர் விவரம் கீழ்வருமாறு. 65

கேளப்பா இவன்றானு முற்பிறப்பில்
　　கிருபையுள்ள அகஸ்தியர்க்கு சிஷனாகும்
வாளப்பா வண்மையுட னனேககாலம்
　　வரிசையாய்ப் பணிவிடைகள் செய்துவந்தான்
ஆளப்பா அப்படியே தவங்கள்செய்து
　　அன்றவனும் வரம்வாங்கி யுலகத்துள்ளே
வீளப்பா விமலர்பதம் பணிந்துநல்ல
　　விகற்பமற்று வந்திவனும் பிறந்தானன்றே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ஜாதகனானவன் தனது முன் ஜன்மத்தில், அகஸ்திய மகாமுனிவருக்கு அனேகநாள் சிஷனாக இருந்து உண்மையும் பயபக்தி விஸ்வாசங்களுடனும் பணிவிடை செய்து வந்தவனாகும். இவ்வாறு இருந்தபின் அனேகநாள் தவம் முதலியனவற்றைச் செய்து, அத்தவத்தால் வரப்பிரசாதம் பெற்றும், ஸ்ரீ சிவபிரானது திருத்தாமரைகளைப் பணிந்துமிருந்து, இச்சென்மத்தில் மானிடனாய்ப் பிறந்து வந்தான் என்று கூறுவாய் எ-று.

(வி-ரை) தனது முன் ஜன்மத்தில் அகத்தியர் சிஷனாக இருந்தும், ஸ்ரீ சிவபிரானை வணங்கியும், வரம் வாங்கி இச்சென்மத்தில் மானிடனாய்ப் பிறந்தான் என்பது கருத்து. 66

அன்றெனவே இவன்வய திருபத்தைந்தில்
　　அன்பாகத் தவசியாய்ப் போவானன்றோ
நன்றெனவே இவன்றானும் ரசவாதந்தான்
　　நலமாகத் தொழின்முறைகள் நடத்துவான்பார்
குன்றெனவே குவலயத்தி லிவனைப்போலே
　　குணமுள்ள மைந்தனில்லை கூறக்கேளு
அன்றெனவே இவன்வயது முப்பத்தாறில்
　　அன்பான மாதாவு மிறப்பாள்பாரே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனனாதி வயது 25-ல், ஸ்ரீ சிவபிரான்மீது விருப்பம் கொண்டவனாகி தபசியாய்ப் போவான் எனவும், மேற்படி தபசியாய்ச் சென்றபின்பு, ரஸவாதத் தொழில் முதலியனவற்றை நடாத்தி மேன்மை பெறுவான் எனவும், இப்பூமியின்கண் இவனைப்போன்ற குணம் அமைந்த உத்தமன் வேறு ஒருவரும் இல்லையெனவும், இவன் வயது 36 ல் இவனது அருமைத் தாயானவள் இறந்துபோவாள் எனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) வயது 25-ல் சந்நியாசியாவன் எனவும், 36-ல் தாய் மறிப்பாள் என்பதும் கருத்து. 67

பார்க்கவே யிவனுடைய யோகவாழ்வு
　　பாங்கான கெவனசித்தி யாகிப்போவான்
ஏர்க்கவே யஷ்டமாசித்தி யெல்லாம்
　　எம்பெருமா னருளாலே நடத்துவான்பார்

தார்க்கவே சண்முகன்தன் அன்புகொண்டு
சதாபூசை செய்தனன்பார் தரணிமீதில்
கூர்க்கவே யிவன்பூஜா பலத்தினாலே
குணமுள்ள பாலனென்று கூறுவோமே.

(இ - ள்) இந்த ஜாதகனது யோகம் வாழ்வு முதலியன மேம்பாடுடையவனாயும், சகலமும் சித்தியுடையவனாய், ஸ்ரீஎம்பிரானது கிருபாகடாக்ஷத்தால் அஷ்டமாசித்தையும் அடையத்தகுந்தவன் எனவும், ஸ்ரீசண்முகக்கடவுளின் மீது மிக்க பிரியமுடையவனாய், இப்பூமியின்கண் எக்காலும் நீங்காது விருப்பமுடையவனாய் பூஜைசெய்து வந்தான் எனவும், மேற்படி சிவசண்முகக்கடவுளினது பூஜைசெய்து வந்த விசேஷத்தால், இச்சாதகன் மிக்க குணமுடையவனும், மேன்மையுடையவனும் ஆவான் எனக் கூறுவாயாக எ-று. 68

கூறுவோ மிவனுடைய யோகவாழ்வும்
குணமாக நடக்குமது கூர்ந்துசொல்வேன்
ஆறுவே னஷ்டமாசித்தி யென்றும்
அன்பான பாலனுக்கே யாய்ந்துசொல்வேன்
மீறுவேன் சத்துருவும் பிணிகளில்லை
மேதினியில் வந்ததொரு வினைகள்தீரும்
வேறுவினை யில்லைமைந்தா இவனுக்கப்பா
வெகுசுருக்காய் சொல்லிவிட்டேன் வெண்மையாமே.

(இ-ள்) இன்னும் இந்த ஜாதகனது யோகம், வாழ்வு, முதலியனவற்றைக் கூறவேண்டுவதெனின்? சகல வாழ்வும் பொருந்தியவனாகவும், அஷ்டமாசித்தையும் கற்றறிந்தவனாகவும் வாழ்வான் எனக் கூறவேண்டுவதுடன், இவனது வாழ்நாட்களில் சத்துரு இல்லாதவனும், பிணியில்லாதவனும், எவ்விதத் தீமையுண்டாயினும் அடிக்கடி நீங்கி சுகித்திருப்பவனும், வேறு எவ்விதமான பிணி முதலியனவும் உண்டாகமாட்டாதெனவும், கபிலைசிந்துரேகையிற் பிறந்தவர்களுக்குச் சுருக்கமாய்க் கூறுவாயாக எ-று. 69

### பலவிந்த ரேகையின் பலன்

ஆகவே யின்னமொரு ரேகைமைந்தா
அறிந்தமட்டுஞ் சொல்லுகிறே னன்பாய்க்கேளு
பாகவே பலவிந்த ரேகையென்னும்
பாங்கான ரேகையொன்று பகரக்கேளு
ஏகவே மால்விரலில் ஏறிநிற்கும்
இருகீறு மூன்றுபுள்ளி இசைந்துநிற்கும்
வாகவே வையகத்தி லிந்தரேகை
வரிசையாய்க் கண்டாக்கால் மைந்தாகேளே.

(இ-ள்) ஓ மானிடர்களே! இன்னுமொரு ரேகையுண்டு. அதன் விருத்தாந்தங்களை என்னால் அறிந்தவரையில் சொல்லுகிறேன் கவனிப்பீர்களாக. எவரும் புகழத்தக்க இந்த பலவிந்தரேகை என்பது எவ்விட மிருக்குமெனின்?

மாம்விரல் என் நடுவிரலில் இரண்டுகீற்று ரேகையாயும், மூன்றுபுள்ளிகளா யும் ஏறிநிற்கும் தன்மையுடைய தாகும். இவ்வாறு பலவிந்தரேகை என்பது மேற்கூறிய வண்ணம் அமைந்திருக்குமே யாமானால், அதனது விவரங்களைக் கூறுவேன் கேட்பீர்களாக எ-று. 70

கேட்பதற்குப் பலவிந்தரேகைமைந்தா
கேவலமா யணிவிரலி லிருக்கும்பாரு
வாட்பதற்கு மால்ரேகை யுடனேசேர்ந்து
வளமாக இருக்குமது வண்மைகேளு
நாட்பதற்கு நாயகியாள் கடாட்சத்தாலே
நானிலத்தில் வந்துதித்தான் நளினமாக
மீட்பதற்கு நலமுள்ள யோகமைந்தா
மேலாகச் சொல்லுகிறேன் விரைந்துகேளே.

(இ-ள்) மேலேகூறிய பலவிந்தரேகை என்பது இன்னும் எவ்வாறிருக்கு மெனின்? அணிவிரல் என்னும் மோதிரவிரலிலிருந்து முன்சொன்ன நடு விரல் வரையில் வளர்ந்துசெல்லும் தன்மையுடையதாகும். ஆனதால், அதன் விவரங்களைக் கூறுவேன் கேட்பீர்களாக. எப்படியெனில்? இந்த ஜாதகன் ஸ்ரீசர்வேஸ்வரியினது கிருபாகடாக்ஷத்தால் இவ்வுலகின்கண் ஜனித்து சகல சௌபாக்கியங்களையும் அடையவே ஜனித்தான் என்றும், அளவற்ற யோகமுடையவன் எனவும் கூறவேண்டும். ஆதலால், இவ்வாரான விவரங்களைக் கூறுவேன் கேட்பீர்களாக எ-று.

(வி - ரை) மேற்படி ரேகையானது இரண்டுகீற்று ரேகைகளாயும் மூன்று புள்ளிகளாயும் உண்டாகி நடுவிரலில் ஏறிச்செல்லும் தன்மை யுடையதாகும் என்பது கருத்து. 71

கேளடா இவன்பிறக்கும் போதுமைந்தா
கேவலங்க ளிவன்மனையி லாகுமப்பா
வாளடா வையகத்தி லிவனைப்போலே
வரிசைபெற்ற மக்கள்தா னில்லைபாரு
ஆளடா விவன்பிறந்த வீடுதானும்
அன்பான வடவாச லுள்ளவீடு
தாளடா விவன்பிறக்கும் போதுமைந்தா
தயவான பிதாவுமவ னில்லைபாரே.

(இ-ள்) ஓ மானிடர்களே! இந்த ஜாதகன் ஜனன காலத்தில், இவனது இல்லத்தின்கண் பற்பல கௌரவத்தாழ்வுண்டாகி இருக்கும். பிற்காலத்தில் இப்பூமியின்கண் இவனைப்போன்று சுகத்தை அடையத்தக்கவர்கள் வேறு ஒருவரும் இல்லை எனவும், இந்த ஜாதகன் ஜனித்த இல்லத்தின் வாசலானது வடக்கு நோக்கியதெனவும், ஜனன நேரத்தில் இவனது பிதாவானவன் தனது இல்லத்தின்கண் இல்லையெனவுங் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்து என்னவெனில்? இவன் ஜனனகாலம் இவன் குடும்பமானது கேவலஸ்திதியில் இருக்குமெனவும், பிற் காலம் மிக்க மேம்பாடுடையவன் ஆவான் என்பதும் கருத்தாகும். 72

பாரடா இவன்பிறந்த நாலாமாதம்
பண்பான தாய்மாம னிறந்தான்பாரு
கூரடா யிவன்பிறந்த மூன்றுமாதம்
குணமுள்ள மனையிலே அனலேசாடும்
வேரடா அனல்விழுந்து எல்லாம்போகும்
விகற்பமுள்ள பிதாவுந்தான் வீட்டிலில்லை
சாரடா சற்சனமாய்ப் பின்னேயப்பா
சத்தியவான் மைந்தனென்று சாற்றுசொல்லே.

(இ-ள்) இந்த ஜாதகனானவன் ஜனித்த நான்காம்மாதம் இவனது தாய் மாமன் என்னும் அம்மான் இறந்துபோனான் எனவும், மற்றும் இவன் பிறந்த மூன்றும் மாதத்தில் இவனில்லத்தில் இவன் பிதா இல்லாச் சமயம், அனல் என்னும் நெருப்புப் பிடித்து எல்லாம் சாம்பலாய்ப் போயினவென்றும், அதன் பின்பு இச்சத்தியத்தையுடைய பாலன் சுகத்தை அடைந்தான் என்றும் கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தென்னவெனில்? இவன் ஜனித்த மூன்றும்மாதம் இவன் தந்தையில்லாத சமயம் இவன் வீட்டில் அனல்பட்டு சாம்பலாயின வென்றாலும், பிற்காலம் சகல சம்பத்தும் உடையவன் ஆவன் என்பது கருத்து. விவரம் பின் வருமாறு. 73

சொல்லெனவே இவன்பிறந்த நாளுங்கோளும்
சொல்லுகிறேன் மைந்தாகேள் சூட்சியாக
வெல்லெனவே விமலிதிரி சூலிநீலி
வேதாந்த ஆதித்தாய் விளம்பினாள்பார்
அல்லெனவே யிவன்நாள்தான் சோதியாகும்
அன்னவனுந் திரிதிகையிற் பிறந்தான்மைந்தா
நல்லெனவே கதிரவன்று னுதையநேரத்தில்
நலம்பெறவே பிறந்தனடா நாடிச்சொல்லே.

(இ-ள்) ஓ மானிடர்களே! எல்லவரும் சொல்லத்தகுந்த ஆதித்தாய் என்னும் உலகமாதாவானவளும், விமலியும், திரிசூலியும், நீலியுமாகிய வேதாந்தவல்லியினது கிருபாகடாக்ஷத்தால், இந்த ஜாதகனது ஜனன நாள், நக்ஷத்திரம், கிரகம், முதலியனவற்றைக் கூறுவேன் கேட்பாயாக. எப்படியெனில்? இந்த ஜாதகனானவன் கதிரோன்வாரமாகிய ஞாயிற்றுக்கிழமையில், திருதியைதிதி கூடியசோதிநாளில் பிறந்தான் எனவுங் கூறுக எ-று.

(வி - ரை) இச்செய்யுளால் இந்த ஜாதகன் ஞாயிற்றுக்கிழமையில், திருதிகை கூடியசோதிநாளில் பிறந்தான் என்றனர். மற்றும் விவரம் கீழ் வருமாறு. 74

சொல்லவேயிவன்றனு மைப்பசியிற் பிறந்தான்
சொற்குறிக ளனேகமுண்டு இன்னங்கேளு
நல்லவே இவன்வயது நாற்பத்தெட்டில்
நலமாகப் இறந்தாண்டா நாடிக்கேளு

அல்லவே யிவனுடைய வாயுசுதான்
அவ்வளவே யென்றுநீ யாய்ந்துசொல்லு
வல்லவே இவன்வயது பதினேழுக்குள்
வளமாக விவாகமது முடியுமென்றே.

(இ-ள்) மற்றும் இந்த ஜாதகனது ஜனன மாதமானது ஐப்பசிமாதம் எனவும் கூறுதல் வேண்டும். ஆனதால், இந்த ஜாதகனுக்கு யோகாவயோ கங்கள் அனேகமுண்டு எனவும் கூறலாம். அவையாவன:—இந்த ஜாதகன் ஜனித்த 48-ஆம் வயதில் நடக்கவேண்டியதென்னவெனில்? மேற்படி 48-ஆம் வயதில் இந்த ஜாதகன் கட்டாயமாய் மரணமாவான் எனவும், இந்த ஜாதகன் வயது 17-க்குள்ளேயே கலியாண சுபசோபனுதிகள் முடியும் எனக் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கியகருத்தாவதென்னவெனில்? இவனுக்கு ஏற்பட்ட பூரண வயது-48 எனவும், 17-ஆம் வயதுக்குள்ளேயே விவாகாதி சுபசோபனுதிகள் முதலியன நடக்கும் என்பதேயாகும். மற்றும் புத்திரர் முதலிய யோகாவயோகங்களைக் கீழ்வருவனவற்றால் காண்க. 75

அன்னவே யிவனுக்கோ ராறுபிள்ளை
அன்பாகப் பிறக்குமென் றுய்ந்துசொல்லு
பின்னவே இவனுக்குப் பெண்கள்நாலு
பிரியமுள்ள ஆணிரண்டு பிறக்கும்பாரு
உன்னவே இவனுக்குத் தாரம்ரெண்டு
உண்மையாய் முடியுமென் றுறுதிசொல்லு
கன்னவே யிவனுக்கோ மந்திரமூலம்
காட்சியாய் நடக்குமென்றே கருதிச்சொல்லே.

(இ-ள்) ஓ மாணிடர்களே! இந்த ஜாதகனுக்குப் பிறக்கப்போகும் புத்திர புத்திரிகள் மொத்தம்-6 எனவும், அவற்றுள் பெண் நான்கும், ஆண்கள் இரண்டும் உண்டாகும் எனவும், இவனுக்கு மனைவிமார்கள் இருவர் எனவும், மேற்படி மனைவிகள் ஓமகுண்டத்தின் சாக்ஷியாய் கலியாணமாகவே முடியும் என நிச்சயமாய் கூறுக எ-று.

(வி-ரை) ஓமகுண்டத்தின் சாக்ஷியாய் நடக்கும் என்பது, விவாக காலத்தில் அக்கினி ஓமம்செய்வதைக் குறிக்கும். ஆதலால் இந்த ஜாதகனுக்குச் சகலரும் அறியும்வண்ணம் நடக்கும் விவாகம் இரண்டு என்பதாம். மற்றும் ஆண்-2, பெண்-4 என்பது அறியத்தகுந்தது. 76

சொல்லவே இவனுடைய யோகவாழ்வு
சொல்வதற்கு சகலமுநான் சுருக்கிச்சொல்வேன்
அல்லவே ஆஸ்தியுள்ள பாலகன்றன்
அன்பான ரேகையிட அறிவுசொன்னேன்
வெல்லவே யிவன்பிறந்த நாளுங்கோளும்
மேலான யோகமுதல்வாழ்வு சொன்னேன்
நல்லவே நன்மையுடனெல்லாஞ் சொன்னேன்
நன்மைபெற்ற மைந்தனென்று நாடிச்சொல்லே.



(இ-ள்) இந்த ஜாதகனது யோகா வயோகங்கள் யாவையும் சுருக்கமாய் எல்லோரும் அறியும்வண்ணம் கூறிவிட்டேன். மற்றும் இந்த ஜாதகனது அஸ்தத்தின்கண் அமைந்துள்ள ரேகையினது லக்ஷணத்தால், இவன் மிக்க ஆஸ்தியை உடையவன் எனவும், இந்த ஜாதகன் பிறந்தநாள் நக்ஷத்திரம் யோகம் முதலியனவற்றையும், யோகம், வாழ்வு முதலியனவற்றையும் கூறிவிட்டேன். பொதுவாய் இந்த ஜாதகன் சகல நன்மைகளேயும் அடையத் தகுந்தவனுகியும், சகல பாக்கியத்தையும் உடையவனுகவே வாழ்ந்திருப்பான் எனவுங் கூறுக எ-று.

(வி-ரை) இந்த ரேகையின் பொதுப்பலன் என்னவெனில்? வயது-48 என்றும், யோகமுடையவன் என்பதும் கருத்தாகும். 77

நாகவிந்த ரேகையின் பலன்

சொல்லவே யின்னமொரு ரேகைமைந்தா
சொல்லுகிறே னிதன்விபரந் துலங்கக்கேளு
அல்லவே ளுகவிந்த ரேகையொன்று
அருமையாய்ச் சொல்லுகிறேன் அன்பாய்க்கேளு
நல்லவே ளுகவிந்த ரேகையானுல்
நலமாகச் சொல்லுகிறே ளுய்ந்துகேளு
வல்லுவே ளுகவிந்தம் வரலார்தானும்
வண்மையாய்ச் சொல்லுகிறேன் மார்க்கங்கேளே.

(இ-ள்) ஓ எனது மைந்தர்காள்! இன்னுமொரு ரேகையுண்டு. அதன் விவரத்தையும் கூறுவேன் கேட்பீராக. எவ்விதமெனின்? நாகவிந்த ரேகை என்று ஒன்றுளது. அதனது விவரங்களேயும் என்னுல் அறிந்தவரையில் சொல்லுகிறேன் கேட்பீர்களாக. மேற்படி நாகவிந்த ரேகை என்பது எல்லாவற்றிலும் தனிமையானதாகும். ஆதலால் அந்த ரேகையினது வரலாற்றைச் சொல்லுகிறேன் கேட்பீர்களாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் முக்கிய கருத்தாவது என்னவெனில்? நாகவிந்த ரேகை என்பது மற்றெல்லா ரேகைகளேவிட தனிப்பட்டது என்றும் கூறினர். அதன் விவரம் கீழ்வருவனவற்றால் அறிக. 78

கேளப்பா மால்விரலின் கீழேமைந்தா
கேவலமாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
ஆளப்பா ரெண்டுபுள்ளி மூன்றுவட்டம்
அன்பான இதழாறு மிருக்கும்பாரு
வாளப்பா வண்மையுள்ள பாலன்றுனும்
வரிசையாய் நாகவிந்த ரேகைகண்டால்
வீளப்பா ஒன்றுமில்லே தனவானப்பா
விபரமாய்ச் சொல்லுகிறேன் விபரங்கேளே.

(இ-ள்) மேலே கூறியுள்ள மால்விந்த ரேகை என்பது, மால்விரல் என்னும் நடுவிரலின் கீழ்பாகத்தில் இரண்டு புள்ளிகளும், மூன்றுவட்ட ரேகையும் சேர்ந்து ஆறு இதழ்களாக அமைந்திருக்குமெனவும் கூறுக. இவ்வாறு ரேகை அமையப் பிறந்த ஜாதகனது பலாபலன்கள் என்ன

வெனில்? நல்ல மேலான யோகம் உடையவன் எனவும், தன் வாழ்நாளில் எவ்விதத் துன்பமும் இல்லாதவன் எனவும், தனமுடையவனும் ஆவன். ஆனதால் அதன் விவரங்களைக் கூறுவேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) பொதுவாய் நாகவிந்த ரேகையுடையவர்கள் தனவான் எனவும், குறைவில்லாதவன் எனவும் கூறினர். இதன் விவரம் கீழ்வருவன வற்றால் அறிக. 79

கேளடா இவன்பிறந்த மனைதானப்பா
கேவலங்க ளுள்ளதொரு இருமனைக்குள்
நாளடா இருமனைக்குள் தென்பால்வீட்டில்
நலமான இருவாசல் வீட்டிலேதான்
ஆளடா ஆச்சரிய முள்ளவீட்டில்
அன்பான பாலகனும் பிறப்பதாகும்
மீளடா இவன்பிறந்த வாரநாளும்
மிகுவாகச் சொல்லுகிறேன் வியந்துகேளே.

(இ-ள்) ஓ மைந்தர்காள்! இந்த ஜாதகனுனவன் பிறந்த மனையானது பழைய மனை எனவும், அவை இருமனை சேர்ந்தது எனவுங் கூறுக. மேற்படி இருமனையில், இருவாசல்களையுடைய தென்புறமுள்ள வீட்டில் இந்த ஜாதகன் பிறந்தான் எனவும், அப்படிப்பட்ட ஆச்சர்யமாகிய இல்லத் தின்கண் ஜனித்த இந்த ஜாதகனது, நாள், நக்ஷத்திரம் முதலியனவற்றையும் கூறுகிறேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகன், பழையதும், இருமனை சேர்ந்ததும், தென் புறம் உள்ளதுமாகிய இரண்டு வாசலுடைய அறையில் இந்த ஜாதகன் ஜனித்தான் என்பது கருத்து. 80

கேளடா யிவன்பிறந்த நாள்தான்மைந்தா
கேள்வியுள்ள உத்திரத்தில் காலுங்கூடி
நாளடா நன்மையுள்ள நாளிலேதான்
நலமான பாலகன்று ஞுதிக்கேளு
வாளடா வன்மைபெற்ற மைந்தனப்பா
வரிசையுள்ள வெள்ளியடா உதையந்தன்னில்
ஆளடா மார்கழியா மாதந்தன்னில்
இன்பமாய்ப் பிறந்தனடா லக்கினத்தில்.

(இ-ள்) ஓ எனது மைந்தர்காள்! இந்த ஜாதகன் ஜனித்த நக்ஷத்திரம் என்னவெனில்? எவரும் விரும்பத்தகுந்த உத்திர நக்ஷத்திரம் ஒன்றும் பாதத்தில், நன்மையை அடையத்தகுந்த நாளில் இவ்வழகு பொருந்திய ஜாதகனுனவன் ஜெனித்தான் எனவும், மார்கழிமாதம், வெள்ளிக்கிழமை உதயகாலத்தில், தனுசு லக்கினம் கூடிய சுபதினத்தில் பிறந்தவனுனதால், இந்த ஜாதகன் மிக்க யோகபாக முடையவனும், நாளுக்குநாள் மிக்க மேம்பா டுடையவனும் ஆவான் எனத் திண்ணமாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால், இந்த ஜாதகன், மார்கழிமாதம், வெள்ளிக் கிழமை, உத்திர நக்ஷத்திரம் ஒன்றும்பாதம் கூடிய சுபதினத்தில் ஜனன மானுன் என்றும், நாளுக்குநாள் மிக்க யோகமுடையவனும் ஆவான் என்பது கருத்து. 81

லக்கினமே யிவன்பிறந்த நாளுங்கோளும்
ரஞ்சகமா யோகத்திற் பிறந்தபாலன்
சிக்கெனவே யோகம்வந்து பலிக்குமன்றே
சிவசிவா யிவன்யோகம் செப்பப்போமோ
வக்கிரங்க ளிவன்பிறந்த வருஷத்துள்ளே
வளமான மாதாவும் இறப்பாள்பாரு
அக்கினங்க ளிவன்பிறந்த வருஷம்ரெண்டில்
அன்பான பிதாவைத்தான் கொல்வானன்றே.

(இ-ள்) இந்த ஜாதகன் ஜனனமாகிய லக்கின விசேஷத்தாலும், நாள் நக்ஷத்திரம் முதலியவற்றின் விசேஷத்தால் இவனை மிக்க மேலான யோகத்தில் பிறந்தவன் என்றே கூறுதல்வேண்டும். ஓ முனிவர்களே! இந்த ஜாதகனது யோகத்தை எவராலுங் கூறவியலாது. நாளுக்குநாள் மிக்க மேலான ராஜயோகத்தையே அடையத்தகுந்தவன் ஆவன். மற்றும் இந்த ஜாதகன் பிறந்த குணவிசேஷத்தால் இவன் ஜனித்த வருஷம் 1-க்குள், இவனுடைய அருமைத் தாயானவள் இறந்துபோவாள் என்றும், வயது 12-ல் இவனது பிதாவும் இறந்துபோவான் எனவுங் கூறுவாயாக எ-று. 82

அன்றெனவே இவன்றுணு மேகாதேசி
அன்பான மார்கழியிற் பிறந்தபாலன்
குன்றெனவே யிவன்வயது மூன்றரைக்குள்
குலமான இவனிளைய பிதாவுமாள்வான்
நின்றெனவே நிதியோகமுள்ள மைந்தன்
நிச்சயமாய் யிவன்யோக நிகழ்த்துவன்கேள்
சென்றெனவே செம்மையுள்ள மைந்தனப்பா
சேதிசொல்வாள் இன்னமுந்தான் ஆதித்தாயே.

(இ-ள்) இன்னும் கூறவேண்டுமென்னில்? இந்த ஜாதகன், மார்கழி மாதம், ஏகாதசிதிதி, கூடியநாளில் பிறந்தவன். ஆதலால் இவன் ஜனித்த வருடம்-3, மாதம் 6-க்குள் இவனது தந்தையுடன் பிறந்த இளைய பிதாவானவன் இறந்துபோவான் எனவும், இவனது நிச்சயமாகிய யோகத்தைக் கூறுமிடத்து அநேக செல்வமும் யோகமும் உடையவன் எனவும், நாளுக்கு நாள் வாழ்க்கை மேம்பாடுடையவனும் ஆவன், ஓ மாந்தர்காள்! எமது அன்னையாகிய உலகமாதா, இன்னும் கூறிய வரலாற்றை உரைப்பேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) இந்த ஜாதகனது விஷயத்தைப் பொதுவாய் கவனிக்குமிடத்து தன் வாழ்நாட்களில் யோக மேம்பாடுடையவன் என்பதே இச்செய்யுளின் முக்கிய கருத்தாகும். 83

## ஆருவது காண்டம் முற்றிற்று.

---

ஆக காண்டம் 6-க்கு பாடல்-539.

---

# ஏழாவது காண்டம்

ஆதியெனும் பராபரையின் பொருளேயம்மா
அம்பிகையின் வாழ்கௌரி யாதியந்தம்
சோதியெனும் மனோன்மணியே உமையேதாயே
சொற்பெரிய உத்தமியே துலங்குமொழியே
நீதியெனும் பரஞ்சுடரே நிர்மலத்தாய்
நீணிலத்தி லுன்னையல்லாற் றெய்வமுண்டோ
வாதியெனும் வாலைபர மேஸ்வரியே
வர்னவிழிக் கண்ணரசே வஞ்சியாளே.

(இ-ள்) இவ்வுலக மெல்லாவற்றிற்கும் பிரணவப்பொருளாகிய ஆதியாகியும், பராபரவஸ்துவுமாகிய அம்பா! சோதிப்பிரகாசமாய் விளங்காநின்ற மனோன்மணியும், உமாதேவியுமாகிய எனது தாயே! நீதியையுடைய பரஞ்சுடரே! பற்றில்லாத ஏகவஸ்துவே! சகலசாஸ்திரங்களையும் அறிந்த வாலை பரமேஸ்வரியே! பலவர்ணங்களையமைந்த விழியும், பெண்களுக்கெல்லாம் அரசாயும் விளங்காநின்ற உத்தமியே! இப்பூமியில் உன்னை யல்லாது வேறு தெய்வமும் உண்டோ எ-று. 1

வஞ்சியெனுங் கொஞ்சுகிளி வாலைநாயகியே
வாசமுள்ள கந்தமுன் மலர்ப்பாதந்தான்
அஞ்சினே னுன்பாதத் தருளினாலே
ஆரணங்கே பார்வதியே யபிராமியாளே
நெஞ்சிலே உன்பாதந் துதிப்பேன்றாயே
நேரிழையே சோதியம்மா நேமியாளே
பஞ்சைகள்போல் ரிஷிகள் உனைவணக்கஞ்செய்தார்
பத்தினியே உத்தமியே லோகத்தாயே.

(இ-ள்) கொஞ்சத்தகுந்த கிளியினது மொழியையொத்த குரலையும் ஸ்திரீகளுக்கெல்லாம் அரசானவளும், எக்காலத்தும் அழகிய வாலைப்பருவமாகயிருக்கும் எங்கள் நாயகமே! வாசனை நிறைந்திராநின்ற உமது திருப்பாத கமலத்தை மிகவும் வணங்கி அஞ்சுகின்றேன். ஓ பெண்கள் நாயகமே! பார்வதித்தாயே! அபிராமித்தாயே! அழகுடையாளே! சோதிமயமாய் விளங்காநின்ற தேவியே! கற்புடையாளே! உலகமாதாவே! எல்லா ரிஷிக் கூட்டங்களும் உம்மைக்கண்டு பஞ்சைகள் எனக்கூறி உம்மை இடைவிடாது வணங்குகின்றனர். ஓ எனது தாயே! யாங்களும் உம்மை எக்காலும் நீங்காது உமது திருபாதகமலங்களை எமது நெஞ்சினிடமாகத் துதித்து தோத்திரம் செய்கிறோம் எ-று. 2

லோகமெல்லா முன்படைப்பு ஜீவாத்மாவை
நோக்கியே யவர்களைநீ காக்குந்தெய்வம்
ஆகமுதற் புராணபல வேதமெல்லாம்
ஆண்டகுரு உத்தமியே யம்பிகைநீ

வாகவுரி வர்னமொழிக் கண்ணரசேயுந்தன்
மலர்ப்பாதஞ் சரணமென்று வணங்கும்பேர்க்கு
சாகமுதல் தாழ்ப்பவரை வறுமைநீக்கி
சந்தான மீன்றருளுந் தாயேதாயே.

(இ-ள்) இவ்வுலகின் அநேக ஜீவாத்துமாக்களை உண்டாக்கி, அவர்கள் மீது உமது அன்பார்ந்த கிருபாநோக்கத்தை வைத்துக் காக்கத்தகுந்த தெய்வமே, ஆகமம், வேதம், புராணம், முதலிய பற்பல சாத்திரங்களையும் இவ்வுலகின்கண் பரவச்செய்து அருமையுள்ள உத்தமியும், அம்பிகையும் நீயேயன்றோ? அழகிய வர்ணங்கள் அமைந்த விழியினையுடைய சத்தியே! உம்மை அபயமென்று வணங்கி அஞ்சலி செய்வோர்க்கும், எந்நாளும் இடைவிடாது துதிப்போர்க்கும், அவ்வவர்களது வறுமை முதலியனவற்றை நீக்கிச் சந்தானமென்னும் புத்திரசம்பத்தைக் கொடுத்தருளும் எமது அன்னையே எ-று. 3

தாயேநா னுன்பாத மனுதினந்தான்
தப்பாமற் பூசிக்கத் தயவுசெய்வாய்
ஆயென்ற மந்திரத்தை இடைவிடாமல்
அரகரா தோத்திரங்கள் செய்வேனப்பா
வாயென்ற வையகமும் முனையேபோற்றும்
வாக்கருள் முத்தமியே வாலைசோதி
நாயேனு னுனதுதிருப் பாதம்போற்றி
நாயகியே காத்தருளி நலஞ்செய்வாயே.

(இ-ள்) ஓ எனது அன்னையே! உம்முடைய திருப்பாத கமலங்களை எந்நாளும் இடைவிடாது பூஜித்து வணங்கும் அன்பைக் கொடுத்து எம்மை ஆண்டு அருள்புரிவதுடன், ஓ மகாமாயி, என்னும் உம்முடைய திருநாமமாகிய மந்திரத்தை எந்நாளும் இடைவிடாது ஏகமனதாய் உம்மையே தோத்திரம் செய்வேன். இவ்வுலகமெங்கணும் போற்றித் துதிக்கத்தகுந்த ஓ என்தாயே! சோதிமயமாய் விளங்காநின்ற வாலைத்தாயே! நல்வாக்கைக் கொடுத்து அருள் சுரக்கும் உத்தமியே! ஓ நாயகி! உமது மைந்தனாகிய யான் உமது திருத்தாளைப் பலதரம் போற்றிசெய்தேன். ஆதலால் என்னை ஆண்டருளி எனக்கு நல்வினையைத் தரக்கடவாய் எ-று. 4

செய்யவே எந்தனிட தாயேநீயும்
செப்பரிய மனோன்மணியே செல்வயோகி
ஐயமில்லா தெந்தனைநீ யாள்வாய்தாயே
ஆச்சரிய முள்ளவளே ஆரணங்கே
மெய்யவே தாந்தசு ரூபியம்மா
மேன்மையுள்ள கண்மணியே விமலரூபி
தையவே கார்குழலே தாயேயம்பா
தயவுவைத் தருள்புரியுந் தங்கையாரே.

(இ-ள்) எவரும் புகழத்தகுந்த மனோன்மணியும், செல்வத்தைத் தரத் தகுந்தவளும், பற்றில்லாதவளும் ஆகிய என் அன்னையே! எனக்கு கட்டாயமாய் உனது அருளைக்கொடுத்துக் காப்பாற்றக் கடவாயாக. எவரும் கண்டு ஆச்சர்யப்படத் தகுந்த தேவியே! வேதாந்த சொரூபி! அம்பிகா! மேகத்தையொத்த கறுத்த கூந்தலையுடைய எனது அன்னையே! என்மீது உமது அருளை வைத்து ஆதரிக்கக்கடவாய் லக்ஷ்மியே எ-று. 5

தங்கையே யென்பிறவி உமையேதாயே
தாழ்வில்லாப் பெண்ணரசே சர்வசாட்சி
பங்கயம்போல் முகம்படைத்த பார்வதித்தாய்
பத்தினியே பரமனிட பாகம்பெற்றாய்
எங்கணுமாய் நிறைந்ததொரு ஏகரூபி
ஏகாந்த கண்மணியே எம்பிராட்டி
மங்கையெனும் மனோன்மணியே வாலைஅம்பா
மகத்தான மூலமுதற் பொருளானாளே.

(இ-ள்) ஓ என் உடன் பிறவியாய் வந்த தங்காய்! உலகத்திற்கெல்லாம் உமாதேவியுமாய், சகல ஜீவர்களுக்குந் தாயாகி நின்று, எந்நாளும் தாழ்வடையப்பட மாட்டாதவளும், பெண்களுக்கெல்லாம் நாயகமாயும், சகல காரியா காரியங்களுக்கும் சாக்ஷியாகியும், பங்கயத்தையொத்த முகவிலாசமும் உடைய பார்வதிதேவியே! ஓ உத்தமியே! எந்நாளும் ஸ்ரீசாக்ஷாத் பரமசிவனது இடபாகத்தில் இருக்கும் வரத்தைப்பெற்று ஏகாந்த சொரூபமாய் விளங்காநிற்கும் சுயஞ்சோதியே! வாலைத்தேவியாகிய சத்தியே! இவ்வுலகெங்கணும் மூலமாகிய பிரணவப்பொருளாய் அமைந்ததேவீ! எ-று. 6

பொருளென்ற பூரணமாம் சோதித்தாயே
போதமுள்ள சீவர்கட்குச் சீவனாய்
அருளென்ற அனுக்கிரகம் ஆதிசத்தி
ஆதியந்தம் உடல்உயிரும் அனைத்துமானாய்
வருளென்ற வருப்புநீ யேகமும்நீயே
வாகான நலமும்நீ தீமையும்நீயே
சருளென்ற சரஸ்வதிநீ சத்தியும்நீ
சற்குணிநீ உலகமெல்லாம் படைத்தாய்நீயே.

(இ-ள்) ஓ சரஸ்வதியும் சத்தியுமாகிய தேவியே! உலகெங்கணுக்கும் மூலகாரணப் பொருளாகியும், ஜகத் ஜோதிமயமாயும் விளங்கி, சகல ஜீவர்களுக்கும் ஜீவனாகியும், அருளும் அனுக்கிரகமும் தரத்தகுந்த ஆதிசத்தி, ஆதியாகியும, அந்தமாகியும், உடல் உயிர் அனைத்தும் நீயாகியதுடன், சகல வருணாச்சிரமமும் நீயே. ஏகவஸ்துவும் நீயே. நன்மை தீமை என்னும் இரண்டையும் கொடுக்கத் தகுந்தவளும் நீயே. சற்குணம் உடையவளும் நீயே. இவ்வுலகம் எல்லாம் படைத்தருளியவளும் நீயே எ-று. 7

நீயெனவே அண்டமும்நீ பிண்டமும்நீ
நீணிலத்தில் தேவர்முதல் முனிவோரும்நீ
ஆயெனவே அம்மையும்நீ அப்பனும்நீ
ஆனதொரு சுவாதிஷ்டான மூலமும்நீ

தாயெனவே தங்கையும்நீ தாரமும்நீ
தற்பரமே மெய்ப்பொருளே தயவுசெய்வாய்
காயெனவே கனியெனவே மூலமும்நீ
காரணியும் பூரணியும் நீதானுமே.

(இ-ள்) அண்டபிண்டசராசரங்களுக்கும் நீயேயாகி நின்றனை. மற்றும் சகல தேவர், முனிவோர் முதலியவர்களும் நீயாகியே நின்றனை. உலகமெங்கணும் தோத்திரம் செய்யத்தகுந்த மகாமாயியும் நீயே. சகலத்திற்கும் அன்னை தந்தையாகி நின்றவளும் நீயே. மற்றும் சகல ஜீவாத்துமாக்களும் தங்கையாயும் போஷிக்கத் தகுந்தவளானவளும் நீயே. அறுவித தோற்றங்களுள் ஒன்றாகிய சுவாதிஷ்டானத்திற்கு மூலப்பொருளாகியவளும் நீயே. மற்றும் தற்பர சொரூபமாகியும், மெய்ப்பொருளும், காய், கனி முதலியவற்றிற்கும் மூலப்பொருளாகியும், காரணி, பூரணி, முதலிய யாவும் நீயே யாதலால் எங்கள்மீது கிருபை செய்வாயாக எ-று. 8

ஆமெனவே ஐயும்கிலியும் சவ்வும்ஆனாய்
அடிமுடியும் நடுவும்என அமர்ந்தசோதி
ஊமெனவே மகேஸ்வரியும் ஸ்ரீயும்ரீயும்
உத்தமியே அங்கென்றும் உங்மங்கென்றும்
வாவெனவே வவ்வென்றும் சிவ்வென்றும்தான்
வண்மையுள்ள டவ்வென்றும் யவ்வும்என்றே
நாமெனவே நவ்வென்றும் மவ்தானென்றும
நமநம சிவசிவ ராராவென்ன.

(இ-ள்) ஓ உலகமாதாவே! ஐயும் - கிலீம் - சௌவும் என்னும் அக்ஷர சொரூபியாய், அடி, நடு, முடியின்கண் அமைந்த பராசத்தியே! சகல ஜீவர்களுக்கும் உமாமகேஸ்வரியாகியும், ஸ்ரீயும்-ரீயும்-அங்-உங்-மங் என்றும், வவ்-மவ்-சிவ் என்றும், டவ்-யவ்வும் எனவும், நவ்-மவ் என்றும், நம-நம-சிவ-சிவ-ரா-ரா என்னும் அக்ஷரப்பொருளாய், சோதிமயமாய் அமைந்திராநின்ற மகா பரமேஸ்வரியே எ-று. 9

ராராரா நமசிவயரங் ஹங்கென்று
நல்லரீங் ஸ்ரீங்ரக்ஷி ரக்ஷியென்று
பாராராரா நாதாபிந்து ரங்கிசாய
பராபரியே என்பிறவியுன் பாதம்போற்றி
சீராரும் ஸ்ரீம்ஓம் பகவதாநீ
சிவசத்தி உடலுயிரும் ஆனதாயே
தாராரும் ரங்லிங்சிங் வங்கென்று
தாருலகிற் செய்பூசை கொள்ளும்தாயே.

(இ-ள்) ரா-ரா-ரா-நமசிவாய-ரங்-ஹங்-ரீங்-ஸ்ரீங்-ரக்ஷி-ரக்ஷி பரா-ரா-ரா-நாதபிந்துரங்கி-சாய பராபரி, ஸ்ரீம்-ஓம் பகவதா, ரங்-லிங்-சிங்-வங் என்றும், தோத்திரம் செய்யும் பக்தகோடிகளை ஆதரிக்கும் எமது சகோதரியே! சகலர்

களும் உம்மைப் போற்றிசெய்யச் சிறப்பு பெற்றவளும், சிவசத்தி சொரூபமாய் உடல், உயிர், என்னும் இரண்டும் ஒன்றாகி நின்ற உலகமாதாவே எ-று.

(வி-ரை) இதன் விவரமாவது என்னவெனில்? ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் தமது சகோதரியாகிய பரமேஸ்வரியை மேற்கண்டவாறு தோத்திரம் செய்யலானார் என்பதாம். 10

தாய்என்றும் தங்கையென்றும் என்பிறவிநீயே
தார்குழலே சோடசத்தைச் சாற்றுவேன்யான்
ஆய்யென்றும் அம்பிகையே போற்றிசெய்ய
அத்தினுள்ளே அகமாகும் ஆச்சரிப்பாய்
கோய்யென்னும் கொற்றவர்கள் கோகிலாளே
கொம்பனையே என்பிறவி கோவிந்தன்நான்
லாய்யென்னும் லகிரிசிவ சோதிமாதா
ரட்சிக்க அருள்புரிவாய் மாதாநீயே.

(இ-ள்) அழகிய கறுத்துநீண்ட கூந்தலினையுடைய தங்காய்! தாய்க்குத் தாயாகியும், தங்கைக்குத் தங்கையாகியும் நின்ற என் பிறவியே! உன்னுடைய சோடசநாமங்களைச் சொல்லித் துதிக்கிறேன். ஏனெனில்? உம்மை ஆயி என்றும், அம்பிகையே என்றும் போற்றி செய்தால், அவ்வவர்களுடைய மனத்துள்ளிருக்கும் அகங்காரமானது எவரும் ஆச்சர்யப்படும் வண்ணமாய் ஒழிந்துபோமன்றோ. அரசர்களுக்கெல்லாம் தலைமை பூண்டவளே! அழகுடையவளே! என் சகோதரியே! சிவசொரூப சோதிமயமாய் விளங்கும் பராபரியே! கோவிந்தனாகிய என்னை ரக்ஷித்து அருள்புரிவாயாக எ-று. 11

மாதாவே மனோன்மணியே மலர்ப்பாதத்தை
மகத்துவமாய் தோத்திரங்கள் வழுத்துவேன்யான்
ஆதாவே ஆங்ரீங்ஸ்ரீங் என்றுதானே
அருள்புரிவாய் திருப்பாதம் ஆரணங்கே
சாதாவே சற்குணமாம் சவுபாக்கியத்தின்
சண்முகனைப் பெற்றெடுத்த தாயும்நீயே
போதாவின் பூரணியே மெஞ்ஞானத்தி
போற்றிசெய்வேன் காத்தருளும் புண்யத்தாயே.

(இ-ள்) ஓ! உலகமாதாவே! உன்னுடைய மகுத்துவங்களை நின் திருநாமங்களால் சொல்லி உமது அழகிய திருத்தாமரையை வணங்குவேன். எப்படியெனில்? ஓ மனோன்மணியே! ஆங் ரீங் ஸ்ரீங் என்றும் வணங்கி நின்றேன். ஆனதால் உமது திருப்பாதங்களைத் தந்து ரக்ஷிக்கக்கடவாய். ஓ சாதுவே! சற்குணி! சகலசௌபாக்கியங்களையுந் தரவல்லவளே! சிவசண்முகக்கடவுளைப் பெற்ற அம்மணி! உலகமாதாவும் பூரணியும் மெய்ஞானமும் உடையவளே! உம்மை போற்றிவேன் ஆதலால் என்னைக் காப்பாற்றும் பாரம் உன்னுடையதே எ-று. 12

தாயென்றும் உந்தனைத்தான் சோடசத்தின்
தாற்பரியம் உள்ளதாய் தயவாய்எண்ணி
வாயென்றும் ஓம்நம்ஸ்ரீம் பகவதிவாஎன்றும்
மாதாவே பராசத்தி வாவாஎன்றும்

ஆயென்றும் அனுதினமும் துதிப்பேன்தாயே
அற்புதமே மெய்ப்பொருளே ஆரணங்கே
சாயென்றும் சற்குணிநின் செயலேயெல்லாம்
சரஸ்வதிநீ சௌபாக்கிய புண்ணியநீயே.

(இ-ள்) உமது மகுத்துவங்களைக் கூறுகிற்கும் சோடச நாமங்களால், உன்னை ஓ மாதாவே என்று துதிக்கும், வருகவென்றும், ஓம் நம் ஸ்ரீம் பகவதி வருக வருக என்றும், ஓ என் தாயாகிய பராசத்தியே வருக வருக என்றும், ஆதிமுதற்பொருள் நீயே எனவும், அற்புதம் பொருந்தியதும், எவரும் காணமுடியாததுமாகிய மெய்ப்பொருளும் நீயே என்றும், ஓ பெண்களுக்கெல்லாம் தலைமை பூண்டவளே! சகல பாக்கியத்தையும் பெற்ற புண்ணியவதியே என்று நின் பிரபாவங்களைச் சொல்லித் துதிக்கின்றேன். இவ்வுலகத்தில் நின் செயலல்லாது வேறுளதோ எ-று. 13

புண்ணியமுநீ பாவமுநீ போதமும்நீ
புவனமெங்கும் படைப்பும்நீ அருளும்நீயே
அன்னியம்நீ உறவும்நீ ஆதரவும்நீயே
ஆனந்த மதியமிர்தம் அம்பிகைநீ
வன்னியும்நீ வாயும்நீ அப்புவும்நீ
வாகான பிருதிவியுடன் ஆகாசம்நீயே
உண்ணியதோ ருலகமெல்லாம் படைத்ததாயும்
உத்தமிநீ பத்தினிநீ சோதிநீயே.

(இ-ள்) இவ்வுலகின்கண் மிக்க சோதிமயமாய் விளங்காநின்ற ஈஸ்வரியே! சகல புண்ணியம் பாபம் எல்லாவற்றிற்கும் நீயே முதலாவாய். மற்றும் இப் புவனமெல்லாவற்றையும் படைத்தவளும், அருள் செய்பவளும் நீயே, அந்நியரும் நீயே, உறவும் நீயே, ஆதாரவஸ்துவும் நீயே, அக்கினியும் நீயே, வாயுவும் நீயே, அப்புவும் நீயே, பிரிதிவும் நீயே, ஆகாசமும் நீயே, இவ்வுலகெங்கணும் படைத்த மாதாவும் பத்தினியும் கற்புடையவளுமாகிச் சோதிமயமாய் நிற்பவளும் நீயே எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் விஷ்ணுவானவர் உமாதேவியாரைப் பலவாறு புகழ்ந்து துதித்ததுடன் பஞ்சபூதமும் நீயே என்றதை அறிக. 14

சோதிநீ ஆதியும்நீ அந்தமும்நீ
சொற்பெரிய கங்கையொடு திங்கள்நீயே
நீதியும்நீ நிறைந்ததொரு சோதியும்நீ
நிர்க்குணியும் சற்குணியும் நீயேயம்மா
வாதியும்நீ வையமெங்கும் வளர்ந்தசோதி
வாலைபர மேஸ்வரிநீ வைரவியும்நீயே
சாதிநீ சனனம்நீ சந்தானமும்நீ
சரஸ்வதிநீ சாமளா தேவிநீயே.

(இ-ள்) இப்புவனத்தின்கண் ஆதியாகியும் அந்தமாகியும் நின்று சோதிமயமாய் விளங்கினாய். இதுவன்றி, சொல்லுதற்கரிய கங்கையும், திங்க

ளாகிய சந்திரனும் நீயேயாகுய். மற்றும் சகல நீதிமார்க்க முடையவளாகியும் சோதிமயமாய் நின்றவளும் நீயே! மற்றும் நிர்க்குணியும் நீயே! சற்குணியும் நீயே! வாதியும் நீயே! இவ்வையகம் எங்கணும் நிறைந்து நின்றவளும் நீயே! வாலைபரமேஸ்வரியும் நீயே! பைரவியும் நீயே! மேல்ஜாதியும் நீயே! சகல ஜீவர்களும் ஜனன ஏதுவைத் தருபவளும் நீயே! எல்லோர் புத்திரரும் நீயே! சாஸ்வதிதேவியும் நீயே! சாமளாதேவியும் நீயே! எ-று. 15

சாமள ரூபிஅம்பாள் ஹாஹாயென்றும்
சண்முகி ஹரிவோம் அம்உம்என்றேதான்
வாமளாவாராகி அம்மாள் வாலைஞானி
வர்னவிழி உமையாளே சோடசத்தை
பூமளியேஓம் ரீம்ஸ்ரீம் ஔவும்நவ்வும்
பும்பும்பும் அதிஷ்டாநி புவனையம்பாள்
வாமளியே திரிபுரையே மாயாரூபி
வண்மையுள்ள வங்சிங்அங் உங்மங்ஆகுய்.

(இ-ள்) ஓ சாமளரூபீ! சண்முகி! ஹரி ஓம் அம் உம் சாமளவராகி! அம்பா! வாலைஞானியாளே! வர்ணவிழியாளே! உமையவளே! என்று உம்முடைய சோடசநாமங்களைத் துதித்தும், பூமளியே! ஓம் ரீம் ஸ்ரீம் ஔவும் நௌவும் பும் பும் பும் அதிஷ்டானு புவனேஸ்வரி! அம்பிகா! வாமளி! திரிபுரி! மாயாரூபி! வங் சிங் அங் உங் மங் என்னும் பிரணவப்பொருளாகி நின்ற தேவியே! உம்மைத் துதித்து நின்றேன். ஆதலால் என்னை நிச்சயமாய் ஆண்டருள் புரிவாயாக எ-று. 16

தாமெனவும் அஞ்சலித்தேன் தாயேகேளு
தாசானுதாசன் அம்மா தயவுகூர்வாய்
ஆமெனவும் அங்கிசாயநமா என்றே
அன்பாக அங்சங்ரீங் உங்பங்என்றே
வாமெனவும் வாலையம்மாள் வராகித்தாயே
வங்சிங்ரீங் மங்என்று வசனித்தோர்க்கு
ஊமெனவும் உண்மையுள்ள தெய்வம்தெய்வம்
உத்தமியே பத்தினியே உமையேதாயே.

(இ-ள்) ஓ உலகமாதாவே! உம்மை மிக்க வணக்கத்துடன் அஞ்சலி செய்தேன். ஓ தாயே! நான் உனக்கு தாசானுதாசன் ஆதலால், என்மீது கட்டாயமாய் தயவுசெய்யக் கடவாய். ஆம் என்றும், அங்கிசாயா நம என்றும், அங் சங் ரீங் உங் பங் என்று சொல்லியும், வாலைத்தாயே வராகித்தாயே எனவும், வங் சிங் ரீங் மங் என்று உம்முடைய திருநாமங்களைச் சொல்லித் துதித்தபேர்க்கு உண்மைக்கு உண்மையான தெய்வமும், உத்தமியும், பத்தினியும், உமையவளும் நீயேயன்றோ. எ-று. 17

தாயிபரிபூரணியே மீனுட்சி அம்பாள்
தங்கையம்மா என்பிறவி சௌந்தரவல்லி
ஆயிபல புவனமுந்தான் படைத்தமாரி
அபிராம வல்லியே அற்புதத்தாய்

36

மாயிவளர் வான்பொழிலே அழகுநாச்சி
வாகான வைஷ்ணவியே மாலிசூலி
தீயினெழும் பரஞ்சோதி திருக்கண்ரூபி
திருவான கிருபைமிகு ஞானிநீயே.

(இ-ள்) அனைவற்றிற்கும் தாயாகியும், பூரணியாகியும், மீனாக்ஷிதேவியாகியும், அம்பாளாகியும், சௌந்தர்யவல்லியாகியும், எமது தங்கையுமாகிய ஈஸ்வரியே! இவ்வுலகம் யாவையும் படைத்தருளிய மகாமாயி! மாரித்தாயே! அபிராம வல்லியே! அற்புதத்தாயே! வான்பொழிலே! பிரணவப் பொருளே! அழகு நாச்சி! வைஷ்ணவி! மாலி! சூலி! அக்கினியிலிருந்தெழும் சோதிக்கு சமமாகிய பரஞ்சுடரே! முக்கண்ணுடையவளே! திருவாகியும் சகல ஜீவர்களிடமும் கிருபையுள்ளவளாகியும், ஞானியாகியும் நின்ற தேவியே! உன்னைத் தோத்தரித்தேன் ஆண்டருள்வாயாக எ-று. 18

ஞானியெனும் கெவுனசித்தி ஞானரூபி
நாதாந்த மவுனகுரு பூசையானாய்
வானிலுள்ள தேவர்களும் ரிஷிகள்போற்றும்
வண்மையுள்ள பெண்ணரசே மலர்ப்பாதந்தான்
தானவரை வதைத்தமரர் சிறைதவிர்க்கும்
தயவுவைத் தருள்புரிவாய் தங்கையம்மா
பானமெனும் அமிர்தமதைக் கொண்டதாயே
பராபரியுன் பாதமலர் பூசைகொள்ளே.

(இ-ள்) ஞானானந்த மோக்ஷசித்தியைத் தரத்தகுந்த ஞானமயமாகிய ரூபியே! நாதாந்த வஸ்துவாகியும் குருபூஜையும் நீயேயானாய். வானுலகத்தில் வாசம் செய்யாநின்ற சகல ரிஷிகளும் போற்றத்தகுந்த தெய்வம் நீயேயானாய். ஆதலால், ஓ பெண்களில் தலைமை பூண்டவளே! உன்னை வணங்கினேன். தான் என்னும் அகங்காரம் கொண்டிருக்கும் அசுரர்களை வதைத்து அமரர்களைச் சிறைமீட்டு ஆதரிக்கும் வண்ணம் தயவுவைத்து எனக்கு உன் அருளைத்தந்து அமிர்தத்தைக் கொடுத்து உதவிய என் தாயே பராபரி! உன் பாததாமரையை பல மலர்களால் பூஜித்தேன் அடியேன்மீது கிருபை செய்யக்கடவாய் எ-று. 19

கொள்ளவே திவ்வியசத்திய பூசைதன்னை
கொற்றவனைப் பெற்றெடுத்த தாயேநீயும்
அள்ளவே ஐஸ்வரியம் பெற்றமாதா
ஆரணங்கே பார்வதியே பூசைகொள்வாய்
வள்ளலே வாலைசிறு பெண்ணும்ரூபி
மாதாவே எந்தனைநீ கார்க்குமம்மா
உள்ளபடி நீயருள்வாய் தெய்வம்தெய்வம்
உத்தமியே பெற்றெடுத்த உமையேதாயே.

(இ-ள்) எவரும் மதிக்கத்தகுந்த சத்திபூஜையை அங்கீகரிக்கத் தகுந்தவளே! உலகத்திற்கெல்லாம் மேம்பட்ட பொருளைப்பெற்று உதவிய தாயும்

நீயன்றோ. அல்லாமலும் சகல ஐஸ்வரியமுடையவளாகியும், உலக மாதா வாகிய பார்வதிதேவியும் நீயேயாகும். என்பூஜையைஏற்றுக்கொள்ளக்கடவாய். ஓ வாலைத்தாயே! எந்நாளும் சிறு பெண்போன்றிருக்கத் தகுந்த மாதாவே! ரூபலாவண்யம் உடையவளே! சகலத்திற்கும் தாயாகிய உமையவளே! நீயன்றோ சகலத்தையும் காக்குந்தெய்வம், ஆனதால் என்னை ரக்ஷிப்பா யாக எ-று. 20

தாயேநீ பூரணியே சோதிமாதா
தங்கையம்மா என்குருவே தார்குழலேதாயே
மாயேநீ வண்மைபெற்று வான்பொருளேநீ
மதுரமொழி பச்சைவர்ன அம்பிகைநீ
ஆயேநீ அம்பிகைப்பெண் அமிர்தவல்லி
ஆனந்த ரூபவல்லி ஆதிசத்தி
தீயேநீ திரிபுரிவனத் தாயும்நீயே
தீதில்லாக் குலமகளே திருவேநீயே.

(இ-ள்) உலக மனைத்திற்கும் தாயாகியவளும், சகல ஜோதிக்கும் மாதாவாகியும், என்னுடன் பிறந்த தங்கையாகியும், குருவாகியும் நிறைந்த, கறுத்த அழகிய கூந்தலையும் உடையவளே! மாயசொரூபியும், எல்லாவற் றிற்கும் மேம்பாடுடையவளும், எவரும் காணமுடியாத பொருளாகியும், தித்திப்பாகிய மொழியும், பச்சைநிறத்தினையும் உடைய அம்பிகையும் நீயன்றோ! ஓ ஆயி! அம்பிகைத்தாயே! அமிர்தவல்லி! ஆநந்தரூபவல்லி! ஆதிசத்தி! அக்கினிக்குச் சமமானவளே! திரிபுவனத்திற்கும் மாதாவே! குற்றமில்லாக்குலத்து வந்தவளே! லக்ஷ்மியும் நீயே! எ-று. 21

திருவைசெகரூபி அம்மாள் திருநீற்றுளே
திருக்கரத்தைப் பெற்றதொரு தேவிநீயே
மருவையெனும் மகிடசங் காரிதேவி
மகத்துவங்கள் பெற்றதொரு சோதிநீயே
கருவையெனுங் காரணியே காளிரூபி
கங்காளி சாமுண்டி கனகவல்லி
தருவையெனும் உண்மையுள்ள உமையேதாயே
உலகமெல்லாம் படைத்ததொரு உமையென்றேனே.

(இ-ள்) ஓ மகாலக்ஷ்மி!ஜகத்சொரூபி! திருநீற்றுளே! திருக்கரத்தைப் பெற்ற மகாதேவியும் நீயன்றோ! மகிடசங்காரி! தேவதேவி! சகல மகத்துவ குணங்களும் அமைந்த தேவதேவீ! சகலர்களுக்கும் காரணப்பொருளாகியும் நின்ற காரணி! காளிரூபி! கங்காளி! சாமுண்டி! கனகவல்லித்தாயே! உருவுக் குருவாகியும், உண்மையுள்ளவளாகியும், உமாதேவியும் ஆகிய என் தாயே! இவ்வுலகம் யாவும் படைத்தருளிய உமாதேவி. உம்மை வணங்கி நின்றேன் என்மீது தயை கூறுவாயாக எ-று. 22

என்றென்றும் அருள்புரிவாய் கோரிநீலி
ஏற்றியே போற்றிசெய்ய மலர்பாதத்தை
நன்றென்று நாரணனுர் அர்ச்சிக்கும்போது
நன்மையுள்ள உமையவளும் மனமகிழ்ந்து

என்றும்நாம் இருபேரும் ஒருருவம்போல
இருப்பது அறியாயோ தமையாநீயும்
குன்றெடுத்த கோபாலா என்றுதானே
குணமுள்ள உமையவளும் கூறுவாளே.

(இ-ள்) ஓ உலகமாதாவே! உன்னை இடைவிடாதுபூஜித்திருப்போர்க்கும் உமது மகுத்துவங்களைச் சொல்லிப் போற்றி செய்வோர்க்கும் என்னாளும் நீங்காத சுகத்தைக்கொடுத்து ரக்ஷிக்கத்தகுந்த கோலாகலி என்று சொல்லித் துதிக்கும் ஸ்ரீமந் நாராயணரைப் பார்த்த உமாதேவியானவள், மிக்க சந்தோஷமுடையவளாகி, ஓ என் அண்ணா! நீயும்நானும் ஏகரூபம் என்பதை அறிந்ததில்லையோ! மலையை குடையாய்ப்பிடித்த கோபாலா! குணம் வாய்ந்தவரே என்று சொல்லி உலகமாதாவாகிய உமாதேவியானவள் கூறுவாள் எ-று. 23

கூறுவாள் உமையவளும் லோகமெல்லாம்
குணமாக படைத்தவளும் சொல்வாளப்பா
சாருவாள் எந்தமையா இருபேருந்தான்
சராசரமாய் ஒருயிராய் உடல்வேருக
பேருவோ மென்றுஅம்மன் மனமகிழ்ந்து
பெருகிமனப் பூர்வத்தோ ருருவமானாள்
காருவோம் கருணையினால் அக்கினிபோலும்
கலந்துமனம் நிறைந்தபடி நின்றிட்டாளே.

(இ-ள்) இவ்வுலகம் எல்லாவற்றையும் படைத்தருளிய உமாதேவியானவள் மேற்சொன்னவாறு துதித்து நிற்கும் தமது தமையனைப்பார்த்து, ஓ எனது அண்ணா! நாம் இருவரும் இச்சராசரத்தின்கண் பிராணன் ஒன்றாயும், உடல் வேறாயும் இருக்கிறோம். அதை தெரிந்துக்கொள்வாய் என இருவர் உருவமும் ஒருருவமாகி அக்கினிபோன்ற சொரூபமாய் எவரும் அதிசயிக்கத் தகுந்த சோதிமயமாய் நின்றனள் எ-று.

(வி-ரை) தன்னைத் துதிக்கும் விஷ்ணுவினது வார்த்தைக்கு மெச்சியதுடன், தங்கள் இருவரது உருவத்தையும் ஒருருவமாய் காட்டி நின்றாள் என்பதாம். 24

நின்றிடவே தேவரெல்லாம் புளகமாகி
நிகரில்லாக் களபமுதல் நீர்கள்தூத்தார்
நன்றிடவே நலமுள்ள வாசகங்கை
நன்மையுடன் கொண்டுவந்து சொரிந்தாரப்போ
மன்றிடவே நவகோடி சித்தர்போற்ற
வணங்கிடவே இந்திரன்முதல் ஈசனுந்தான்
என்றிடவே மகாகோடி தேவரெல்லாம்
எம்பிரான் அடிபரவி வணங்கினாரே.

(இ-ள்) மேற்கூறிய வண்ணம் ஸ்ரீதேவியும், விஷ்ணுவும் ஏகரூபமாய் நின்றதை தேவர்கள் யாவரும் கண்டு புளகாங்கித முடையவராய், எவரும்

ஒப்பத்தகுந்த களபகஸ்தூரிநீர் புரோக்ஷிதம் செய்தும், மகாமகுத்துவம் பொருந்திய கங்கையைக்கொண்டு வந்தும் புரோக்ஷிதம் செய்தனர். மற்றும் நவகோடிசித்தர்களும் போற்றவும், இந்திரன் முதலாயினோரும், மற்றுமுள்ள மகாகோடி தேவர்களும், ஈசன் முதலாயினோரும், மகாவிஷ்ணுவினுடைய பாதங்களைத் தொழுது வணங்கினார் எ-று. 25

வணங்கிடவே தேவரெல்லாம் துதித்தார்அப்போ
வண்மையுள்ள நவகோடி சித்தர்போற்ற
இணங்கிடவே எண்டிசையின் மனுக்கள்போற்ற
இயல்பான ரிஷிகளெல்லாம் இசைந்துபோற்ற
அணங்கிடவே அண்டரண்ட புவனமெல்லாம்
அரியவுமை மலர்ப்பாதம் தொழுதாரப்பா
தணங்கிடவே தாய்பதத்தை தேவரெல்லாம்
தண்மையுடன் அடிவணங்கித் துதிசெய்தாரே.

(இ-ள்) மேற்சொன்னவாறு தேவர்கள் எல்லாம் துதித்து வணங்கவும், மேன்மைபொருந்திய நவகோடி சித்தர்களும் போற்றவும், அஷ்டதிக்கிலுமுள்ள ஆத்மகோடிகள் போற்றவும், மஹரிஷிகள் யாவரும் வணங்கவும், அண்டாண்ட சராசரங்களிலுமுள்ள ஜீவர்கள் யாவரும் மேற்படி உமாதேவியாரை வணங்கித்துதிக்கவும், தேவர்கள் முதலாயினோரும் ஓ அம்மணி! இன்னுமுள்ள விஷயங்களையும் கூறுகவென வணங்கித் துதித்து நின்றனர் எ-று. 26

செய்திடவே உமையவள்தான் திருப்பாதத்தை
செயலாக வணங்கியவர் நிற்கும்போது
ஐதிடவே ஆயிழைப் போற்றிசெய்ய
அருள்பெருகும் உமைமாங்கி அடிவணங்கி
பைதிடவே பராபரனார் கிருபையாலே
பத்தினியைத் தேவரெல்லாம் பணிந்தபோது
மெய்திடவே மேன்மைபெற்ற உமையாள்தானும்
மெய்ப்பொருளும் மனமகிழ்ந்து இருந்தாள்பாரே.

(இ-ள்) மேற்கூறியவண்ணம் தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள் முதலாயினோர்கள், உமாதேவியாரும் உலகமாதாவுமாகிய ஸ்ரீ சத்திதேவியை அடிவணங்கி தெண்டனிட்டு போற்றித் துதித்து, ஓ அம்மணி! உமது மகுத்துவத்தை எவர் அறியவல்லவர். எனப் புகழ்ந்து நிற்பவரை ஸ்ரீ சாக்ஷாத் பரமேஸ்வரி கண்டு மனமகிழ்ந்தனள் எ-று.

(வி-ரை) ஏகரூபமாய் நின்ற உமாதேவியாரின் மகுத்துவத்தைச் சகலருங்கண்டு மனமகிழ்ந்து போற்றித் துதித்து கீழ்க்கண்டவாறு வேண்டுகின்றனர். 27

பார்க்கவே சப்தரிஷி ஏழுபேர்கள்
பாங்கான உமையவளைப் பணியவேண்டி
ஏர்க்கவே உமையவளைத் தொழுதுபோற்றி
எம்பிரான் பராபரியே ஈஸ்வரியேதாயே

கார்க்கவே கடாக்ஷம்வைத் தருள்வாயம்மா
காரணியே பூரணியே கவுரிமாரி
மார்க்கமாய் எந்தனைநீ ஆளும்தாயே
மனமகிழ வரமருள்வாய் மாதாநீயே.

(இ-ள்) இவ்வாறு சப்தரிஷிகளும், உலகமாதாவாகிய உமாமயேஸ்வரியையும், விஷ்ணுவையும் பார்த்து, ஓ என் உயிர்க்குயிராகிய தெய்வமே! ஓ பராபரி! ஈஸ்வரி! காரணி! பூரணி! கௌமாரி! உலகமாதா! பராசக்தி எங்களை ஆண்டருள வந்த உத்தமி! சத்தியவதி! உங்களது திருப்பாத கமலங்களை வணங்கி தெண்டனிட்டோம். ஆனதால் எங்கள் மனத்திலுள்ள குறைகளை நீக்கி, ஆசீர்வதித்து வரம் கொடுக்க வேண்டுமாய்ப் பிரார்த்திக்கின்றோம் தாயே என்றனர் எ-று. 28

மாதாவை போற்றிசெய்து ரிஷிகள்தானும்
மகத்துவமாய் உமைபாதம் வணங்கிப்போற்ற
சீதாவே சிற்பரமே சிறுபெண்ணுத்தாள்
சீக்கிரத்தில் எங்களைத்தான் கார்க்குந்தாயே
போதாவே புண்ணியங்கள் அருளுந்தாயே
பொற்பதமே மெய்ப்பொருளே போதமாதா
ஆதாவே அண்டரண்ட புவனமெல்லாம்
ஆளுகின்ற அம்பிகையே அருள்செய்வாயே.

(இ-ள்) ஓ உலகமாதா! ஸ்ரீ சீதா! சிற்பரப்பொருளே! சிறுபெண் வடிவாளே! சகல ஜீவர்களுக்குந் தாயே! க்ஷணப்போதில் எங்கள் குறையகற்றும் சக்திவாய்ந்த உத்தமியே! பற்பல புண்ணியங்களையும் கொடுத்தாளத்தகுந்த உத்தமி! அண்டாண்ட சராசரங்களிலும் உள்ள சீவர்கள் அனைத்தையும் ரட்சிக்கும் மஹாதேவி! பொன்போன்ற திருத்தாளுடையவளே! ஓ உலக மாதா! மெய்ப்பொருளாய் விளங்கும் சோதியே! அம்பிகா! எங்கள்மீது கிருபை கூர்ந்து எங்கள் மனக்குறையை யகற்றுந் தாயே! என்று சப்தரிஷிகளும் வணங்கி நின்றனர் எ-று. 29

செய்யவே என்னுடைய தாயேகேளாய்
செப்பரிய புவனமுதல் வானமெல்லாம்
ஐயவே ஆண்டருளும் அம்பிகைநீ
ஆனந்த பூரணத்தில் அமர்ந்தசோதி
பையவே பராபரியே பரஞ்சோதித்தாய்
பத்தினியே உத்தமியே பகர்வாய்தாயே
மெய்யவே மெய்யருக்குள் இருந்தசோதி
மேன்மைபெற்ற பெண்ணரசே சரணந்தாயே.

(இ-ள்) ஓ எங்களைக் கார்த்து ரக்ஷிக்கத்தகுந்த தாயே! சொல்லுவதற்கரிய இப்புவனத்தின்கண்ணுள்ள சகல ஜீவர்களையும் கார்க்கத்தகுந்த தாய் நீரல்லவோ. சகல சுகங்களையுங் கொடுத்தாளத்தகுந்த அம்பிகா! ஆனந்தமயமாய் விளங்காநின்ற பிரம்மானந்தவாரியென்னும் சோதித்தாயே!

பராபரி! பரஞ்சோதி! பத்தினி! உத்தமி! மெய்க்கு மெய்ப்பொருளாய் விளங்காநின்ற சோதித்தாயே! பெண்களுக்கரசாய் விளங்கும் பராபரி! எங்கள் மனத்திலுள்ள சகல குறைகளும் நீங்கும் வண்ணம், இன்னுமுள்ள சகல விஷயங்களை அடியேங்களுக்கு அறிவித்து அருள்செய்யக் கடவாயாக எ-று.

(வி-ரை) இன்னுமுள்ள விஷயங்களையும் கூறவேண்டுமாய் அம்பாளை வணங்குகின்றனர். 30

சரணமென்று பணிந்துநின்ற ரிஷிகள் தன்னை
சதாநேரம் உங்களிடம் இருப்பேனப்பா
சரணமென்ற தன்மையினால் கார்த்தேனப்பா
தற்கார்க்க என்பிறவி மாயனுண்டு
கரணமென்ற சித்தியுடன் முத்திஈவார்
கைலாச மூர்த்திவந்து கருணைசெய்வார்
வரணமென்ற வாழ்வெல்லாம் மேன்மையாக
வகுத்துநா னீந்திட்டேன் வரிசையாக.

(இ-ள்) இவ்வாறு வணங்கி பணிந்துநின்ற சப்தரிஷிகளை உலக மாதாவாகிய உமாமயேஸ்வரியானவள் பார்த்து, ஓ ரிஷிகளே! உங்கள் பக்திக்கு மெச்சினேன். எந்நாளும் உங்களை இடைவிடாது காப்பேன். நீங்கள் என்னைப் பணிந்த காரணத்தால் யான் கட்டாயம் உங்களைக் கார்த்தே தீருவேன். மற்றும் எனது பிறவியமாயனும் உங்களைக் காப்பாற்றுவார். மேலும் உங்களுக்குச் சித்தி முத்தி முதலிய பேரின்பத்தைக்கொடுக்க ஸ்ரீ கைலாச நாதர் இருக்கிறார். உங்கள் மனக்குறை யகலும் வண்ணம் சகல சாஸ்திரங்களையும் கூறியுள்ளேன். இன்னுமுள்ள விஷயங்களையும் கூறுவேன் கேட்பீராக எ-று. 31

வரிசையுடன் சப்தரிஷி ஏழுபேரை
வாகான உமையவள்தான் சந்தோஷித்து
புரிசையுடன் பூமகளும் மனதிரங்கிப்
புத்தியுள்ள மகாரிஷிகாள் கேளுங்களென்று
உரிசையுடன் உண்மையுள்ள தாயாள்தானும்
உத்தமியும் மனதிரங்கத் தேவரெல்லாம்
பரிசையுடன் ரிஷிகளெல்லாம் வரங்கள்வாங்கிப்
பாக்கியமாய் விடைகள்பெற்று பதிசென்றாரே.

(இ-ள்) பலவாறு புகழ்ந்துதித்து வணங்காநின்ற எழு ரிஷிகளையும் கண்டு சந்தோஷம் அடைந்த பூமகளாகிய லக்ஷிமியானவள் கண்டு மனமிரங்கி, ஓ மகா யுக்தி புத்தி வாய்ந்த மஹரிஷிகளே! கேளுங்கள் என. மகா உத்தமியாகிய உமாதேவியானவள் கண்டு அவரவர்களுக்கு வேண்டிய சகல வரங்களையுங்கொடுத்து, அவ்வவர்களுக்குள்ள சகல குற்றங்களையும் அகற்றும் வண்ணம் உரைத்தருளினார். பிறகு சகலரும் மேற்படி தேவியை வணங்கி விடைபெற்று சந்தோஷத்துடன் சென்றனர் எ-று.

(வி-ரை) சகல வரங்களையும் பெற்றுக்கொண்டு அவ்வவர்கள் சந்தோஷத்துடன் சென்றனர். 32

சென்றதொரு ரிஷிகளுடன் அம்மன்தானும்
சேதிசொல்வாள் வசிட்டரே விஸ்வாமித்திரா
கண்டதொரு காசிபரே காகமூர்த்தி
காரணமாய் உள்ளவொரு கெளதமரே
விண்டதொரு தூருவாச ரிஷியேஐயா
விமலர்பதங் கண்டுணர்ந்த அகஸ்தியாகேள்
வன்றதொரு புலஸ்தியமா முனியேநீகேள்
மகத்தான வான்மீகா கேள்என்றாளே.

(இ-ள்) சகல சந்தேகங்களும் நீங்கியவராயும், சகல வரங்களையும் பெற்றவராயும், சந்தோஷத்துடன் சென்ற ரிஷிகள் முனிவர்கள் முதலாயினோரை ஸ்ரீதேவியானவள் கண்டு, ஓ வசிஷ்டரே! விஸ்வாமித்திரரே! காசிபமுனிவரே! காகபுசுண்டரே! கௌதமரிஷியே! தூருவாசமஹாரிஷியே! ஈசனது பாததாமரையையும் கண்டுணர்ந்த அகஸ்தியமாமுனிவரே! புலஸ்தியரே! வான்மீகரிஷியே! மற்றுமொரு விஷயம் சொல்லுவேன் கேட்பீர்களாக எ-று.

(வி-ரை) தன்னிடம் வணங்கி விடைபெற்றுச்சென்ற ரிஷிகள், முனிவர்கள், முதலாயினோரை அம்மன் மறுபடியும் அழைத்து மற்றுமொரு சேதியுள்ளன. அவற்றைச் சொல்லுகிறேன் கேளுங்கள் என்றாள். 33

கேளெனவே உமையவளும் ரிஷிகளோடே
கேவலமாய்ச் சொல்லுகிறேன் ரிஷிகாள்கேளீர்
நாளெனவே நன்மையுடன் ரிஷிகள்தானும்
நலம்பெறவே உமைபாதம் வணங்கிக்கேட்க
தாளெனவே தண்மையுடன் ரிஷிகள்போற்ற
தாழ்வில்லா உமைசொல்லக் கேட்பாரன்றே
தோளெனவே மனோன்மணியாள் மனதிரங்கித்
தோகைமயில் வாகனைத்தான் பெற்றமாதே.

(இ-ள்) உமாதேவியும், தோகையையுடைய மயில்வாகனத்தையுடைய சிவசுப்ரமண்யக்கடவுளைப் பெற்றவளும், மயேஸ்வரியும், உலகரக்ஷகியாயும், மனோன்மணியாயும் உள்ள ஈஸ்வரியானவள், ரிஷிகள், முனிவர்கள் முதலாயினோரைக்கண்டு மனதிறங்கி, ஓ முனிவர்களே! இன்னுமோர் விஷயமுண்டு. அதனைக் கூறுவேன் கேளுங்களென, மேற்படி தேவர்கள், முனிவர்கள் முதலாயினோர் ஓ அம்மணி! நீ சொல்லவேண்டுவதைச் சொல்லுகவென வணங்கிக் கேட்டனர் எ-று. 34

பெற்றதொரு உமையவள்தான் சொல்வாளப்பா
பேறுபெற்ற ரிஷிகளே சொல்லக்கேளீர்
அத்தனருள் இடபாகம் ஆனதாலும்
ஆத்தாளும் சொல்வாள் அன்புகூர்ந்து

முத்திபெற்ற கர்த்தர்துதி நல்லோரல்லாம்
முயற்சியுடன் சொல்லுகின்ற மொழிகேட்பீர்கள்
கர்த்தாவே என்தாயே நீதான்சொல்லும்
காரணத்தை கேட்கிறோம் கருணையாளே.

(இ-ள்) இவ்வாறு பணிந்து கேட்ட தேவர்கள் முனிவர்கள் முதலாயினோரை, அத்தனுடைய ஈசனது இடபாகத்திலமைந்தவளும், உலகமாதாவுமாகிய உமாதேவியானவள்கேட்டு மிக்கசந்தோஷமுடையவளாகி, ஒரிஷிகளே! முனிவர்களே! முத்தியைப்பெற்ற கர்த்தனைத்துதிக்கும் உத்தமர்களே! இன்னுமொரு விசேஷமுண்டு, அதனைக் கூறுவேன் கேட்பீர்களாக என்றவுடன், தேவர், முனிவர் முதலாயினோர்கள், ஓ என் தாயே! அவையாது? அதனை அடியேங்கள் அறியும் வண்ணம் கருணைகூர்ந்து உரைத்தருள்வீராக என்று வணங்கினார் எ-று. 35

ஆளென்ற உமையவள்தான் சொல்லும்வாக்கு
ஆச்சரியம் ரிஷிகளெல்லாம் வணங்கிக்கேட்க
வாளென்ற வையகமும் லோகமெல்லாம்
வண்மையுடன் பிழைக்கஎன்று வகுத்தேன் நூலே
வேளென்ற வேளைப்போல் முனிவர்சித்தர்
வேதமுதல் சாஸ்திரங்கள் வகுத்தார்கோடி
தூளென்ற தூள்போலே விண்ணுமண்ணும்
துலவில்லா நூல்கள்சித்தர் தொகுத்திட்டாரே.

(இ-ள்) இவ்வாறு வணங்கிய ரிஷிகளை உமாதேவியானவள், மேற்படி ரிஷிகள் முனிவர்கள் யாவரும் ஆச்சர்யப் படும்வண்ணம் சொல்லுவாள். எப்படியெனில்? ஓ முனிவர்களே! இவ்வுலகின் கண்ணுள்ள சகல ஜீவகோடிகளும் பிழைத்துய்யுமாறு சகல சாஸ்திரங்களையும் கூறியுள்ளேன். யான் கூறிய சாஸ்திரங்களை யறிந்து, சகல ரிஷிகள், முனிவர்கள், சித்தர்கள் முதலாயினோர்கள், இம்மண்ணுலகிலும், விண்ணுலகிலும், உள்ள சகலரும் அறியும் வண்ணம் அனேக சாஸ்திரங்களையும் வெளியிட்டுள்ளனர் எ-று. 36

சித்தரென்ற ரிஷிகள்முதல் வானோரெல்லாம்
செகத்திலே அனந்தமது உண்டுசெய்தார்
பக்தரென்ற பக்தர்கள்தான் படித்தநூலை
பார்தனிலே பொய்யென்று சொன்னபேர்க்கு
முத்திமுதல் தலைமுறைகள் உள்ளமட்டும்
முப்பிறப்பும் ஏழுவரை மைந்தாகேளு
அத்தனருள் மாலகிரி அறியவேதான்
அவருடைய அந்தரங்க அன்பினாலே.

(இ-ள்) வானவரும், சித்தர்களும், ரிஷிகளும், இவ்வுலகின்கண் அனந்தகோடி சாஸ்திரங்களை உண்டுசெய்தனர். ஆதலால் இவ்வுலகின் கண்ணுள்ள பக்தர்கள் வாசித்து சந்தோஷமடையத்தகுந்த இந்நூலை, எவரேனும் பொய்யெனக் கூறுவார்களே யாமானால், அவ்வவர்களது தலைமுறைக்கு ஏழு பிறவி

யிலும் பாழ்நரகத்திற்கே ஆளாவார். ஏனெனில்? இந்நூலானது அத்தனுகிய ஈஸ்வரானது அந்தரங்க அன்பினால் எனக்குக் கூறியதினாலேயாகும். இவை மிக்க மகத்துவம் பொருந்திய நூலென்று நினைப்பாயாக எ-று. 37

நாலென்ற நான்முகனும் ரிஷிகளெல்லாம்
நடுநடுங்கி பயந்தவரும் நடனம்பாட
தாலென்ற எந்நூல்தான் உலகத்துள்ளே
தாரணியிற் காணரிது தண்மைசொன்னேன்
வாலென்ற வையகத்தில் பிரமகீதை
வகுத்தேன்நான் ஆயிரந்தான் பனிரண்டுகாண்டம்
ஊலென்ற உட்பொருள்தான் இந்நூல்தானும்
உத்தமர்கட் கிந்நூல்தான் எய்தும்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்நூலினை நான்கு முகத்தினையுடைய பிரம்மனும், ரிஷிகளும் கண்டு பயந்து நடனம் செய்வார். மற்றும் என்னால் கூறப்பெற்ற இந்நூலை, இப்பூமியின்கண் எவர்களும் காண்பதற்கு அரிது என்பதை அறிவாய். இப்பூமியிலுள்ளோர் எவ்வித துன்பமும் இன்றி சகல சுகத்துடன் வாழ்வதற்காய் பிரம்ம கீதையென உண்டாக்கி, ஆயிரம் செய்யுட்களாய், பன்னிரண்டு காண்டமாய் பிரித்துக் கூறியுள்ளேன். இதனுள் எல்லா ரகஸ்யங்களும் அடங்கியுள்ளன. ஆதலால், இந்நூலானது மகா உத்தமர்களுக்கே கிடைக்கும் என்பதை நிச்சயமாய் அறிவாயாக எ-று.

(வி-ரை) பொதுவாய் இந்நூலானது மகா உத்தமர்களுக்கே கிடைக்கும் என்பது முக்கிய கருத்து. 38

பாரப்பா இந்நூலை வெளியில்மைந்தா
பாவிகட்குக் கொடுக்கவுந்தான் ஆகாதப்பா
காரப்பா இந்நூலின் அமைப்புமைந்தா
காட்சியாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
சேரப்பா இந்நூலைப் பூசித்தோர்க்குச்
சேரவே வைகுண்டம் தீர்க்கமாகும்
ஆரப்பா எந்நூலைப் படித்தோர்க்கெல்லாம்
ஆயுசுள்ளவரைக்கும் ஆதரிப்பேன்தானே.

(இ-ள்) ஓ ரிஷிகளே! முனிவர்களே! யான் சொல்வதை கவனமாய்க் கேட்பீர்களாக. என்னவெனில்? இந்நூலினை இவ்வுலகிலுள்ள பாவர்களென்னும் துன்மார்க்கர்களுக்குக் கொடுப்பது கூடாது. எப்படியெனில்? இந்நூலினது மகத்துவத்தைச் சொல்லுகிறேன் கேட்பீர்களாக. என்னவெனில்? இந்நூலை மிக்க பயபக்தியுடன் எவரொருவர் பூஜிக்கின்றனரோ, அவர்களுக்கு வைகுந்தபதவி கிடைக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. மற்றும் என் நூலை எவரொருவர் மிகுந்த பயபக்தியுடன் வாசிக்கின்றனரோ, அவர்களை யான் அவர்கள் ஆயுள் உள்ளளவும் ஆதரிப்பேன் என்றதை அறிவாயாக எ-று. 39

ஆதாரம் என்பதற்கு இதுவேமூலம்
அண்டமுதல் பிண்டவரை வேறேவுண்டோ
பேதாரம் இந்நூலைத் தினங்கள்தோறும்
பேணியே புட்பமிட்டுப் பூசிப்பாயாளுல்
சீதாரம் சிற்பரத்தில் அவர்களைத்தான்
சிவசிவா சிவன்பதவி எய்தும்பாராய்
வாதாரம் வாலையிடப் பூஜைமைந்தா
வண்மையாய் சிவபூஜை கோடியாச்சே.

(இ-ள்) இப்பூமியிலுள்ள சகல ஜீவர்களும் எவ்வித குறைவுமின்றி வாழவேண்டுமானால், இவையே மூலகாரணப் பொருளாய் விளங்கும் என்பதிற் சந்தேகமில்லை. இதைவிட மூலகாரணநூல் இவ்வண்டத்திலுமில்லை, பிண்டத்திலும் இல்லையென்பது நிச்சயம். எவரொருவர் இந்நூலை நாள்தோறும் தவராது மிக்க பயபக்தியுடன் புஷ்பமிட்டு பூஜித்து வருகிருர்களோ, அவர்கள் இச்சனனத்தில் சகல சுகங்களும் அடைவதுடன் சிவயோக பதவியும் உண்டாகும் என்பதில் சந்தேகமில்லை. ஆதார வஸ்துவாகிய வாலைத்தேவியினுடைய பூஜை செய்தவருக்கு, கோடி சிவபூஜை செய்தபலன் உண்டாகுமென அறிவாயாக எ-று. 40

ஆச்சென்ற அஞ்செழுத்து சோடசத்துள்
அமைத்துலகைப் படைத்துவிட்டேன் அறிவினலே
பேச்சென்ற பேச்செல்லாம் ஒன்றுமில்லை
பேசாது வேதமுதல் புராணமெல்லாம்
வாச்சென்ற எந்நூலிற் சகலபுத்தி
வண்மையாய் சொல்லினேன் வரிசையாக
மாச்சென்ற மாச்சலது இல்லைமைந்தா
மகத்தான பெரியோர்க்கு வசனித்தேனே.

(இ-ள்) ஓ தேவர்களே! ஐந்தெழுத்தாகிய பஞ்சாக்ஷரப் பொருளென்னும் சோடசத்துள்ளே, என் மனேசக்தியால் இவ்வுலகைப் படைத்தேன். இவ்வார்த்தைக்கு மறுவார்த்தை இல்லை. எவ்விதவேதம், புராணமும், இதற்கிணையாகாது. என்நூலை எவரொருவர் வாசித்தார்களோ அவர்களுக்குச் சகல புத்தியும் உண்டாகும் என்பதிற் சந்தேகம் இல்லை. மற்றும் இந்நூலானது இவ்வுலகின் கண்ணுள்ள மகத்துவம்பெற்ற மகாபெரிய ஞானிகளுக்கே முக்கியமாய் உரியதாகும் என்பதில் ஐயமில்லை என்பதை யறிவாயாக எ-று. 41

வசனித்தேன் கேசகியின் நூலிலேதான்
வண்மையுள்ள சகலமுறை எல்லாஞ்சொன்னேன்
நிசனித்தேன் லோகமதில் மனிதர்க்காக
நிகழுகின்ற பலன்களெல்லாம் நிஜமாய்ச்சொன்னேன்
பசனித்தேன் பராபரத்தின் கிருபையாலே
பார்தனிலே நடப்பதெல்லாம் பகர்ந்தேன்சூக்ஷம்
இசனித்தேன் இன்பதுன்ப யோகவாழ்க்கை
இயல்பாக நடப்பதெல்லாஞ் சொல்லினேனே.

(இ-ள்) அஸ்தரேகை சாஸ்திரம் என்னும் இந்நூலால், சகல முறமை களையும் சரிவரக் கூறியுள்ளேன். மற்றும் இப்பூமியின் கண்ணுள்ள சகல மானிடர்களுக்கும் உண்டாகும் பலாபலன்களை, சர்வேஸ்வரனது கிருபா கடாக்ஷத்தால் சரிவர சூக்ஷமார்க்கமாய் கூறிவிட்டேன். மற்றும் வருங் காலங்களில் உண்டாகும் இன்பம் துன்பம் முதலியவற்றையும், யோகம் வாழ்க்கை முதலிய சுகதுக்காதிகளையும் சரிவரக் கூறிவிட்டேன் எ-று. 42

சொன்னெனப்பா பிறவிமுதல் மரணமட்டும்
சொல்லுதற்குச் சகலவகை துணிந்துசொன்னேன்
அன்னெனப்பா ஆயுசுடன் கண்டம்யோகம்
ஆதியந்த முதற்சனனம் அறிவுசொன்னேன்
மன்னெனப்பா என்குருவாம் கைலைமூர்த்தி
மனமகிழ்ந்து உபதேசம் செய்தமார்க்கம்
கன்னெனப்பா கருணைபெறும் தேவதேவன்
கடாக்ஷிக்க ஈந்திட்டேன் கருதுவாயே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த சாஸ்திரத்தால் ஒவ்வொருவர்களும் பிறந்த நாள்முதல், அவரவர்கள் மரணமடையும் காலத்தையும், களங்கமரக் கூறியதுடன், அவரவர்கள் அடையவேண்டிய சுகதுக்காதிகளையும், அவ்வவர்களுடைய ஆயுள் விவரத்தையும், கெண்டாதி கெண்ட முதலியன வற்றையும், முதலும் கடைசியுமாகிய ஆதியந்தங்களையும், முன் ஜனனத்தின் வரலாற்றையும் தெளிவாய்க் கூறியுள்ளேன். எவ்வாற்றுலெனின்? எமது குருவும் கைலாயபதியுமாகிய சிவபிரான் என்னிடம் பூரண அன்புகொண்டு உபதேசித்த உண்மை மொழியாகும். இவை யாவும் தேவாதி தேவராகிய ஈசன் சொல்லிய விஷயமெனக் கூறுவாயாக எ-று. 43

வாயென்ற வையம்தான் போற்றிசெய்ய
வண்மையாய் ரேகையின் சாஸ்திரத்தைதானே
தாயென்ற தாய்போலாம் பிறவிநூலைத்
தாரணியிற் பலவுயிர்கள் பிழைக்கவேண்டி
ஆயென்ற கையெழுத்தே தலையெழுத்தாம்
ஆச்சரியம் நாள்கோளும் தள்ளிப்போடு
மேயென்ற தலையெழுத்து பொய்யேபொய்யே
பேருலகில் இச்சூக்ஷம் பெருமைகேளே.

(இ-ள்) இவ்வையகம் எங்கணும் போற்றி செய்யத்தகுந்த இந்த பெருமை பொருந்திய ரேகை சாஸ்திரத்தின் மூலமாய், ஒவ்வொருவருக்கும் தாய்க்கு தாய்போன்று உதவும் உண்மையாய்த் தெளிவாய்க் கூறியுள்ளேன்' எதனுலெனில்? இவ்வுலகிலுள்ள சகல சீவர்களும் பிழைத்துய்யுமாறு சகலமும் சொல்லியுள்ளேன். ஓ முனிவர்களே! அவ்வவர்களின் கை எழுத்தே அவரவர்களின் தலை எழுத்தாகும். மற்றும் நக்ஷத்திரம், கிரகம் முதலியவற்றை கவனிக்காதே. தலை எழுத்து என்பது பொய்யிலும் பொய்யே

யாகும் என்பது நிச்சயம். இவை இவ்வுலகின்கண் மகா சூக்ஷமமாகிய மார்க்கம் என்பதை நிச்சயமாய்த் தெளிவாயாக எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் ஜாதகம் என்பதைவிட ரேகை சாஸ்திரமே உண்மையான விஷயம் என்பது நிச்சயமாய் நம்புக என்பதாம். 44

கேளப்பா லோகமதில் பிறந்தபேர்கள்
கேவலமாய் நாட்பலன்கள் இல்லைமைந்தா
நாளப்பா நாளில்லை கோளுமில்லை
நட்சத்திரம் கோசரங்கள் ஓரையில்லை
வாளப்பா பிறவிக்கு வயதும்யோகம்
வண்மையுள்ள கண்டமுதல் வசனித்தேன்யான்
வேளப்பா நாள்பலங்கள் ராசிபலங்கள்
விகற்பங்கள் பிறந்தபிள்ளைக் கில்லையன்றே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இவ்வுலகில் பிறந்த ஜீவகோடிகள் பலவற்றிற்கும், சகல காரியங்களுக்கும், நாள் என்னும் நக்ஷத்திரபலம் என்பது அவ்வளவாக பாதிக்காது. கிரகங்களும் வெகுவாய் பாதிக்காது. மற்றும் வாரம் திதி முதலியவற்றால்தான் அவரவர்களுடைய வருகால விஷயங்களை யறிந்து கொள்ள வேண்டும் என்பது அவஸ்யம் இல்லை. இச்செய்யுளால் அவ்வவர்களது பிறவி லக்ஷணங்களையும், வயது, யோகம் முதலியன வற்றையும், உண்மையான கெண்டாதி கெண்ட விவரங்களையும், அவ்வவர்கள் நாள் நக்ஷத்திரம் முதலியவற்றை யறியாமலே சூக்ஷமாய் அறிந்துகொள்ளும் மார்க்கமாய், இந்த ரேகை சாஸ்திரத்தினாலேயே அறிந்துகொள்ளும் வண்ணமாய்ச் சொல்லியுள்ளேன் எ-று. 45

அன்றெனவே அவன்அவள்தான் கருவில்மைந்தா
அமைத்தபடி அவன்கரத்தில் காணுமன்றோ
நன்றெனவே நான்முகனும் கையிலேதான்
நலமாகக் கரங்களில் எழுதிப்போட்டான்
குன்றெனவே குணங்கள்தன்னைக் கையின்ரேகை
குறிப்பறிய யீஸ்வரனார் கொடுத்தார்அன்றே
வென்றெனவே விகற்பங்கள் இல்லாமல்தான்
வியந்திட்ட கேசரியின் விதியிதாமே.

(இ-ள்) ஓ முனிவர்களே! அவ்வவன் தனது தாய்வயிற்றில் கருதரித்த அமைப்பும், லக்ஷணமும், அவரவர்கள் கையிலேயே இருக்கிறதென்பதை அறிவாயாக. எப்படியெனில்? பிரம்மதேவனானவன் அவனவள் பிறந்த கிரக லக்ஷணங்களையும், அவரவர்களுடைய விஷயாவிஷயங்களை எழுதிவிட்டான். அதுவுமன்றி ஸ்ரீசர்வேஸ்வரனும், அவரவர்களது வருகால விஷயங்களை தத்தமது அஸ்தத்திலேயே அறிந்துகொள்ளும் வண்ணம் தெளிவாய் எழுதி விட்டனர். இவ்வித மார்க்கங்களையும் எவ்விதமான சந்தேகங்களையும் எளிதில் அறியும் வண்ணம் இந்த அஸ்தரேகையினது மூலமாய் தெளிவாய் உங்களிடம் சொல்லிவிட்டேன் எ-று. 46

ஆமென்ற என்னுடைய கேசரியின்மைந்தா
அண்டரண்ட புவனமெல்லா மெய்க்கத்தானே
வாமென்ற வாலையிடப் பாடலேத்தான்
வகையாகச் சொன்னமொழி வண்மையாகத்
தேமென்ற அமிர்தம்போற் பாடினேனன்பார்
தென்பாலிற் கும்பமுனி நீரும்கேளீர்
ஆமென்ற ஆணவங்கள் அகற்றிமைந்தா
அரகரா கேசரியின் அறிவைப்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! யான் இங்கு கூறிய ரேகை சாஸ்திரத்தின் மூலமாய், இந்த அண்டரண்ட புவன சராசரங்களில் உள்ள யாவரும் தெளிவாயும், உள்ளதை உள்ளவாறே அறியும்படிக் கூறிவிட்டேன். இந்த ரேகை சாஸ்திரத்தில் சொல்லிய எவையும் பொய்க்காது. ஓ முனிவர்களே! இவ்விஷயத்தை எவ்வாறு கூறினேன் எனில்? எவரும் விரும்பத்தகுந்த அமிர்தம்போன்ற தித்திப்பாகிய விருத்தப்பாவாகப் பாடினேன். ஓ தென் பாலிலுள்ள கும்பமுனியாகிய அகத்தியரே! ஆணவம், மதம் என்னும் இவற்றை அகற்றி, இந்த ரேகை சாஸ்திரத்தின் உண்மை மொழியை அறி விப்பாயாக எ-று. 47

பார்க்கவே என்பாடல் வெளியிலேதான்
பரவாமல் சபித்தேன்பார் பாரிலுள்ளோர்
ஏர்க்கவே எந்நூலேப் பழித்தபேர்க்கு
என்னசொல்வேன் மீளாத நரகமெய்தும்
மார்க்கமாய் சாஸ்திரத்தை மதியாமல்தான்
மகத்தான உதாசினங்கள் சொல்லுவார்கள்
தீர்க்கமாய் எரிவாயின் நரகம்தன்னில்
தீராத சாபமது சபித்தேன்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! யான் இதுவரையில் கூறிவந்த ரேகை சாஸ்திரத்தின் பாடல் எவையும், வெளியில் துஷ்டர்களிடம் பரவ வொட்டா மலும், அவ்வாறு பரவிய என் சாஸ்திரத்தை எவரொருவர் பழித்தார்களோ அவர்களுக்கு மீளாநரகம் சித்திக்கவும் சாபத்தைக் கொடுத்தேன். மற்றும் இந்த சாஸ்திரத்தின் மகிமை அறியாது இதனை வெகுவாய் கேவலமாய் எவர் எவர்கள் பேசினர்களோ அவர்கள் நரகவாதனையில் ஒன்றான அக்கினி ஸ்தம்பத்தை அடையும்படியும், அந்த சாபமானது எக்காலத்தும் நீங்கா திருக்கவும் சாபம் கொடுத்தேன் என்பதை அறிவாயாக எ-று. 48

பாரப்பா என்னுடைய பிரமகீதை
பாருலகில் தினந்தோறும் பூசித்தோர்க்கு
காரப்பா இருதயத்தில் இருந்துநானும்
கடாட்சிப்பேன் சாயுச்யக் கருணையாலே
வாரப்பா மானிலத்தில் வறுமைநீங்கி
மகத்தான பாக்கியங்கள் வழங்குவேன்யான்
சாரப்பா சர்ஜ்ஜனரோ டிருந்துவாழ
சண்முகனூர் தற்காப்பார் சொல்லினேனே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இன்னும் சொல்லுவேன் கேட்பீர்களாக. எப்படியெனில்? பிரம்மகீதை என்னும் இந்நூலை, எவரொருவர் தவறாது தினந்தோறும் பூசித்து வருகின்றார்களோ, அவர்கள் இருதயமாகிய மனத்தின்கண் யானே இருந்து அவ்வவர்களுக்கு சாயுச்சியப் பதவியைக் கொடுப்பேன். இதுவன்றி மேற்கூறியவர்களுக்கு இப்பூமியிலுண்டாகும் வறுமை முதலியனவற்றை நீக்கி, சகல பாக்கியங்களும் உடையவர்களாகி வாழ்ந்திருக்கவும் அருள்புரிவேன். மற்றும் அவ்வவர்கள் இந்நூலைத் துதிசெய்வோர் கடைசிமட்டும் சற்சன சினேகமுடையவராகி இருந்து, தன் வாழ்நாள் முழுதும் நல்வாழ்வாய் இருக்கவும், ஸ்ரீசண்முகனும் காப்பானெனக் கூறியுள்ளேன் எ-று. 49

சொன்னேனையா மஹாரிஷிகள் இன்னம்தாயே
சொல்லுமம்மா பார்வதியே துலங்கத்தானும்
வன்னமுள்ள தேன்மொழியே எந்தன்மாதா
வகுத்ததொரு கீதையின் வரலாறெல்லாம்
பொன்னனையா சரீரமுள்ள மனோன்மணித்தாய்
பொற்புடைய அற்புதமே வாலைதேவி
அன்னபுரி பூரணியே லோகமாதா
அடியேனை அடைக்கலம்நீ காத்தருள்செய்வாய்.

(இ-ள்) இவ்வாறு கூறிய உமாமயேஸ்வரியினது மொழிகளைக்கேட்ட தேவர்கள், முனிவர்கள், முதலாயினோர்கள், மேற்படி தேவியைப் பார்த்து ஓ உலகமாதா! நாங்கள் உமது அடைக்கலம். ஓ அழகுபொருந்திய ரூபலாவண்யமுடையவளே! தேன்போன்று தித்திப்பாகிய மொழியும், எங்களுக்குத் தாய்க்குத் தாயாகியும், பொன்போன்ற சரீரமும், வாலைப்பருவமும் உடைய அன்னபூரணி! ஓ ஜகன்மாதா! உம்மிடம் அடைக்கலம் எனப் புகுந்த எங்கள் மனக்குறையகலும் வண்ணம், இன்னுமுள்ள சகல விசேஷங்களையும் அடியேங்கள் அறியும்வண்ணம் ஆண்டருள்வாயாக எ-று. 50

அடைக்கலமாம் என்னூலைக் குகையில்வைத்து
அட்சதையும் கெந்தபுஷ்பம் அனைத்தும்சாற்றி
முடக்கமொன்று இல்லாமல் மனதொன்றாகி
முயற்சியாய்ப் பூசித்து வந்தாரானால்
இடுக்கங்கள் இல்லாமல் தேற்றினனும்
இன்பங்கள் இனிதளித்துத் துன்பம்தீர்த்து
ஒடுக்கங்கள் வந்திட்ட ஞானமீது
ஓகோகோ சாயுச்யம் ஈகுவேனே.

(இ-ள்) ஓ முனிவர்களே! கேளுங்கள். என்னவெனில்? எவரொருவர் இந்தநூலை எவரும் அறியாதபடி குகைக்குள் வைத்து, அக்ஷதை, கெந்தம், புஷ்பம், இவற்றால் அருச்சனைசெய்து எவ்வித குறைவும் இன்றி ஏகமனது உடையவராய், எந்நாளும் தவறாது சிரத்தையுள்ளவர்களாகி பூசித்து நேசித்து

வருகிறார்களோ, அவர்களுக்கு எந்நாளும் இடுக்கண் என்பது உண்டாகா வண்ணம் காத்தும், சகல சுகங்களும் உண்டாகும்வண்ணம் கடாக்ஷிப்பதுடன், சகல பாபங்களையும் நீக்கத்தகுந்த ஞானமார்க்கங்களையும் கொடுத்து கடாக்ஷிப்பேன் என்பதைத் திண்ணமாய் அறிவாயாக எ-று. 51

ஈந்திட்டேன் என்னுடைய நூல்தான்மைந்தா
இகத்திலே எல்லோர்க்குங் கிடைக்காதப்பா
ஆய்ந்திட்டேன் இந்நூலா யிரத்திலொருவன்
ஆனக்கால் அவனுக்கே காணுமப்பா
வாய்ந்திட்ட கோடியிலே ஒருவனுல்
வண்மையுடன் அவனுக்கே வருகுமப்பா
தோய்ந்திட்ட தொல்லுலகில் எல்லார்க்கும்தான்
தோற்ருது என்னூல்தான் துலக்கம்கேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்நூலாகிய என் நூலானது, இவ்வுலகிலுள்ள சகலருக்கும் கிடைக்கும் என நினையாதே, இவ்வுலகிலுள்ள அநேகருள், ஆயிரத்தில் ஒருவனுக்கே கிடைக்கும். அவ்வாறு ஆயிரத்தில் ஒருவனுக்கு இந்தநூல் கிடைத்தாலும் கோடிக் கொருவனுக்கே இந்த நூலினது மர்மங்கள் தெரியும். ஓ முனிவர்களே! இவ்வுலகிலுள்ள அனைவருக்கும் இந்தநூல் கிடைக்கும் என்றெண்ணுதே எ-று. 52

கேளப்பா என்னூல்தான் படித்தமைந்தர்
கேவலமாய்த் தினந்தோறும் பூசித்தோரும்
நாளப்பா இனிஜனனம் இல்லையில்லை
நன்மையள்ள பரகதியை நாடுவான்பார்
வாளப்பா வண்மையுள்ள மைந்தரெல்லாம்
வரிசைபெறும் எந்நூலின் வண்மையாக
வீளப்பா அல்லாமல் என்னூல்தானும்
விவரமாய்ச் சொல்லிவிட்டேன் வியந்துகேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இன்னும் கூறவேண்டுவதெனில்? எவரும் விரும்பத்தகுந்த இந்தநூலை எவரொருவர் வாசித்தார்களோ அவர்களுக்கும், எந்நாளும் இடைவிடாது எவரொருவர் பூசித்தார்களோ அவர்களுக்கும், இனி மறுஜெனனம் இல்லை என்பதை நிச்சயமாய் அறிவீர்களாக. அவர்கள் மேன்மையைபெற்ற பரகதியை அடைவார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இதுவன்றி யான்கூறிய இந்த நூலில் இவ்வுலகிலுள்ள சகல சீவர்களும் தன் வாழ்நாளை எளிதில் அறியும்வண்ணமாய், எல்லா விஷயங்களையும் தெளிவாய்க் கூறிவிட்டேன் எ-று. 53

கேளடா உலகிலுள்ளோர் எல்லார்க்கும்தான்
கேவலமாய்த் தினந்தோறும் மைந்தாகேளு
நாளடா காலையிலே கால்முகங்கள்
நலமாகச் சுத்திசெய்து விபூதிசாத்தி

வாளடா சிவபூசை செய்துநீயும்
வண்மையுள்ள என்னூலே எடுத்துபாரு
தாளடா தாழ்வில்லா தவரைநாளும்
தற்காக்க வென்றுவரம் சாற்றினேனே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இன்னும் கூறவேண்டுவது என்னவெனில்? இவ்வுலகின்கண் எவரொருவர் மானிடராய் பிறந்தார்களோ அவர்கள், அதிகாலையில் எழுந்து, கை, கால், முகம், இவற்றினைச் சுத்திசெய்துக் கொண்டு உடலெங்கும் விபூதி சாற்றிக்கொண்டு பின் இந்நூலை எவரொருவர் எடுத்து வாசித்தார்களோ அவர்களுக்கு, எந்த நாளிலும் எவ்வித குறைவும் உண்டாகாவண்ணம் சுகித்திருக்கும்வண்ணம் வரந்தந்தேன் எ-று.

(வி-ரை) சிவபூசை செய்யவேண்டிய விவரம் பின்வரும் செய்யுளால் கூறுவார். 54

சிவபூஜை மந்திரம்

சார்ந்திட்ட சிவபூசை செய்யயென்றால்
சாந்தமாய் சிவமந்திரம் சாற்றுவேன்யான்
ஆர்ந்திட்ட ஓம்ஆம்ஊம் ஸ்ரீயும்ரீயும்
அங்ரீங்ஸ்ரீங் சிவாயநம யென்றிட்டேதான்
வார்ந்திட்ட சிவனுடைய மந்திரத்தை
வளமாக ஜெபஞ்செய்து பூசித்தாயானால்
தீர்ந்திட்ட சிவபூசை பெரிதாம்மைந்தா
செல்லலாம் சிவபதியிற் செல்லலாமே.

(இ-ள்) ஓ முனிவர்களே! தேவர்களே! கேட்பீர்களாக. எப்படியெனில்? மேற்சொல்லிய வண்ணம் சிவபூஜை செய்யவேண்டுமானால், அதற்குரிய மந்திரங்களைக் கூறுவேன் கேட்பீர்களாக. எப்படியெனில்? ஓம்-ஆம்-ஊம்-ஸ்ரீயும் ரீயும்-அங்-ரீங் - ஸ்ரீங் - சிவயநமஹ-என்னும் பிரணவ மந்திரத்தை எந்நாளினும் தவறாது பூஜித்து வருவதே சிவபூஜை செய்வதில் எல்லா மந்திரங்களிலும் பெரியதாகும். இவ்வாறு செய்வார்களேயாமானால், சிவசொரூபமாகி வாழ்வார் என்றுங் கூறுவாயாக எ-று. 55

சத்திபூஜை மந்திரம்

சொல்லவே என்னுடைய செபந்தான்மைந்தா
செப்புகிறேன் ஓங்ரீங்ஸ்ரீங் சிவசத்திரூபி
மல்லவே வாலைபர மேஸ்வரியேதாயே
வாவாவா என்றுநிதம் மனத்திருத்தி
வல்லவே சோடசோப சாரத்தோடு
வீழ்ந்திறைஞ்சித் திருவடியைப் பூசித்தோர்கள்
வல்லவே வாலையிட அருளெவர்க்கும்
வண்மையாய் யீந்திட்டேன் வரிசையாயே.

(இ-ள்) ஓ முனிவர்களே! தேவர்களே! கேளுங்கள். மேலே சொன்ன சிவபூஜை மந்திரம்போக, என்னை அதிக்கத்தகுந்த மந்திரம் கூறுகிறேன்

கேட்பீராக. எப்படியெனில்? ஓங்-ஸ்ரீங்-ரீங்-சிவசத்தி சொரூபி-வாலை பரமேஸ்வரி வா-வா, என்று ஏகமனதுடையவராகி சகல சோடசோபசாரத்துடன் துதித்துக் கும்பிட்டு எவரொருவர் வணங்கினர்களோ அவர்களுக்கு ஸ்ரீ வாலைபரமேஸ்வரியினுடைய திருவருள் கட்டாயம் கிடைக்கும் எனத் திண்ணமாய்க் கூறுவாயாக எ-று.

(வி-ரை) இம் மந்திரங்களினது ரகஸ்யங்களை குருமுகாந்தரமாகவே அறியலாம். ஆதலால் இதனை வேறு விவரம் கூறுது விடுத்தனம். 56

அகஸ்தியர் பூஜை மந்திரம்

ஆகவே கும்பமுனி பூசைமார்க்கம்
அற்புதமாய் சொல்லுகிறேன் மைந்தாகேளு
வாகவே தன்மையுள்ள மந்திரத்தை
வரிசையாய்ப் பூசைசெபம் செய்யவென்றால்
யாகவே ஓங்ரீங்ஸ்ரீங் அங்சங்வங்சிங்
வாவாவா சிவயநம கும்பமூர்த்தி
தாகவே தாழ்வில்லாப் பூசைசெய்தால்
தரணியிலே பிறப்பதரிது முத்திதானே.

(இ-ள்) ஓ முனிவர்களே! கும்பமுனி எனக் கூறத்தகுந்த அகத்தியரது பூஜாமந்திர விவரங்களை எவரும் அறியும் வண்ணமாய்க் கூறுவேன் கேட்பீர்களாக. எப்படியெனில்? இம்மந்திரமானது எவரும் போற்றத்தகுந்ததாகும். ஆனதால், எவ்வாரான மந்திரத்தால் பூஜைசெய்ய வேண்டுமெனில்? ஓம்-ரீங்-ஸ்ரீங்-அங்-சங்-வங்-சிங்-வா-வா-சிவயநம கும்பமூர்த்தி, என இம்மந்திரத்தை ஏகமனதாய் மிக்க பயபக்தியுடன் எவரொருவர் இடைவிடாது பூஜை செய்து வருகின்றனரோ, அவர்களுக்கு இனி மறுபிறவியின்றி இச்சன்மத்திலேயே முக்திகிடைக்குமெனத் திண்ணமாய்க் கூறுவாயாக எ-று,

முத்தியப்பா அதிகம்உள்ள முத்தியாகும்
மூவுலகில் பெரியவனும் வாழ்வான்பாரு
சித்தியப்பா அஷ்டமாசித்தி எட்டும்
சிவசிவா வந்திடும்பார் சீக்கிரத்தில்
பத்தியப்பா பாலகனே மோட்சம்தந்து
பண்பாக வைகுந்தம் ஏற்றுவாரே
சத்தியப்பா பிரியாத விடைஇருந்து
சதாநித்தம் காத்தருள்வார் சொல்லினேனே.

(இ-ள்) ஓ முனிவர்களே! மேற்சொல்லிய மந்திரத்தை பூஜிப்பார்களேயாமானல், முத்திக்கும் முத்தியாகிய பெரிய முக்தியே கிடைக்கும். இதுவன்றி, மூவுலகிற்கும் மேம்பட்டவனுகி வாழ்வதுடன், சித்தியடைவதில் மிக்கச் சிரமமாகிய அட்டமாசித்தியும் சீக்கிரத்தில் கிடைக்கும். இதனுல், மேற்படி அகத்தியமுனிவர் கிருபைகூர்ந்து மோக்ஷபதவியைத் தந்து வைகுந்தத்தை யளிப்பார். இதனுல், சத்தியைப் பிரியாதிருக்கும் சிவபிரானும் இடைவிடாது காத்தருள்வார் என்பதைத் திண்ணமாய் அறிவாயாக எ-று.

### விஷ்ணு பூஜை மந்திரம்

சொன்னேனப்பா வைகுந்தம் கோவிந்தன்பால்
சொற்பெரிய என்தமையன் பூசைகேளு
மன்னனப்பா என்பிறவி அதிகசித்து
வாகாக ஆலிலைமேல் துயின்றமாயன்
அன்னனப்பா ஆயுசுக்கு வல்லவன்தான்
ஆனந்த அமிர்தமது கொண்டமாயன்
நின்னயமாய் உலகமெலாம் படைத்தமாயன்
நீணிலத்தில் ஆத்மாவைக் காப்போன்தானே.

(இ-ள்) ஓ முனிவர்களே! சொல்லுதற்கரிய எனது பிறவியாகியும், வைகுந்தத்தின்கண் வாசம்செய்யாநின்றவரும், எனது தமயனாகியும், அனேக வித சித்துடையவரும், சிறிய ஆலிலைமேல் துயின்ற மாயாரூபனும், எல்லா ஜீவர்களுக்கும் ஆயுளைக்கொடுக்கவல்லவனும், எவரும் கண்டு ஆனந்த மடையத்தகுந்த அமிர்தத்தை யடைந்தவரும், இவ்வுலகமெல்லாவற்றையும் படைத்த மாயாரூபனும், சகல ஆத்துமாக்களுக்கும் காரணபூதனாய் நிறைந்தவருமான ஸ்ரீவிஷ்ணுவினது மந்திரத்தைக் கூறுவேன் கேட்பீர்களாக எ-று. 59

கார்ப்பதென்ன என்தமையன் உலகமெல்லாம்
காசினியோர் காணரிதாம் காட்சியாகும்
ஏர்ப்பதென்ன என்தமையன் சித்தேயாகும்
என்னசொல்வேன் என்பிறவி மாயன்தானும்
பார்ப்பதென்ன பலவுயிரைக் காக்கும்சுவாமி
பராபரத்தின் அருளாலே பயின்றோனப்பா
தார்ப்பதென்ன சற்குருவாம் ஆதிமூலம்
சராசரமும் பலபத்திர ராமன்தானே.

(இ-ள்) ஓ முனிவர்களே! எனது தமயனுடைய பிரபாவங்களைக் கூறுமிடத்து, இவ்வுலகம் யாவற்றையும் படைத்தவர். எப்படிப்பட்டவரும் காண்பதற்கரியவர் சகலர்களுக்கும் மனமுவந்து கொடுக்கத்தகுந்த பிரபு. மகா சித்து விளையாட்டுடையவர். இவ்வுலகத்திலுள்ள சகல ஜீவர்களையும் காப்பாற்றத்தகுந்த சுவாமிநாதன். பராபர வஸ்துவான அருளையுடையவர். எல்லோர்க்கும் சற்குரு. ஆதிப்பொருளாகிய மூலாதார வஸ்து, சராசரமெங்கணுக்கும் பலபத்திராராமனாய் நிறைந்த பரவஸ்து. அவரது பெருமையை என்னால் கூறவியலுமோ? ஆயினும் கூறுவேன் கேட்பீர்களாக எ-று. 60

ஆமெனவே அண்டரண்ட புவனமெல்லாம்
ஆதியாம் படைத்ததொரு பிறவிஅப்பா
பாமெனவே பலவுயிரைக் காக்குந்தெய்வம்
பசுநிறத்தோன் என்தமையன் பலத்தைச்சொல்வேன்

நாமெனவே நான்முகனைப் படைத்தமாயன்
நானறியேன் அவருடைய மகிமைதன்னை
தாமெனவே முனிவர்முதல் யாருங்காணார்
தாரணியில் மானிடரோ காண்பாரன்றே.

(இ-ள்) ஒ முனிவர்களே! எனது தமயனாகிய ஸ்ரீ கோபாலகிருஷ்ணன் இவ்வண்டாண்ட புவன சராசரங்களையும் படைத்தவரும், இவ்வுலகின்கண் அனேகசீவர்களை உண்டாக்கி அவர்களைக் காக்கும் பிரபு. பசுமை பொருந்திய எனது தமயனுடைய பலத்தைக் கூறவேண்டுவதெனில்? இவ்வுலகிலுள்ள சகல சீவனையும் உண்டாக்கும்படி நான்முகனாகிய பிரம்மதேவனை உண்டாக்கியவர். ஆதலால் அவரது மகிமையை என்னால் கூறவியலுமோ? அனேக முனிவர் முதலியவர்களே காணமுடியவில்லை என்றால் இப்பூமியிலுள்ள மானிடர்களோ காணத்தகுந்தவர் எ-று. 61

காணாத பொருளையெல்லாம் கண்டமூர்த்தி
காரணமாம் மூலமுதற் பொருளாமையன்
பேணாத மூவருக்கும் பொருளாமூர்த்தி
பேருலகில் உயிரையெல்லாம் அமைத்தமூர்த்தி
நாணாத நலந்தீங்கும் அறிந்தமூர்த்தி
நாதாந்தம் விளங்குகின்ற ஞானமூர்த்தி
ஆணாத ஆண்பெண்ணும் ஆனமூர்த்தி
ஆயிரமாம் பேர்கொண்ட மூர்த்திதானே.

(இ-ள்) ஒ முனிவர்களே! இன்னும் கூறவேண்டுவதெனில்? எனது தமயனாகிய விஷ்ணுவானவர் எவரும் காணாப் பொருளையெல்லாம் கண்டறிந்தவர். மற்றும் எல்லாவற்றிற்கும் மூலகாரணப் பொருளாய் அமைந்த தேவாதிதேவன். சகல உயிர்க்கும் காரணமூர்த்தியாய் விளங்குபவர். இதுவன்றி, இவை நன்மை, இவை தீமை, என்னும் பாகுபாட்டையறிந்தவர், நாதாந்தஞான வேதமூர்த்தியாய் விளங்குபவர். மேலும் ஆணுக்கு ஆணும், பெண்ணுக்குப் பெண்ணும் நிறைந்தவரும், ஆயிரந் திருநாமங்களைக் கொண்டவர் என்றும் நினைப்பீர்களாக எ-று. 62

கொண்டதொரு பொருளாம்என் தமையன்தானும்
கோவிந்த நாமமதை தரித்தமாயன்
அண்டமுதல் பதினாலு லோகமெல்லாம்
அவர்படைப்பே ஆகுமப்பா அறிந்துசொன்னேன்
எண்டதொரு அடிமுடியும் ஆதியந்தம்
இகத்திலே இவர்மகிமை யாலேயாகும்
நண்டதொரு நான்முகனே முதலாயுள்ள
நன்மைமுதல் அவர்மகிமை நடத்தியாமே.

(இ-ள்) ஒ முனிவர்களே! இன்னும் கூறவேண்டுவதெனின்? எனது தமையனாகிய நாராயணன் சகல பொருளுக்கும் மேம்பட்ட பொருளாகி விளங்குபவர். கோவிந்தன் என்னும் திருநாமத்தைப் படைத்தவர், அண்ட

முதலாயுள்ள 14-உலகங்களையும் அவரே படைத்தவர் என்பதைத் திண்ணமாய்க் கூறவேண்டுவதுடன், ஆதியும் அந்தமுமாகியும், அடியாகியும், முடியாகியும் விளங்குபவர். நான்முகனாகிய பிரம்மதேவன் முதலாயுள்ள சகலரையும் உண்டாக்கித் தனது மகிமையைக் காட்டியவர் என்றுந் தெரிந்துக் கொள்வீர்களாக எ-று. 63

விஷ்ணு மந்திரம்

தாமப்பா என்தமையன் மந்திரத்தை
தாரணியில் ரிஷிகள்முதல் வானோர்தாமும்
நேமப்பா கொலைகளவு புலையும்நீங்கி
நினைவதனில் கொண்டுநிதம் நேசித்தேதான்
ஆமப்பா அரிராம ஜயமென்றேதான்
அன்பாகத் தினந்தோறுஞ் சேவித்தோர்க்கு
காமப்பா காட்சியுண்டாம் கருணையுண்டாம்
கயிலாச பதிதனிலே இருப்பார்தாமே.

(இ-ள்) ஓ முனிவர்களே! எமது தமையனாகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய மஹா மந்திரத்தை இப்பூமியிலுள்ள ரிஷிகள் முதல் வானவர்களாகிய தேவர்கள் வரையில் ஓதித்தனர். ஆதலால், புலால் உண்ணல், கொலை செய்தல், திருடல் முதலிய கொடிய குணங்களை நீக்கிச் சதாகாலத்தும் அரிராமஜெயம், என்னும் திருநாமத்தை ஓர் நாளேனும் மறவாது மிக்க அன்புஉடையவராய் பூசித்து நேசித்து வருவார்களேயாமானால், அவர்களுக்கு மேற்படி எம்பிரானது காக்ஷியும், கருணையும் உண்டாகி கைலாயபதவியையும் அடைவார் என்பதில் ஐயமில்லை என்று அறிவாயாக எ-று. 64

ஆமென்ற அஞ்செழுத்தின் மூலமாச்சு
அம்பரத்தின் ஓரெழுத்தின் பொருளதாச்சு
வாமென்ற வாலையிட உயிர்தானாச்சு
வண்மையாய்ச் சொல்லிவிட்டேன் வரிசையாக
தாமென்ற தாரணியில் மனிதர்காணார்
சாற்றரிய தேவர்களும் ரிஷிகள்காணார்
ஊமென்ற உட்பொருளை சொன்னேன்மைந்தா
உற்றதொரு சேதிதனை உரைத்திடாயே.

(இ-ள்) ஓ முனிவர்களே! மேலேசொன்ன அரிராமஜயம் என்னும் மந்திரமானது பஞ்சாக்ஷரத்திற்கும் மூலமூமுப்பொருளாகி ஓரெழுத்தாய் நிறைந்துள்ளன. மற்றும் சத்தியாகிய வாலைத்தேவியினுடைய பிரணவப் பொருளாயும் நிறைந்து நின்றன. ஓ முனிவர்களே! இப்பூமியின்கண் உள்ள மானிடர்கள் எவரும் அறியாத மேம்பட்டபொருளை உங்களுக்குச் சொன்னேன். மற்றும் தேவர்கள் ரிஷிகள் முதலானவர்களும் காணப்படாத மேலான பொருளை உங்களுக்குச் சொன்னேன். ஓ முனிவர்களே! இவை உண்மை என நினைத்துக் கொள்வீர்களாக எ-று. 65

## சுப்ரமணியர் மந்திரம்

உரைத்திட்டேன் என்தமையன் வரலாறெல்லாம்
உண்மையாய்ச் சகலசித்து எல்லாஞ்சொன்னேன்
நிறைந்திட்டேன் என்குழவி குமரனையா
நீணிலத்தில் உயிர்களெல்லாந் தழைக்கவேண்டி
வரைந்திட்டேன் என்மகனும் கந்தன்தன்னை
வாகான அறுமுகனைப் போற்றிசெய்ய
அரைந்திட்டேன் ஆதியந்த உயிர்படைத்த
அறுமுகனார் மந்திரத்தை அருள்செய்வேனே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இதுவரையில் கூறிவந்தவற்றால் எனது தமயனாகிய விஷ்ணுவினது பிரபாவத்தையும், திருமந்திரத்தையும் தெளிவாய்ச் சொல்லிவிட்டேன். இனி இவ்வுலகிலுள்ள சகல ஜீவர்களும் பிழைக்கும் வண்ணமாய் திருவுருவாய் அவதரித்த எனது திருக்குமாரனும், குமரனும், கந்தனுமாகிய ஸ்ரீசுப்ரமண்யருடைய பிரபாவத்தைக் கூறுவேன் கேட்பீர்களாக. ஓ முனிவர்களே! அப்படிப்பட்ட ஆதியும் அந்தமுமாய் விளங்காநின்ற அறுமுகக்கடவுளினது மந்திரத்தைக் கூறுவேன் கேட்பீர்களாக எ-று. 66

செய்யவே என்குமரன் அறுமுகன்தான்
செயல்பெருகி அவருடைய பெருமைகேளு
ஐயமில்லா அறுமுகனார் மந்திரத்தை
அரகரா சொல்லுகிறேன் அருமையாக
பையவேஓம்ஸ்ரீம்கிலீம் சரஹணபவா என்றே
பாக்கியமாய் மைந்தனைப் பூசித்தாயானால்
மெய்யவே என்பிள்ளை உனக்குமைந்தா
மேன்மையாம் பரகதியை அளிப்பார்பாரே.

(இ-ள்) ஸ்ரீ சர்வேஸ்வரனது திருவருளால் எமது மைந்தனும், குமரன் என்னும் திருநாமத்தை உடையவனும், அறுமுகனும் ஆகிய வேல்பிடித்த கையினுடைய பெருமையையும், அவரது திருமந்திரத்தையும் கூறுவேன் கேட்பீர்களாக. எப்படியெனில்? நாள்தோறும் தவறாது ஓம்-ஸ்ரீம்-கிலீம்-சரஹணபவா, என்னும் மந்திரத்தால் மிக்க பாக்கியத்தைத் தராநின்ற எமது மைந்தனாகிய ஸ்ரீ சிவசண்முகனைப் பூசித்து வந்தாயேயாமானால், என் மைந்தன் உங்கள்மீது கிருபை கூர்ந்தவனாகி நல்ல மேலான பரகதியைக் கொடுப்பார் என்பதை அறியக்கடவீர்களாக எ-று. 67

பாரப்பா தினந்தோறும் செபித்தபேர்க்கு
பதவியடா சாயுச்யம் ஈவார்கந்தர்
காரப்பா காட்சிபெறும் மகிமையீவார்
கருணைபெற கெமனசித்தும் கடாட்சிப்பார்
சேரப்பா செல்வமது அனேகமீந்து
செம்மையுடன் வருமையெல்லாம் நீக்குவார்பார்
கூரப்பா குணமுள்ள மைந்தனுக்கும்
கூர்மையடா என்பிள்ளை குணம்சொன்னேனே.

(இ-ள்) ஓ முனிவர்களே! மேலே சொன்ன மந்திரத்தால் எவரொருவர் ஸ்ரீ சண்முகக்கடவுளைத் துதித்து வருகின்றனரோ அவர்களுக்கு எல்லாப் பதவியிலும் மேலான பதவியாகிய சாயுச்சியப் பதவியைக் கொடுத்து, எவரும் ஆச்சர்யம் அடையத்தகுந்த மகிமையையும் தருவார். மற்றும் எமனுடைய வாதை அணுகாமலும், அநேக செல்வங்களைக் கொடுத்து வறுமைப்பிணி என்பது அணுகவொட்டாது கடாக்ஷிப்பார். ஓ முனிவர்களே! என் மைந்தன் மிக்க கூர்மையும், குணமும் உள்ளவன். இதனை நீங்கள் அறியக்கடவீர்களாக எ-று. 68

சொன்னேனையா என்பிள்ளை பூசிப்போர்க்கு
சொற்பெரிய பதவியடா அறுமுகன்தான்
அன்னேனையா ஐஸ்வரியம் உள்ளபாலன்
ஆனந்த அமிர்தமதைக் கொண்டநாதன்
வன்னேனையா வாலைக்கு வாலேருபன்
வண்மையுள்ள என்பிள்ளை வயதேயாகும்
இன்னேனையா என்பிள்ளை கரிமுகத்தான்
இகத்திலே வினைமுதலாந் தெய்வமாமே.

(இ-ள்) ஓ முனிவர்களே! எனது மைந்தனாகிய ஸ்ரீசிவசண்முகனுடைய பிரபாவங்களை இன்னும் கூறமிடத்து, மேற்படி சண்முகனை எவரொருவர் இடைவிடாது பூசித்து வந்தார்களோ அவர்களுக்கு எல்லாப்பதவியிலும் மேலான பதவியே கிடைக்கும். ஓ முனிவர்களே! மேற்படி ஆறுமுகக்கடவுளானவர் அனேக ஐஸ்வர்யம் உடையவர். ஆனந்தமயமாகிய அமிர்தத்தையுண்டவன். எக்காலத்தும் வாலைப்பருவம் என்னும் குமாரபருவத்தையே உடையவன். எல்லோர்க்கும் பூரண ஆயுளைக் கொடுக்கத்தகுந்தவன். இன்னும் கூறவேண்டுவதெனில்? என் மகனாகிய விநாயகனில்லாது எக்காரியமும் முடியாது. ஆனதால் அவனே முதற்கடவுள் என நினைப்பாயாக எ-று. 69

**விக்நேஸ்வரர் மந்திரம்**

இல்லையப்பா என்பிள்ளை கரிமுகத்தான்
இகத்திலே யிவனில்லாக் காரியமில்லை
நல்லையப்பா நான்முகனும் முதலாயுள்ள
நல்லதொரு மூவர்கட்கும் முதலாய்நின்றோன்
அல்லையப்பா ஆதிமூலப் பொருள்தானாகும்
அரகரா என்மகன்தான் அறிவதாமே
வல்லமைகள் மெத்தவுண்டாம் பூசித்தோர்க்கு
வண்மையடா சாயுச்சிய பதவியாமே.

(இ-ள்) ஓ முனிவர்களே! என் மைந்தனாகிய விநாயகன் இல்லாத இடமும் விசேஷமும் இல்லை. எப்படியெனில்? நான்முகனாகிய பிரம்மதேவன் முதலாய், விஷ்ணு உருத்திரர் முதலான மூவருக்கும் முதற்பொருளானவன், அவனே ஆதிமூலப்பொருளென்றும் தெரிந்துகொள்வீர்களாக.

மேற்படி விநாயகனை எவரொருவர் பூசித்தார்களோ அவர்களுக்கு மேலான சாயுச்சியப்பதவியைத் தருவான் என்பதில் சிறிதேனும் சந்தேகமில்லை யென்றறிந்து கொள்வீர்களாக எ-று. 70

ஆகுமப்பா அவனுடைய கேசரியைத்தான்
அறிவதனை சொல்லவென்றால் முடியாதப்பா
வாகுமப்பா வஜ்ஜிரமணி பொருளுடையோன்தான்
வளமையாம் என்னூலை அறிந்தபேர்க்கு
தாகுமப்பா தனபதியில் உள்ளமைந்தன்
தரணியிலே இவன்போலும் பெருமைபெற்றோர்
ஏகுமப்பா என்குருவாம் முனிதானாகும்
என்னசொல்வேன் யோகத்தின் இயல்புதானே.

(இ-ள்) ஓ முனிவர்களே! என்னுடைய திருக்குமாரனாகிய விநாயகனது பெருமையைச் சொல்வதென்றால் என்னால் முடியாது. மேற்படி விநாயகன் வச்சிரத்திற் கொப்பாகிய மணியும் பொருளும் உடையவன். மற்றும் இந்நூலை எவரொருவர் அறியவேண்டுமானாலும், அதற்குத் தனாதிபதியாய் விளங்குபவன். இவனைப்போன்று பெருமையை அடைந்தவர்கள் எனது குருவாகிய ஈசன் ஒருவரேயாகும். ஓ முனிவர்களே! அவனது பெருமையை என்னால் சொல்லவியலாது எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் விநாயகர் ஸ்ரீசர்வேஸ்வரனாகிய ஈசனுக்கு ஒப்பானவன் எனக் கூறியதை அறிக. 71

தானென்ன என்னூலை எவரானாலும்
தாரணியில் கேட்டபேர் பிரமைகொள்வார்
வானென்ற வையகத்தி லிந்தநூலை
வளமையாய் காணரிது வரிசைசொல்வேன்
பாரென்ற பலபொருளை அறிந்தபேர்க்கு
பக்குவமா யென்னூல்தான் தோயும்பாரு
ஊனென்ற உட்பொருளை அறிந்தாரானால்
உண்மையுடன் காணுமடா உறுதிதானே.

(இ-ள்) என்நூலை இப்பூமியிலுள்ள எவரொருவர் கேட்டார்களோ, அவர்கள் பிரம்மை கொள்வார் என்பதில் ஐயமில்லை. இதனைப்போன்ற பெருமை வாய்ந்த நூல் இப்பூமியில் வேறு காணமுடியாதென்பது உண்மை. அனேக விஷயங்களை ஆராயத்தகுந்த பெரியோருக்கு என்நூலானது பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. இந்நூலில் கூறிய உண்மைப் பொருளாகிய உட்பொருளை எவரொருவர் அறிந்தார்களோ அவர்களுக்கு உறுதியும் தெளிவும் உண்டாகும் என்பதை அறிவாயாக எ-று. 72

உறுதியாய் என்நூல்கோடியில் ஒருத்தர்
உத்தமர்க்கு கிடைக்குமென்று உறுதிசொன்னேன்
பருதியாய்ப் பாலகர்க்குக் கிடைக்கும்அப்பா
பாங்காக என்னூல்தான் பதனமப்பா

இருதயத்தில் என்னூலை வைத்துநீயும்
இன்பமுடன் பூசித்தால் முத்திஉண்டாம்
சுருதியாய் சூட்சமதைச் சொன்னேன்மைந்தா
சுகமாக என்னூலைப் பதனம்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! என்நூலாகிய இந்த சாஸ்திரமானது இவ்வுலகிலுள்ள மகா உத்தமர்களில், ஆயிரத்திற் கொருவருக்கே கிடைக்கும் என்பது நிச்சயம். சூரியனுக்கொப்பாகிய பிரகாசத்தையுடைய உத்தமர்களுக்கே இந்நூல் கிடைக்கும் ஆதலால், இதனை பதனம் செய்யக்கடவீர்கள். பதனம் செய்வதுடன் இந்த நூலை வெகுபத்திரமாய் வைத்து எவரொருவர் பூசித்து வந்தார்களோ அவர்களுக்கு முக்தியுண்டாகும் என்பதை அறிவீர்களாக. ஓ முனிவர்களே! இந்நூலினது சூக்ஷமங்களைக் கூறினேன். ஆதலால் இதனை வெகு ஜாக்கிரதையாய் பதனம் செய்வீர்கள் எ-று. 73

பாரடா என்னூலை வெளியிலேநீ
பாங்காகப் பிரபஞ்ச வளவில்போட்டால்
தாரடா அவர்தலையும் வெடித்துப்போகத்
தாணியிலே சபித்திட்டேன் தாழ்வில்லாமல்
பேரடா பாவிகட்கு யீயலாகா
பேரின்ப முள்ளவர்கட் கீயலாகும்
கூரடா குணமுள்ள பிள்ளைகட்குக்
கொடுக்கவும்தான் வேணுமப்பா சொல்லுவேனே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த நூலை அவமதித்து இப்பூமியின்கண் பலவாறு சிதற விடுவார்களேயாமானால், அப்படிச் செய்பவர்களது சிரசானது வெடித்துப்போகுமென இப்பூமியிலுள்ளோர்க்குச் சாபமிட்டேன். இவை தவறாது. இதுவன்றி, இந்நூலைப் பாவிகள் என்னும் கொடியவர்களுக்குக் கொடுக்கலாகாது. பேரின்பமுடையவர்களுக்கே கொடுக்கத்தகும். இதுவன்றி நற்குணம் அமைந்த பிள்ளைகள் எதுவானாலும் அவர்களுக்குக் கொடுக்கலாம் என்றும் கூறுவாயாக எ-று. 74

சொன்னெனப்பா ரிஷிகளே தேவர்கேளீர்
சொல்லுதற்கு இன்னமும்தான் சுருதிஉண்டு
அன்னெனப்பா அகஸ்தியரே வதிஷ்டர்காள்நீர்
அரனார்தான் எந்தனுக்கு உபதேசித்தார்
வன்னெனப்பா அவர்தவசில் கண்டசேதி
வாகாக எந்தனுடன் சொன்னார்பாரு
முன்னெனப்பா பிரமலபி அமைப்புமைந்தா
முதன்மையுள்ள பிரமாவின் அமைப்புதானே.

(இ-ள்) ஓ ரிஷிகளே! தேவர்களே! கேளுங்கள். இதுகாறுங் கூறிய சாஸ்திரங்கள் போக, இன்னும் அநேக சாஸ்திரங்கள் உண்டென்பதை அறியக்கடவீர்கள். மற்றும், ஓ அகஸ்திய முனிவரே! வதிஷ்டரே! கேட்பீர்களாக. என்னவெனில்? உலக கர்த்தாவாகிய ஈசன் தனது தபசில் பிரம்மா

வின் அமைப்பு என்னும் உலக இன்பதுன்பங்களைக் கண்டறிந்து எனக்குக் கூறினர். அதனை நான் உங்களிடம் சொன்னேன். இதனை நீங்கள் பிரம்ம லபி என்று தெரிந்துகொள்ளக் கடவீர்களாக எ-று. 75

தானென்ற தத்வத்தின் ஆத்துமபோதம்
தயவான தவசுகளில் முத்திமெத்த
கானென்ற சரிதைஉண்டு கிரிகைஉண்டு
கனமான யோகம்உண்டு ஞானம்உண்டு
ஊனென்ற சப்தரிஷி என்றபேர்கள்
உவைபெற்றார் நூலினிடப் பெருமைதானே
வானென்ற வையகம்தான் பிழைக்கவேண்டி
வண்மையாய்ச் சாஸ்திரத்தை வகுத்திட்டேனே.

(இ-ள்) ஓ சப்தரிஷிகளே! கேளுங்கள். இன்னும், இந்த நூலினுடைய பெருமைகளைக் கூறவேண்டுவது என்னவெனில்? உமாதேவியாகிய என்னால் கூறப்பெற்ற இந்த நூலானது, இவ்வுலகிலுள்ள சகல ஜீவகோடிகளும் தனது வருங்காலங்களை முன்னதாய் அறிந்துதெரிந்துக்கொள்ளும்வண்ணம், அருமை வாய்ந்த இந்த சாஸ்திரத்தைக் கூறியதுடன் இந்நூலை வாசித்த பேர்க்கு தத்துவநிலையும், ஆத்தும போதமும், தவசுசெய்து முத்திபெறத் தகுந்தவழியும், சரியை - கிரியை-யோகம்-ஞானம் என்னும் நான்கையும் அடையலாம் என்பதைத் திண்ணமாய் அறியக்கடவாயாக எ-று.

(வி-ரை) இந்நூலின்கண் சகலமும் அடங்கியுள்ளன வென்பது கருத்து. 76

இட்டதொரு என்னூலைக் கையில்வைத்து
இன்பமுடன் சோடசமும் அர்ச்சித்தப்பா
தொட்டதொரு கெந்தமுடன் தூபதீபம்
சொர்ன்னம்போல சிவபூஜை செய்துநீயும்
கிட்டதொரு வேதாந்த கடாட்சத்தாலே
கிருபையுற்று பூஜைசெய்து வணங்குவோர்க்கு
இட்டதொரு கட்டளைகள் தவறாமல்தான்
இயல்பான சாயுச்யம் ஆகும்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! என்னால் இயற்றப்பெற்ற இந்த நூலை சொர்னத்துக்குச் சமமாய் நினைத்து மிக்க சந்தோஷத்துடன் சோடசோப சாரத்துடன் அருச்சித்து, சுகந்த கந்தபரிமளாதிகளுடன் தூபதீபநைவேத் தியம் செய்தும், சிவபூஜை செய்தும், வேதவிதிப்படி உள்ளன்புடன் வணங்கி வருவார்களேயாமானல், மேற்படி சிவபிரான் அளித்த கட்டளை தவறாமல் எல்லாப் பதவியிலும் மேலான பதவியாகிய சாயுச்சியப் பதவியையும் அடைவான் என்பதில் சிறிதும சந்தேகமில்லையெனத் தெளிவாயாக எ-று. 77

பாரப்பா பரமபதம் அடையும்பேர்க்கு
பாங்காக என்நூல்தான் கிட்டும்பாரு
காரப்பா அவர்வயிற்றில் நானேசென்று
கருணையாய்ப் பிறந்திடுவேன் கருதிச்சொல்லு

சேரப்பா செம்மைஉள்ள தேவனுக்கு
செயலான என்னூல்தான் தெரியும்பாரு
ஆரப்பா என்னைப்போல் உலகத்துள்ளே
அருள்செய்வார் பிரமனே அறிந்துசொல்லே.

(இ-ள்) ஓ முனிவர்களே! எவரொருவர் பரமபதத்தை அடைய வல்லவர்களோ, அவர்களுக்கே என்னுடைய நூலானது கிடைக்கும் என்றும், அப்படிப்பட்டவர்கள் வயிற்றில் யானே புத்திர புத்திரியாய்ப் பிறப்பேன் எனவும், எவர் தேவர்களுக்கு ஒப்பானவராய் இருக்கிறார்களோ அவர்களுக்கே என் நூலினது மகிமையும் தெரியும். ஓ பிரம்மதேவரே! என்னைப்போன்ற இவ்வதிசயமாகிய உண்மை நூலை கூறவல்லவர் எவரும் சொல்லார் என நினைப்பாயாக எ-று. 78

சொல்லியதோர் சாஸ்திரங்கள் அநந்தங்கோடி
சொற்பெரிய வேதமுதல் அநேகம்உண்டாம்
அல்லியதோர் அந்தநல்ல நூல்கள்தானும்
அடிவணங்கித் தெண்டனிட்டுப் போற்றிசெய்யும்
வல்லியதோர் நூல்களெல்லாம் வணங்கிநிற்கும்
வாகான குருநூலாய்த் தொழுதுபோற்றும்
மல்லியதோர் மனமகிழ மகத்துவத்தால்
மனோன்மணியாள் கட்டளைகள் மறவாதன்றே.

(இ-ள்) ஓ பிரமனே! இப்பூமியின்கண் அனேக சாஸ்திரங்களும், அனேக வேதங்களும் உள்ளனவாயினும், அவையாவும் என்னால் கூறிய இந்நூலுக்கு அடிவணங்கி தெண்டனிடும் என்பதில் ஐயமில்லை. மற்றுமுள்ள அனேக நூற்களுக்கும் இந்த நூலே குருநூலென நினைத்து வணங்கி தொழுதேத்தா நிற்கும். மனோன்மணியாகிய உலகமாதாவினது கட்டளையை எல்லாம் கண்டு அடிவணங்கி மனமகிழ்ந்து நிற்கும் என்பதில் சிறிதளவும் ஐயமில்லையென நினைப்பாயாக எ-று. 79

மறவாத பேர்களுக்கு என்நூல்வேண்டும்
மகத்துவமாய் இருக்கவென்றால் என்நூல்வேண்டும்
இறவாமல் இருக்கவென்றால் என்னூல்வேண்டும்
இகத்திலே இருப்பவர்க்கும் என்நூல்வேண்டும்
துறவாமல் இருக்கின்ற பேர்கட்கப்பா
துன்பங்கள் அகற்றிவிடும் என்நூல்மைந்தா
தறவான சற்சனராம் பெரியோரெல்லாம்
சற்குருபோல் நினைப்பவர்கட் கீவர்தானே.

(இ-ள்) ஓ முனிவர்களே! எப்படிப்பட்டவருக்கு எனது நூல் வேண்டுமெனின்? மிக்க கவனமுடையவர்களுக்கே வேண்டும். மற்றும் மகாமகுத்துவம் அடையவேண்டுமானாலும், இவை அவசியம். சாகாதிருக்க வேண்டுமானாலும் எந்நூல் மிக்க அவசியம். இவ்வுலகிலுள்ள சகலர்க்கும் எந்நூல் அவசியம் வேண்டும். இல்லத்தாசையை துறக்க முடியாதவர்களே இந்

நூலானது துறக்கும்படிசெய்து சகல துன்பத்தையும் போக்கும். மற்றும் இந்நூலை சற்ஜனரும், பெரியோரும், இதனை குருபோன்று எவர் தமது உள்ளத்தில் நினைக்கின்றனரோ அவர்களுக்கே இதனை ஈவார் எ-று. 80

ஈவதுதான் யார்க்கென்றால் சிவயோகிக்கு
இகத்திலே பாவிகளுக் கியலாகா
நோய்வருகும் பாவிகளுக் கீந்தாயானால்
நூதனமா மவர்கட்கு நுண்மைதோன்று
ஆய்வரும்பார் என்னூலைப் பூசித்தோர்க்கு
அரகரா அதிகமுடன் பாக்கியம்ஈவேன்
தீவரும்பார் பொல்லாத பாவிஉண்டு
திருவருளால் அறிந்துநீ தூரந்தள்ளே.

(இ-ள்) இதுவன்றி இந்தநூலை எப்படிப்பட்டவர்களுக்கு ஈயவேண்டுமென்றால்? மேன்மையையுடைய சிவயோகிகளுக்கே கொடுக்கலாமேயன்றி, பாவிகளுக்குக் கொடுப்பது கூடாது. அவ்வாறு பாவிகளுக்குக் கொடுப்பாயேயாமானால், உனக்குக் கொடிய வியாதியே உண்டாகும். அவர்களும் இதனது உண்மை விஷயத்தை அறியமாட்டார். மற்றும் இந்நூலினது விஷயங்களை ஆராய்ந்து பார்க்கத்தக்கவருக்கும், பூசிக்கத்தக்கவருக்கும், அளவிறந்த பாக்கியம் கொடுப்பேன். ஓ முனிவர்களே! பாவிகள் அநேகருண்டு. அவர்களை உனது மனோசக்தியால் அறிந்து அகற்றுவீர்களாக. அப்படிக் கொடுப்பீர்களேயானால் கட்டாயம் தீமையே சம்பவிக்கும் எ-று. 81

தள்ளுவதிங் காரையென்றால் குணம்இல்லாரை
சற்குருவை அறியாத சமையத்தோரை
கள்ளுடனே அபினிகளைக் கொண்டபேரை
கஞ்சாவும் இறையும்மீன் கொண்டபேரை
உள்ளுணர்ந்து பாராத உலுத்தர்தம்மை
உத்தமரைத் தூஷணமாய் உரைப்போர்தம்மை
நல்லுணர்வு சற்றுமில்லா மூடர்தம்மை
நலமாகக் கண்டறிந்து நயந்துதள்ளே.

(இ-ள்) எப்படிப்பட்டவர்களுக்கு இந்நூலைக் கொடாது நீக்கவேண்டுவதெனின்? குணம் இல்லாதவரையும், சற்குருவினது பெருமையை அறியமாட்டாத சகடரையும், கள்ளு-அபினி-கஞ்சா முதலியவற்றைச் சாப்பிடுவோரையும், மீன்-மாமிசம் முதலியவற்றை சாப்பிடுவோரையும், இந்நூலினது ரகஸ்யத்தை உள்ளாராய்ந்து அறியமாட்டாத உலுத்தரையும், உத்தமர்களை தூஷணிப்போரையும், நன்மார்க்கம் என்பதே சற்றுமில்லாத மூடர்களையும் கண்டறிந்து, அவர்களுக்கு இந்நூலை கொடாது நீக்குவாய் எ-று. 82

அறிந்துநான் சொன்னதொரு ரேகைசாஸ்திரம்
அன்பான நூல்இதனைப் படித்துநீயும்
தெரிந்துநான் சொன்னதொரு ரேகைதன்னை
திருவுளத்தின் அருளாலே தெரிந்துகொண்டு

வருந்திநின்றால் வகுத்தபடி எல்லாம்தோயும்
வண்மையுள்ள லோகத்தில் மாய்கைநீங்கும்
பிரிந்துநான் பிரியாத விடைஇருந்து
பிரபலங்கள் ஆக்கிவைப்பேன் பிரியமாயே.

(இ-ள்) ஓ முனிவர்களே! தேவர்களே! ரிஷிகளே! சிவபிரானால் அறிந்துரைத்த இந்த ரேகைசாஸ்திரத்தை நன்றாய்ப் படித்து, ஆராய்ந்தறிந்து, இந்நூலில் சொல்லிய ரேகைசாஸ்திரத்தினது ரகஸ்யங்களையெல்லாம் ஸ்ரீசிவபிரானது திருவருளால் அறிந்து கூறுவாயேயாமானால், நீகூறிய யாவும் உண்மையாகவே முடியும். மற்றும் இவ்வுலக மாய்கையும் உன்னை விட்டு நீங்கும். யானும் உன்னருகிலிருந்து உன்னை மேலான பிரபல மேம்பாட்டை யடையும்படி செய்வேன் என நினைப்பாயாக எ-று. 83

ஆகவே அவருடைய வமிசம்தோறும்
அந்தரத்தில் நிற்கின்ற பேர்களுக்கும்
வாகவே வாலையிட மோட்சம்ஈந்து
வண்மையாம் வைகுண்டம் ஈவேன்பாராய்
தாகவே தாழ்வில்லாப் பதவிஈந்து
சாயுச்சியம் ஈந்திடுவேன் தாழ்வில்லாமல்
பாகவே பலபொருளும் அருளிஈசன்
பாலகர்க்கு மோட்சமதைப் பாலிப்பாரே.

(இ-ள்) மேற்கூறிய விதிபிசகாது அந்தரங்கமனமுடையவராய், இந்நூலை கைக்கொள்வோர்க்கு வாலைதேவியினது கிருபையால் மோக்ஷத்தையடைந்து வைகுந்தப்பதவியைத் தருவதுடன், எந்நாளும் தாழ்ச்சியடையப்படாத பதவியும், சாயுச்சியப்பதவியும் தாழ்வின்றித் தருவேன. மேலும் உலக ரக்ஷகரான ஈசனும் சகல சம்பத்தையும் கொடுத்து, மோக்ஷத்தையும் கொடுத்து ஆதரிப்பார் என்பதில் ஐயமில்லை யென நினைப்பீராக எ-று.

(வி-ரை) இந்நூலை பயபக்தியுடன் வாசிப்போர்க்கு மோக்ஷமுண்டு என்பது கருத்து. 84

மோட்சம்என்று முன்சொன்னேன் சொன்னேன்மைந்தா
முதல்நமசி வாயஎன்று மொழிந்தேன்நானும்
வாச்சுதடா வாலையிடக் கிருபைதானும்
வண்மையாய் அவரிடத்திற் குடியிருப்பேன்
ஆச்சுதடா ஆயுசுதான் வளரவேண்டி
அண்டாண்ட புவனமெல்லாம் மெய்க்கவேண்டி
பாச்சுதடா பலபொருளை அனுபவிக்கப்
பத்தனைத்தான் காத்திடுவேன் பகர்ந்திட்டேனே.

(இ-ள்) மோக்ஷம் உண்டென்றால், எவ்வாறு மோக்ஷம் கிடைக்குமெனின்? நமசிவய வென்று கூறுவோர்க்குக் கட்டாயம் மோக்ஷம் உண்டென முன்பே கூறியுள்ளேன். மேலே சொன்னபடி நமசிவய என்று கூறுவோர்க்கு வாலைதேவியாகிய என் கிருபையும் எந்நாளும் அவர்களிடம்

நீங்காது குடியிருப்பேன். மற்றும் அவ்வவர்களது ஆயுள் வளரவும், அண்ட ரண்ட சராசரங்களும் மதிக்கவும், எல்லாப் பொருளையும் அடையும் வண்ணமாய் எனது பக்தனைக் காப்பாற்றுவேன் எனத் திண்ணமாய் நினைப்பீர்களாக எ-று. 85

பகருவேன் கேசரியின் வரலாறெல்லாம்
பக்குவமாய் உள்ளபடி பகர்ந்தேன்மைந்தா
நிகருவேன் நீணிலத்தில் மனிதர்க்கெல்லாம்
நிகழ்த்தினேன் சாஸ்திரத்தின் நேர்மைதானே
அகருவேன் ஆதியந்தப் பொருள்களெல்லாம்
அமைத்தபடி முடித்துவிட்டேன் அவனிக்காக
உகருவேன் இன்னம்ஒரு விதிதான்மைந்தா
உண்மையாய்ச் சொல்லுகிறேன் உவந்துகேளே.

(இ-ள்) ஓ முனிவர்களே! ரேகைசாஸ்திரத்தினது மருத்துவம் எல்லாவற்றையும் தெளிவாயும் உள்ளது உள்ளபடியே கூறிவிட்டேன். மற்றும் இந்த சாஸ்திரத்துள் ஆதியும் அந்தமுமாகிய சகல விஷயங்களையும், பிரமன் விதிப்படி இப்பூமியிலுள்ளோர் அறிந்து கொள்ளும் வண்ணம் தெளிவாய்க் கூறிவிட்டேன். இன்னும் ஒரு சாஸ்திர விதியுண்டு அதனையும் கூறுகிறேன் கேட்பீர்களாக எ-று.

(வி-ரை) இதுவரையில் சொல்லியது போக மற்றுமொன்றுளது. அதனையும் சொல்லுவேன் கேட்பீர்களாக என்பது கருத்து. 86

கேளப்பா இன்னம்ஒரு சேதிமைந்தா
கேவலமாய்ச் சொல்லுகிறேன் ரிஷிகாள்கேளீர்
நாளப்பா கேசரிமுற் சனனம்நாலாம்
நன்மையுடன் கொடுத்திருந்த பேர்க்குக்கிட்டும்
வாளப்பா வண்மையுள்ள மைந்தர்க்காகும்
வளமான நூல்விதியும் வண்மைஆகும்
ஆளப்பா ஐயிஸ்வரியம் உள்ளபேர்க்கு
அன்பான என்னூல்தான் கிட்டும்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இன்னும் ஒரு விசேஷமுண்டு. அவையாவன: இந்நூலானது எப்படிப்பட்டவருக்குக் கிட்டுமெனின்? தனது முன் ஜனனத்திலேயே, இச்சனனத்தில் தான் சாயுச்சியப் பதவியை அடையத்தகுந்த வரத்தை எவன் பெற்றனனோ அவனுக்கு என்நூல் கிடைக்கும். அதுவன்றி நல்லொழுக்கங்களிற் சிறந்து விளங்குபவருக்கும், தருமசாஸ்திரவிதி பிசகமாட்டாத அறிவான பொருளை எவன் அடைந்துள்ளனனோ அவனுக்கு என்நூல் உரித்ததாகுமென்பதை அறியக்கடவாய் எ-று. 87

பார்க்கவே ரேகைகளைப் படித்துநல்ல
பாங்கான வரைகளெல்லாம் குறிப்புகண்டு
கார்க்கவே பலகைகள் அறிந்துபார்த்து
கருணையாய்ப் பலன்களெல்லாம் சொல்லக்கேட்டு

மார்க்கமாய் அனுபவங்கள் வந்ததாய்ந்து
மகத்தான வாழ்வுமுதல் வரவறிந்து
ஊர்க்கவே சகலதுறை எல்லாம்கண்டு
உற்பநமாய் வெளிஏறி உறுதிசொல்லே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இந்த ரேகை சாஸ்திரத்தை நன்றாய் படித்தறிந்து, வரைகளாகிய ரேகையினது இரகஸ்யக் குறிப்பையும் தெரிந்து பற்பல மானிடர்களின் அஸ்த வித்தியாசப்படி அவரவர்க்கு வேண்டிய வருகால பலாபலன்களையும், வாழ்வு-யோகம்-வயது-இன்பம்-துன்பம் முதலியனவற்றைச் செவ்வனே ஆராய்ச்சிசெய்து, அனுபவ வாயிலாக உன்னிடம் வந்து கேட்போர்க்கு உள்ளதை உள்ளவாறே சந்தேகமின்றித் தீர்மானித்துக் கூறுவாயாக எ-று. 88

உறுதியாய் இந்தநல்ல சாஸ்திரம்தான்
உத்தமமாய்ப் பனிரண்டாயிர முன்சொன்னேன்
திருதியாய்ச் சாஸ்திரத்தை அதன்பின்மைந்தா
தேருகின்ற ஆயிரத்திருநூறும் சொன்னேன்
பருதியாய்ச் சாஸ்திரத்தை அதன்பின்மைந்தா
பண்பாகச் சொல்லிவிட்டேன் மைந்தாகேளு
நிருதியாய்ச் சாஸ்திரத்தின் நிலைமையெல்லாம்
நிகழ்த்தினேன் உள்ளமட்டும் நீதிதானே.

(இ-ள்) ஓ முனிவர்களே! ரேகைசாஸ்திரமாகிய இந்நூலை முதலில் 12-ஆயிரம் செய்யுட்களாய்க் கூறியுள்ளேன். அதன் பின்பு மேற்படி 12-ஆயிரம் செய்யுளினின்று, சில முக்கிய சாராம்சங்களை ஆயிரத்து இருநூறு செய்யுட்களாயும், மேற்படி ஆயிரத்து இருநூற்றிலுள்ள சில முக்கிய விஷயங்களைச் சேர்த்துத் திரட்டி, உங்கள் சந்தேகமற இந்நூலின்கண் தெளிவாய்க் கூறியுள்ளேன். ஆதலால் இவை எல்லா நூலினுக்கும் நன்நூலாய் விளங்குமென்பதில் ஐயமில்லை எ-று. 89

நீதியென்ன சாஸ்திரத்தைப் படித்தாலும்தான்
நிகழ்ச்சிஇல்லை பெருமைஇல்லை நீதிஇல்லை
சோதியென்ன என்னூலைப் படித்தாலும்தான்
சொல்லவென்றால் அளவற்ற பாடல்மைந்தா
ஆதியென னகரங்கள் தன்னைக் கண்டறிந்தால்
அன்பாக என்னுதவி வேண்டுமப்பா
மீதியென்ன என்னுடைய தியானம்வேண்டும்
மேலாகப் படித்ததெல்லாம் விளம்புப்பாரே.

(இ-ள்) நீதிசாஸ்திரத்தில் மிக்க பெருமைவாய்ந்த நூல் இவையே எனக் கூறினாலும், இந்த நூலைப்படித்து விட்டதால் மாத்திரம் பெருமையுண்டென நினையாதே. இதனாலேயே சகல நீதிகளையும் கண்டறிந்தவர்களாக நினையாதே. எனது நூலைப்படித்து அறிவதென்றாலும், அதனது

விஷயங்களை அறிவதென்றாலும், அவை எண்ணித்துணிய மாட்டாத செய்யுளாகும். எப்படியெனில்? அவரவர்களது அஸ்த லக்ஷண விஷயங்களை நிச்சயமாய்க் கண்டறிந்து விட்டாலும், உலகமாதாவாகிய என் உதவி வேண்டும் என்பதில் ஐயமில்லை. அதிலும் என் தியானத்தை இடைவிடாது துதித்துவருவீர்களே யாமாகில், நீங்கள் வாசித்த சகல சாஸ்திரத்தினது உண்மையும் நன்றாய் விளங்குவதுடன் சுகத்தையும் அடைவாய் எ-று. 90

பாரப்பா தியானமுற்ற வேளைதன்னில்
படித்ததெல்லாம் இருதயத்தில் தோணவைப்பேன்
காரப்பா கருணையுடன் மனதில்நாவில்
கருதியே இருந்துநான் சாஸ்திரம்சொல்லி
கூரப்பா குணம்குறிகள் வாழ்வுயோகம்
குணமாக நடக்கும்வகை நாளும்கோளும்
வீரப்பா வாராமல் மரணமாதி
விவரமதைச் சொல்லிநான் மெலிவுதீர்ப்பேன்.

(இ-ள்) ஓ முனிவர்களே! மேற்கூறிய வண்ணமாய் எவரொருவர் என்னை இடைவிடாது பூஜித்து வருகின்றனரோ, அவர்களுக்கு அவர் என்னைத் தியானம்செய்யும் காலத்திலேயே, சகல சாஸ்திர விவரங்களையும் அவர்கள் மனத்தின்கண் அமையும் வண்ணமாய் கடாக்ஷித்தருள்வேன். அதுவன்றி, அவர்கள்மீது மிக்க கருணையுடன், மேற்படியார் மனத்திலும், நாவிலும், இடைவிடாதிருந்து சகல சாஸ்திரங்களினது மர்மத்தையும் அறிவித்து, அவ்வவர்களது குணம்-வாழ்வு-யோகம் இவைகளிலுண்டாகும் விவரத்தையும், அவ்வவர்கள் பிறந்தநாள் கோள் முதலியனவற்றையும், மரணகாலத்தையும், விவரமாய் அறியும் வண்ணமாய் அருள் செய்வேன் எ-று. 91

தீர்க்கமே என்கிருபை இல்லாமல்தான்
திறப்படுமோ என்னூலின் மார்க்கமெல்லாம்
கார்க்கமே காட்சிபெற்ற பிள்ளைகட்குக்
கருதியே அவர்கருத்தில் இருப்பேன்பாராய்
ஊர்க்கமே இன்னபடி சொன்னேனெல்லாம்
உத்தமர்க்கு என்னூலின் உறுதிகேளு
சார்க்கமே சற்சனமாய் எந்தன்பிள்ளை
சரஸ்வதியும் நான்உதவி செய்குவேனே.

(இ-ள்) மேலே சொல்லியவண்ணம் என்னைத் துதிக்காமலும், என் கிருபையில்லாமலும் இருப்போர்க்கு, என் நூலினது விஷயங்கள் யாவையும் அறியமுடியுமென நினைக்காதே. மேற்கூறிய வண்ணம் பக்தியும், விஸ்வாசமும் உடையவர்களுக்கே என் நூலினது ரகஸ்யங்கள் யாவும் உண்மையாய் விளங்கும். இவ்வாறு, சற்குண நற்குணமுடைய உத்தமர்களே! என் நூலுக்குடையவர் என்றும், அவர்களே எனக்கு மைந்தர்கள் என்றும், அவர்

களுக்கே யான் சரஸ்வதிதேவியாயிருந்து எல்லா ரகஸ்யங்களையும் கற்றுச் சொல்லிக் காப்பாற்றுவேனெனவும் உண்மையாய்க் கூறுவாயாக எ-று. 92

**சத்தி மூலமந்திரம்**

செய்குவேன் தாயினிட மூலம்கேளு
செப்புகிறேன் வாக்கிதனைத் திறமாய்மைந்தா
ஐகுவேன்-ஓம் ஸ்ரீம்-ரீம்-சவ்வும்-சத்தி
ஐயும்-க்லீம்-வாலையே-நமஹா-என்று
ஐகுவேன் ஆதியந்தம் அடங்கிற்றுமைந்தா
ஆத்தாளின் மஹத்துவத்தின் ஆண்மைதானே
தெய்குவேன் மேன்மைபெற்ற மனோன்மணித்தாய்
சித்தர்தொழும் எங்கள்குல தெய்வந்தானே.

(இ-ள்) ஓ மானிடர்களே! எல்லவர்க்கும் தாய்போன்று விளங்காநின்ற ஸ்ரீசத்திதேவியினுடைய மூலமந்திரத்தின் விவரத்தை சொல்லுவேன். இதனை நீ நிச்சயமாய் நம்புவாயாக எப்படியெனில்? ஓம்-ஸ்ரீம்-ரீம்-சவ்வும்-சத்தி-ஐயும்-கிலீம் வாலையே நமஹா. என்று ஜெபிப்பாயே யாமாகுல் இதனால் ஆதி அந்தம் என்னுமிரண்டும் அடங்கிப்போனதென்றும், உலகமாதாவினது மகுத்துவம் இவையே யாகும் எனவும், சித்தர்கள் முதலானவர்கள் தொழுதேத்தத் தகுந்தவளும், எனக்குத் தாயாகியும், மனோன்மணியாகியுமுள்ள மகா பரமேஸ்வரியினது மகுத்துவம் இவையே எனவும் நிச்சயமாய்த் தெளிவாயாக எ-று. 93

**விக்நேஸ்வரர் மூலமந்திரம்**

தெய்வமாம் விக்கிநேசன் மந்திரம்தன்னை
ஜெகந்தனிலே ஜெபித்தோர்க்கு வினைகள்தீரும்
சைவமாம் சமையமுதல் ஆருய்நின்ற
சமையங்க ளத்தனைக்கும் சாட்சியானேன்
வைபவ-ஓம்-கம்-கணபதேந்-நமஹா-என்று
மறவாமல் இலக்ஷம்உரு மருவிநின்றால்
எய்வதென்ன சாயுச்யம்எய்தும் எய்தும்நில்லே
இறப்பிறப்பும் இல்லைஇந்த நெறியில்நில்லே.

(இ-ள்) ஓ முனிவர்களே! தெய்வங்களில் மகா சிறப்புபொருந்திய விக்நேஸ்வரனது மூலமந்திரத்தை எவரெவர்கள் பூசித்தார்களோ, அவர்களுக்கு சகல வினைகளும் நீங்குவதுடன் அறுசமயங்களுக்கும் மேன்மையுடைய தென்பதும் சந்தேகமில்லை. மூலமந்திரத்தின் விவரமாவ தெவ்விதமெனின்? ஓம் கம் கணபதேந் நமஹா. என்று நாள்தோறும் தவறாமல் இலக்ஷம் உரு ஜெபிப்பார்களே யாமாகுல், அவர்கள் எல்லாப்பதவியிலும் மேலான பதவியாகிய சாயுச்சியப்பதவியை யடைந்து, பிறப்பு இறப்பு இல்லாதவர்களா யிருப்பார். ஆனதால் இவ்வாறான நெறியைக் கடைபிடிப்பாயாக எ-று. 94

நில்லென்று சொல்வதுதான் மோட்சமப்பா
நீணிலத்தில் எந்தனிடப் பிள்ளைகள்தான்
அல்லென்ற இந்தநல்ல மந்திரத்தை
அன்பாகப் படித்துநீ ஜெபித்தாயானால்
வல்லென்ற வாலையடா பிரியாமல்தான்
வண்மையாய் இருந்துநிதம் காப்பாள்பாராய்
நல்லென்ற நான்முகனும் வெல்லமாட்டான்
நடனசபை திருநடனம் நாவில்கொள்ளே.

(இ-ள்) மறுபிறவி என்பதே இல்லாமல் இருப்பதையே மோக்ஷம் என்று கூறுவர். இவ்வாறு மோக்ஷத்தைக் கொடுப்பவரே எனது மைந்தர்கள் ஆவர். ஆனதால், இந்த மந்திரத்தை மிக்க அன்புடன் வாசித்து ஜெபிப்பார்களே யாமானால், அவர்களுக்கு மோக்ஷப்பதவியை அளிப்பதுடன் வாலைதேவியும் உம்மைவிட்டுப் பிரியாமல் காப்பாற்றுவாள் என்பதில் ஐயமில்லை. இதுவன்றி நான்முகக் கடவுளாகிய பிரம்மனும், அற்ப ஆயுளால் கொல்லமாட்டான். ஆகையால் திருநடனமாடிய சிவபிரானைக் கருத்திலுன்னி மேற்சொன்ன வாறு தினம் தினம் தவறாமல் ஜெபிப்பாயாக எ-று. 85

கொள்ளவே இந்தநல்ல நூலைஈவோன்
கோவிந்தன் கோபாலன் பிள்ளை ஆகும்
அல்லவே அவனுடைய பாதம்தன்னில்
அன்பாகப் புஷ்பந்தான் அர்ச்சித்தப்பா
வல்லவே அவன்பதத்தைப் பணிந்துநல்ல
வளமாக வணங்கிநூல் வாங்கித்தானே
இல்லவே எள்ளளவும் குறைவில்லாமல்
எம்பிரான் அருள்போலும் அவரைப்போற்ற.

(இ-ள்) ஓ மானிடர்களே! இந்த நூலை இவ்வாறு பரோபகாரமாய் வெளியிட்டவன், கோவிந்தனும் கோபாலனுமாகிய நாராயணமூர்த்திக்கு அன்பார்ந்த பிள்ளையாகும். ஆதலால், அவருடைய திவ்விய திருவடிகளில் அற்புதமாகிய மலர்களால் அர்ச்சித்து அவரது பாதத்தை வணங்கி இந்நூலை வாங்கி வாசிப்பார்களே யாமானால், அவர்கள் எவ்வித குறைவும் இல்லாதவர்களாகி, எந்நாளும் குறைவற்றவராய் எம்பிரான் அருள்பெறுவர். மற்றும் எம்பிரானது அடியார்களையும் போற்றுவாய் எ-று. 96

இச்சாஸ்திரத்தைக் கேட்கும் முறை

போற்றிசெய்து வேண்டியே அமுதுஊட்டி
போதவே வேணதுகள் கொடுத்துநீயும்
சாற்றிடவே வேண்டிநீ கேட்டாயானால்
சத்தியத்தின் மூலத்தால் தானேசொல்வான்
ஆற்றியே அப்பொழுதில் ஆசானுக்கு
அன்பான ஆடைமுதல் சொர்னம்அன்னம்
வேற்றுமைகள் இல்லாமல்கவச குண்டலந்தான்
வெகுசுருக்காய் இட்டுநீ வேதம்கேளே.

(இ-ள்) ஓ மானிடர்களே! இச்சாஸ்திரத்தை எவ்வாறு கேட்கவேண்டு மெனின்? இச்சாஸ்திரம் அறிந்த பெரியோர்களுக்கு கவசகுண்டல முதலிய வற்றைத் தானம் செய்தும், மிக்க உள்ளன்புடையவராய் அன்னமுதலிய வற்றை அளித்தும், மற்றும் அவர்களுக்கு வேண்டிய பொருள் என்னவோ அவற்றையும் கொடுத்தும், ஆடையாகிய வஸ்திரதானம், சொர்னதானம், முதலியவற்றையும் குறைவரக் கொடுத்து போற்றிசெய்து, களங்கமற்ற மன துடையவராய் நின்று இவ்வேதத்தைக் கேட்பாயாக எ-று. 97

கேளப்பா இப்படிநீ மூலம்கேளு
 கேவலமாய் அணுவளவு சூட்சம்உண்டு
ஆளப்பா அந்தநல்ல சூட்சம்கேட்டால்
 அரகரா நூலெல்லாம் நிமைகள்சித்தி
நாளப்பா இப்படிநீ ஆசானிடத்தில்
 நலமுள்ள சத்தியிட குடிசையில்தான்
வாளப்பா கேட்டக்கால் வருகும்பாரு
 வகைதெரியாப் பாவிகட்கும் வருகும்பாரே.

(இ-ள்) ஓ முனிவர்களே! இவ்வாறான முறையினாலேயே இந்த அருமை வாய்ந்த நூலைக் கேட்கவேண்டும். இவை சூக்ஷமமான முறையாகும். இவ்வாறான முறையாய் இந்த சாஸ்திரம் சொல்லத்தகுந்த சத்திதேவியினது குடிசைக்குச் சென்று, மேற்படி ஆசானிடம் கேட்பாயேயானால், உன்னுடைய வருகால வினையாவும் உள்ளதை உள்ளவாறே அறியலாம். மற்றும் எவ்வித விஷயத்தையும் அறியமாட்டாத மூடர்களானாலும், மேற்கூறிய முறைப்படி கேட்கின் சகலமும் சித்தியாகும் என்பது நிச்சயம் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் இந்த சாஸ்திரத்தை கேட்கும் மார்க்கங்களைத் தெளிவாய்க் கூறினார். மற்றும் இந்நூலினது விவரங்களையும் பின்வரும் செய்யுளால் கூறுவார். 98

வருவதுதான் குருமூலயம் வருகவேண்டும்
 வாகான ஆசான்சொல் கேட்கவேண்டும்
உருவதுதான் எனைப்பெற்ற பெரியோரெல்லாம்
 உத்தமர்க்குத் தொண்டுசெய்து வந்ததப்பா
பருவதுதான் பாலகர்க்குப் பலநாள்தானும்
 பாங்காகச் சொல்லியதை அறிவதுண்டோ
அருவதுதான் ஆத்மாவின் பொருள்அறிந்தோர்
 அல்லாத பேர்களுக்கும் அறியப்போமோ.

(இ-ள்) ஓ முனிவர்களே! இதுவரையில் கூறிவந்த இந்த சாஸ்திரத் தினது மகிமையை எவ்விதமாய் அறியலாம் எனில்? குருமூலமாகவே அறியத்தகும். ஆனதால் ஆசான் சொல்லும் வார்த்தையை உண்மையென நம்பியும் தெரிந்துகொள்ள வேண்டும். நான் என்னைப்பெற்ற பெரியோர்க் கும், உத்தமர்களுக்கும் தொண்டுசெய்து பின்னரே இதனை அறிந்தேன்.

இதுவன்றி பால்குடிக்கத் தகுந்த சிறுவருக்கு எத்தனை நாளுரைத்தாலும் இதனருமைத் தெரியாது. தனது ஆத்துமசக்தியை யறிந்தவரன்றி மற்றவர் அறிவது கடினம் எ-று. 99

போமென்று சொன்னதொரு உமைபாதத்தில்
போதமுள்ள மஹாரிஷிகள் ஆனோரெல்லாம்
வாமென்று வாலையைத்தான் தோத்திரம்செய்து
வணங்கினார் ஆதியந்தம் அண்டபிண்டம்
ஊமென்ற உத்தமியே பராசத்தித்தாய்
உமையவளே சரணம்என்று வணங்கினார்கள்
ஆமென்ற ஹரஹரா ஏழுகாண்டம்
அன்பாக இரேகையதால் அறைந்தேன்முற்றே.

(இ-ள்) இவ்வாறுரைத்துப் பின், போய்வாருங்கள் என விடைகொடுத்த உமையவட்கு, மேற்படி ரிஷிகள், முனிவர்கள், முதலாயினோர்கள் மேற்படி வாலைத்தேவியை வணங்கிப் பலவாறு தோத்திரம் செய்து, ஆதியந்தப் பொருளும், அண்டாண்டசராசரங்களிலும் நிறைந்துள்ளவளாயும், உத்தமியும், பராசத்தியுமாகிய உமையவளே! உமது கிருபையால் இணைசொல்லப்படமாட்டாத ரேகைசாஸ்திரத்தின் ஏழுகாண்டத்தையும் செவ்வனே அறிந்துகொண்டோம். சரணம் சரணம் என்றனர் எ-று. 100

## ஏழாவது காண்டம் முற்றிற்று.

---

ஆக காண்டம் 7-க்கு பாடல்-639.

---

## இரேகைசாஸ்திரம் மூலமும் விருத்தியுரையும்

முற்றிற்று.

---



பூமகள்விலாசம் பிரஸ், சென்னை:—1939.

பூமகள் பதிப்பின்

# சோதிட புத்தகங்கள்

இதனடியிற் கண்ட புத்தகங்கள்
பிரபல சோதிட வித்வான்களால் பரிசோதித்து
அழகிய பயிண்ட் செய்தது.

| | ரூ. | அ. | ப |
|---|---|---|---|
| கமலமாமுனி ரேகை சாஸ்திரம் உரை | 1 | 4 | 0 |
| ஹஸ்த ரேகை சாஸ்திரம் | 1 | 4 | 0 |
| ஆண் பெண் இரேகைசாஸ்திரம் | 1 | 0 | 0 |
| சோதிட பாலபாடம் புதியபதிப்பு | 0 | 12 | 0 |
| சோதிடக்களஞ்சியம் விருத்தியுரை | 2 | 0 | 0 |
| உரோமரிஷி நாடிபஞ்சபட்சி விருத்தியுரை | 1 | 8 | 0 |
| அகஸ்தியர் பஞ்சபட்சி விருத்தியுரை | 1 | 0 | 0 |
| சாதகாலங்காரம் உரை | 2 | 0 | 0 |
| வீமேசுர உள்ளமுடையான் | 1 | 8 | 0 |
| அனுபோக ஜாதக ரகசியம் | 1 | 0 | 0 |
| சோதிட சில்லரைக்கோர்வை | 2 | 0 | 0 |
| அனுபோக ஆரூட சிந்தாமணி | 0 | 8 | 0 |
| சாதக சிந்தாமணி | 1 | 0 | 0 |
| கௌசிக சிந்தாமணி 3-பாகங்கள் | 2 | 0 | 0 |
| சோதிட அரிச்சுவடி 4-பாகங்கள் | 1 | 0 | 0 |
| மணிகண்ட கேரளம் விருத்தியுரை | 1 | 8 | 0 |
| பெரிய வருஷாதிநூல் | 1 | 0 | 0 |
| புலிப்பாணிசோதிடம் தாய்மகளேசல் | 0 | 12 | 0 |
| அனுபவ நஷ்ட ஜாதக சிந்தாமணி | 0 | 12 | 0 |
| அனுபோக சோதிட பிரம்ம ரஹஸ்யம் | 0 | 12 | 0 |

அ. இரங்கசாமி முதலியார் ஸன்ஸ்
புத்தக வியாபாரிகள்
நெ-24, தாண்டவராயப்பிள்ளை வீதி, சென்னை.